# PRAPANCHA YUTHPATHI.

உலக ரகசியமென்னும்

# பிரபஞ்சவுற்பத்தி

இஃது

சிறுமணவூர்

முனிசாமிமுதலியாரவர்களா

லியற்றப்பட்டு,

த. பூ. முருகேச நாயகரவர்களால்

பார்வையிடப்பட்டு,

இந்நூலாசிரியரது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

(ஐந்தாம் பதிப்பு காபி - 1000.)



விரோதிகிருது௵ 1911௵.

விலை ரூபா 2.

இந்நூலுக்கு

# கையொப்பம் செய்தவர்களின்

## பெயர்கள்.

| நெ. | பெயர். | இடம். | புத்தகம். |
|---|---|---|---|
| 1 | சி-தொளசி பட்ளர் | சிலோன் | 1 |
| 2 | ஆர்-எம்-அந்தோனி | மோல்மேன் | 1 |
| 3 | பி-சண்முகம் | மாரிகுப்பம் | 1 |
| 4 | பி-எஸ்-சாமநாதம்பிள்ளை | | 2 |
| 5 | ஆறுமுகம்செட்டியார் கிராமமுனிசிப்பு | செங்ககரிகிராமம் | 1 |
| 6 | மாரிமேஸ்திரி தாமரக்கடை | கருவூர் | 1 |
| 7 | டி-எஸ்-நரசிம்மலுபிள்ளை | திருச்சினாப்பள்ளி | 1 |
| 8 | ரு-சி-ரங்கசாமி படையாச்சி மணியம் | காடாம்புலியூர் | 1 |
| 9 | தெ-சுப்பராயபிள்ளை | முத்துநாராயணபுரம் | 1 |
| 10 | ந-கோவிந்தபிள்ளை | சிலோன் | 1 |
| 11 | நாராயணசாமிசெட்டியார் வர்த்தகம் | திருப்பெருந்துறை | 1 |
| 12 | ஏ-ஆர்-திருவேங்கிடசாமிநாயுடு | வேலூர் | 1 |
| 13 | செவ்வந்தி-சுப்பிரமணியபண்டாரம் | பழனி | 1 |
| 14 | சி-வீ-ராமசாமிநாயுடு | மோல்மேன் | 1 |
| 15 | கொ-நல்லப்பகவுண்டர் | பிரத்தம்பட்டி | 1 |
| 16 | எஸ்-பொன்னுசாமிதேவர் | இராமநாதபுரம் | 1 |
| 17 | பெரிய கருப்பன் கங்காணி | சிலோன் | 1 |
| 18 | கருத்தான் கங்காணி | சிலோன் | 1 |
| 19 | கன்னியாப்பிள்ளை பசுமந்தான் | ரங்கூன் | 1 |
| 20 | எஸ்-முருகேசமுதலி | ரங்கூன் | 1 |
| 21 | நாராயணசாமிபிள்ளை மேஸ்திரி | இன்சீன் | 1 |
| 22 | மதுரகவி-கபாலமூர்த்தி | ரங்கூன் | 1 |
| 23 | பி-முத்துசாமிபிள்ளை ஜாயுன் | இன்ஜாடா | 1 |
| 24 | கே-காத்தான் துரையூர் | திருச்சினாப்பள்ளி | 1 |
| 25 | முத்துசாமி சேர்வை | தாங்குவா | 1 |
| 26 | தங்கமுத்துபடையாச்சி | முன்சீப்பு வரகூர் | 1 |
| 27 | ஏட்-கருப்பன் கங்காணி | சிலோன் | 1 |
| 28 | வி-எஸ்-அருச்சுனராஜா | கிமிண்டான் | 1 |
| 29 | மாடசாமி கங்காணி குருநிகலா | சிலோன் | 1 |
| 30 | குப்புசாமி அவர்கள் கூரான் | பெனுங்கி | 1 |
| 31 | டி-எம்-கண்ணுசாமி கணக்கப்பிள்ளை | சிலோன் | 1 |
| 32 | சுப்பராயநாயகர் | நெல்லூர் | 1 |
| 33 | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | பன்றிமலை | 1 |
| 34 | ஏட் கோபால் கங்காணி | சிலோன் | 1 |
| 35 | சி-நாராயணமேஸ்திரி பேபோ | ரங்கூன் | 1 |

| நெ. | பெயர். | இடம். | புத்தகம். |
|---|---|---|---|
| 36 | எஸ்-எஸ்-சுப்பிரமணியபிள்ளை | கொழும்பு | 1 |
| 37 | எம்-கருப்பையா | சிலோன் | 1 |
| 38 | பெண்சன்கபேதார் சுந்தரம் சேர்வை | தள்ளாகுளம் | 1 |
| 39 | டி சுப்பராயபிள்ளை | முத்துநாராயணபுரம் | 1 |
| 40 | ஜீ ஆர் அருணசல நாடார் | விழுப்புரம் | 1 |
| 41 | டி வையாபுரிசெட்டியார் | மேஹநூர் | 1 |
| 42 | டி மாரிவேஸ்திரி | மாரிகுப்பம் | 1 |
| 43 | எம் முத்துவேலுபிள்ளை | பெரம்பலூர் | 1 |
| 44 | பெருமாள் கவுண்டர் | ராஜபுரம் | 1 |
| 45 | கே பகிரியாபிள்ளை | சிங்கப்பூர் | 1 |
| 46 | சர்வேயர் பி வி குப்புசாமிபிள்ளை | பிணங்கி | 1 |
| 47 | சிதம்பரம் சோழகர் | பாபாணடு | 1 |
| 48 | டி சி பொன்னுசாமிபிள்ளை | மாரிகுப்பம் | 1 |
| 49 | எ வி அப்பு அறநாயகா | சிலோன் | 1 |
| 50 | கஸ்தூரி ரங்கையசெட்டியார் | நத்தமேடு | 1 |
| 51 | ஏ கே எம் எஸ் ஜெகநாதராயர் | தொங்குவா ரங்கூன் | 1 |
| 52 | டி பொன்னுசாமிபிள்ளை பட்ளர் | பாமு | 1 |
| 53 | சுடலைமுத்துபிள்ளை முறடுவான் | சிலோன் | 1 |
| 54 | வி ஒ எம் பண்டிதர் | சிலோன் | 1 |
| 55 | கே வயித்தியலிங்கபகிரி | சிங்கப்பூர் | 1 |
| 56 | ஜீ எம் கன்ஜல்வி | நாகப்பூர் | 1 |
| 57 | அகிம் மஹம்மட்உஸ்மான்சாயிப் | இராமநாதபுரம் சமஸ்தானம் | 1 |
| 58 | பி முத்துசாமிபிள்ளை சலூன் | ரங்கூன் | 1 |
| 59 | சே வி வெங்கடேஸ்வரஐயர் | கலாங்காட் மலபார் | 1 |
| 60 | இராமசாமிபிள்ளைகணக்கப்பிள்ளை | சிலோன் | 1 |
| 61 | அருணசலகுருக்கள் | அரியலூர் | 1 |
| 62 | டி காளிமுத்துப்பிள்ளை | மதுரை | 1 |
| 63 | அருணசலம்செட்டியார் | பட்டுக்கோட்டை | 1 |
| 64 | வேலுபத்தர் | பிணங்கி | 1 |
| 65 | பியா முத்தையா யெட்டியாங்தோட்டம் | சிலோன் | 1 |
| 66 | ஏ பலவேந்திரம்பிள்ளை | பெணங்கி | 1 |
| 67 | பி சண்முகம்வயித்தியர் | மாரிகுப்பம் | 1 |
| 68 | டி எம் குருபரநாதசாமி முதலியார் மிராசுதார் | அண்ணாமலை | |
| 69 | ஏ ஆர் சாமிநாதபத்தர் | அரியலூர் | 1 |
| 70 | மிஸ்டர் எஸ் சாமிநாதன் | மோரீஸ் | 1 |
| 71 | சின்னியா முத்திரியன் | சித்தம்பூர்கிராமம் | 1 |
| 72 | பி எல் முத்தப்பிள்ளை கணக்கப்பிள்ளை | சிலோன் | 1 |

| நெ. | பெயர். | இடம். | புத்தகம். |
|---|---|---|---|
| 73 | மருதநாயகம்பிள்ளை | செட்டிமங்கலம் | 1 |
| 74 | திருவேங்கிடபடையாச்சி | உடையார்பாளையம் | 1 |
| 75 | எ வி கே கண்ணுசாமிராஜா | பெனங்கி | 1 |
| 76 | சி ராஜேந்திரம்பிள்ளை குமளி | திருவாங்கூர் | 1 |
| 77 | எம் கதிர்வேலு பண்டாரம் | சிலோன் | 1 |
| 78 | வி நமசிவாயம்பிள்ளை | விலங்கமான் | 1 |
| 79 | மாது பழ சு சுப்பிரமணியம்செட்டியார் | திருப்பத்தூர் | 1 |
| 80 | ஆர் இ அந்தோணி | மோல்மேன் | 1 |
| 81 | ஆர் எம் அந்தோணிபிள்ளை | பின்மானு | 1 |
| 82 | எம் திருநாராயண சுப்பையங்கார் | தள்ளாகுளம் | 1 |
| 83 | அருணசலரெட்டியார் | லாக்கிநாயகன் பட்டி | 1 |
| 84 | கே எல் கே சி அண்ணாமலைப்பிள்ளை | சிலோன் | 1 |
| 85 | திருவேங்கிடம்பிள்ளை | எலமனூர் | 1 |
| 86 | எ நல்லு | சிலோன் | 1 |
| 87 | ஆர் குழந்தைவேலுநாடார் | சின்னமனூர் | 1 |
| 88 | பி சண்முகம் வயித்தியர் | மாரிகுப்பம் | 1 |
| 89 | ஷேக் பாபாசாகிப் | உடையார்பாளையம் | 1 |
| 90 | வப்பன் கங்காணி | சிலோன் | 1 |
| 91 | கருத்திருப்பா கவுண்டன் | பங்களாபுதூர் | 1 |
| 92 | வீரபத்திரசெட்டி நாசமணி | சிலோன் | 1 |
| 93 | ஆர் எஸ் சுப்பையை | சிலோன் | 1 |
| 94 | ஆர்கோவிந்தன் முதலியார் | மோல்மேன் | 1 |
| 95 | சி கே கதிர்வேல்கணக்கப்பிள்ளை | சிலோன் | 1 |
| 96 | ஆர் எ அருணசலம் | மோரீஸ் | 1 |
| 97 | எம் சுப்பையா சூரியக்காரன் | கீவளூர் | 1 |
| 98 | ஆர் பேருமாள் கங்காணி | சிலோன் | 1 |
| 99 | திண்ணை சிங்காரம்பிள்ளை | நாகலாபுரம் | 1 |
| 100 | ஆர் நடேசம்பிள்ளை | வேதாரண்ணியம் | 1 |
| 101 | மண்டலாதிபதிச் சண்முகச்சின்னேபநாயக்கரையனவர்கள் | பழனி ஜமீன்தார் | 1 |
| 102 | பச்சிமுத்துபிள்ளை | மிமிசல் | 1 |
| 103 | எம் எம் நாராயணசாமிநாயுடு | சீர்காழி | 1 |
| 104 | டி சுப்பிரமணிய உடையார் | கும்பகோணம் | 1 |
| 105 | பு தண்டல் அப்புசெட்டியார் | பினங்கி | 1 |
| 106 | எ இராமலிங்கசாமி | சிலோன் | 1 |
| 107 | கருப்பன் வேலன் மண்பாண்டவேலை | கொடுமுடி | 1 |
| 108 | கே எ கண்ணுசாமியாப்பிள்ளை | ரங்கூன் | 1 |
| 109 | எ வயித்தியலிங்கமேஷன் | சிலோன் | 1 |

| நெ. | பெயர். | இடம். | புத்தகம். |
|---|---|---|---|
| 110 | எம்-மாடசாமிகங்காணி | சிலோன் | 1 |
| 111 | எஸ்-வையாபுரி கணக்கப்பிள்ளை | ,, | 1 |
| 112 | எம்-ரங்கசாமிதேவர் டிமேகர் | ,, | 1 |
| 113 | அ-கிருஷ்ணன்பட்ளர் | ,, | 1 |
| 114 | எம்-வேலுசெட்டியார் | ,, | 1 |
| 115 | நாராயணன் கணக்கப்பிள்ளை | ,, | 1 |
| 116 | திருவேங்கடம் மளிகைவர்த்தகம் | எலமனூர் | 1 |
| 117 | ஆர்:எம்-அந்தோணி | சிலோன் | 1 |
| 118 | எம் அப்பாவுசாமியார் | கிமிண்டான் | 1 |
| 119 | எம் தருமலிங்கம் | ரங்கூன் | 1 |
| 120 | சி தொளசி அப்புபட்ளர் | சிலோன் | 1 |
| 121 | கே-கோவிந்தசாமி நாயுடு | பல்லாரி | 1 |
| 122 | பி-ஆர்-குப்புசாமி கணக்கப்பிள்ளை | சிலோன் | 1 |
| 123 | பி-ஐயாவு பட்ளர் | மோல்மேண் | 1 |
| 124 | ரு-கருப்பண்ணதேவர் | பினங்கு | 1 |
| 125 | சி-இரத்தினசெட்டியார் | மோரீஸ் | 1 |
| 126 | ச-சுப்பிரமணியமுதலியார் | டிராங்குபார் | 1 |
| 127 | எஸ்-பொன்னுசாமி முதலியார் | மெடகாஸ்கர் | 1 |
| 128 | சி-கிருஷ்ணசாமிமுதலியார் | பிள்ளைபாளையம்காஞ்சிபுரம் | 1 |
| 129 | வெ நாராயணசாமிநாயகர் | கள்ளக்குரிச்சிதாலுக்கா புதுப்பட்டு | 1 |
| 130 | ஆ முனிசாமிமுதலியார் | எட்சார்ஜண்டுராணிப்பேட்டை | 1 |
| 131 | ஆ இராமாஞ்சுலுநாயுடு | நேடிவ்டாக்டர் | |
| 132 | நாகமுத்து நாயகர் | பூசூர் சேலம் | 1 |
| 133 | என் எஸ் நடேசம்பிள்ளை | ஜாலம் ரங்கூன் | 1 |
| 134 | தி ரேசமுத்திரியன் | எலமனூர் | 1 |
| 135 | எஸ் சுப்பிரமணியமுதலியார் | ட்ருங்குபார் | 1 |
| 136 | எம் யூனியன் மெட்டோல் | சிலோன் | 1 |
| 137 | எம் கருப்பையா சிவல்பட்டி | திருப்பூர் | 1 |

கையொப்பதார்களின் பெயர்கள்.

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

காஞ்சிபுரம் அஷ்டாவதானம்

சபாபதி முதலியாரவர்கள் மாணாக்கரும்,

இயற்றமிழாசிரியரு மாகிய

ம-ள-ள-ஸ்ரீ, தி. சண்முகம்பிள்ளை யவர்கள்

இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

மதிவளர் புரிசை மாடக்காவும்
நதிவளர் பாலி நான்மறை வேள்வியுந்
தண்டமி ழார்ப்புஞ் சண்பைக் கௌணியர்
விண்ட யேழிசை வேத மணமும்
வெண்ணிலா வெரிக்கும் வேணிய ரன்றோர்
பெண்ணில வேவப் பெற்ற பேறும்
மூர்த்தி தீர்த்தமுறை முறையோங்குஞ்
சீர்த்தியு மாதவர் செறுக்குந் தொண்டை
தாரணி செம்பியர் தனிக்கோ னலமும்
ஆறணி சடையா ரடிகள் வாழ்வுங்
கண்ணுதற் கைலை கடுப்ப வானவ
ரெண்ணில் ரேற்று மியலு ணுக்கச்
செல்வியுங் கல்வித் திருவு மேய
தொல்லிரும் புகழிற் றொண்டை நாட்டு
மறைமகத் துழனி மாண்பு மாதவர்க்
கிறையன சிடந்த திருவருண் மொய்ப்பும்
பன்னலங் கொழிக்கும் பான்மையு மான்றோர்
தன்னலங் குலவுந் தருமச் சீர்த்தியு
மூவாநெறியி னோவாப் புகழிற்
றேவாய்ச் செறிந்த தெண்ணீர்ப் பழன
மணவீர் கோட்டத் தளவில் சீர்த்தி
இணைமயக் கொழியா பணையூற் றோடி
மேலுறுகமுக மேய்ந்திரு ணாறி
சேலின முழக்கிச் செய்கா லாற்றி

கடறலை படுக்குங் காட்சியி னலகி
னிடறலை மிதிக்கு மெய்ம்மையி னகலாச்
செழுமண வைப்பதிச் செய்தவ மேனையோ
தொழுதகு சைவத் துறையறங் கொழிக்கு
முத்தம சோழப் பல்லவ ரென்னப்
பெற்ற வேளாண் பெருங்குடி தன்னில்
மெய்த்தவங் கிடந்த வுத்தமர் சூழ
செய்த்தவ மாற்றுந் திறலி னீங்கா
மேலை வணங்கி சப்பே ரண்ணல்
காலை வளர்க்குங் கருணன் பின்னோர்
கோலைக் கொள்ளுங் கோத்துறை யாளர்
நூலைப் புரக்கும் நுண்ணறி வாளன்
ஓதாதுணர்ந்த வுத்தம னற்றவர்
பாதாம் புயத்தைப் பணியக் கற்றோன்
கலையெலாம் பார்க்குங் கருத்தன் விடயத்
தலையெலாங் காணச் சமர்த்த னுயுள்
வேத சாத்திரமு மிக்கோர் வழக்கும்
பேத சாத்திரமும் புரையறக் கற்றோன்
கூரயிற் கொடுவெஞ் சூர்தடிந் தோனற்
பேரடி முடிக்கும் பெரிய னுக்கச்
செல்வி னக்கஞ் சீரினனெப்பிற்
கல்விக் கரையான் கற்றவற் கன்ப
னென்னிலத் துள்ளுந் தங்கலம் விளங்கப்
பக்நூ லிசைத்தோன் ககாசிவ காமி
அச்சுக் கூடத் ததிப னறிவோர்
மெச்சுநூ லனைத்து மினிதி னுற்றும்
முனிசாமி மிப்பேர் முதலி யிங்கா
டனிசீர் மையினோர் சாத்திர மஃதிங்
கவநெறி யொழுகு மவனி மாக்கள்
தவநெறி பெறபுற் றயையி னின்று
வேத மாசம மிருதி புராண
நீதிசோதிட நீர்மையிற் சித்தா
பக்நூற் கடலு முன்னிப் பருவரை
முன்னோ ராதி மொழியு மகரியத்

தூரிய சாரத் துள்ளுறப் படிந்து
பேரியற் றிறத்தப் பெருக்கா றன்ன
அண்டப் பகுதியு மெண்டரு வைப்பும்
பண்டை வேந்தர் பான்மையு முலகின்
றுண்டவியல்புந் தொந்நூ னெறியுங்
கொண்ட னீர்மையுங் குலப்பே ரறமும்
மூர்த்தி தீர்த்த முடிபு மறியார்
போர்த்த மாயைப் பொழிப்புஞ் சனன
வைப்புங் கால வழக்கு மணத்தி
னெப்புங் கலியி னொழுக்கு மானிகத்
திறமுஞ் சயனச் செறிவுங் கருணை
யறமுஞ் சரமு மாயுள் வேதமுந்
தெய்வப் பிறப்புஞ் சிரார்த்த விதியுஞ்
செய்யு நித்திய செய்கை யியல்பு
மின்னன தரிய வெண்ணில் முடிபும்
பன்மத வழக்கும் பாரோர்க் கென்றும்
வேண்டும் பகுப்பு மிக்குறத் தெரித்து
யாண்டும் பெருமா றையமி லறநூ
லஞ்சுறப் பலர்பா லரிதி னேற்று
அஞ்சொற் றமிழி லான்ற வறிவின்
வித்தவ ரவைக்கண் மெய்துறை படுத்தி
எத்திறத் தவர்க்கு மினிதி னெளிதி
னுய்த்துணர் தொழுக மெய்த்திறங் கொளச்சீர்
வைத்த தண்டமிழ் வாணர் மகிழ்விற்
றுய்ப்பப் பிரபஞ்ச சோற்பத் தியெனச்
செய்தா னஃஆ திறமி தம்மா.

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.

# சாத்து கவிகள்.

உரையாசிரியர் மகாவித்வான்

காஞ்சீபுரம், சபாபதிமுதலியாரவர்கள் குமாரர்

கா. பாலசுப்பிரமணிய முதலியாரா லியற்றிய

பின்முடுக்கச்சந்தவெண்பா.

நத்து பிரபஞ்சோற் பத்தியா நன்னூலைக்
கத்திய மாகக் கழறினன்—எத்திசையும்
உன்னுமுரு கேசனது வொண்கழல்ப ராவுநித
மன்னுமுனி சாமியெனு மால்.

காவேரிபுரம்,

ஸ்ரீலஸ்ரீ சபாபதியோகீஸ்வரவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

வய்யத் துயர்மணவூர் வாழ்முனிசா மிப்புலவன்
செய்யும்ப்ர பஞ்சோற்பத் திப்பெருநா—லையமிலர்
தெம்மதத்தோ ருஞ்சூழ்ந் தெங்கலமுங் கைக்கொள்ள
அம்மா வரிதரிதஃதே.

சேலம் தர்மபுரி,

ம-ா-ா-ஸ்ரீ. நடராஜஐயங்காரவர்கள், பி. ஏ,

இயற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

பாலாற்றி னணிகிளருந் தொண்டை நாட்டோர்
பாற்குலவு மணவூர்வே ளாளர் கீர்த்தி
காலாற்றுந் தமிழ்க்குரிசில் முனிசா மிக்கோன்
கரைசெய்தான் பன்னூலுந் துறையா யாய்ந்து
வேலாற்று முருகனடி முடித்துக் கற்றூர்
வித்தகத்தா னெத்திசைக்கு மினிதா யாதி
நூலாற்றும் புலவரதி சயிக்கச் செய்தான்
நுண்மையினோர் பிரபஞ்சோற் பத்தி நூலே.

சென்னை தத்துவவிசாரிணி பத்திராதிபர்

ம-ா-ா-ஸ்ரீ

## ப. முனிசாமிநாயகரவர்களாலியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

சிறுமணவூர் வணங்கிசச் செம்மறவ நனிசிறந்து சிறப்புமேயச்
சிறுமணவூர் வணங்கிசரருளாலச் செய்தவமேசெறிந்ததென்னச்
சிறுமணவூர் முனிசாமிச்சேயாகிக்கலைக்கடலைச்செவ்வினோர்ந்தே
சிறுமணீ ரனலனிலவான்வடிவாம்பிரபஞ்சவெழிற்செய்தானே

---

அஷ்டாவதானம்,

## பூவை. கலியாணசுந்தரமுதலியாராலியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

அற்புதநற் சைவவயி ணவசமயநூல்களினுண் ணறுமையா வுங், கற்பவர்க ளெளிதுணர்வான் கத்தியரு பத்திலகக் கனிவிற் சொற்றுன், பொற்பமரும் பிரபஞ்ச வுற்பத்தியெனவொரு நூல் புவி வியக்கப், பற்பலபூர் துடவைசெறி சிறுமணவூர் முனிசாமி ப்பாவலோனே.

---

மேற்படியார் மைத்துனரும்,

சமரச சன்மார்க்க சங்க வித்வான்களி லொருவராகிய

புராணிகர். பொன்னேரி, சுந்தரம்பிள்ளை அவர்கள்

குமாரருமாகிய புராணிகர்,

## பொ. பரமசிவம்பிள்ளையவர்களியற்றிய

கட்டளைக்கலித்துறை.

காரார் சிறுமண வூர்முனி சாமிநங் காராளநந்
நீரார் பலகலை யாய்ந்துல கோர்க்கோர் நெறியிதெனப்
பாரா ரியந்தமிழ் வர்ண ரருந்துணை பற்றியினுள்
சீரார் பிரபஞ்ச வுற்பத்தி யாமிது நூற்செய்தனனே.

---

பிரசங்கரத்னகரம்,

சிதம்பரம். வடிவேல்பிள்ளை யவர்கள்.

இ ய ற் றி ய

அறுசீராசிரிய விருத்தம்.

சிறுமணலூர் முனிசாமி முதலியா ரென்பாரிச் செகத்து ளாருக்
குறுமுகவ ரடிபாவும் பெற்றியினு லனந்தகலைக் கடலை யாய்ந்து
ஆறுமறையா றங்கநெறி தன்னவகுத்தானறியதெல்லாஞ்சேர்த்து
தருமநெறித்தாய்பிரபஞ்சோற்பத்தியெனவறிஞர்வியப்பமாதோ

---

சென்னை முனிசிபாலிடி

சால்த் டிபார்ட்மெண்ட் மானேஜரும் தமிழ்ப்பண்டிதருமாகிய

பெரியமெட்டு ம-ா-ா-ஸ்ரீ,

நா. மு. தம்புசாமிநாயகரவர்கள்

இ ய ற் றி ய

நேரிசைவெண்பா.

சீரார் செழுமணவைத் தேடுமுனி சாமிசெயப்
பாரார் முருகேசன் பாத்தனனல்—ஆராய்ந்து
நானிலவுற் பத்தியெனு நல்லநவ நூலறிய
தேனி னினிதாய்த் தெரிந்து.

---

இராயபுரம் இண்டியன் பிரஸ் அதிபரும்

வேதாந்த நிர்ணயப் பத்திராதிபரு மாகிய

ம-ா-ா-ஸ்ரீ அப்பாதுரைபிள்ளையவர்கள்

இ ய ற் றி ய

நேரிசை வெண்பா.

வித்துவற்கு நற்றவற்கு மிக்கோற்கும் ப்ரபஞ்சோற்
பத்திப் பெருநூற் பகிர்ந்தனனு—லெத்திக்கு
மேவுஞ் சிறுமணலூர் வேளாளன் முனிசாமி
நாவிற் றிறத்தானன் பால்.

---

சென்னை ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடத்தலைவரும்

பிரபஞ்சமித்திரன் பத்திராதிபரு மாகிய

மா-அ-அ-ஸ்ரீ த. குப்புசாமி நாயகரவர்கள்

இயற்றிய

நேரிசை வெண்பா.

பன்னூலும் பார்த்துப் பலர்க்குமுப காரமாய்ச்
சொன்னான்கா ணற்பிரபஞ் சோற்பத்தி—பன்னும்
மணலூர் முனிசாமி வள்ளல்காண் கற்ற
குணவாளர் காண்பரிதின் குணம்.

---

காஞ்சிபுரம் அஷ்டாவதானம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கரும்

தண்டுசீயபுரம்

பிரைமெரி ஸ்கூல் எட்மாஸ்டரும்

இயற்றமிழாசிரியருமாகிய

அருச்சுனநாயகரவர்களியற்றிய

பதினறுசீராசிரிய விருத்தம்.

பன்னுமறை யாகமங்கள் பரவுந் தெய்வப்
பாலிநதி சூழ்ந்திலகுந் தொண்டை நாட்டோர்
பாற்குலவு செழுமணவைப் பதியிற் சைவப்
பத்திநெறி வாழா துவாக் கீசர் மேவு
மன்னுவே ளாண்மரபிற் குலக்குன் றன்ன
வணங்கீச முதலியருந் தவத்தாற்பெற்ற
வள்ளலருந் தமிழ்மாது மகிழப் பன்னூல்
வைத்தவனம் முனிசாமியென்பா னன்பால்
முன்னமுனி வோர்சித்தர் முனிவரானோர்
மொழிந்தகலை யாகமபு ராணமின்ன
முற்றுகனி யாய்ந்துலகோர்க் கறமாமாறு
முறையாகப் பன்கலமும் திரட்டிவல்லார்
தன்னரங்கிற் றிருத்தியொரு புராணமென்னத்
தமதச்சுக் கூடத்திற் பதிப்பித்தானோர்
சாத்திரமிப் பிரபஞ்சோற் பத்திப்பேராற்
றலத்தி லெவர்க்குமிதோர் தருமத்தன்றே.

---

சென்னைநகர் பண்டிதை

ஸ்ரீமதி. ம. மனோன்மணியம்மாளவர்கள்

இயற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

மன்னரிய பிரபஞ்ச வுற்பத்தியெனவொருநூல் பரவச்செய்தான்
தன்னிகரில் லுயர்சைவமுடன்பாஞ்சராத்திரத்துச் சரிதமுற்றும்
இந்நிலமெலாமுணரவுபகரித்தான் சிறுமணவூரெழினல்வேளான்
கன்னல்சருக்கரையெனவேதினம்பாடு முனிசாமிக்கவிஞன்றானே

---

திருமயிலை வித்துவான்

சண்முகம் பிள்ளையவர்கள் மாணாக்கர்

ம-௱-௱-ஸ்ரீ திருமயிலை

இராமலிங்கமுதலியாரவர்களியற்றிய

அறுசீராசிரிய விருத்தம்.

பன்னூலும்வாகடமும் பயிலாமற்பயின்றவனிப்பார்மீதிந்நாள்
என்னூலுமிணையிலையென் றிடம்பிரபஞ்சோற்பத்தி யேதினாலை
நன்னாவலவர்புகழச் சிறுமணவூர்முனிசாமி நவின்றான்றூய
பொன்னாடரகந்துளும்ப மாதவருமிகமகிழ்ந்து புகழுமாதோ.

---

சென்னை தண்டையார்பேட்டை

க. வ. திருவேங்கட நாயுடவர்கள் மாணவரும்

தமிழ்பண்டிதருமாகிய

கொ. இராமலிங்கதம்பிரானவர்களியற்றிய

நேரிசை வெண்பா.

பன்னும் பிரபஞ்சோற் பத்தியெனு மிந்நூல்
பந்நூற் கடல்கண்டந்த பாகென்கோ—சொன்ன
சிறுமணவூர் முனிசாமிச் செவ்வாயி னூற்று
நறவென்கோ யாதென்போம் நாம்.

---

திருவொற்றியூர்

U. K. S. M. S. ஸ்கூல் எட்மாஸ்டர்

க. கந்தசாமி நாயகராலியற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

காராரும் பொழிலுடுத்த மகத நாட்டுக்
   கரையிருந்து செழுமணவைக் கோட்டமேவுஞ்
சாராளன் கலையனைத்துஞ் செவ்விதாய்ந்த
   கருத்தனுரைத் தணிகைவரை முருகற் கன்பான்
சீராரு முனிசாமிப் புலவ னிந்நாள்
   நீடுலகி லரியவெலாந் திரட்டியெங்கும்
பேராக வெம்மருமும் சிறந்து வாழ்த்தப்
   பிரபஞ்சோற் பத்தியெனும் பெருநூலம்மா.

---

ஞான வித்வாநந்தப்ரசங்க கவிராய சிங்கமென்னும்

கூடலூர் தண்டிகைப் புலவர்

அஷ்டாவதானம்

சதகு. அப்துல்கா திறுபுலவரவர்களியற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

சென்னைபுரிச் சூளையினிற் கனங்கு லாவுஞ்
   சிவகாமி விலாசவச்சுக் கூடமுள்ளா
னென்னலமுர் திகழ்மணவை வணங்கி சன்றன்
   றவத்துதித்த முனிசாமி முதலி யார்முன்
பன்னூலு மாய்ந்துலகோற் கறநூ லன்னப்
   பகர்ந்தானோர் பிரபஞ்சோற் பத்தி நந்நா
லிங்கிலத்தி லிதின்பெருமைப் புகல்வா ரார்கா
   ணெக்கலைக்கு மிக்கதென விளம்பலாமே.

கள்ளக்குறிச்சி தாலுக்கா

வித்வான்

வே. நாராயணசாமி நாயகரவர்கள்

இயற்றிய

கட்டளைக் கலித்துறை.

மன்னும் புகழ்மண வூர்வரு கங்கை மரபினிற்சீர்
முன்னும் வணங்கி முதலிக்கு மைந்தன் முனிசாமிவேள்
பன்னும் பலகலை யாய்ந்துப்ர பஞ்சவுற் பத்தியென்றோர்
நன்னூ லளித்தா னதின்புக ழார்சொல்வார் நானிலத்தே

---

சென்னை பழயவண்ணாரப்பேட்டை

ஸ்ரீமத் தக்ஷணாமூர்த்திசந்நிதான சபாப்ரசங்கியாகிய

ம-௱-௱-ஸ்ரீ,

உமா வரதப்பநாயகரவர்களாலியற்றிய

நேரிசை வெண்பா.

சொன்னானன்றாய்ப் பிரபஞ்சோற்பத்திப் பனூலும்
வென்றாய்ந்த மாமணவை வேளாளன்—வென்றிவே
லாறுமுகற்கன்ப னாமுனிசாமி மிக்கவிஞன்
தேறுரா ரிப்புவியிற் சீர்.

---

கந்தாடு வித்வான்

வீரராகவநாயுடவர்களியற்றிய

சந்தஆசிரிய விருத்தம்.

அருநெறி கலைபல தொகுமறை யெனுவுல கேருள மிகுகூற
கருநெறி யறபுற மதவெறி யிதுவென காணுற சிறுமணவூர்
வருநெறி சைவசிகா மணிவேளாண் மரபுறு முனிசாமிக்
குருநெறி யார்பிர பஞ்சோற் பத்தியி சைத்தன னினிதன்றே.

---

தூ. பூ. முருகேசநாயகரவர்கள்

மாணாக்கரிலொருவராகிய

சோ. மு. இலக்குமணப்பிள்ளையவர்களால்

இற்றிய

சந்தஆசிரிய விருத்தம்.

பரம னன்று பணித்த முனிவரார்
  பாற்பயின்ற பலகலை யாய்ந்துசீ
ரறத்தி னீர்மை யகிலம் பெறச்சிறி
  தாற்றினான்பிர பஞ்சவுற் பத்தியென்
றிரவியென்பதி தன்புகழ் கூறவோ
  யேற்று சைவன்சி றுமண வூர்வருங்
கருணன் கங்கைக் குலத்துவ ணங்கியார்
  கான்முளை முனிசாமி முதலியே.

---

செஞ்சி உபாத்தியார்

கரிகிருஷ்ணமுதலியாரவர் பௌத்திரர்

செ. நா. ஏகாம்பர முதலியாரவர்கள்

இயற்றிய

எண்சீராசிரிய விருத்தம்.

சிறுபிழைக்கு மூவுயிருங் கொடுக்குஞ் சோழர்
  செங்கோற்கொண்டாளுமுயர் தொண்டைநாட்டு
சிறுமணவை முனிசாமி யன்ப ரான்றோர்
  செய்தபல நூலனைத்து மாய்ந்து வையத்
தறுமுகவ ரடிபரவி யுலகோர்க் கென்று
  மரும்பொருளாய்ப் பிரபஞ்சோற் பத்தியென்னச்
சிறுவர்களுந் தெள்ளிதுணர்ந் தின்ப மெய்தச்
  செய்தனனு லதின்பெருமை யென்னென் பேனே.

## சாத்துகவிகள்.

முற்றிற்று.

---

# தெய்வமே துணை.

## பிரபஞ்சஉற்பத்தியின்

# விஷய அட்டவணை.

### உற்பத்தி காண்டம்.

| விஷயம். | பக்கம். |
|---|---|

## மானிடஜென்ம வுற்பத்தி



## சயன லட்சணம்.

## விவாகவிதி.

| விஷயம். | பக்கம். |
|---|---|

## சாஸ்திர பேதம்.



## கலிதருமம்.

இரண்டாவது

# தேவவுற்பத்தி காண்டம்.



## மகாவிஷ்ணு வுற்பத்தி.

| விஷயம். | பக்கம். |
|---|---|


## சிவமகா வைபவம்.

விஷயம். பக்கம்.

பிரபஞ்ச உற்பத்தியின்

# விஷய அட்டவணை.

முற்றிற்று.

# நூன் முகம்.

## காப்பு.

அஞ்சலென் னுமவர்க்கருளைங்கரக்
குஞ்சரத்தின்குரைகழல்ராப்பகல்
நெஞ்சகத்தினிருத்திப்பெரும்பிர
பஞ்சவுற்பத்திநூற்பகர்வாமரோ.

ஆனுலும்கணபதியினிருதாள்போற்றி
அம்மையொடுமும்மூர்த்தியடிகள்போற்றி
வானாட்டைக்குடியேற்றிவைத்தவள்ள
லறுமுகனார்பூங்கமலவடிகள்போற்றி
தேனுடும்மதுரமொழிவாணிபோற்றி
திருமகளேயின் னுவில்முன்னேபோற்றி
சேனுடராஞ்சர்வதேவர்சேதிச்
செந்தமிழிலோர்நூலாச்செய்தவாறே. (1)

செய்யமுதற்கணபதியும்சித்திமுத்தி
சிவசுப்பிரமண்யரொடுதேவிமார்கள்
அய்யனூர்வீரபத்திரனேடொக்க
அருணந்தியாதிநவவீரராஞேர்
துய்யமறைப்பிரமன்மாலிளையாள்வாணி
துர்க்கையொடுசத்திசிவந்துறவோர்தாமுங்
கைதவஞ்சேரிராக்கதரேகருணைவானேர்
காரணத்தையிங்கெடுத்துக்கழருவேனே. (2)

காரணமாமுப்பத்து மூன்றுகோடி
கருதரியதேவசணம் வந்தவாறும்
தாரணியின்திக்குடைய தேவர்தேவி
தலைநாளாய்விளங்குமிந்து பானுசேதி
பூரணமாந்திதிராசி நாட்கோள்யோகம்
பூமியொடுஆகாய வாணிசேதி
ஆரணமாம்வேதமொடு புராணமற்றை
யருமறையும்வந்தவழி யறைகுவேனே. (3)

வழியானமதனேடு ரதியாந்தேவி
வைரவருங்கெருடனேடு வாய்வுமைந்தன்
அழியாததவமியற்றும்ரிஷிகள்வாறும்
அண்டகோளக்கணக்கும் அடுக்கின்வாறும்
தொழிலாகபலதேவர் ஜெனித்தவாறும்
தொடுவெற்றிக்கொடிவிருது வந்தவாறும்

அழியாதயுகம்வளர்ந்து வருகுமாறும்
ஆதியந்தமாயெடுத்திங் கறைகுவேனே. (4)

ஆதிமுதல்வாரமே மானவாறும்
ஆறிரண்டுதிங்களென வடைந்தவாறும்
சோதியாம்வருடமறு பத்தென்றும்
சொல்லடங்காயுகவருடம் பிரித்தவாறும்
நீதியொடுவிரதநாள் குறித்தவாறும்
நீணிலத்தில்தேவரவ தாரவாறும்
ஆதியாம்ப நூலும் பிரித்தேயாய்ந்து
அற்புதமாயிங்கெடுத்து அருளுவேனே. (5)

அருளென்றபொருளெழுதி வைத்தபின்னர்
அசட்டையாய்ப்புலம்புவா ரனேகமாண்பர்
தெருளாகஒருவழியிற் கிடைத்ததல்ல
தெளிவாளியேயரிவன் றிரட்டுங்கஷ்டம்
மருளாகஆங்காங்கு பலநூல்தன்னில்
மடங்கியவையாவுமொரு கோர்வையாக்கி
பொருளாகவெளிவிடுத்த வின்னூல்முற்றும்
புன்மொழியேனும்பொருப்பீர் புலவர்தானே. (6)

புலவோர்தமடிப்பொடிக்கும் பொருப்போயில்லேன்
புத்தியிலேன்சித்தியிலேன் பொறுமையில்லேன்
கலகலெனத்தமிழறையுங் கணக்கோயில்லேன்
கற்றவர்க்குத்தொண்டுசெயுங் கருத்துமில்லேன்
பலபலநூல்கற்கவென்றால் பருவமில்லேன்
பாவாணாானுக்கிரகப் பற்றுமில்லேன்
குலமதனில்மானிடமென் றுதித்தேனன்றி
குருவுபதேசங்களிலோர் குணமிலேனே. (7)

குணமென்னுங்குன்றேறி நின்றோர்காயிற்
குவலயத்துப்பல்லுயிரும் குன்றமெட்டும்
கணமேனுமாற்றலரி தென்பர்மேலோர்
கணக்கரியாக்காளேயென்றன் கருத்தையேற்று
துணையிருக்கவேணுமென்று துதித்துப்போற்றித்
தோற்றியவிவ்வுலகவளந் திரட்டிவைத்த
மணமருவும் சிறுமணவூர் முனிசாமிச்சொல்
மண்டலத்துப்புலவோர்கள் மன்னிப்பீரே. (8)

## தெய்வமே துணை.

உ

சிவராமஜெயம்.

பூலோக இரகசியமென்னும்

# பிரபஞ்ச உற்பத்தி.

(முதற் காண்டம்.)

---

விருத்தங்கள்.

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதியவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

நாரணனென்னுந்தேவு நான்முகத்தவனுமுக்கட்
பூரணன்றானுமாகிப் புவிபடைத்தளித்துமாற்றி
ஆரணமுடிவுந்தேறு வனாதியாய்புயிர்கட்கெல்லாங்
காரணனாயமேலோன் கழலிணைக்கருத்துள்வைப்பாம்.

கண்ணனைக்கமலத்தோனைக் கண்கள்மூன்றுடையகோனை
விண்ணவர்பதியைத்தொந்தி விளங்குமைங்கரனைப்போற்றி
மண்டலமிரண்டேழண்ட மகிமையுற்பத்திசொல்லத்
தண்டமிழ்வாணிதிவ்ய தமிழ்ப்பதங்காப்புத்தானே.

---

நூல்.

அம்மைவேண்ட அரனருளியபடி
இம்மைரகசிய மினிதுபுகல்வாம்.

ஸ்ரீ கைலையங்கிரியில் நந்திதேவர், வியாக்கிரமபாதர், பிருங்கி மகாரிஷி, பூதகணங்கள், யக்ஷகின்னரர், கிம்புருடகெருடகந்திருவர் முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், தொண்டர் கூட்டங்களும் தன்னைச்சூழ்ந்துசிரங்களின்மேல் கரங்களைக்குவித்துப் பற்பல விதங்களாகத் துதித்து வணங்க, மின்னலைப்பழிக்கும்பொன்னொளிவிளங்க விடபாகத்திலமர்ந்தஉமையவள், சிவபெருமானைநோக்கி ஓ சுவாமி! அடியாள்

இப்பிரபஞ்ச உற்பத்தியையும் இதிலடங்கியவைகளையும் பூமண்டலத்தினளவு உட்பிரிவு ஜீவர்களாதியின் இயற்கையுமறிய விருப்பங்கொண்டமையால் திருவுளங் கனிந்தருளவேண்டுமென்றிறைஞ்சிநிற்க சிவபெருமான் புன்சிரிப்புடையவராய் பார்வதியைநோக்கிச் சொல்லத்தொடங்கினர்.—

கேளாய் பார்வதி! இப்பிரபஞ்ச வுற்பத்தியையும், சிருஷ்டிக்கிரமத்தையும் இதிலடங்கிய வைகளையும் பூரணமாய்ச்சொல்லப்புகின் நீண்டுவிரிவாகும், அன்றியில் அதைச் சீவர்களறிந்துய்யும் பொருட்டே சொல்லுவதாகும். நாம் சமஷ்டியிலிருந்து செய்யும் விளையாடலை வியஷ்டியாகிய ஜீவர்கள் பாசவசத்தினராதலின் அனுபவமாயுணரக்கூடாதவர்களாக விருக்கிறார்கள். ஆகையால் அதிகவிரிவுங் குறுகலுமின்றியொருவாறாகச் சொல்வதைக்கவனித்துக்கேட்பாயாக.

எண்ணிறந்த அண்டங்களிலுங் காணப்படாததாகியும், சர்வலோகங்களிலும், பரிபூரணமாய்நிறைந்துள்ளதாயும், உருவாகியும் அருவாகியும், அருவருவாகியும், தேவராகியும், மனிதராகியும் ஆணாகியும், பெண்ணாகியும், அலியாகியும், விலங்காகியும், ஊர்வன, நடப்பன, பறப்பன, நீர்வாழ்வன, தாவரமுமாகியும், இவையனைத்தும் அல்லனவாகியும் சகலவிடத்தும் சாக்ஷிமாத்திரமாய் நித்தியனாய், சர்வப்பிரகாசனாய், ஆனந்தமயமாய் மனோவாக்குக் கோசரனாய் ஏகமாய் விளங்கியிருப்பவன்யானே; இவையன்றி, மூலப்பிரகிருதியும், அதினின்றுதித்த சத்துவ ரஜோ தமோ குணங்களும் வித்தையும் இவ்வித்தையாகிய சுத்தமாயையின் கண்தோன்றிய பிரம்ம விஷ்ணுவாதிதிரிமூர்த்திகளும், அவித்தையும் இவ்வித்தையாகிய அசுத்தமாயையினின்றுதித்த கிஞ்சிஞ்ஞராகிய சீவர்களும் விக்ஷேபம் ஆவரணமுமாகிய சத்திகளும், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு பிருதிவியாதிய தன்மாத்திரை பூதங்களும் மனம், புத்தி, சித்தம், அகங்காரமாகிய அந்தக்கரணங்களும், சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்ராணமாகிய ஞானேந்திரியங்களும் வாக்கு பாதம், பாணி, பாயுரு, உபத்தமாகிய கன்மேந்திரியங்களும், இவ்விந்திரியங்களின் தொழில்களும், பிராணன் அபானனாதி பஞ்சவாயுக்களும், ஸ்தூலபஞ்ச பூதங்களினின்றுண்டான சத்த

தாதுக்களாலான ஸ்தூலதேகங்களும்இதிலடங்கிய மற்ற தத்துவங்களும், இவையாவும் யானேஎன் சந்நிதானத்தினின்றேயிவைகளுதித்தன. முடிவில் இவையாவும் என்னிலேயே யொடுங்குகின்றன. இவையனைத்திற்குள்ளும் புறம்புமாய் எள்ளி லெண்ணெய்போலும் உடலிலுயிர்போலும் நிறைந்துள்ள நித்தியன் நான் ஒருவனே.

இன்னுங்கேளாய் ஓ பார்வதி! இப்பூமண்டலம் 19-கோடி 70-லட்சம் சதுரமயில் விஸ்தீரணமுள்ளதாயும், ஜம்புத்தீவு, பிலக்ஷத்தீவு, சான்மலத்தீவு, குசைத்தீவு, புஷ்கரத்தீவு, சாகத்தீவு, கிரௌஞ்சத்தீவு, என்னும் ஏழு தீவுகளாய்ப் பிரிக்கப்பட்ட உட்பிரிவுகளையுடையதாயும், இதற்குக்கடல்,உவர்நீர்க்கடல்,கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், நெய்க்கடல்,தயிர்க்கடல், பாற்கடல், சுத்தநீர்க்கடலென்னு ; ஏழுசமுத்திரங்களாற் சூழப்பட்டுமிருக்கிறது,இவற்றில் ஜம்புத்தீவுஎல்லாத்தீவுகளுக்கும்நடுவிலுள்ளது; அதன் நடுவிற் பொன்மயமானமேருபர்வதமானதுபூமியில்பதினாயிரயோசனை வேரூன்றியும் எண்பத்துநான்காயிரயோசனையுயர்ந்துமுள்ளது; அதன் சிகரம் முப்பத்திரண்டாயிரயோசனையகலமுடையது. மேருமலையானது பூமியாகிய தாமரைமலருக்கோர் மொட்டுப்போல்விளங்கும் ஹிமாசலம் ஏமகூடம் நிஷதமென்னும்மூன்றுபர்வதங்களும் மேருவின் தென்றிசையிலும் நீலம்,சுவேதம், சிருங்கிமயன்னும்மூன்றுபர்வதங்களும்மேருவின்வடதிசையிலும் நவரத்தின மயமானசாரலும்பதுமராகமணிப்போன்றசென்னிறமும் அக்கினிஜுவாலைபோன்ற பிரகாசமும்பெற்று விளங்குகின்றன. மேருவின் தென்பக்கலில் பாரதம் கிம்புருஷம் ஹரிவர்ஷமென மூன்றுவர்ஷமுண்டு; இவவர்ஷங்களொவ்வொன்றும்ஒன்பதினாயிரம்யோசனை விஸ்தீரணமுடையன; நடுவிலுள்ள இளாவிரதகண்டத்தின் மத்தியில் மேருமலை மிகவும் நன்றாயிருக்கும்;மேருவின் கிழக்கில் மந்தரமும், தெற்கில் கந்தமாதனமும்,மேற்கில் விபுலமும், வடக்கில் சுபார்ஸ்வம்என நான்குபர்வதங்கள் நாற்புறத்திலும் நின்று பதினாயிரம்யோசனை யகலமும் ஒன்பதினாயிரம் யோசனையுயரமுங்கொண்டு அம்மேருவுக்கு உறுதியாக விட்கம்பசைலங்களாய் நிற்கும்; இப்பர்வதங்களில் மந்தரகிரியில்கடப்பமரமும்,கந்தமாதனகிரியில் ஜம்புவிருக்ஷமும், விபுலகிரியி லரசமர

மும், சுபார்சுவகிரியில் ஆலமரமும்விளங்கும்; இம்மரங்கள் ஆயி ரம்யோசனை விஸ்தீரணமுடையன வென்றறிக.

மேற்கூறிய மகாமேருவுக்குத் தென்பாரிசத்தில் விளங்குங் கந்தமாதனக்கிரியிலிருக்கும் ஜம்புவிருக்ஷமென்னும் நாவல்மரமா னது இரண்டாயிர யோசனையுயரமுள்ளது. நீண்ட அளவுபெற்ற நாவல்மரம் நிற்குந் தன்மையினால் பரதகண்டத்தை நாவலந்தீவு எனப் பாண்டியர்களால்சொல்லப்படும், அன்றியும்,நான்முகனெ ன்னும் பிரமனதுவலதுபுயத்திலுதித்த சாம்புவென்னும் அரசன துமுதற்குமாரனாகியஅங்கதீரனால் அரசாளப்பட்ட இந்த ஜம்புத் தீவை மேற்படி அங்கதீரன்புத்திரர்கள்ஒன்பதுபேரில் முதற்புத் திரனாகிய பரதன்என்பவன் அரசாட்சிசெய்துவந்தபடியால் பரத கண்டமென்றும்வழங்கப்படுகிறது. இதின்விவரத்தைமேல்வரும் விசேடங்களுடன் விளக்குவோமாக. இந்தத் தீபத்திற்கு ஜம்புத் தீவுயென்றுபெயர். அம்மரத்தின் பழங்கள் ஒவ்வொன்றும் யானை யைப்போல உருவமுடையனவாய்ப் பழுத்து நிலமிசை விழுந்து அப்பழச்சாற்றி நின்றுபெருகும் ஆறுனது ஜம்புநதியாகிறது. அ தன்சாரத்தைப் புசிப்போர் துக்கம்-நோய்-விருத்ததசை- இந்திரி யநாச முதலியன வின்றி எப்பொழுதும்சந்தோஷத்துடன் வாழ் ந்திருப்பார்கள். அந்நதிதீரத்திலுள்ள மண் பொன்மயமாயுள்ளது மேருவுக்கு கிழக்கே பத்ராசுவமும் மேற்கே கேதுமாலமும் என யிரண்டுமரங்களுளது, அவற்றிற் கிடையிலேதான்இளாவிர்தகண் டமுள்ளது; கிழக்கில் மந்தரமலையடியில் அருணமும், தெற்கில் கந்தமாதனத்தடியில் மானதசரசும், மேற்கில் விபுலகிரியடியில்சீ தோதகமும்,வடக்கில் சுபார்சுவகிரியடியில் மகாமடுவும் எனநான் குமடுக்களுண்டு. இம்மடுக்களில் முறையே சயித்திரக்காவி, சித் திரை, வைப்பிரசை, திருதாக்கியம் என்னும் நான்கு நந்தவனங்க ளுண்டு. இந்நந்தவனங்களின் நடுவில்முறையேதாமரைமலருடன் கூடியதடாகமும், குமுதங்களோடுகூடிய மானதசரசும்செந்தாம ரையுடன்கூடிய விமலோதகமும், நீலோற்பலத்துடன் கூடிய ம னோரதமுமென நான்கு ஒடைகளுண்டு. சீதாஞ்சனம், குமுதம், குராஹா மால்யவான் யென்னும்பர்வதங்கள் பூர்வபாகத்திலும் கேசரபர்வதம் தக்ஷிணபாகத்திலும், திரிகூடம், சிசிரம், பதகம், ரஜதம், நிஷதம் இவைகள் தக்ஷிணபாகத்திலுமுள்ளன, மேற்புற

த்தில் சிசிவாசஸகு, வைதூரியம், கபிலம், கந்தமாதனம், ஜாருதி யென்னும் பர்வதங்களும் வடபாகத்திற்சங்கசூடமென்றும்ரிஷப மென்றும் கம்சமென்றும்காலஞ்சரமென்றும் பர்வதகேசரங்களு முள்ளன. இந்த மேருமலையினுச்சியில் பதினாலாயிரம் யோசனை விஸ்தாரத்தோடு கூடியதாயுள்ளது பிர்மலோகம்இதன்சுற்றிலும் அஷ்டதிக்குப்பாலர்களின் லோகங்களுண்டு; அந்த பிரமலோகத் தின் எட்டுத்திக்குகளிலும் சந்திரமண்டலம் பிரகாசிக்கிறது, விஷ் ணுபாதத்திலுண்டாகிய கங்கையானது அவ்விடத்தில் சீதையென் றும்,அலகநந்தாவென்றும்,சுசக்ஷுசுவென்றும், பத்ராவென்றும் நான்குதிக்குகளிலும் பிரவாகிக்கின்றன. சீதையென்னும்நதி கீழ் திக்கிலும் அலகநந்தா தென்திக்கிலும் சுசக்ஷுசு மேற்கிலும் பத் ராவடதிக்கிலும் பிரவாகித்துப் பர்வதங்களையதிக்கிரமித்துசமுத் திரத்தை யடைகின்றன. சுநீலம், நிஷதம், மாலியவான்,கந்தமாத னமென்றுசொல்லப்பட்ட நான்குபர்வதங்கள் தாமரைமொட்டுப் போன்ற மேருமலையின் நாற்புறத்திலுமுள்ளன பரத-கேதுமால- பத்ராசுவ-குருவென்னும் நான்கு வருஷங்கள் மேருவாகிய தாம ரைக்கு இதழ்கள்போலிருக்கின்றன. அதன் மத்தியில்தேவகூட மும் தென்னண்டை கந்தமாதனமும், வடவண்டைகைலாசமும், முறையே கீழ்மேல் பாகங்களில் நிஷதநீல பர்வதங்களும், மேரு வின் நான்குபுறத்தின்சிகரங்களில் ஒவ்வொருபாதத்திலும்இரண் டுகேசர பர்வதங்களுமுள்ளன. அதில் சைலத்துரோணியென்னு மோர் ஓடையுண்டு. அதைச்சுற்றிலும் மனரம்மியமான புஷ்பங் கள் பூத்த நந்தவனங்களும் காடுகளும் மற்றவைவுமுள்ளன. அந் தக் காடுகளில் எப்பொழுதும் யக்ஷர்களும் கின்னரர்களும் கந்தர் வர்களும்விளையாடிக்கொண்டிருப்பார்கள். இதற்குபூலோகசுவர் க்கமென்னும்பெயருண்டு. தருமஞ்செய்தவர்கள்இந்தலோகத்திற் சுகத்தை யனுபவிப்பார்கள். இதனைப் பாவிகள்பார்க்கவும்அடை யவுங்கூடாது. கிம்புருஷாதி யெட்டு வருஷங்களில் வசிப்போர்க ளுக்கு கோபம், துக்கம், ஆயாசம், துவேஷம், பசி, நரகம், பயம் சோம்பல் முதலியனகிடையாது. எப்போதும்நோயற்றதேகமும் துக்கமில்லாமையும், இருபத்திரண்டாயிர வருஷம் ஆயுளுமடை வார்கள்; கிருதமென்றும் திரேதாவென்றுஞ் சொல்லப்பட்ட நதி கள் அப்பூமியில் எங்கும்பிரகாசித்துக்கொண்டிருக்கின்றமையால் மழைகிடையாது. அப்பூமியின் போகம் அளவிடப்பட்டுள்ளது.

அதிகமாக அனுபவிக்க முயன்றாலும் பிரயோஜனப்படாது. அப் பூமியின் நதிதீரத்திலுள்ள மணற்பாகங்கள் பொன்னிறமாகவும், புஷ்பங்கள்சுவர்ணமயமாகவும், கரைப்புறம்இரத்தினமயமாகவும் பசும்புல்லுள்ள திட்டுகள் வைடூரியமாக விளங்குவதால் அங்கு ள்ளவர்கள் விளையாடிக்கொண்டு பொழுதுபோக்குவார்கள்.

கேளும் பார்வதி! இனி ஹிம்யபர்வதத்தின் தக்ஷிணபாகத் துள்ள பாரதவர்ஷத்தின்விஸ்தீரணத்தைச்சொல்லுகிறேன். அதாவது இப்பாரதவருஷமானது ஒன்பதினாயிரம் யோசனை விஸ்தாரத்தோடுகூடியது; இதற்கு கர்மபூமியெனவோர்பெயருண்டு. இப் பூமியில்புண்ணியஞ்செய்தோர் புண்யபூமியாகிய தேவலோகத்தையும், பாவம் பண்ணினோர் நரகத்தையும் ஞானவான்கள்மோக்ஷத்தையுமடைவார்கள். அன்றியும் இப்பாரதவருஷம் நவகண்டங்களாக பிரிக்கப்பட்டு இந்திரத்தினம், கசேரு தாம்ரபர்ணம், கபஸ்திமான், நாகதீபம், சௌமியத்திபம், கந்தர்வம், வாருணம், பரதமென்னும்பெயர்களோடுவழங்கும்; இவைகளின் ஒன்பதாவதாகிய பரதகண்டமானது அனேகமாய்ச் சமுத்திரங்களாற் சூழப்பட்டதும் வடக்கு தெற்கில் ஆயிரம்யோசனை விஸ்தாரத்தோடு கூடியதுமாக விருக்கும்.

இக்கண்டத்தின் கீழ்புரத்தில் கிராதகர்களும்,மேற்புறத்தில் யவனர்களும், தக்ஷிணபாகத்தில் ஆந்திரரும், வடக்கில் கிருஸ்தவர்களும் வசிக்கிறார்கள். இக்கண்டத்தின் மத்தியில் 30 - கோடி தொகையுள்ள பிராமண, க்ஷத்திரியவைசிய, சூத்திராகியநான்கு வருணத்தோர்கள் வசிக்கிறார்கள். இவர்கள் அசுவமேதாதியாகங்களாலும் புண்ணிய தீர்த்தஸ்னானங்களாலும், தேவதாப்ரதிஷ்டைகளாலும்.கோதானமுதலிய தானங்களாலும்நற்கதியடைகிறார்கள், இப்பூமியில் மகேந்திரமென்றும், மலயமென்றும், சகியமென்றும், சுக்திமானென்றும், ரிக்ஷமென்றும், விந்தியமென்றும், பாரியாத்திரமென்றும், ஏழுகுல பர்வதங்களிருக்கின்றன. வேதஸ்மிருதியென்றும், நர்மதாயென்றும்,சுரஸாயென்றும்பேர் பெற்ற நதிகள் பாரியாத்திரமென்னும் பர்வதத்திலுற்பத்தியாகி நான்கு புறத்திலும் பரவி இப்பூமியைப் பரிசுத்தஞ்செய்கிறது,

விந்திய பர்வதத்திநின்று கோதாவரி, பீமநதி, தாபிமுதலிய மகாநதிகள்தோன்றிதங்களிடம்ஸ்னானபானஞ்செய்வாரதுபாவங்

களைப்போக்கி பரிசுத்தஞ்செய்கின்றன. கிருஷ்ணவேணி காவேரி முதலியமகாநதிகள் சகியபர்வதத்திற்றோன்றி தக்ஷிணதேசத்தை பரிசுத்தஞ்செய்கின்றன. கிருதமாலா தாம்பிரபரணி முதலிய நதிகள் மலயபர்வதத்தி லுற்பத்தியாகி அவ்விடங்களைச் சுத்திசெய்கின்றன.

மகேந்திர பர்வதத்தினின்று, திரியாமா, ரிஷிகுல்யா என்னும் நதிகளுற்பத்தியாகி அப்புரங்களைப் பரிசுத்தம்செய்கின்றன. குமரியென்னும் நதி சுக்திமானென்னும் பர்வதத்திலுண்டாகிப் பரவுகின்றது. இப்பூமியில் நான்குவருணத்தாரும் ஸ்னானபானங்களைச்செய்து இவைகளால் சுகத்தையும்பரிசுத்தத்தையும் அடைகிறார்கள். இக்கண்டத்தில் நான்குயுகமுண்டு. மற்றத்தீபங்களில் இவ்விதயுகங்களில்லை.

## ஜம்புத்தீவு.

இப்பரதகண்டத்திலுள்ள ஜம்புத்தீபமானது கர்மபூமியானதால் அதிலுள்ள ஜனங்கள் கோதானமுதலிய தானங்களையும் அக்கினிஹோத்திரமுதலிய சத்கருமங்களையும், தவமுதலிய யோகங்களையுஞ்செய்து நற்கதியடைகிறார்கள். ஆகையால், ஒன்பதுவகையாகிய வருஷங்களுள் பாரதவருஷமேசிறந்தது. மற்றவைகளெல்லாம்போக பூமிகளேயன்றிப் புண்ணியஞ்செய்து நற்கதியடையத்தக்கவைகளல்ல.

ஆதலின் ஜனன மனேகமாகத்தோன்றினும், இப்பரதகண்டத்தில் ஓர் ஜனனமெடுப்பது அருமையிலும் அருமை. சுவர்க்க மோக்ஷங்களடையக் காரணமாயிருக்கிறது இப்பாரதகண்டமாகையால், தன்னியர்களாயிருக்கும் தேவர்களும் இப்புண்ணிய பூமியில் தோன்றினல் மறுபடியும் தேவாம்சமடையலாமென்று விரும்புகிறார்கள். இவர்கள் இப்பூமியில் தோன்றி என்னைத் தியானித்து உயர்ந்த பதவியை யடைகிறார்கள் ஆகையால், மோட்சலோகத்திற்குவழிகாட்டும் முதற்கருவியானது இப்பாரதகண்டமென்றேயறிவாய். ஓபார்வதி! இப்பாரதகண்டத்தினளவு முப்பத்துநாலாயிரம் யோசனை விஸ்தீரணமுடையதாகும், உவர்நீர்க்கடல் இலக்ஷம் யோசனைவிஸ்தீரணமுடையதாய்ஜம்புத்தீபத்தைச்சூழ்ந்திருக்கும்.

## பிலக்ஷத்தீவு.

பார்வதி! மேற்கூறிய ஜம்புத்தீவுக்கிரண்டுகொண்டது பிலக்ஷத்தீவென்றறிவாய். அதில் கோமேதகம்-சந்த்ரம்-நாரதம் - துந்

துபி-சோமகம்-சுமனஸ்-விப்பிராஜம்-என வர்ஷாசலங்களுண்டு அப்பர்வதங்களில் எப்போதுந் தேவர் கந்தருவர் முதலாயினோர் சந்தோஷத்துடன் வசிப்பார்கள். அநுதப்தா - சிகா - பாபக்னி த்ருதிவா-கிருபா-அமிருதா-சுகிர்தா என்னும் ஏழுநதிகள் பிரவகிக்கும்அனேகசிறுநதிகளுண்டு. அங்குள்ளோருக்குமனோவியாதி தேகபீடை முதலியவைகிடையாது. அந்நதிகளில்ஸ்னானஞ்செய்து நீர்பருகினோர் பதினாயிரவருஷகாலஞ்சீவித்திருப்பார்கள். அவ்விடத்தில் ஜம்புத்தீவைப்போல யுகாவஸ்தையில்லை. எப்பொழுதும் திரேதாயுகத்திற்குச் சமானமாகவேயிருக்கும்.பிராமணாதிநான்கு வருணத்தார்களுமிருக்கின்றனர். அவ்விடத்தில்என்னையும் திருமாலையும் பிரமதேவரையும் வேத மந்திரங்களாற் பூசிக்கிறார்கள் அது கருப்பஞ் சாற்றுக்கடலாற் சூழப்பட்டிருக்கும்.

## சான்மலித்தீவு.

அதன் பின்னர்; சான்மலித்தீபத்தில் ஸ்வேதம் - ஹரிதம் ஜீமுதம்-ரோஹிதம்-வைத்யுதம்-மானவம்-சுப்பிரபம் யென ஏழு வர்ஷ பர்வதங்களுண்டு. அதற்கு சான்மலி என்னும்பெயர் அங்குள்ள விருக்ஷத்தாலேயே உண்டாயிற்று. அதற்கிரட்டிப்பாகச் சுராக்கடல் சூழ்ந்திருக்கும். சுக்லா-ரக்தா - ஹிரண்யா - சந்த்ரா சக்ரா-விமோசனா-நிவிர்த்தியென்னும்ஏழுநதிகள் அவ்வர்ஷங்களினின்றுபெருகும். அப்பூமியில் நான்கு வருணத்தாருமுண்டு எக்யமுதலியவற்றால் விஷ்ணுவை வணங்குவர். அவ்விடத்தில்தேவர்கள் உல்லாசமாக வசிப்பார்கள்.

## குசைத்தீவு.

அச்சான்மலித்தீவுக் கிரட்டிப்புடையது குசைத்தீபம். அதில் அசுரரும்-தேவரும்-கந்தர்வர்-கிம்புருஷாதிகளும்-மானிடருள் நான்குவருணத்தவர்களும் வாழ்வார்கள். ஆசார அநுஷ்டானங்கள் தவறமாட்டார்கள். அங்குள்ளவர்கள் என்னையும் திருமாலையும் பூஜிப்பார்கள். குசேசயம் - அரிஜஜோதிமான் - புஷ்பவான்-மணிதருமம்-மகாசைலம் - மந்தராசலம் என்னும் ஏழுபர்வதங்களும் தூதபாவை-சிவை-பவித்திரை-சம்மதி-வித்யை-தம்பாமஹீ என்னும் ஏழுநதிகளும் இன்னும் பலநதிகளும்உண்டு. இது அங்குள்ள குசையினாலேஅப்பெயருற்றது. இதனை நெய்க்கடல்சூழ்ந்திருக்கும். (குசை-தருப்பை)

## கிரௌஞ்சத்தீவு.

கேளும் பார்வதி! முன்சொன்ன தீவுக்குமேலானது தயிர்க் கடலாற் சூழப்பட்ட கிரௌஞ்சத்தீபம். இதில்கிரொஞ்சம்-வாமனம்-அந்தகாரம்-திவாவிருத்யம்-புண்டரீகம்-துந்துபி - சுமனசு என்னும் ஏழுபர்வதங்களும் பலவிதமான விருட்சங்களும் புஷ்பவனங்களும் தேவர் காந்தருவர்களும் நான்குவருணத்தார்களும் நோயில்லாதவாழ்வை யுடையவராயிருப்பார்கள். இதில் கௌரீ குமுக்வதி-சந்தியா-ராத்திரீ-மனோஜவா-கியாதி-புண்டரீகா என்னும் ஏழுநதிகளுண்டு-அங்குள்ளவர்கள் என்னை யோகமார்க்கத்தால் தியானிக்கிறார்கள்.

## சாகத்தீவு.

அதற்கிரட்டிப்பாகிய க்ஷீரசமுத்திரத்தாற் சூழப்பட்டசாகத்தீவானது உதயகிரி-ஜலதாரம்-பரேதா-சாமம்-அஸ்தகிரி-அம்பிகாகிரி-கேசரி என்னும் ஏழுவர்ஷ பர்வதங்களையுடையது நான்கு வருணத்தாரும் அங்குண்டு அதில்,

சுகுமாரி-குமாரி-நலினா-வேணுமா-இட்சு-ரேணுகா-கபஸ்தி என ஏழுநதிகளுண்டு. அன்றி அனேகமலைகளும் நதிகளுமுண்டு. அங்குள்ளவர்கள் தருமவான்களாயிருப்பார்கள். அவர்கள் சூரியனையே எப்பொழுதும் யாகாதிகருமங்களாற் பூசிப்பார்கள்.

## புஷ்கரத்தீவு.

அதற்கிரட்டிப்பாகிய புஷ்கரத்தீவானது மானதசரசு யென்னும் ஆயிரம் யோசனை விஸ்தீரணமான தடாகமும், அதில் தாமரைமலர்கள் ஐந்துயோசனையுயர்ந்துவிளங்கும். அவ்விடத்துள்ளவர்கள் இராகத்துவேஷாதிகளும்உத்தமோத்தம பேதமுமின்றிச் சத்தியவான்களாய் சுவர்ணமய அலங்காரத்துடன்சமானஸ்தர்களாய் ஜ்வராதிரோகங்களின்றி அறுசுவையோடுகூடிய அன்னபானாதிகளை புசிப்பவர்களாகியும்-சுகஜீவிகளாகவும் - பதினாயிரவருஷம் வாழ்பவர்களாயு மிருப்பார்கள் அது சுகமானயிடம்.

புஷ்கரம்-தாதகி-கண்டம்-மகாவீதம் - நியக்ரோதம் என்னுமிடங்களில் தேவாசுரர்களாற்பூசிக்கப்பட்டவராய் பிர்ம்மதேவர் எழுந்தருளியிப்பார். அது சுத்தநீர்க்கடலாற் சூழப்பட்டிருக்கும். இவ்வாறு, சப்தசமுத்திரங்களாற் சூழப்பட்டிருப்பன சப்த தீவுக்களாம். சமுத்திரஜலங்கள்,சந்திரன்விருத்தியாகையால் விரு

த்தியாகிஅவன் குறைகையிற் குறைந்துவிடும். சமுத்திரத்திலுள்ளவடவாமுகாக்கினி அந்த ஜலப்பெருக்கைப்பருகிவிடும். சுத்தநீர்க்கடலுக்குப் புறம்பே உலகங்களில்லை பிராணிகளுமில்லை. ஆயினும், பொன்னிறமான பூமி அதற்கிரட்டிப்பு விரிவாக ஆயிரயோசனை யுயரமாகவிருக்கும். அவ்விடத்திற்கப்புரம் அண்டச்சுவர் உள்ளது. அதுவரையிலும்தான் பூமி. இந்தச்சப்ததீவுகளும்ஐம்பதுகோடி யோசனை விஸ்தீரணமாம். இதுவே எல்லாப் பிராணிகளுக்கும் ஆதார காரணமாகவிளங்கும்.

மேலும் (சாம்பு) என்னும் அரசனுடைய புத்திரர்களாகிய அங்கதீரன்-மேதாதி-வபுட்டு-யநதி-புரதிட்டு- துதிமன் - அவ்வியன் என்னும் எழுவரும் ஏழுதீவையாண்டார்கள். அவர்களுள் ஜம்புத்தீவையாண்ட அங்கிரதன் தன் புதல்வர்களாகியபாரதன்-கிம்புருடன்-கேதுமாலோன் - பத்திரைவசுத்தினி - பாரவிரதன்-இரவி-அனலன்-இரணியன் - குரு என்று சொல்லப்பட்ட ஒன்பதுபேர்களுக்கும் இந்த ஜம்புத்தீவை ஒன்பது கண்டமாக்கிப் பகுந்துக்கொடுத்தான். முன்சொன்ன மகாமேருவின் சாரலின் தென்புரத்திலே நாவல்மரமிருக்குந் தன்மையினுலே இந்தத்தீவு முற்றும் நாவலந்தீவென்னும் ஆஸ்பதமான பெயரைப்பெற்றது அன்றியும் முன்சொன்ன அங்கதீரன் பிள்ளைகளில்மூத்தவனுகிய பரதன் என்னும் அரசன் அக்கண்டத்தை யாண்டிருந்தமையால் இதற்குப் பரதகண்டமென்று ஆதியிலிருந்தே வழங்கப்பட்டுவருகின்றது எனக் கூறினர்.

## பிரம்மாண்டக் குறிப்பு.

இதைக்கேட்ட சர்வலோகமாதாவாகிய உமாபிராட்டியார் மிகுந்த சந்தோஷமடைந்துச் சிவபெருமானைநோக்கி ஓ சுவாமி! பிரம்மாண்டம் எப்படி யுண்டுசெய்யப்பட்டது, அஃதெவ்வளவு விஸ்தீரணமுடையது, அதற்கு ஆதாரம்யாது இவற்றை எனக்கு விளங்கச் சொல்லவேண்டுமென்றுகேட்க, சிவபெருமான் பார்வதியைநோக்கிச்சொல்லுகிறர். ஏ பார்வதி! இந்தப்பிரம்மாண்டத்தின் விஸ்தீரணத்தையும் உபரத்தையுஞ் சுருக்கமாகச் சொல்லுகின்றேன். இந்தப் பிரம்மாண்டத்திற்குக் காரணமாகியும் அவ்வியத்தமாயும் அனுமயமாயும் எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாயும் எல்லாவற்றிற்கும் லயத்தானமாகியும் விளங்கும் என்னிடத்தினின்றும் ஆகாயமுண்டாயிற்று; ஆகாயத்தினின்றுவாயுவும், வா

யுவினின்று அக்கினியும், அக்கினியினின்று ஜலமும், ஜலத்தினி ன்றுபிருதிவுந்தோன்றின; பஞ்பூதாத்து மகமான பிரம்மதேவர் உண்டாகிப் பிரமாண்டத்தைச் சிருஷ்டிசெய்தனர்.

## ஆதிசேஷன் சிறப்பு.

அவற்றுள் அதல, விதல, சுதல, தராதல, மகாதல, ரசாதல, பாதாளம் என்று சொல்லப்பட்ட கீழுலகங்கள் ஏழு, மேலுலகங்கள் பூலோகம், புவர்லோகம், மஹாலோகம், ஜனோலோகம், தபோலோகம், பிதுர்லோகம், சத்தியலோகம் என விளங்கும் சுவர்க்கலோகங்கள் ஏழுண்டு. ஆகிய இந்த ஈரேழு பதினான்குலோகங்களுக்கும ஆதாரமாகவும் வெண்ணிறமா யிருக்கப்பட்ட ஆதிசேஷன்விளங்குவான். அவனே விஷ்ணுவென்றுஞ் சொல்லப்படும். பிரம்மன்வாக்கின்படி அவ்வாதிசேஷன் சகல லோகங்களையுந் தாங்கிநிற்பான். அந்தச் சேடனுடைய குணானுபவங்களைத் தேவர் முனிவர் முதலானவர்களாலுஞ் சொல்லிமுடியாது. ஆயிரஞ்சிரங்களும் தேவர்முனிவர்களாற் செய்யப்படும்பூசையும் சித்தர்களாற்சொல்லப்படும்அனந்தனென்னும் பெயரும் எல்லாத்திக்குகளையும் பிரகாசிக்கச் செய்யும் ஸ்வஸ்திகா பூஷணம்போன்ற ஆயிரம் பணாமுடிகளும் நெருப்போடு பிரகாசிக்கும் வெண்மலைபோல சுவாலையோடு சுழன்றுக்கொண்டிருக்கும் இரண்டாயிரம் விழிகளும் நவமணிகளிழைத்த கிரீடகுண்டலங்களும் திவ்வியமணம்பொருந்திய மலர்மாலைகளும் வெண்ணிறத்தாகாரமும் நீலநிறவஸ்திரமும் கைலாயகிரியைப்போன்ற உயர்வும் கலப்பைஇருப்புலக்கைகளாகிய ஆயுதங்களும் வருணன் கன்னிகையாகிய வாருணிஅருகிருந்துசெய்யும் உபாசனையும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் விஷஜ்வாலையும் சங்கர்ஷணாத்மகமும் ருத்திரரூபமும்பிரளயகாலாந்தத்திற் சர்வலோகங்களையுந் தன்னிடத்தொடுக்கும்வல்லபமும் சர்வாண்டங்களையும் ஒர்கடுகுபோலச்சுமக்கும் ஆற்றலும் உடையவனாகவிளங்கும் ஆதிசேஷனுடைய உருவத்தை ஒருவருக்கும் வர்ணிக்கச் சாத்தியப்படமாட்டாது. அவனுடைய சிரோத்தினங்களின்பேரிற் படிந்திருக்கும் பூமியானது அம்மணிகளின்பிரதிபிம்பத்தாற்குசுமமாலைபோல விளங்காநிற்கும். அந்தச்சேடன் சோர்வுற்றகாலையில் சமஸ்த பர்வதங்களோடுகூடிய உலகமுழுவதும் அசையும், அது பூகம்பமெனப்படும். அவனுடைய குணவிசேஷங்களை சித்தர்-முனிவர்-கந்தர்வர்-உரகர்-கின்னரர்-யக்ஷர்-

தைத்தியர்-தானவர் முதலானவர்களும் அறியாதவர்களாகி அனந்தனென்றுசொல்லுவார்கள். அழிவில்லாதவனாகவிளங்கும் அந்தச் சேஷன் தன்மார்பிலணிந்திருக்குஞ் செஞ்சந்தனத்தைத்தன் பெருமூச்சாற் பறக்கச்செய்து திக்குகளாகியமாதர்களையடையச் செய்ய வல்லவன். அவனிடத்தில்அநேககாலந்தவஞ்செய்த கர்க்கமுனிவர் நிமித்த சாஸ்திரத்தையும் சகலமான ஜோதிடசாஸ்திரத்தையும் அடைந்தனர். பாதாளலோகங்கள் ஏழுந் தனித்தனி பதினாயிரயோசனை விஸ்தீரணமும் இருபதினாயிரயோசனை யுயரமும் உடையன; பாதாளலோகங்களில் இரத்தினமயமானபூமியும் இரத்தினங்களிழைத்தஉப்பரிகைகளும் மதில்களும் தங்கம்விளையும் உமியும்உண்டு; அவ்விடத்தில் திதிபுத்திரர்களானதைத்தியர்களும் நாகராஜர்களும் இராக்ஷசர்களும் வசிக்கிறார்கள். காந்தியோடுகூடிய இரத்தினங்களையுடைய பாதாளலோகமானது சந்தோஷத்தை அளவின்றி யுண்டாகச்செய்யும், அதற்குச் சமானமானலோகங்கிடையவேகிடையாது.தேவதானவ கன்னிகைகளாலுண்டாகும்மோகத்தைவிடுத்த விரக்தனுக்கும் பாதாளலோகத்தில் விருப்பமுண்டாகத் தடையிராது. அவ்விடத்திற் பகலில் சூரியவொளியும் இரவிற் சந்திரகாந்தியுங் கிடையாது, குளிர்ச்சி வெப்பங்களும்இல்லை இரத்தினவொளியே யாவுமாக விளங்கும் அங்கேதேவாமிர்தத்திற்குச் சமானமான பக்ஷண போஜனங்களும் திருப்தியையுண்டு செய்யத்தக்கஅன்னபானாதிகளும் ருதுக்களாறிலும் புஷ்பிக்கும் புஷ்பஜாதிகளும் அம்மலர்களிலுள்ள தேனைப்பருகி ரீங்காரஞ்செய்யும் பொன்மயமானவண்டுகளின் கூட்டங்களும் வைடூரியமான விருக்ஷத்தளிர்களையுண்டுகளித்தகோகிலங்களின் குரலோசையும் ஸ்படிகத்தினாற்செய்தபடிகளையுடைய தடாகங்களிற் புஷ்பித்தசுவர்ணமயமான தாமரைமலர்களும் அமிர்தமயமான ஜலங்பெருகும்நதிகளும்இரத்தினமயமானநீலாம்பர பீதாம்பரங்களைத்தரும் விருக்ஷங்களும் வைரகோமேதங்களாலாகிய பூஷணங்களைக்கொடுக்கத்தக்க பர்வதங்களும் வாடாமல் மணம்வீசும் மலர்களையும் சந்தனத்தையுங் கொடுக்கும் மரங்களும் வீணை வேணி மிருதங்கமுதலிய வாத்தியங்களைச் சதாவாசித்துக்கொண்டும் கானம் செய்திருக்கும் நாககன்னிகைகளும் நிரம்பப்பெற்றுள்ள அந்தபாதாளலோகத்தில் எவ்வளவு காலம் ஒருவன் வாழ்ந்திருக்கினுங் காலங்கழிந்ததாகவே தோன்றாது.

## நரக லோகம்.

கேளாய் ஓ பார்வதி! பூமியின்கீழ் இருளும், பள்ளம் தண்ணீர் அதற்கடியில் பாவிகளை வதைக்கப்படுகிற நரக ஸ்தானங்களுண்டு, அவற்றைச் சொல்லுகிறேன் கேளும், அதாவது!

இரௌரவம்-சூகரம்-ரோதம்-தாலம்-விசஸனம்-மகாசுவாலம் தப்தகும்பம்-லவணம்-விலோசிதம்-ருதிராம்பம்-வைதரணி- கிருமிசம்-கிருமிபோசனம்-அசிபத்திரம்-கிருஷ்ணம் - லாலாபட்சம்-பூயவகம்-அக்கினிஜ்வாலம்-அகச்சிரம்-சந்தமிசம்-கிருஷ்ணசூத்திரம்-தமசு-அவீசு-சுவபோஜனம்-அப்பிரதிஷ்டம்-என்னும்இவைகளின்பொருள் ரவுரவமென்பது - குருவென்னும் மிருகத்தினால் துன்பப்படுத்துமிடம்; சூகரம் - பன்றிகளால் பீடிக்கப்பட்டும் அசையொட்டாமல் நிறுத்தப்படுமிடம்; ரோதம்-பனைமரத்தினின்றும் விழுதல் அதின்மட்டைகளினாலே யறுத்தல்; தாலம்-கைவாளாலேயறுத்தல்; விசஸனம்-யெரிகிறநெருப்பு; மகாஜ்வாலம் காச்சினயெண்ணைக்குடம்; தப்தகும்பம்-அறுத்தறுத்துக் காச்சினஉபபிடுவது; லவணம்-உதிரத்தை உரியும்படிசெய்வது; விலோகிதம்-காச்சினரத்தத்திற் போடுமிடம்; ருதிராம்பம்-கடப்பதற்கு வருத்தமான உதிரவாறு; வைதரணி-புழுக்கள் துளைக்குமிடம்; கிருமிசம்-புழுக்களைத்தின்னுமிடம் கிருமிபோஜனம்-நெருங்கின இருப்புமுட்களின்மேல் நடக்கச்செய்வது, கிருஷ்ணம்இது கார்ஷ்ணுயசம்யென்றும் சொல்லப்படும் சகிக்கக்கூடாத குளிராயிருப்பது, தாருணம்-சந்தமிசினியென்னும் ஆயுதத்தினால் நாக்கைப் பிடுங்குவது, சந்தமிசம்-நாற்புரத்திலுங் கொடிய கத்திகளைக்கட்டிநடப்பிப்பது, அசிபத்திரவனம்-அதிக தர்க்கந்தமாய் நிமிஷமும்பொருக்கக்கூடாதயிடம்;பூயவஹம்-கிருஷ்ணசூத்திரமாவதுசக்கரத்தில் ஏற்றிக் கால்விரலில் ஒருகயிறுமாட்டி உடலெல்லாமொன்றுகும்படி யிருக்கிக்கட்டி யறுக்கப்படும்படியானயிடம். இப்படி மற்றவைகளையும் அறிந்துகொள்க.

மேற்சொன்ன இரௌரவமுதலான அனேகமாயிரங்கோடி நரகங்கள் இயமனுடைய அதிகாரத்திற்குள்ளே யிருக்கின்றன, அவற்றுள் பாவிகளுக்கு ஆயுதபயம்-அக்கினிபயம்-ஜெந்து பயம் முதலான சகலபயங்களும் உண்டு. அவைகளில் விழுகின்றபாவிகளைக்கேளும் பொய்சாக்ஷி சொல்லுகிறவன்-பக்ஷபாதத்தினாலே

விவகாரத்தில் அனியாயம் பேசுபவன்-பொய்சொல்லுகிறவன் இவர்கள் இரௌரவத்தில் விழுவார்கள். சிசுவைக்கொல்லுகிறவன் பட்டணத்தையழிக்கிறவன்-மூச்சைத்திணறச்செய்கிறவன் இவர்கள் ரோகத்தையடைவார்கள். மத்தியபானஞ் செய்கிறவன்-பிரமஹத்தி செய்கிறவன்-பொன் திருடுகிறவன்-இவர்களோடு சேர்ந்தவன் இவர்கள் சூகரத்திற்சேர்வார்கள், இராஜனைக்கொல்லுகிறவனும்-வைசியனைக்கொல்லுகிறவனும்-குருவின் மனையாளோடு புணருகிறவனும்-உடன்பிறந்தாளைச் சேருகிறவனும்-இராஜன் ஊழியர்களைக் கொல்லுகிறவனும் - தப்தகும்பத்தில் விழுவார்கள். மனைவியைவிற்பவனும்-சத்புருஷரைக் காவல் படுத்துகிறவனும்-வைதிகயோக்கியமான குதிரைகளை விக்கிறவனும்-தன்னிடத்தில் அன்போடு காத்திருப்பவனைக் கைவிடுபவனும் - அடைக்கலம்புகுந்தோர்களையடித்துத்துரத்துகிறவனும்-தப்தகும்பத்திற்காளாகுவார்கள். மருமகள் மகள்முதலானோருடன்புணர்கிறவன்-குருவை யவமதிக்கிறவன்-கோபித்துவைகிறவன்-மகாஜ்வாலத்தைச் சேருவார்கள். வேததூஷணைசெய்யுமவனுக்கும்-வேதவிக்கிரயஞ் செய்கிறவனுக்கும்-புணரக்கூடாத பெண்களுடன் புணர்கிறவனுக்கும்-லவணமென்பதுகிடைக்கும். திருடனுக்கும்-உலக ஒப்புறவையழிப்பவனுக்கும்-விலோகிதம்நேரிடும் தேவதூஷணை-பிராமணதூஷணை-பிதுர்தூஷணைகளைச்செய்கிறவனும் உத்தமவஸ்துக்களை தூஷிப்பவனும் பிறருக்குத் தீங்குசெய்யுமவனும்-சூனியம் வைக்கிறவனும் கிரிமிசம்கிரிமிபக்ஷண மென்பவைகளில்விழுவார்கள். பிதுர்க்களையும்-அதிதிகளையும் விட்டு முன்னம் உண்ணுகிறவனும்-வேடன் முதலானோருக்கு அம்புகள்செய்து கொடுப்பவனும் லாலாபக்ஷத்தில் வதைவார்கள். கர்ணியென்கிற கொடிய அம்புகள்-கத்திகள் முதலான ஆயுதங்களை அயோக்கியருக்குச் செய்துகொடுப்பவனும் விசஸனத்தைச் சேருவார்கள்.

அயோக்கியரிடத்தில் தானமேற்கிறவன்-வைதிககருமங்களுக்குத் தகாதவனுக்கு அவைகளைச்செய்துவிப்பவன்-சோதிடநூலை நன்றாய்உணராமல் பலன்சொல்லுகிறவன்-இப்படிப்பட்டவர்கள் அதோமுகத்தில் வாதைப்படுவார்கள் சாகசஞ்செய்பவனுக்கும் பிறருக்குக்கொடாமல் தானொருவனே நல்லவஸ்துவைப்புசிப்பவனுக்கும் பூயவகவேதனையுண்டாகும். பூனை-கோழி-ஆடு-நாய்-பன்றிபறவைகள் இவற்றை எப்போதும் வாதனைசெய்பவனும்அக்

நரகத்தையே யடைவான். கூத்தாடிபிழைக்கும் பிராமணன்அல்லது யல்லுத்தம் செய்துபிழைப்பவன், தூண்டின் முதலானவை கொண்டு மீன்பிடிப்பவன், குண்டகர் கோளகர் முதலானோருடைய அன்னத்தைத்தின்பவன், விஷமிடுகிறவன், கோட்சொல்லுகிறவன், மனைவியைக்கூட்டிக்கொடுத்துப் பிழைக்கிறவன், பருவமில்லாதகாலங்களிலே பொருளாசையினாலே பருவச்சடங்கு செய்விப்பவன், வீட்டைக்கொளுத்திவிடுகிறவன், சிநேகிதனைக்கெடுப்பவன், பறவைகளை கொலைக்குவிற்றுப் பிழைப்பவன். ஊருக்காக யாகஞ்செய்கிறவன், யாகத்தில் சோமம் என்ற ஆட்டாங்கொடியைவிற்பவன், இப்படிப்பட்டவரெல்லாரும் ருதிராம்பத்திலே போய்விழுவார்கள். யாகத்தையழிப்பவன், ஊரையழிப்பவன் முதலானவர் வைதரணியைப்பொருந்துவார்கள் பணத்தினாலும்வயது முதலானவைகளினாலும் செருக்கடைந்து கிராமத்து எல்லைகளை மாற்றுகிறவர்களும், சுத்தியில்லாதவர்களும், மோசஞ்செய்துபிழைப்பவர்களும் கிருஷ்ணத்தையடைவார்கள். வைதிக உபயோகமில்லாமல் வீணாய்ப் பலாமுதலிய மரங்களைச் சேதிப்பவனும் ஆடுவிற்கிறவன் மிருகங்களைக்கொன்றுதின்கிறவன்முதலானோரும் அக்கினிச்சுவாலத்திற் பிரவேசிப்பார்கள். கொளுத்தக்கூடாத பாண்டமுதலானவற்றில் தீயிடுகிறவனும் அதிலேயேசேருவான். விருதலோபஞ்செய்பவன் தனக்குரியஆச்சிரம தருமத்தை விடுகிறவன் சந்தமிசத்தில்வீழ்ந்து வாதனைப்படுவான்.

பிரமசாரிகளாய் பகலிலும் கனவிலும் சுக்கிலத்தை விடுபவரும், புத்திரராலே ஓதுவிக்கப்படுபவரும், சுவபோஜனத்திற்படுவார்கள். தங்கள்தங்கள் வர்ணாச்சிரமவிரோதமான காரியங்களைச்செய்தல் மனோவாக்குக்காயங்களினாலே பாதகஞ்செய்தல்முதலான துஷ்க்கர்மமுடையவரெல்லாம் இந்தப்படியே யந்தந்தநரகங்களிற்சேறுவார்கள். இப்படி அனேகவிதமான பாவத்தொழிலைச்செய்பவர்களுக்கு வாதனைப்படும்படியான நரகங்கள் அனேகமாயிரமிருக்கின்றன. நரகலோகத்திலிருக்கிற பிராணிகள் தலைகீழாயிருந்துக்கொண்டு சொர்க்கத்திலிருக்கிற தேவர்களைப் பார்த்துத் துன்பப்பட்டுக்கொண்டிருப்பார்கள். தேவர்களும் தலைகீழாய்அவஸ்தைப்படுகிற நரகத்தாரைப்பார்த்து மிகவும் பயந்துக்கொண்டிருப்பார்கள். பாவிகள் நரகமனுபவித்த பிறகு தாவரங்களாகவும், புழுக்களாகவும், ஜலசரங்களாகவும், பக்ஷிகளாகவும், மிருகங்க

ளாகவும், மனிதராகவும், மனிதரில் தருமசிலராகவும், தேவர்களாகவும், மோக்ஷமடையத்தக்கவர்களாகவும் முறையே ஜனிப்பார்கள்.

## எமதண்டனை.

எமதூதர்கள் பாவிகளை அவர்கள் பாவங்களுக்கீடாகதண்டிக்கிருர்கள். எவ்வாறெனில் சிலரை உலக்கையினுல்புடைக்கின்றனர், சிலரைப் பலவித ஆயுதங்களினுல் சிதைக்கின்றனர், சிலரைச் சூரிகளினுல்சிவுகின்றனர், சிலரைச் செக்கிலிட்டுஅரைக்கின்றனர், சிலரை இரும்புச்சலாகையிற் கோர்த்தும் பெருந்தழலில்வாட்டுகின்றனர்சிலரைக் கண்டகோடாலியினுல் வெட்டுகின்றனர், சிலரைக் கரும்பாலையில்கொடுத்து எலும்புகள் நருங்க சாரம் பிழிகின்றனர், சிலரை நன்ருய்க்காய்ந்த எண்ணைக்கொப்பரையிற்போட்டுவற்றலைப்போல வறுக்கின்றனர், சிலரைத் தணலில் போட்டு கொளுத்துகின்றனர். மேலும், ஆண்பாவையொன்றும் பெண்பாவையொன்றும் செம்பினுற் செய்யப்பட்டு அக்கினியால் எப்போதும் தபதமாயிருக்கின்றன, தூதர்கள் பரஸ்திரீகமனம் செய்த ஜீவர்களைநோக்கி ஓ பாவிகாள்! தருமமும் மானமும் கிஞ்சித்துமெண்ணுமல் பிறர்மனைவியரைப் புணர்ந்ததற்கு வந்த பயன் இஃதென்று அதட்டி உதட்டிச்சொல்லி அப்பெண்பாவையைப் புணரச்செய்வர், இதுபோலவே பரபுருஷர்களைச்சேர்ந்த ஸ்ரீகளையும்அவ்வாண்பாவையோடு சேர்ப்பர் புருஷன் தனது ஸ்ரீயையன்றிப் பரஸ்ரீயைப்புணர்ந்ததற்கு ஸ்ரீ தன் புருஷனையன்றிப் பரபுருஷனைக் கூடுவதற்கும் எமலோகத்தில் உள்ள தண்டனை மிகவுங்கொடியதாயிருந்தும் நல்லொழுக்கத்திலிருக்கும் ஸ்ரீபுருஷர்களைக் காண்பதரித்தாகயிருக்கின்றது. உணவாதிகளைத் திருடித்தின்றவர்களில் சிலரை அக்கினியினுல் தப்பதஞ்செய்யப்பட்ட இரும்பு - எழுகு குண்டுகளை விழுங்கச்செய்கின்றனர். சிலரை நரகக்களிற்றள்ளி பாதாளங்காரும் அழுத்துகின்றனர். கடன் வாங்கி மீண்டுங்கொடாத சிலரை நோக்கிக் கடன்கொடுத்தவனுக்கு கடனைக்கொடாமல் வன்கண்மைபேசிய பாவியென்று முனிந்துச் சிறிச்சம்மட்டினுல் மண்டையின்மேல்அடிக்கின்றனர். இத்தன்மையாகப் பாவிகள் படுந்துயரத்தை விரித்துச்சொல்லுவதால் பிரயோசனம்யாது. இன்னவன், தருமிஷ்டன் இன்னவன் அதருமிஷ்டன் - இன்னவன் சுவர்க்கம்புகுகின்றவன் - இன்னவன் நிரையம் புகுகின்றவன்

என்று அவரவர்கள் செய்யும் நன்மைதின்மைகளினாலே உணராலாகும் தருமஞ்செய்தவனே சுவர்க்கம் புகுவானென்பது திண்ணமாதலால் யாவரும் தருமஞ் செய்யவேண்டும் என்று கூறிப்பின்னுஞ் சொல்லுகின்றார்;

## எமலோகம்.

ஓ இமையவான் செல்வியே! பாவிகள் வசிக்கும் நரகலோக நிலமையை நன்குணர்ந்தாயன்றோ? அவ்விதநரகலோகத்திற்கிணைவணுகிய எமநகரச்சிறப்பைச் சொல்லுவோம்கேட்பாயாக.குஞ்சரமுகத்தனையீன்ற வஞ்சிக்கொடியே! மனுக்கள்வசிக்கும் பூலோகத்திற்கும், எமலோகத்திற்கும்இடையே எண்பத்தாறுயிரங்காதவழியுளது. ஆயினும் எமதூதவர்களுக்கு இந்த எண்பத்தாறுயிரங்காதவழியும் நிமைப்போதில்சென்று வரும்படியான வல்லபத்தைஇயமன் கொடுத்திருக்கின்றனன். பாவிகளுக்குநெடுந்தூரமாகத்தான்யிருக்கும் இவைநிற்க எமபட்டணமானது தென்றிசைக்கும் நிருதிதிசைக்கும் நடுவில் வச்சிரமயமாகவும்-தேவர்-அசுரர் முதலியோரால் சிதைக்கத் தகாததாயும் நடுச்சதுரம் நூறு யோசனைபரப்புள்ளதாயும்,இருபத்தைந்து யோசனை யுயரமுள்ளதாயுமிருக்கும். அச்சதுரத்தினுள் அனேக சாளரங்களுள்ளதாயும் துயிற்கொடிகளாலும்-முத்துக்கோர்வைகளாலும்-மற்றும்அனேகவித தோரணங்களாலும்-அலங்கரிக்கபட்டதாயும்-சொர்ன மயமாயுமிருக்கும், இவற்றின் நடுவே எமதர்மராஜனுடைய அரண்மனையிருக்கின்றது. அந்த அரண்மனையானது பத்துயோசனை அகலநிகளமுள்ளதாயும்-அனேகமாயிரம்வயிரத்தூண்கள் அமைந்ததாயும்-சயித்திய சவுரம்மியமுள்ள காற்று வீசுவதாயுமிருக்கும். எப்போதும் ஆடல்பாடலினால் கீர்த்தி விளங்கத்தக்க திவ்ய மண்டபம் ஒன்றிருக்கின்றது. அம்மண்டபத்தில் தூதர்கள்கரங்குவித்து ஓர்புறம் நிற்கவும், நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு வியாதிகளாகியரோகங்கள் ஒவ்வொன்றும் தனித்தனிவிசாரரூபத்தோடு ஒவ்வோர்புரத்திலும் புடைசூழ்ந்திருக்கவும், இக்கூட்டங்களின் நடுவே நீண்டவிசாலம்பொருந்திய பிரம்மாண்டமானசிம்மாசனத்தின்மீதில் கண்டவர் அஞ்சும்படி பரந்து விழித்த கண்களோடும் உயிர்ப்பிராணிகள்நடுங்கும் கதாயுதத்தோடும்எமதருமராஜன்வீற்றிருப்பான். அம்மண்டபத்தின் பக்களில் இருபத்தைந்துயோசனை அகல நிகளமும், பத்துயோசனை யுயரமும்

பலவித அலங்காரத்தோடுகூடிய சித்திராபுத்திரன் அரண்மனை யிருக்கின்றது. அந்த அரண்மனையின்நடுவில்வயிரங்களால்பிரகா சிக்கபெற்றிருக்கும் சிம்மாசனத்தின்பேரில் சித்திராபுத்திரன் வீ ற்றிருந்து சகல ஜீவர்கள்செய்யும் பாவபுண்ணியங்களைச் சிறிதும் விடாமல் கணக்கெழுதுகின்றான். அவன் எழுதுவதில்கிஞ்சிற்றும் பிசகுநேரிடாது. அந்தசித்திராபுத்திரனுடைய அரண்மனைக்குக் கிழ்ப்புறத்தில் ஜுரமும், தென்பக்கத்தில் சூலையுடன்வைசூரியும் மேற்பக்கத்தில் காலபாசத்தோடு அஜீரணமும் - வடபக்கத்தில் வயற்றுவலியும்-வடகிழக்கில் தலைவலியும்-தென்கிழக்கில் மயக்க மும்-தென்மேற்கில் அதிசாரமும்-வடமேற்கில் ஜன்னியும்இவ்வி தரோகங்கள் கிரகரூபமாக வியாபித்துக்கொண்டு எமதருமன் உத்திரவை எதிர்பார்த்துத் தயாராயிருக்கின்றன.

## எமலோக மார்க்கம்.

ஓ மயிலனைப்பெற்ற மயிலே! மேற்கூறிய சிறப்புவாய்ந்தஎம லோகத்திற்கும், பூலோகத்திற்கும் எண்பத்தாறுயிரங் காதவழி யென்று முன்னமே தெரிவித்திருக்கின்றோம். அப்பட்டணத்தில் வாழுங்கூற்றுவன் ஜீவகாலம் முடிந்த பிராணிகளைப்பிடித்துவரு மாறு உத்திரவுசெய்தவுடன் யாவரும் அஞ்சத்தக்கவிகாரரூபமு டையவரும் நெருப்புக்குநிகரானகண்களையுடையவரும் கனலைக் காயும் சினமுடையவரும் பாசம்-முசலம்-தண்டம்-முதலிய கொ டியபடைகளையுடையவர்களும், காரிலுங்கருத்தஆடைதரித்தவர் களுமான மூன்று தூதுவர்கள்சென்று ஆயிசுமுடிந்தஜீவனைப்பிடி. த்து காற்றுருவமாகிபதேகத்தில் அடைத்துக்கொண் ̀போவார்க ள் இவர்கள் கொண்டுபோகும்வழியானதுஎட்போதும்அக்கினிக் குமேலானதும்அயத்தையுருகச்செய்யும் வெய்யலும்இரவில்பொ ழியும் பனியான காற்று சரீரத்திலுள்ள ஜீவனைக்கூற்றனுக்கு இ தோகொண்டுவநதேன் கொண்டுவந்தேனென அங்கு சிதைக்கத் தக்க நடுக்கலும்ஒடுக்கலுடனும்பெய்யும். ஓ பார்வதா! இத்துன்ப ங்களியாவும் அம்மார்க்கத்தில்பாபிகளுக்கென்றே அமைக்கப்பட் டிருக்கும் அசிபத்திரவனமொன்றிருக்கிறது. அசிபத்திரமென்று ல்உலோகங்களையறுக்குங் கூர்மைபொருந்திய வாளைப்போன்ற இலைகள் தழைத்தமரங்களால் இடைவெளியில்லாமல் நெருங்கிய காடாம். தூதுவர்கள் அவர்கள் பற்றிச்செல்லுஞ் சிலர்களைக்கடிந்

துத்தூரத்த அச்சிவர்கள் பயந்து அவ்வனத்திற்புகுந்து ஓடுகிற
போதுஇலைகள்பட்டு தேகமெல்லாம் சக்கைசக்கையாகப்பெயர்ந்
துஇரத்தம்பெருகியோட தூதர்களைத் திரும்பித்திரும்பிப் பார்த்
துப் பசிதாகத்தால்வருந்தி தான் முன்னமிருந்த சுகத்தைநினை
ந்துநினைந்து அழுகிறபோது தூதர்கள் அவர்களைப்பார்த்து அடா
பாவி! தாகமென்றுவந்த ஏழைகளுக்கு தண்ணீர் கொடாமல்
மோரும்-பாலும்-தயிரும்-நெய்யும் அருந்திதேகத்தை வளர்த்த
லோபி, இதோயிருக்கும்குளத்திலுள்ள உதிரத்தைக் குடியடாவெ
ன்று கடுகடுத்து பற்களைக்கடித்து பலவிதங்களாக அடிக்கிறபோ
து, அவர்கள் அவ்வடிகளால் துடிதுடித்து பதைபதைத்து வெட
வெடத்து கடகடவென்றுபுரண்டழுது அடிகளைத்தாளமாட்டா
மல் ஓவென்று கதறிக்கொண்டேயோடி அவ்விரத்தத்தைப்பருகு
வார்கள். அதைகண்ட தூதர்கள் ஜீவர்களைநோக்கி முன்னம்நீர்
அனுபவித்த சுகத்துக்கு இந்தச்சுகம் எப்படியிருக்கிறதென்பதை
யுணர்ந்தாயா? துரோகி! எனவைது அங்கிருந்தும் விரட்டித்துர
த்த ஜீவர்கள் ஓடுகிற பரிதாபத்தைச்சொல்ல யாவர் வல்லவர்!
ஓடிஓடி கால்சோர்ந்து அவர்கள் கைசோர்ந்து-மெய்சோர்ந்து-
நாவுலர்ந்து-பசியினால்களைமேலிட்டு-ஹாஹாவென்று கதறுகிற
போது-தூதர்கள் எகுவினாற்செய்து அக்கினியினால் தப்தஞ்செ
ய்திருக்கும்-சிறுமுள்-குண்டுகளைக் காட்டி பசியினால்வருந்தி வே
ண்டினவர்களுக்கிடாமல், உண்டு சுகித்த கர்மி! அக்குண்டுகளை
த்தின்றுப் பசியாறி முன்னம் நீ யடைந்த இன்பத்திற்குஇவ்வின்
பம்எப்படியிருக்கிறது, சொல்லடாவென்று புடைக்கிறபோது,
ஜீவர்கள் அந்தஅடிகளைப்பட சக்தியற்றுஓலமிட்டழுது நாம் தர்
மகாரியங்களைச் செய்யாதகுற்றமல்லவோ இந்தத் தூதர்களிடத்
தகப்பட்டுச் சங்கடமடையச்செய்ததென்று எண்ணமிட்டுக்கொ
ண்டே அந்தமுட்குண்டுகளைப்புசித்து அதனால்வெகுவேதனை
களை யடைந்திருக்க, பின்னுந் தூதர்கள் குரங்கைக்கட்டியிழுத்
துச்செல்வதுபோல அவர்களைக் கட்டி பாசத்தாலிருத்துக்கொ
ண்டு செல்லுகிறகாலத்தில் அவர்கள் தங்கள்புத்திரமித்திரர்களை
நினைந்து, அந்தோ! அருமைத்திருமகனே! நான் என்னசெய்வே
ன் என்னசெய்வேன், மிகவுங்கஷ்டத்தை யனுபவிக்கிறேன், ஜெக
தீசன் ஒருவனுண்டு, அவனைத் துதித்துத் தீவினைகளைந்து நல்வினை
ப்பயனை அடையுங்களென்று, முறையிடுவதுடன் பெரியோர்களை

அற்பமாகப் பேசியேசி பரிகாசம் புரிந்ததனலன்றோ அவற்றின் பலனை அனுபவிக்கிறோமென்று பரிதவிப்பார்கள்.

அன்றியும், உலகத்தில் யோசனையில்லாதமுடனைகயிருந்து நல் மார்க்கமின்றி வீண்காலம்போக்கி ஜடத்தைவிட்டுத் தூதர் கையிலகப்பட்டு பஞ்சும்படாத பாடுபடுகின்றோமேவென்று கருதிக்கொண்டேசெல்வர் தூதர்கள் குரங்கையாட்டுவதைப்போல இவர்களை ஆட்டிக்கொண்டேபோவார்கள், அப்போது பசிதாகத்தால்வருந்தி மெலிந்துவாடிக் கதறுகிற சீவனை தூதர்கள்கண்டு அடாபாவிகளில் முதற்பாவியாகிய கொடும்பாவி! நீபட்டகடனுக்காக உத்தமபுருஷனை முதன்மையாக்கி கையொப்பமிடச்செய்து நீயுங் கையொப்பமிட்டுகடன்கொடுத்தவனிடத்தில் உத்தமப் புருஷனைக்காட்டிக்கொடுத்து அவன் திரவியத்தைவசூல்செய்யும் படிச்சொல்லிப் படுமோசம்செய்த குடிகேடா! அந்தசுகத்துக்கு இந்த சுகம் எப்படியிருக்கிறது தெரிந்துகொண்டாயா! என்று கன்னத்தில்புடைத்து கெதையினல் மோதி யிழுத்துக்கொண்டேவந்து, அக்கினியாற்றின்மேல் சிங்காசனத்தில்வீற்றிருக்கும் எமதருமராஜன் முன்னம்விட்டுப் பணிவார்களென் றருளிச்செய்ய பின்னும் பார்வதி திரிபுராரியை நோக்கி வினவுகின்றனள்.

## அண்டகோச வடுக்கு.

விதிமுதலோரைப்படைத்த அதிபதியே! மனுஉலகத்தில்அடங்கியது சப்ததீவுகளென்றும், அவ்வுலகத்திற்கு மகம்மேருகிரியே அஞ்சூராணியாகவிருக்கின்றதென்றும் ஓர்பிரிவினைமாத்திரம்அருள்புரிந்தீரேயன்றி அண்டங்களிலுள்ள மண்டல அடுக்குகளைவிண்டிலீரேயென்று அண்டையில்நின்று வேண்டிய பார்வதாதேவியை ஸ்ரீகைலாசபதியானவர் திருக்கண்ணோக்கமுற்றுச்சொல்லுகின்றார். சிலையைநிகர்த்திய நுதலினையுடைய மலைமகளே!கேளும் நமதுகைலையங்கிரிக்குநிகராக ஸ்ரீவைகுண்டத்தில்வாழும் இரக்ஷணமூர்த்தியாகிய அனந்தகல்யாணகுணனுடைய திருநாபிக் கமலத்திலிருந்துவந்து பிரம்மாவானவர் ஆதிபிற்படைத்தஆயிரத்தெட்டண்டங்களில் இந்த ஒருபிரம்மாண்டத்திற்குட்பட்டயாவையும் கருணையுடன் சொல்லுகின்றேன் பக்தியோடு கேட்பாயாக. அண்டமென்பது முட்டையைப்போல் விளங்கிசுவர்க்கமத்தியபாதாளமென்று மூன்று பிரிவாகியிருக்கும். இந்த மூன்று

பிரிவில் அளவிடப்படாத எழுலகம் ஒருகூருய் நிற்கும். அவ்வுல
கங்கள் யாவையெனில் பூலோகம்-புவர்லோகம்-சுவர்லோகம்-ஜ
னலோகம் மகாலோகம்-சத்தியலோகமாம். இவைகளில் இப்போ
துநாமிருக்கும் இந்தஅண்டத்தின் மதிற்சுவர்வரைக்கும், இப்பூ
லோகத்தின் விருத்தி அளவு இதற்குள் இந்திரன்வசிக்கும் கிழ்த்
திசையிலிருந்து சூரியபகவானுதயமாகு முதயகிரியும் சமுத்திர
ங்களும் சக்ரவாளகிரியும், பொருந்தியிருக்கின்றன. அப்பால் நி
றைந்த பெரும்புறக் கடலளவும் இருட்பூமியென்று அறிந்துக்
கொள்ளும். இப்போது சொல்லிவந்த சக்கரவாளகிரிக்குட்பட்ட
இந்தப்பூமியைத் தேவபூமியென்றும்-சுவர்னபூமியென்றுஞ் சொ
ல்லுவார்கள். இந்தப் பூமியை சப்ததீபமென்று பிரித்திருக்கின்ற
தண்மையின்படிக்குப் புட்கரத்தீபத்தைச்சொல்லுகிறேன், புட்க
ரத்தீபமென்னும் அந்தப்பூமி பத்துகோடி யோசனை விஸ்தீரண
மாயிருக்கின்றது. அந்தத்தீவில் தாமரைப் புஷ்பங்களேமிகுந்து
மலர்ந்து சிறந்து வளர்ந்திருக்கின்றன. பலம்பொருந்திய குமுத
வரையென்னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது. அந்தமலைக்குட்ப்ர
த்தில் அறுபத்துநான்கு லக்ஷம்யோசனை யகலமும்ஆழமுமுள்ள
நன்னீர்க்கடல் வளைந்திருக்கின்றது. சர்வதோபத்திர மிகுந்திரு
ப்பதால் அதுவே புஷ்கரத்தீவென்றுஞ் சொல்லப்படுகிறது அத
ற்கிப்பால் அறுபத்துநான்கு லக்ஷயோசனை யகலநிகளமுள்ள சா
கத்தீவென்பதொன்றுண்டு. அந்தத்தீவைமந்திரகிரியென்னுமொ
ருமலை சூழ்ந்துக்கொண்டிருக்கின்றது, அந்தமலைக்குட்புறத்தில்
முப்பத்திரண்டு இலக்ஷம்யோசனை அகலநிகளமும் ஆழமுடைய
பாற்சமுத்திரம் வளைந்துக்கொண்டிருக்கின்றது, கீரைத்தண்டுக
ள் மிகுந்து வளந்திருப்பதினல் அதற்குசாகத்தீவென்று பேராயி
ருக்கின்றது அதற்கிப்பால் முப்பத்திரண்டு லக்ஷயோசனைவிசா
லம் பொருந்திய கிரவுஞ்சத்தீவவென்ப தொன்றுண்டு அந்த தீ
வைக் கிரௌஞ்சகிரியென்னு மொருமலை சூழ்ந்துகொண்டிருக்
கின்றது. அந்தமலைக்குட்புரத்தில் பதினாறு இலக்ஷம்யோசனை ய
கலமும் ஆழமுமுடைய தயிர்க்கடல் வளைந்துக்கொண்டிருக்கின்
றது. அவ்விடத்தில் அன்றில்முதலிய பக்ஷிகள் மிகுந்திருப்பதி
னல் அதற்குக் கிரௌஞ்சத்தீவென்று சொல்லப்பட்டது அதற்
கிப்பால் பதினாலுலக்ஷம் யோசனையகலமும் நிகளமுமுடையகோ
மேதகத்தீவென்பதொன்றுண்டு, அந்தத் தீவத்தை நீணகமென்

னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது, அந்தமலைக்குட்புறத்தில்எட்டு லக்ஷயோசனை அகலமும் ஆழமுமுடைய நெய்க்கடல் வளைந்துக் கொண்டிருக்கின்றது. அவ்விடத்தில் கோமதகம் மலைகளேமிகுந் திருப்பதினல் கோமேதகத்தீவென்று கூறப்பட்டது. அதற்கிப் பால் எட்டுலக்ஷயோசனையகலமு நிகளமுமுடைய சான்மலித் தீ வென்பதொன்றுண்டு அந்தத்தீவை மேருமந்தரைவரை யெனு மோர்மலை சூழ்ந்திருக்கின்றது. அந்த மலைக்குட்புறத்தில் நாலுல க்ஷயோசனையகலமும் ஆழமுமுடைய மதுக்கடல், வளைந்திருக்கி ன்றது. அவ்விடத்தில் இலவமரம் மிகுந்திருப்பதினல் சான்மலித் தீவென்று கூறப்பட்டது. அதற்கிப்பால், இரண்டுலக்ஷயோசனை விசாலமுடைய குசைத்தீவொன்றுண்டு அந்தத்தீவைப்பாரிசகிரி யெனுமோர் மலை வளைந்துக்கொண்டிருக்கின்றது. அந்த மலைக் குட்புறத்தில் இரண்டு இலக்ஷயோசனை விசாலமும் ஆழமுமுடை ய கருப்பஞ்சாற்றுக்கடல் சூழ்ந்திருக்கின்றன. அவ்விடத்தில் த ருப்பைப் புற்கள் மிகுந்திருப்பதால் குசைத்தீவென்று கூறப்பட் டது இப்பால், இலக்ஷயோசனை விஸ்தீரணமாய் அயவரையென் னும் ஒருமலை சூழ்ந்திருக்கின்றது. அந்தமலைக்குட்புறத்தில் இல க்ஷம்யோசனை யகலமும் ஆழமுமுடைய உவர்க்கடல் வளைந்துக் கொண்டிருக்கின்றது; அங்கே ஜம்புவிருக்ஷமென்னும் நாவல் வி ருக்ஷமொன்றிருப்பதினல் இந்தத்தீவிற்கு ஜம்புத்தீவென்றும், நாவலந்தீவென்றும்பெயர். தேங்குங் கமுகும்நிறைந்த இந்தநா வலந்தீவினுடைய மத்தியில் மகமேரு வென்னும் பொன்மலை யிருக்கின்றது. தேனுக்கொப்பாகிய இனிய மொழியினையுடைய மாதேகேளும்! மகமேருவென்று சொல்லும்படியானது இந்த ஜம்புத்தீவத்திற்கு மத்தியில் பிரம்மபீடமாயிருப்பதினல் அந்த மகமேருவினுடைய நான்குதிக்கும் இப்போது நான் சொல்லிவ ந்த எழுதீவமும்-எழுமலையும்-எழுபொருளும்-எழுகடலும்-எழு விதவிருக்ஷமும் எழுவிதபொழிலும் எழுவிதபக்ஷிகளும் பலவித அதிசயங்களும் பொருந்தியிருக்கும், அப்படியிருந்தபோதிலும் ஜம்புநாவற்கனியின் காற்றினல் அயப்பொடிகள் பொற்சனனங் களாய் நதியின் கரைதோறும் வரம்பாக நிரம்பியிருக்கும் வளங் களினல் மற்றத்தீவுகளைப் பார்க்கிலும் இந்தஜம்புத்தீவே மிக சிறப்புடைத்தென்று நூல்கள் தோறும் கூறப்பட்டிருக்கிறது. மேலும், மகம்மேருவுக்கும் கவிந்திருக்கும் அண்டச்சுற்றிற்கும் மத்தியிலிராநின்ற பூமியின்விசாலம் கிழக்கே ஐம்பது கோடி

யோசனையும்-மேற்கே ஐம்பது கோடியோசனையும்-வடக்கே
ஐம்பதுகோடி யோசனையும்-தெற்கே ஐம்பதுகோடியோசனையும்
நீண்டு பூமியின் கீழாக நாற்பதுகோடி யோசனை தூரமுறிவியு
ம்-ஆகாயத்தின் மீதாக ஐம்பதுகோடியோசனை தூரமுயர்ந்துமி
ருப்பதாக நின்னுணர்விலறிந்துக்கொள்ளக் கடவாய் பெண்ணே
என்றார் பரமசிவமானவர்.

இதன்றியும்-மேற்சொல்லிய மகமேருவுக்கு வடமேற்குவட
க்கு வடகிழக்கில் நீலகிரி-சுவேதகிரி-ஸ்ருங்ககிரியென்று மூன்று
மலைகள்முறையே நிற்கின்றன கீழ்த்திசையில்மாலியவான்கிரிஎன்
றொரு மலைநிற்கின்றது.மேற்றிசையில்கந்தமாதனமென்றுஒரும
லையிருக்கின்றது.தெற்கு-தென்மேற்கு-தென்கிழக்கில் முறையே
நிடதகிரி-எமகூடம்-இமயவரையென்னு மூன்றுமலையுள்ளன இ
ந்த எட்டுமலைகளைத்தான் அஷ்டகுலகிரியென்று யாவரும்உணரு
ம்படிசாஸ்திரங்கள் முறையிடுவது, இதுவுமல்லாமல் முன்சொல்
லியபொன்மலையாகிய மகமேருவுக்குக் கீழ்த்திசையில்நிலைபெற்ற
மந்தரகிரியும்-பருத்துத் தழைத்தக் கிளைகளையுடைய மாமரங்க
ணிறைந்த ஆம்பிரவனமும்-நெருங்கியநந்தவனமும்-பாற்சுனையும்
தேவர்கள்முதலியமுனிவருங்களிக்கப்பொருந்தி யிருக்கின்றன.
மேருவுக்குத் தென்றிசையில்மேருமந்தரமென்னும் மலையும்,ஜம்
புத்தீவமென்னும் பெயரைத்தந்தஜம்புவிருக்ஷமும்-சயித்திரதவ
னமும் பெருமைதங்கிய யதுச்சுனையும்-அழகுபெறவிளங்கிக்கொ
ண்டிருக்கின்றன.மகமேருவுக்கு மேற்றிசையில் பாரிசகிரியென்
னும் மலையும்-மலர்ந்துசிறந்த கடம்பவிருக்ஷமும்,தலத்திற் கலங்
காரமாகிய பிரசப்பெயர் வனமும் கருப்பஞ் சாற்றுச்சுனையும்
சுத்தம்பொருந்தியமாதுரியத் துடனிருக்கின்றன. மேருவுக்கு வ
டதிசையில் குமுதகிரியென்னும் மலையும்-வானமளவுமுயர்ந்தவ
டவிருக்ஷமென்ற ஆலமரமும்-சர்வதோபத்திரமென்றபூந்தோட்
டமும் நன்னீர்ச்சுனையும்-எல்லாத்திசைகளினு மேன்பாடாய் வி
ளங்கிக்கொண்டிருக்கின்றன. மேலும்-அந்தமகமேருவான துபதி
னாயிரம் யோசனைதூரம் நடுமத்தியிலோங்கி முப்பத்திரண்டுயோ
சனைதூரம் வானத்திலுயர்ந்து எண்பதினாயிரம் யோசனை விசா
லம் சுற்றிலும்பருத்து சந்திரசூரியர்முதலிய நவக்கிரகங்களுக்கு
நடுநிலையாய்இவ்வுலகுக்கு அஞ்சூராணிபோற் பிரகாசித்துக்கொ
ண்டு, அனேகங்கோடி சிகரங்கள் பொருந்தி மூன்றுகுவடாகப்

பிரிந்து அயனுர்பீடம் ஹரியின்பீடம்-சிவன்பீடமுமாக அமைந்திருக்கும். மேலும் அந்த மகம்மேருவின் எட்டுத்திக்கிலும் இந்திரன்-அக்கினி-இயமன்- நிருதி-வருணன்-வாயு-குபேரன்-ஈசானன்முதலாகிய அமரர்-சித்தர்-அசுரர் - தயித்தியர்-கருடர்-கின்னரர்-நிருதர்-கிம்புருடர்-காந்திருவர் முதலியபேர்களும் தங்களுக்குநிவாசஸ்தலமாய் ஏமகூடம்போல வீற்றிருப்பார்கள், மேலும் முன்சொல்லிய மகம்மேருவுக்குக்கீழ்த்திசையில்நிலைபெற்றிருக்கும்மந்தரகிரியென்னும் மலையின்மீது பணைத்துந்தழைத்து தளிர்த்துவிளங்கியமாமரமான துஆயிரம்யோசனைபரப்பும்உயரமுமுடைத்தாயிருக்கின்றது. அந்த மாம்பழத்தினின்றும் இழிந்துவரும் ரசங்களைப்புசித்தபேர்களுக்கு இடகலை-பின்கலையென்னும் சுவாசமானது பத்துயோசனைதூரம் பரிமளித்துக்கொண்டிருக்கும். மேற்சொல்லிய மாம்பழச்சாரானது வழிந்துபோய்ச் சேர்ந்து நிறைந்துநின்றதைச் சோதகநதியென்றுசொல்லப்படும். இதல்லாமலும் இடகலைபின்கலை யென்னும் சுவாசம் பரிமளித்திருப்பதில் என்ன பிரயோசனமென்றால் சுவாசம் பாழாகிப்போகாமல்நீடித்துப் பாய்வதினல்அவர்களுக்கு தீர்க்காயுளென்றும்அவர்களே நித்தியதத்துவம்பெற்றவர்களென்றும் சொல்லப்படும். இதன்றியும்-கிழக்குசமுத்திரமுதல் மேற்கு சமுத்திரம்வரைக்கும் இதன் மத்தியிலிருக்கும் பூமியானது குருகண்டம்; குற்றமற்ற இந்த ஸ்ருங்கமலைக்குத்தெற்கு சுவேதமலைக்கி வடக்கு கீழ்க்கடல் மேற்கடலுக்குநடுவிலிராநின்ற பூமி இரண்யவருடம். இந்தச் சுவேதகிரிக்கும் நீலகிரிக்கும் கிழ்க்கடலுக்கும் மேற்கடலுக்கும் இடையிலிருக்கும்பூமி நிரமியவருடம்;இந்தநீலகிரிக்குத்தெற்கு மேருவரைக்கு வடக்குமேற்கடல் கீழ்கடலுக்குமத்தியிலிருக்கும் பூமி இளாவிரதவருடம்-மேருவரைக்குத் தெற்கு மாலியவான் பர்வதத்திற்குவடச்கு கிழ்க்கடல்வரைக்கும் பத்திரவருடம்,கந்தமாதனத்திற்குமேற்கு மேற்சமுத்திரத்திற்குகிழக்கு கேதுமாலவருடம்-நிடதகிரிக்குத்தெற்கு ஏமமலைக்கு வடக்கு மேற்கடல் முதல் கீழ்கடல் வரைக்குமிருக்கும்பூமி அரிவருடம்,ஏமமலைக்குத்தெற்கு இமையமலைக்குவடக்கு கிழ்கடல்முதல் மேற்கடலளவுந் தேவபூமியாகிய கிம்புருடவருடம்- இமயமலைக்குத்தெற்கு-தென்கடலுக்குவடக்கு மேற்கடல்முதல் கிழ்கடலுக்கு நடுவிலிருக்கும் பூமி பாரதவருடமாம். மேலும்-நெருப்புப் பொறிகள்பறக்கும் வேலாயுதத்தைத்

தாங்கிய தீரகராகிய அங்கதீரவரசன்பெற்ற ஒன்பதுபிள்ளைகள் பேரால்அரசுசெலுத்திவந்த இந்த ஒன்பதுவருடத்தையும் நவகண்டமென்றுஞ்சொல்லுவார்கள், இந்த நவகண்டத்தின் அகல நீக்ஷிஅளவையுஞ்சொல்லுகின்றேன், கேளும் மங்கைகளுக்கு அரசியாகிய பார்வதியே! நெருங்கியிராநின்ற மாலியவான்மலைக்கும் கந்தமாதானகிரிக்கு மத்தியிலும், தனுகோடிமுதல் வடகோடிவரையிலும் மூன்றுவருடம்சேர்ந்த, இந்தப் பாரதவருடம் முப்பத்தினாலாயிரம் யோசனை தூரம் அகல நிகளமுடைத்தாயிருக்கின்றது. அப்பால்நிடதகிரிக்குவடக்குமுதல் நீலகிரிவரையிலும் மூன்று வருடமிருக்கின்றன. ஒவ்வொருவருடமும் ஒன்பதினாயிரம் யோசனை யகலநிகளமுடையது அதல்லாமலும் இந்தப் பாரதவருடத்திற்குச்சிறப்பாகிய ஆறுகுலகிரிக ளிருக்கின்றன. ஒவ்வொருமலைகளின்அகலம் இரண்டாயிரம் யோசனை தூரம் அடிமுதற்சிகரம்வரைக்கும் பதினாயிரம்யோசனை தூரமுயர்ந்திருக்கின்றது. ஓ மாதே! இப்போது நான் சொல்லிவந்த ஒன்பதுவருடங்களில் எட்டுவருடத்தில் சாரணர்-சித்தர்-கந்திருவர்-வித்தியாதரர்-கிம்புருடர்-விஞ்சையர் முதலாகியபேர்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒவ்வொருகுலத்தர் வாசமாகயிருப்பார்கள். அப்படியிருந்தபோதிலும்; மேலாகிய தருமம், அர்ச்சனைபூசை, அருந்தவம் இவைமுதலிய யாவையும், இந்தபாரதவருடத்தில்வந்திருந்து தவம்செய்து நிறைவேற்றிக்கொண்டுபோய் தங்கள்தங்கள்பதிசென்று அனுபவித்துக்கொள்ளுவார்கள். அந்த எட்டுவருடத்திலும் சம்சாரஞ் செய்துக்கொண்டிருக்குப்படியாகிய பேர்களுக்கு ஆயுள் எவ்வளவென்றால் ஒன்றேகால்ஆயுதம். ஒன்றேகால்ஆயுதமாவது பன்னீராயிரத்தைந்நூறு வயதென்றுதெரிந்துக்கொள்ளும்பெண்ணே! அப்படியிருக்க, இப்பாரதவருடத்திலிருப்பவர்களுக்குச்சொற்ப ஆயுசு ஏற்படுத்தியிருப்பானேனென்றால் மகா வருத்தத்துடன் வாயுவைக் கும்பித்து வாணாளைவளர்த்திக்கொள்ளுவதைப் பார்க்கிலும்; இந்த மாம்பழரசத்தைப்புசித்து வாழ்நாளை நீடிக்கச்செய்வதே மேன்மையாதலால் அவ்விடத்திலிருப்பவர்களுக்கு ஆயுளை விசேஷமாகச்சொல்லியது; அப்பால்மேற்கூறிய மகமேருவுக்குத் தென்றிசையில் மேருமந்தரமென்னு மலையினிடத்துப்பொருந்தியஇரண்டாயிரம் யோசனை பரப்பும் உயரமுமுடைய நாவல்மரத்தின்கனியானது ஐராவதத்தின் தலையத்தனை பருமனுடையதா

யிருக்கும்; அப்பழம் நைந்து விழுந்து அதின் தேன்கள்போய் நி றைந்து நின்ற நதியைத்தான் ஜம்புநதியென்று சொல்லப்படும். அந்த ஜம்புநதியானது மேற்சொல்லியமகமேருவின் மேற்புறமா கச் சுற்றிகொண்டு கிழ்த்திசையிற் புகுந்து சமுத்திரத்தின்நடும த்தியிற்போய் சாயும்படியாய்ப் பேராசைகொண்டோடி வரும். அந்த ஜம்புநதி தோய்ந்தயிடங்கள்தோரும் ஒருவராலெடுக்கப்ப டாத பொற்பாறைகள் நிறைந்திருக்கும். அந்தப் பாறையாகிய பொன்களினால் ஆபரணங்கள்செய்து தரித்துக்கொண்டாலும்அ ல்லது அந்தத்தீர்த்தத்தைச் சாப்பிட்டாலும் அவர்களுக்குநரை திரை-மூப்பு-வியாதி முதலிய நாசங்களில்லை மேலும் மகமேருவுக் கு மேற்றிசையிலிருக்குங் கந்தமாதனச்சாரலிற்பொருந்திய கட ம்பமாமானது ஆயிரம்யோசனை யகலந்தழைக்துச் செழித்து ம லர்கணிறைந்து சொரியும்படியாகிய தேனானது யாவர்களும் வ ணங்கும்படிக்குக் கடம்பநதியென்னும்பேர்கொண்டிருக்கின்றது அப்படிப்பட்ட நதியில் ஸ்னானஞ்செய்தாலும் தாகமருந்தினாலு ம் நூறுயோசனைதூரம் சுவாசமணமும் தேகமணமுஞ் சூழ்ந்துக் கொண்டிருக்கும். இதன்றியும் மகமேருவுக்கு வடதிசையிலிருக் கும் சுவேதகிரிச்சாரலில் நூற்றுப்பத்துயோசனையுயரமும்பரும னும் பரப்புமுடைய ஆலமரமொன்றிருக்கிறது. அதினுடைய கி ளைகள்தோறும் நெருங்கிய கனிப்புசித்தால் பால்-தயிர்-தேன்- நெய் இவைகளைக் கொடுப்பதல்லாமலும் அழகிய பொன்னுடை இரத்தினாபரணங்கள் முதலிய யாவுங்கொடுத்து ஆற்றைப்போ லும் சுரக்குஞ் ஊற்றைப்போலும் பெருக்கெடுத் தோடிக்கொண் டிருக்கும்; இதல்லாமல் இன்னமுஞ் சொல்லுகிறேன்.

கேளும்பெண்ணே பார்வதி! சிருஷ்டிகர்த்தாவாகியபிரம்மா வானவர் பூர்வத்திற்பெற்ற சுவயம்புமனுவென்பவர் மேற்சொல் லிய புஷ்கரத்தீவம்-சாகத்தீவம்-சான்மலித்தீவம் கிரௌஞ்சத்தீ வம்-கோமேதகத்தீவம்-குசைத்தீவம்-ஜம்புத்தீவமென்னும் சப்த தீபத்தையும் தமது புஜபலபராக்கிரமத்தினாலும், மிகுந்ததவத்தி னாலும் ஆண்டுவந்தார், அப்படி யரசுபுரிந்துவருநாளையில் அந்தச் சுவயம்பு மனுவுக்கு நந்தன்-சயித்திரதன்-பிரசன்-சர்வம்தாபத்தி ரன்-காதீரன்-மனுதாரன்-அங்கதிரனென்று ஏழுபிள்ளைகள் பிறந் து கல்வியிற் சிறந்துவளர்ந்து, கருதலரைக்காய்ந்து கடைக்கண் சிவந்து காரியஸ்தரானார்கள். அக்காலையில் ஏழுபிள்ளைகளின்திற த்தைக்கண்டு ஏழுதீபத்தையும் ஒவ்வொருபிள்ளைக்கு ஒன்றோன்

று பகுந்துக்கொடுத்துபட்டங்கட்டிவைத்தார். அந்தத்தீவத்தை அந்தப்பிள்ளைகள் அரசாக்ஷிசெய்துவந்தார்கள், அந்தஏழுபிள்ளை களில் அங்கதீரனென்பவன் இந்தஜம்புத்தீவை செங்கோல்முறை குன்றாமல் தருமங் குறையாமல் மலைகளைப்பிளக்கும் வச்சிராயுத முதலிய ஆயுதங்களையுடைத்தாய் இராச்சிய பரிபாலனஞ்செய்து வருநாளையில் குரு-இரணியன்-ரீரமியன்-அளாவிரதன் - பத்திம ன்-கேதுமாலன்-அரி-கிம்புருடன்-பாரதனென்றுசொல்லும் ஒன் பதுபிள்ளைகளைப்பெற்று வளர்த்து இந்தஜம்புத்தீபத்தை ஒன்ப துபங்காக்கி ஒவ்வொருபிள்ளைகளுக்கும் ஒவ்வொருபங்காகப்பட் டங்கட்டி அந்தப் பிள்ளைகள்பேரால் நவகண்டத்திற்குபேரும் ஏ ற்படுத்திவைத்து பத்தினிபுத்திரர்கள்முதலிய பூஷணத்திரவியங் களையும் வெறுத்து ஆத்துமார்த்தமாகக் கனங்குலவிய வனம்பு குந்து மனங்குவிந்து தவமிருந்து மோக்ஷவீடடைந்தான். அங்க தீரனென்னும்அரசனும் பின்பு ஒன்பதுபிள்ளைகளும் ஒன்பதாகூ ராகிய கண்டத்தை ஆண்டுவந்தார்களே அந்த ஒன்பது கண்டத் தின் அளவையுஞ் சொல்லுகிறேன் கேளும்பெண்ணே பார்வதி! என்று பரமசிவனுனவர் சொல்லத்தொடங்கினர்.

அதாவது மலைகள்போலும் அலைகளடிக்கும்வடக்குசமுத்தி ரத்திற்குத் தெற்காகவும் அணியணியாய் மணிகள்கொழிக்கும் சு னைபெருக்குடைய ஸ்ருங்கமலைக்கு வடக்காகவும் இருக்கும் இர ணியவருடமுதலிய பாரதவருடத்தி லிருப்பவர்களெல்லோருஞ் சீக்கிரதில் மோக்ஷமடையும்படிக்கு ஆயுள் நீடித்திருக்கச் செய் யாமல் நூற்றிருபதென்று விதித்திருக்கின்றது பெண்ணேயென் று சிவபெருமான்சொல்ல; உமையவள்கேட்டுசிந்தைகளித்துப் ப ரமசிவத்தைநோக்கி ஓசுவாமி! மற்ற எட்டுவருடத்திலுமிருப்பவ ர்கள் இவ்விடத்தில்வந்து தவஞ்செய்து மேன்மைபெறவும் இவ்வி டத்திலிருப்பவர்கள் சிக்கிரத்திற்கதிசேறுவதற்காக ஆயுட்குறுக் கமென்றுஞ்சொன்னீர்; அப்பேர்ப்பட்ட விசேட நலத்தைக்கொ டுக்கும் மகத்துவங்கள் இந்தப் பாரதவருடத்தில் என்னென்ன இருக்கின்றன; அதுகளையுந்தெரிவிக்கவேண்டுமென்று பார்வதா தேவிகேட்க? பரமசிவம்சொல்லுகின்றார், கேளும் அழகிய திரு மேனியையுடையபெண்ணே! இரமணீயமாகிய பொற்றாமரைமல ர்களுடனே ஆகாயத்தினின்றிழிந்து மகமேருவின்சிகரத்திற்பாய் ந்து மூன்றுபிரிவாகி அந்த மகமேருவுக்கு சமீபமாயிருக்கின்ற

சிகரங்களையுடைய கும்பகிரியில் ஒரு பிரிவுவிழுந்து சிகரத்தைபிளந்துவரும் நதியானது நான்கு பிரிவாய்ச் சமுத்திரத்திற்போய்க் கலக்கும் இப்பால் மகமேருவுக்குத் தென்புறத்திலிருக்கும் குலகிரியினுடைய சிகரத்தில் வீழ்ந்த ஒருபிரிவானது அம்மலையின் நடுவாகிய வயிற்றைக்கிழித்துப் பெருமைதங்கிய நிலத்தைப்பிளந்துத் தென்முகமாகத் திரும்பிவராநின்ற கங்கையாற்றால் இந்தப் பாரதவருடஞ் சிறந்ததென்று சொல்லுவதற்கு சாக்ஷியாயிருக்கின்றது. இதன்றியும்-சரஸ்வதி-யமுனை-கோதாவரி-நர்மதை-கௌசிகை-துங்கபத்திரை-சரயுநதி-பாலி-பெண்ணை-காவிரி-கிருஷ்ணை தாம்பிரபாணி முதலிய பலதீர்த்தங்களும்பொருந்திய இப்பரதக் கண்டத்திற்குஒப்பாகியகண்டமும் உண்டோ? உத்தமியே! இன்னும்திருங்கோயில்-திருவேங்கடம்-திருநெல்வாயில்-திருக்கழிபாலை-திருப்பெருமணம்-திருமயேந்திர பள்ளி-திருமுல்லைவாயில்-வடமதுரை-தென்மதுரை காசி-காஞ்சி-மாயாபுரி-துவாரகை-யவந்தி-அயோத்தி-திருக்கலிங்காமூர்-திருச்சாய்க்காடு-திருப்பல்லவனீச்சுரம்-திருவெண்காடு-கோகர்ணம்-இராமேச்சுரம்-தென்கயிலை-வடவேங்கடம்-திருக்காட்டுபள்ளி-திருக்குருகா வூர்-திருக்காறா-திருக்கோலக்கா-அழகியதிருவாரூர்-புள்ளிருக்கும்வேளூர்-திருவாவிநன்குடி-திருக்கேதாரம்-ஸ்ரீரங்கம்-திருவானைகாவல்-திருக்கண்ணார்கோயில்-திருஞாயிறு-திருநின்ற யூர்-திருப்புன்கூர்-அன்னியூர்-திருவேள்வீக்கூர்-சீர்காழி-சிதம்பரம்-சிற்சபை-திருக்குடந்தை-ஜகனாதம்-திரிசிரபுரம்-தற்சயனம் - குருக்ஷேத்திரம் இவைகள்முதலாகிய திவ்விய ஸ்தலங்களுமிருக்கின்றன. இந்தப்பதிக்கு ஒப்பாகிய திருப்பதிகள்எப்பாரினுமில்லை; அறிவுடையமாதேசேனும்! இப்போது சொல்லிவந்தஸ்தல விசேஷங்களினாலும்-நதிவிசேஷங்களிலும்-கண்காக்ஷியாகிய சிறப்பினாலும்-தவங்களினாலும்-சோடசமகாதானங்களினாலும் - சிவார்ச்சனை விஷ்ணுவார்ச்சனைப் பூசைகளினாலும்-சுசித்தங்களிலும்-சகலவிதவளங்கள்முதலிய நலங்களினாலும் இந்தப்பரதகண்டம் புனிதமாகிய விசேஷம்பெற்றது; இந்தப் புனிதவிசேஷம்பெற்ற பரதகண்டத்தில் குருக்ஷேத்திரம் மேலாகிய பவித்ரமுடையது; அனேகங்கோடி நற்குலத்தவர் நற்குணத்தவரெல்லாரும் நன்மைபெறச்செய்த யாகசாலைகள் கோடாகோடிகளிருக்கின்றன. இதல்லாமலும்உத்தம க்ஷத்திரியகுல போஜராகிய ராஜாக்களெல்லோரும் விரோ

தத்தாற் பகைமேற்கொண்டு வெற்றிபெரும்படியாய் கருதியுத்த
ஞ்செய்த மேலாகிய ஸ்தலம் குருபூமி இதன்றியும், பரசுராமரா
னவர் இராஜவம்சத்தைக் கருவருத்து அவர்கள்தேகத்தினின்று
பெருகிய உதிரங்களினால் சிவந்தபஞ்சகமென்னும் தீர்த்தமகத்து
வமுண்டாக்கி அந்தஉதிரதீர்த்தத்தில் தன்தந்தைக்கு திலதர்ப்ப
ணக்கடனேகழித்தார் இன்னமும் அனேகந்தகுதியையுடைய பெ
ரியோர்களெல்லோருந் தங்களுக்குரிய கருமமுதலிய காரியங்க
ளை நிறைவேற்றிக்கொண்டார்கள், அப்பேர்ப்பட்ட மகத்துவமு
டையஅந்தக் குருக்ஷேத்திரம் எவ்விடத்திலிருப்பதென்றால்-சுல்
விவளமுஞ் செல்வவளமுந்தரும் சரஸ்வதிநதிக்குத் தெற்கிருக்கி
றதென்று சொல்லியதை உமையவள் மிகுந்த சந்தோஷத்துடன்
கேட்டுச் சிவபெருமானைநோக்கி ஓசுவாமி! நவகண்டமென்றுபிரி
த்துச்சொல்லிஅதினுடையவிசேஷங்களும் இந்தப்பாதகண்டத்
தினுடைய மகத்துவங்களும் விசாலமுதலிய தன்மைகளையும் எ
னக்குச் சொல்லிவந்தீர், நானும் அதைப் பூரணமாகத்தெரிந்து
கொண்டேன் மேற்சொல்லிய ஏழுதீவுகளிலேஇந்தநாவலந்தீவை
நீக்கி மற்றஆறுதீவுகளின் விபரங்களையுஞ் சொல்லவேண்டுமென்
று வினயத்துடன் நயந்துவேண்டிக்கொள்ளும் உமையவளைநோ
க்கிச் சிவபெருமான் புன்சிரிப்புடன் சொல்லத்தொடங்கினார்.

கேளும்பெண்ணே! முன்சொல்லிவந்த சப்ததீவுகளில் இந்த
ஜம்புத்தீவுநீங்க மற்ற ஆறுதீவுகளையும் ஆறுபிள்ளைகள் அரசுசெ
லுத்திவந்தார்கள், இந்தத்தீவுகளில் புஷ்கரமென்னுந்தீவை சர்வ
தோபத்திரன் என்னும் ராஜன் ஆண்டுவந்தான்; அவனுக்குப் பி
ராசீனன்-சுவேதன்-பிரத்தியக்கு-உத்தரனென்று நான்கு பிள்ளை
கள்பிறந்தார்கள். அப்போது,தானாண்டுவந்த புஷ்கரத்தீவை கீழ்
விதேகம்-மேல்விதேகம்-வடவிதேகம்-தென்விதேகம்யென்று நா
லுகண்டமாக்கி அந்தப்பிள்ளைகள் நால்வருக்கும் பகிர்ந்துக்கொ
டுத்தான்; அந்த நான்குபிள்ளைகளுந் துரைத்தனம் பண்ணிக்கொ
ண்டுவந்தார்கள். ஓபெண்ணே! பிள்ளைகளின் குணமறிந்துப் பூமி
யைப்பங்கிட்டுக் கொடுத்துவிடுகின்ற தந்தையானவன் எல்லாத்
தேவனிலுமுதற்றேவன், அப்படிக்கிச் செய்யாமலிறந்துபோகும்
படியாகிய தகப்பன் புத்திரமித்திரர் முதலிய பூமியைப்பரிக்கும்
பகையாகிய கொடும்பாவியென்றுஇராஜநீதியிலும் நீதிசாரங்களி

னுஞ் சொல்லியிருக்கின்றபடியால் அந்தந்த அரசர்கள்பாபத்திற் குப்பயந்து உடனேபகுந்துகொடுத்துவிட்டார்கள். அந்தநீதிமு தலிய தருமங்கள் அப்படியிருக்க மேற்சொல்லிய ஆறுதீவுகளில் வசித்துவாழ்கின்றமனிதர்களுக்கு ஆயிரம்வருஷம்ஆயுளென்றும் புஷ்கரத்தீவோர் பிரம்மாவைப் பூசிப்பார்களென்றும் கிரௌஞ்ச தீவார் வருணனைத்தொழுவாரென்றும்-பிலக்ஷதீவோர் சூரியனை வணங்குவார்களென்றும் சாகத்தீவத்தார்வாயுவை ஆராதிருப் பார்களென்றும் - சான்மலித்தீபத்தினர் சந்திரனைப் போற்றுவா ரென்றும் குசைத்தீவினர் அக்கினியைக் கொண்டாடுவார்களென் றும், நீர்வளம்-நெல்வளம்பொருந்திய இந்த ஜம்பத்தீபத்தார்மே லாகிய விதிமுறைகளுடன் கடவுளைத்தொழுதல் பூசை, சத்தியம் சவுசம்-ஆசாரம்-விவகாரம்-ஞானம்- இரக்கம்·யாகம்-ஓமம் - ஔ பாசனம்முதலிய வண்ணம் வளங்களுடையவர்களென்றும், இவ் வுலகத்தையே தேவபூமியாகச் சொல்லப்படுமென்றும் பரமசிவ ம்சொல்ல- இதினுடைய தன்மைகளைக்கேட்டுச் சந்தோஷமடைந் து பின்னும்வினவுகின்றுள்-ஓ சுவாமி! கீழுலகம் ஏழென்றருளி யிருக்கின்றீருதலின் அவ்விவரங்களை நன்கு விளங்கவேண்டுமெ ன்ற சத்தியைநோக்கி சங்கரன் சொல்லத்தொடங்கினர்.

---

## மண்டல வடுக்கு.

கேளும்பெண்ணே சேளரீ! மனுக்கள்வசிக்கும் பூலோகத்தை யூடுருவ அதோமுகத்திற்றாழ்ந்து சென்றாலோ அங்கு ஆயிரம் ப ணமகுடமுடையஆதிசேஷனும் அஷ்டகஜங்களுஞ்சூழ்ந்திருக்கு ம். அப்புவனத்தைநீக்கி அப்பாற்சென்றால் ஒப்பில்லாத பிலங்க ளாகிய அதலம்-விதலம்-சுதலம்-தராதலம்-ரசாதலம்-மகாதலம் பாதாளமென்று ஏழுலகங்களுண்டு. ஒவ்வொன்று ஒன்பதுலக்ஷ யோசனை விசாலமுடையது. இந்த ஏழுலகத்தின் கடைசியாகிய பாதாளத்தில் விவேகத்தில்மிகுந்த காண்டவரென்னும் மகானு பாவர் பொருந்தியிருப்பார். அவ்விடம்நீங்கிச்சென்றால்அள்ளல் ரௌரவம்-குப்பிபாகம்-கூடஜாலம்-செந்துக்கானம்-பூதி-மாபூதி என்னும் ஏழுநிறமாகிய நரகபூமியுளது. அந்த பூமியை நீங்கி னால் தேவர்கள்தொழுமிடமும் நமதுகணகூட்டமும்ஆதாரமாகிய

ஆமையும் அங்கிருக்கின்றது அந்நிலம்விட்டுநீங்கினல் இந்தஅண்
டத்தின் கீழ்ச்சுவர்தோன்றும் பெண்ணே! பூலோகமுதல்அண்
டச்சுவர்வரைக்கும் ஐம்பதுகோடியோசனை தூரமாகும்; இனி பூ
லோகமுதல் மேலாகிய ஏழுலகத்தின் சிறுஞ்சொல்லுகிறேன்;கே
ளும் பார்வதி! யென்று முக்கட்பிரான்சொல்லுகின்றார். மண்ணு
லகத்தில்அளவிறந்த யோனிபேதமாக ஆத்துமாக்கள் வாழுமெ
ன்றுணர்ந்திருக்கின்றாயல்லவா; பெண்ணே! இவ்வுலகின்மேற்
பத்துயோசனை தூரம் வாயுமண்டலம், பதினாயிரம் யோசனை தூர
ம் மேகமண்டலம், இதுவரையிலும் பூலோகம்; அதற்குமேலாகி
ய புவர்லோகத்தின் அளவைக்கேளும்? உமையே! நலமுடைய கி
ம்புருடர் பலமுடைய கருடர்-விஞ்சையர்-இயக்கர்-சித்தர்-இவர்
கள் முதலியபேர்கள் பொருந்துவாழுமுலகமுண்டு; அதன்மேல்
ஆகாயகங்கைசெல்லுகின்றது; அப்பால் லக்ஷயோசனை தூரம் சூ
ரியமண்டலம் அதுவே முப்பத்துமுக்கோடி தேவர்கள்கூடி வழி
நடக்க மண்டலவீதியாயிருக்கும்; அதற்குமேல் லக்ஷயோசனை
தூரம் சந்திரமண்டலம்; அப்பால் லக்ஷயோசனை தூரம் நக்ஷத்திர
மண்டலம்; அதன்மேல் இரண்டுலக்ஷயோசனை தூரம் புதனுடை
யமண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷயோசனை தூரம் சுக்கிரமண்
டலம்; அதன்மேல் இரண்டு லக்ஷயோசனை தூரம் அங்காரனாகிய
செவ்வாய்மண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷயோசனை தூரம் குரும
ண்டலம்; அப்பால் இரண்டுலக்ஷயோசனை தூரம் சனிமண்டலம்;
அதன்மேல் லக்ஷயோசனை தூரம் தவத்தையுடைய சப்தரிஷிகள்
மண்டலம்; அப்பால் லக்ஷயோசனை தூரம் துருவமண்டலம்-இது
வரையிலும் பதினைந்து லக்ஷயோசனை தூரம் தொகையினையுடை
யது புவலோகம். இதன்மேலாகிய சுவர்லோகமென்பது எண்பத்
தைந்து லக்ஷயோசனை தூரமுடையது-அதற்கப்பால் மகாலோகம்
இருநூறு லக்ஷயோசனை தூரமுடையது-அதைத்தான் தேவேந்
திரன்வாழுந் தேவலோகமென்றுசொல்லப்படும். அவ்விடத்தில்
மார்க்கண்டேயர்முதலாகிய மகாமுனிவர்களெல்லாரும் வீற்றிரு
ப்பார்கள் அதற்குமேல் எட்டுகோடியோசனை தூரமுடையது ச
னலோகம்-அவ்விடத்திற் பிதிர்தேவதைகள்முதலிய புண்ணிய
ரும் பொருந்திவாழ்வார்கள். அந்த ஜனலோகத்தின்மீது பன்னி
ரண்டுகோடி யோசனை தூரமுடையது தவலோகம்-அவ்வுலகத்தி
ல் சனகசனந்த சனற்குமார சனாத்தனர் முதலியபேரும் வாழ்

வார்கள்; இந்தத்தவலோகத்தின்மேல் சிருஷ்டிகர்த்தாவாகிய பி ரம்மதேவர்வாழும் சத்தியலோகம் அதுபதினான்குகோடி யோச னை தூரமுடையது, அந்த சத்தியலோகம் வரைக்கும் ஏழுலகமெ ன்றுணரக்கடவை; இந்த சத்தியலோகத்தின்மேல் பரமபதமெ ன்பது மூன்றுயோசனை தூரமுடையது பரிமளங்கொண்டதுள வனிமாயன் பொருந்தியபதம்; அதற்குமேல் மூன்றுகோடியோ சனைதூரமுடையது நாம்பொருந்தியிருக்கும் சாயுச்சியலோகம்; இதற்குமேல் ஒருகோடியோசனைதூரத்தில் குற்றமற்ற அண்டச் சுவர் வட்டங்கவிழ்ந்திருக்கின்றதென்றுணரக்கடவை; இதல்லா மல் நூற்றெட்டுஉருத்திரர்கள்வாழும் புவனங்களும் சமுத்திர ம த்தியிலிராநின்ற இலங்கைமுதலிய தீவங்களும் பற்பலவாக இம் மேதினியிலிருக்கிறன. மேலும், இந்தஅண்டத்தை வளைந்துக்கொ ண்டிருக்கும் சக்கரவாளகிரியின் எட்டுத்திக்கிலும்இந்திரன்-அக் கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு-குபேரன்-ஈசானன் என்று சொல்லப்பட்ட திக்குப்பாலர்களும் இவர்கள்பொருந்தியிருக்கும் பட்டணங்களுமுண்டு; ஆகையால், நான்சொல்லிக்கொண்டுவந்த பூலோகமுதற்கொண்டு அண்டகோளகை வரைக்கும் பஞ்சதக் கோடி யளவென்றும் அறியக்கடவையென்று உமையவளுக்குச் சிவபெருமான் சொல்லியருளினர்.

---

## பிரம்ம சந்ததி.

கேளும்பெண்ணே பார்வதி! சிருஷ்டித்தலைவனாகிய பிரம்ம னுடலில் அத்திரி-அரிசி-புலத்தியன்-கிரன்-கிருத்து-புலகன் என் னும் ஆறுபுத்திரரும்,அப்பிரமன் வலதுபாதத்தின் பெருவிரலில் தக்கனும், இடதுபாதத்தின் பெருவிரலில் தாணியென்னும் ஒரு பெண்ணும்உதித்தனர். அந்தப்பிரமன் உடலிலுதித்த ஆறுபுத்தி ரர்கள் அரிசியின் புத்திரர் காசிபர். அக்காசிபரால் இவ்வுலகம் விர்த்தியாயிற்று. அது யெவ்வகையெனில்.—

பிரமன் வலதுபாதத்துப்பெருவிரலிற் பிறந்ததக்கன், பிரம ன் இடதுகாற்பெருவிரலிற் பிறந்த தாணியென்பவளைக்கூடி ஆயி ரம் புத்திரர்களைப்பெற்றான். அப்புத்திரர்கள் பிரமசாரியத்தை மேற்கொண்டு தவஞ்செய்து ஞானபதமடைந்தார்கள். அதைத் தக்கன்கேட்டு மறுபடியும் தாணியென்பவளைக்கூடி ஐம்பதுபெண்

களைப்பெற்றான். அந்த ஐம்பதுபெண்களில் சிரத்தை-அலட்சுமி திருதிதுஷ்டி-புஷ்டி-மேதை-கிரியை-புத்தி- இலச்சை-வபு -சுசாந் தி-சித்தி-கீர்த்தி-யென்னும் பதின்மூவரை தருமமென்கிற மனு வுக்கும். அசுவனி-பரணி-கிருத்திகை-உரோகணி-மிருகசீரிடம் - திருவாதிரை-புனர்பூசம்-பூசம்- ஆயிலியம்- மகம்-பூரம்-உத்திரம்- அஸ்தம்-சித்திரை-சுவாதி-விசாகம்-அநுஷம்-கேட்டை-மூலம் - பூராடம்,உத்திராடம்- திருவோணம்-அவிட்டம்-சதயம்-பூரட்டா தி-உத்திரட்டாதி-ரேவதிஎன்னும் இருபத்தியேழு பெண்களைச் சந்திரனுக்கும்-அதிதி-திதி- தனு-சத்துரு-அரிட்டை-சுரசை -சுர பிவினதை-தாம்பிரை-குரோதவசை-முனி-இனை-கிரீடைஎன்னும் பதின்மூன்று பெண்களை காசிபருக்கும் விவாகஞ்செய்துக்கொடு த்தான் இவர்களில் அதிதியென்னும்ஸ்திரீக்கி குமாரர்களாவன.

| | |
|---|---|
| அங்கிசன் | அரியமான் |
| தாதா | விவச்சுவான் |
| பகன் | சவிதா |
| துவட்டா | புடா |
| மித்திரன் | இந்திரன் |
| வருணனு | விஷ்ணு |

ஆகிய பன்னிரண்டு புத்திரர்கள்பிறந்தார்கள். திதிக்கு இர ணியன் பிறந்தான்; அந்த இரணியனுக்குப் பிரகலாதனன் பிறந் தான்; பிரகலாதனனுக்கு கும்பன்-நிருபன்-விரோசனன் என்னு மூவர்பிறந்தார்கள். இவர்களில் விரோசனனுக்குபலிச்சக்கிரவர் த்திபிறந்தான்,பலிக்குபாணாசுரன்பிறந்தான். தனுவென்பவனுக் கு விப்பிரசித்தி-நமுகாசு-சங்கவருணன்-பலோமன்-விலோமன் முதலாகிய நாற்பதுகுமாரர்கள் பிறந்தார்கள். அந்தநாற்பதுபே ருக்கும் சந்ததிவிர்த்தியாகி அளவற்ற அரசர்கள் உதித்தார்கள்.

காலையென்பவளுக்குவிரோசன், குரோதன்முதலாகியஐம்ப துபுத்திரர்கள் பிறந்து அபிவிர்த்தியானார்கள். ஆயுவுக்குவிஜயன் விஜான்-வீரன்-விருத்திரன் என்னும் நான்கு புத்திரர்கள்பிறந்து விர்த்தியானார்கள். சிங்கியையென்பவளுக்கு இராகுபிறந்தான். ம னுவென்பவனுக்கு வீமசேனன், உக்கிரசேனன் முதலாகியபதின றுகந்திருவர் பிறந்தார்கள். சுரபியென்பவளுக்கு மேனகை முத லாகியஅப்ஸரஸ்ரீகளும் தேவசுரபிகளும்பிறந்தார்கள். முனி என் பவளுக்கு கர்னன் பிறந்தான். குரோதைவசைக்கு மகாகணன் பிறந்தான். அனுகையென்பவளுக்கு சித்தகணங்கள்பிறந்தார்கள்.

வினதைக்கு அருணனும்-கெருடனும்-பிறந்தார்கள், அருணனுக்கும்அவன்மனைவி சேதிக்கும்சம்பாதி, சடாயு பிறந்தார்கள். கத்துருவைக்கு ஆதிசேஷன் வாசுகிமுதலாகிய நூற்றிஞலுஉரகபதிகளும் சலர்க்கறையென்கிற ஒரு புத்திரியும் பிறந்தாள்; இது காசிபர் சந்ததி. இனி அங்கிசன் சந்ததி கூறுவாம் அங்கிசனுக்கு பிரகஸ்பதி-தேவகுரு-வாஞன். அத்திரிக்கு வேத வேதியர்களும் பிரம்மரிஷிகளும் பிறந்தார்கள். புலத்தியனுக்கு-விச்சிரவாகு முதலாகிய அரக்கர்கள் பிறந்தார்கள். அதில் விச்சிரவாகுவென்பவனுக்கு பேரன்பிறந்தான். புலத்தியனுக்கு கின்னரர்,கிரும்புருடர் பிறந்தார்கள். கிருதுவுக்குஅழிவில்லாத நிலைமையையுடையநாலு முனிவர்கள் பிறந்தார்கள். பிரம்மன் புத்திரனுகிய தேவலனென்கிறமுனிக்கி பிரசாபதிபிறந்தான். அந்த பிரசாபதிக்கு தூமிரை-புத்தி-மனஸ்வனி-ரதை-சுசனை-சர்ண்டிலி-பிரபாசலைஎன்னும்ஏழு மனைவிகளுண்டு. அவர்களில்தூமிரைக்கு-வருணனும்-புத்திக்குத் துருவனும், மனஸ்வனிக்கு-சோமனும், ரதைக்கு-நகுலனும், சுசனைக்கு-அனிலனும்,சாண்டிலிக்கி-அக்கினியும், பிரசபாலைக்கு-பிரபாசன் பிரத்யூசன்முதலாகிய வசுக்கள்பிறந்தார்கள். வருணனென்கிற வசுவுக்கு திரணவனும்,துருவனென்கிற வசுவுக்கு காலனும்,சோமனெனும்வசுவுக்கும் மனோகரமென்னும் பெண்ணுக்கும் புரோசனன்-வர்ச்சிகன்-சிசிரன்-பிராணன்-வருணன்-புரதைஎன்கிறபெண்ணும்பிறந்தனர். புரதையென்பவளுக்கு பதிஞெரு கந்திருவர்பிறந்தார்கள். நகுஷனென்கிறவசுவுக்கு சோதிபிறந்தான் அனிலனென்னும்வசுவுக்கும் சிவையென்வளுக்கும் புரோஜனனும்அவிக்கியாக மதியும்பிறந்தார்கள்,அக்கினி என்கிறவசுவுக்கு குமாரன் பிறந்தான். தாத்தியூஷனென்னும் வசுவுக்குமுனிவனுகிய தேவலன்பிறந்தான். பிரபாசனென்கிறவசுவுக்கும் பிரகஸ்பதி சகோதரியாகிய போகசித்திக்கும் விசுவகர்மன்பிறந்தான். தரனென்கிறவசுவுக்கு மானசபுத்திரர்களாகிய மகாதேவன்-அரன்-உருத்திரன்-சங்கரன்-நீலலோகிதன்-ஈசானன்-விசயன்-வீமதேவன்-பவோற்பவன்-கரபாலசவுமியன் என்னும் ஏகாதசருத்தரர்கள் பிறந்தார்கள். பிரமன் வலதுகையில் தருமனென்றமனுப்பிறந்தான் அந்ததருமனுக்கு சமன்-ராமன்-அருஷன் - என்பவர்பிறந்தார்கள். அந்தமூவர்களும் கிரமமாய் அப்பிராபதி, நிருதி, நந்தி என்ற மூன்றுமனைவியரோடு வாழ்ந்திருந்தார்கள். சவித்துருக்கும் வட

வாக்கினிரூபமாகிய துவஷ்டரைக்கும் அசுவனிதேவதைகள் பிறந்தார்கள். பிரமன் மார்பிலேபிருகுமுனிவர்பிறந்தார், அந்தபிருகு முனிவருக்கு சுக்கிரன்பிறந்தான், அந்தசுக்கிரன் அசுரர்குருவாகினன் சுக்கிரனுக்குதுவஷ்டரன், தாத்திரி-பத்திரி-பத்திரன்-கன்னன் என்கிறநாலுபுத்திரர்கள்பிறந்து அசுரருக்குப் புரோகிதர்களாயினர்கள். பிறகுமுனிக்குச்சவுனகன்பிறந்தான், அந்தசவுனகனுக்கும் மனுவாகிய பயாதிபுத்திரி சுகன்னிக்கும் - சுநகன்-ருசிகன் முதலாகிய நூறுபுத்திரர்கள்பிறந்தார்கள், ருசிகனுக்கு சமதக்கினிபிறந்தான் சமதக்கினிக்கும் ரேணுகைக்கும் புத்திரரும் புத்திரிகளுமாக நாலுபேர்பிறந்தார்கள். அவர்களில் மூத்தகுமாரன் சிரேஷ்டனுயினன் மறுபடியும் பிரமனிக்கு தாதை-விதர்தை அலக்குமி என்னும் மூன்றுஸ்ரீகள்பிறந்தார்கள். இவர்களில்அலக்குமி அனேகம் புத்திரர்களைப்பெற்ருள் வருணனென்பவனுக்கும்சேஷ்டைக்கும்தருமனுக்கும் நிதியென்பவளுக்கும் மகாபயன்-பயன்-மிரத்திவுயென்னும்மூவரும் பிறந்தார்கள். மற்றும் அத்தருமனுக்கு காகி-சேனை-பாசிநி-திரிதாரஷ்டரை-சுகிஎன்னும்ஐந்துபெண்கள்பிறந்தார்கள். இவர்களில்காகியென்பவளுக்கு காக்கைகள்பிறந்தன. சேனையென்பவளுக்கு புருக்கள்பிறந்தன. திரிதாரஷ்டரைக்குவிச்சுளிகள் பிறந்தன-பாசினியென்பவளுக்குப் பருந்துகளும்-ஆந்தைகளும்பிறந்தன. சுகியென்பவளுக்கிளிகள் பிறந்தன முன்கூறியகாசிபமுனி மனைவியாகிய முனி யென்பவளுக்கு மறுபடியும் மிருகை - மந்தை - அரிணி-பத்தரமதி-மாதங்கி-சாரத்தூதி-சுவேதை-சுரசைஎன்ற பெண்மரும் பிறந்தார்கள். இவர்களில் மிருகையென்பவளுக்குப் பன்றிமுதலாகிய மிருகங்கள் பிறந்தன. மந்தையென்பவளுக்கு உயிருள்ள பலஜெந்துக்கள்பிறந்தன. அறணிக்கு குரங்கினம்பிறந்தன. பத்திரமதிக்கு ஐராவதம்பிறந்தது. ஐராவதத்துக்கு தேவனுகம்பிறந்தன. மாதங்கியென்பவளுக்கு யானைகள்பிறந்தன. சாரத்தூதியென்பவளுக்கு சிங்கங்களும் புலிகளும்பிறந்தன. சுவேதை யென்பவளுக்கு திக்குகஜங்கள்பிறந்தன. சுரசையென்பவளுக்கு உரோகணி-பத்திராங்கி-கந்திருவைஎன்ற மூன்றுஸ்ரீகள்பிறந்தார்கள். அதில் உரோகணிக்கு யான்கள்பிறந்தன. பத்திராங்கிக்கு மரங்களும்-கொடிகளும்-புதற்களும்பிறந்தன, கந்திருவைக்கு குதிரைகள்பிறந்தன. இது தேவுற்பத்தியென்று சொல்லப்படும்.

---

## சூரியரதமும்

### மண்டலமும்.

திங்களைத்தரித்த மங்களமூர்த்தியே! பூகோளமாகியஉலகப் பரப்பும்-அதிலடங்கிய அடுக்கினங்களும் நரகலோகமும் - தரும கூடமும் விசேஷபெருக்கான விளக்கமாய்த்தெரிந்துகொண்டேன். இனி ககனவடுக்குகளும் அதிலடங்கிய சூரியாதிமண்டலப் பிரிவினங்களும் கேட்க அடியாள் விருப்பங்கொண்டமையால் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று வணங்கிநிற்க- அப்பார்வதியைநோக்கி விற்பத்தியிற் சிறந்த பொற்பாவையே! நீ விரும்பியவாறு அருளிச்செய்வோம் ஊக்கமாய் கேட்பாயாக?

அதாவது! சூரியனுடைய ரதமானது பதினாயிரம்யோசனை விசாலமுள்ளதாய் ஒன்பதினாயிரம் யோசனைவரையில் சூரியமண்டலத்தினாலே வியாபிக்கப்பட்டிருக்கும் அதின் இருபுரத்திரிசுகளையும் கூட்டுகிறகட்டையானது(ஏற்கால்) இருபதினாயிரம்யோசனையளவாயுள்ளது அதின் ஒரு புறத்திரிசு ஒருகோடியெண்பத்தேழுலக்ஷம்யோசனையுள்ளது அதிலேதான் சக்கரமொன்றுமாட்டியிருக்கும்அந்தச்சக்கரமானது சம்வச்சரஸ்வரூபமாயிருப்பது அசற்குக் காலை நடுப்பகல் பிற்பகல்என்கிற நாட்பிரிவு மூன்றும் இரிசுகோத்திருக்குமிடமாயிருக்கும். சம்வச்சரம்-பரிவச்சரம்-இடாவச்சரம்-அனுபவச்சரம்-இகவச்சரம்-என்கிற வருஷபேதங்களைந்தும்அரங்களாயிருக்கும். இருதுக்களாறும் சுற்றுவட்டங்களாயிருக்கும் இப்படிப்பட்ட அவயவங்களுள்ளதாய் க்ஷயமில்லாதிருக்கிற அந்த சக்கரத்திலேதான் காலசக்ரமுழுதும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. அவ்விரதத்திற்குக்காயத்திரி-பிருகதி-உஷ்ணி-சஜகதி-திருஷ்டிப்பு-அனுட்டிப்பு பத்தியென்கிற சந்தங்கள் ஏழுமே குதிரைகளாயிருக்கின்றன, அச்சூரியரதத்தின் மற்றொரு புறத்தின் இரிசு நாற்பத்தையாயிரத்தி ஐன்னூறுயோசனையினளவுள்ளது நுகத்தடியின் அளவோ இரிசுனளவேயாம். அந்தச்சிற்றிரிசானது தன்புறத்து நுகத்தடியின் பாதியோடுகூட வாயுரூபமான கயிறுகளால்கட்டப்பட்டுத் துருவனையாதாரமாகக்கொண்டிருக்கிறது. பேரிரிசிலே கோர்க்கப்பட்டிருக்கிற சக்கரமானது மானசோத்தா பர்வதத்தின்மேலிருக்கின்றது. அந்தமானசோத்தா பருவதத்தின்மேல் கிழக்கில் இந்திரனுடைய பட்டணமும்

வடக்கில்சோமனுடையபட்டணமும் விளங்குகின்றன. அவற்றின் பெயர்களாவன; வஸ்வோக-சராசமனீ-சுகாவி-பாவரி என்பனவைகளாம். ஓபார்வதி! சூரியபகவான் தென்றிசையையடைந்தபோது சோதிச்சக்கரத்தின் தடைசியடைந்தவனுகி எறிந்தஅம்பைப் போல் விரைவாக ஓடுகிறுன் அந்தச் சூரியபகவான்தான் இராப்பகல்களின் ஏற்பாட்டிற்குக் காரணமாயும் யோகிகளுக்குச்சகல கிலேசங்களுங் விடுபட்டும்போகுங் காலமாகிய முடிவுகாலத்தில் தேவயான மார்க்கமாயுமிருக்கிறுன். தேவயானம்யென்பது அர்ச்சிராதிமார்க்கம் அதாவது முதலில் அக்கினி பின்பு முறையே பகல் பூர்வபக்ஷம் உத்திராயணம் வருஷம் காற்றுச் சூரியன்-சந்திரன்-மின்னல்-வருணன்-இந்திரன்-பிரமன் என்பவர்களுடைய எல்லைகளேயாம்; இவர்களை தியானஞ்செய்து மோட்சத்துக்குப் போகும்வழி இதுவென்றறிவாய்.

ஓ! பருவதராஜனுடைய குமாரியேஇன்னமுங்கேள்? அந்த சூரியன் நமக்கெப்படி பகலிலேஅதிக உஷ்ணமாயும் பிரகாசமாயும் காணப்படுகிறுனல்லவா-அப்படியே மற்றெல்லாத் தீவுகளிலும் இரவிலிருக்கிறுனே அல்லது உஷ்ணப்பிரகாசங்கள் குறைந்து எப்போது மிருப்பதில்லை. ஆகையால், உதயாஸ்தமயபேதங்களில்லைஆனல் உதயாஸ்தமயங்களின் விதமென்னவெனில் திக்குவிதிக்குகளெதிலும் எவர்களுக்கு எங்கே காணப்படுகிறுனே அவர்களுக்கு அங்கே உதயமென்றும் அதற்குநேர்க்கோணத்தில் காணப்படாமற்போவதினலே அஸ்தமயமென்றும் உலக விவகாரமுண்டாயிருக்கின்றது. இப்படியாகையால் சூரியனுக்குஎப்போதும் உதயாஸ்த மயங்களுண்டாயிருக்கின்றன. இவ்வளவேயல்லாமல் சூரியனுக்குச் சுபாவத்தில் உதயமும் அஸ்தமயமுமில்லவே யில்லை.இச்சூரியன் இந்திரன் முதலானேருடைய பட்டணங்களில் எதிலிருந்தாலும் அதனையும் பக்கத்துக் கோணங்களிரண்டையும் பரங்களிரண்டையும் பரிசிக்கிறுன்.

அவ்வாதித்தனனவன் உதயமானதுமுதல் கிரணங்கள் வளரப்பெற்றிருந்து மத்தியானத்தின்மேல் கிரணங்கள்சுருங்கப்பெற்றவனுய் அஸ்தமயமாகிறுன். இந்தஉதையாஸ்த மயங்களைக்கொண்டு தான் கிழக்கென்றும்-மேற்கென்றும் திக்குகளின் ஏற்பாடு உண்டாக்கப்பட்டிருக்கின்றது. இதைக்கொண்டே வலப்புறம்

தென்திசையெனவும் இடப்புறம் வடதிசையெனவும் குறிக்கப்படும்சூரியன் எதிரில் எவ்வளவுகாய்கிருனே அவ்வளவுபின்புறத்திலும் பக்கங்களினுங்காய்கிருன் ஆனல் மகமேருபருவதத்தின் மேலிருக்கிற பிரம்மாவின் சபையைக்காய்வதில்லை ஏனெனில் சூரியகிரணங்கள் அச்சபையிற் செல்லுமளவில் இதின் கிரணங்களாலே திரஸ்காரப்பட்டுத் திரும்புகின்றமையாலென்றறியும் இப்படிஉதயாஸ்தமயங்களினுலேயே கிழக்குமுதலிய திக்குகள்ஏற்பட்டிருப்பதனுலேமேருகிரியானது சகலவருஷங்களுக்கும்வடக்காகவேயிருக்கிறது. ஆனதுபற்றி மேருவின்மேல்எப்போதப்பிரம்மசபையின் காந்தியினுல் பகலும் சூரியசஞ்சாரமில்லாமையால் இரவுமாயிருக்கும். அஸ்தமயமாகிற சூரியனுடைய கிரணங்கள் அக்கினியில் பிறவேசிப்பதால்அவ்வக்கினியானதுஇரவில் அதிகமாய்பிரகாசிக்கின்றது. அக்கினிகிரணங்கள் பகலில் சூரியனிடத்திலேபிரகாசிப்பதனுலே சூரியன் அதிகமாய்ப் பிரகாசிக்கிருன், இப்படியாகஉஷ்ணப்பிரகாசமுள்ள ஒளியிரண்டும் மாறிமாறியொன்றிலொன்றுகலந்து விளங்குகின்றன. மேருவின் புறத்திலும் வடபுறத்திலும் பூமியின்பாதியில் சூரியன்உதயமாகும்போதுஇருளான இராத்திரியும் வெளிச்சமான பகலும் முறையே தண்ணீரில் பிரவேசிப்பதினுலே அந்தத் தண்ணீரானது கிஞ்சித்துச் சிவப்பாகவும் வெளுப்பாகவுமாகின்றது. இவ்வண்ணம் புஷ்கரத்தீவின் நடுவினுல் பூமியில் முப்பதிலொருபங்கைச் சூரியன் கடப்பதனுல் நாளில் முப்பதிலொருபங்காகியமுகூர்த்தகாலமுண்டாகின்றது.

குயவனுடைய சக்கரத்திலே திரிகிறபூச்சியைப்போலேசோதிசக்கரத்திலே திரிகிற சூரியன் தென்றிசையைநீங்கிஉத்தராயணத்தின் மகாத்திலே வரும்போது முற்பட்டபகலிறவுகளைக்காட்டிலும் வித்தியாசமான பகலிரவுகளைச்செய்துவருவன்பின்பு அப்படியே முறையாய் கும்பமீனம்யென்கிற ராசிகளிரண்டையும்கடந்துமேஷராசியிற் பிரவேசிக்கும்போது பூமத்தியாகிய விஷுவத்தின்கதியைச் சேர்ந்தும் பகலிரவுகளைச்சரியாகச்செய்வன் அங்கிருந்து சஞ்சரிக்கும்போது நாடோறும் பகல் வளர்ந்துக்கொண்டேவர இரவுக்ஷீணித்துக்கொண்டேவரும் இப்படி மிதுனம்வரையிற்சென்று கர்க்கடகராசிக்கித்திருப்ப தக்ஷிணுபனமுண்டாகும் குயவன் சக்காத்தின் நுனியிலிருக்கும் பூச்சிபோலே தக்ஷிணுயனத்திலே சூரியன் சீக்கிரமாகச் சஞ்சரித்துக்கொண்டு பன்னி

ரண்டுமுகூர்த்தகாலமான பகலினாலே பதின்மூன்றரை நக்ஷத்தி ரங்களையும்பதினெட்டு முகூர்த்தகாலமான இரவினாலே மற்றபதி ன்மூன்றரைநக்ஷத்திரங்களையும் கடக்கின்றனன். மறுபடியுந்தரா யணத்திற்குவரும்போது குலாச்சக்காத்தினடுவிற்கிடக்கும் பூச் சிப்போல் மந்தமாக சஞ்சரித்துக்கொண்டு முந்திய இராப்பகலுக் கு மாரான இராப்பகல்களைச்செய்கிறான். ஆகவே உத்தராயணத் தின் பகல்வளர்ச்சிபதினெட்டுமுகூர்த்த அளவாயும் இரவின்குறை வுடன்னிரண்டுமுகூர்த்த அளவாயுமிருக்கும்.சக்கரத்தின் நாபியா னது தான்நின்ற நிலைகுலையாது இராவைக்கு பிரம்மத்தைப்போ ல்காட்டி எவ்வளவு வேகமாகச்சுழல்கிறதோ அவ்வாறே,சோதிச் சக்கரமத்தியத்திலே துருவன்எக்காலும் சுழன்றுக்கொண்டிருக் கின்றான். இப்படிசூரியன் தக்ஷிணாயன உத்தராயணங்களிலே அ ந்தந்த ராசிமண்டலங்களைச் சூரியன் நடக்குந்திரத்தினாலே பகல் வளர இரவுகுறைதலும் இரவுவளரப் பகல்குறைதலுமாயிருக்கு மென்றுணர்ந்துக்கொள்க. சூரியனே பகலிலும் இரவிலும் அவ் வாறு ராசிகளையே சமமாகக் கடக்கின்றானேயல்லது வேறில்லை; ஆனாலும்- இராசிகளின்வித்தியாசத்தினால் இரவுபகல்களில்வித்தி யாசமுண்டாகின்றது. மேலும் இந்த வித்தியாசம் அங்கங்கிருந்து நோக்குகிறவர்களுடைய திருஷ்டியிற்படுகிற உதயாஸ்தமய பே தத்தினாலுமாம்.

இரவு உஷையென்றும் பகல் வியுஷ்டியென்றும் சொல்லப்ப டும். இந்த உஷாவியுஷ்டிகளின் நடுப்பொழுது தசாந்தியென்று ம்சொல்லப்படும். இப்படி மிகவுங்கொடியதும் பயங்கரமுமான ச ந்திவரும்போது மந்தேகர்பென்கிற ராக்ஷதர்கள்சூரியனைத்தின னும்படி எத்தனஞ்செய்கிறார்கள்; அவர்களுக்கு நித்தியம் மரண மும்உடம்பு நாசமாகாமலிருப்பதுமாகப் பிரம்மதேவனாலே சாப மிடப்பட்டிருக்கிறது. அவ்வசுரர் சூரியன்மேல் பாயும்போது சூ ரியனுக்கும்அசுரருக்கும் கொடியயுத்தமுண்டாகிறது; அதினிமி த்தம் பிராமணோத்தமர்கள் பிரணவவியாகிருதி காயத்திரி மந்தி ரங்களாலே அபிமந்திரித்துத் தண்ணீரையெரிகிறார்கள்; அந்தத் தண்ணீரானது வச்சிரம்போலாகிஅவ்வசுரரை நாசஞ்செய்கிறது பின்பு பிராமணர்களாலேஅக்கினியோத்திரத்தில் மந்திரத்தோடு கூட ஆகுதிசெய்யப்படுகிற முதலாகுதியினாலே ஆயிரங்கிரணங் களுள்ள சூரியனெனுஞ்சோதியானது உலகமெல்லாம் பிரகாசிக்

கும்படி விளங்குகிறது. கேளும்பார்வதி! அந்தப்பிரணவமானது ஸ்ரீவிஷ்ணுசொரூபமாய் வியாகிருதி தேவதைகளுக்கிடமாய் வேதங்களுக்கெல்லாம்அதிபதியாயிருப்பதால் அதின்உச்சாரணை மகிமையாலே அந்தவசுரருக்கு நாசம் உண்டாகிறது; நிற்க விசாரமாய் உள்ளேதோன்றுகிற சோதியாயிருக்கிற ஸ்ரீ விஷ்ணுவினுடைய உத்தமஅம்சமான சூரியனாகி அந்தப்பிரணவத்தைப் பொருந்தியிருக்கிறபடியினாலே அதை யதுதெரிவித்துக்கொண்டுஅச்சோதி நடத்திக்கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட பிரபாவமுள்ளபிரணவத்தினாலே ஸ்ரீவிஷ்ணுவின் தேஜோமயனே சூரினாய் விளங்கப்பட்டு (மந்தேகர்) யென்கிற பெயரையுடைய பாபங்களைக்கொளுத்திப்போடுகிறது ஆதலால், சந்தியா வந்தனகாரியத்தை எவனும் விடலாகாது விடுவதனாலே சூரியனைக்கொன்ற பாபத்தையடைவான்; இப்படி (வாக்கில்லியர்) முதலான மகாபிராமணர்களாலே ரக்ஷிக்கப்பட்டுச் சூரியபகவான் லோகசம்ரக்ஷணார்த்தமாய் அப்புறஞ்செல்லுகின்றான். சந்தியாகால நிர்ணயத்தைச் சொல்லுகிறேன்கேளும், பதினைந்துநிமிஷங்கள் ஒருகாஷ்டையென்றுசொல்லப்படும். முப்பதுகாஷ்டைகள் ஒருகலையாம். முப்பது கலைகள் ஒருமுகூர்த்தமாம், அவை முப்பதுசேர்ந்து இரவும் பகலுமாகிய ஒருநாளாம், இப்படிப்பட்ட நாளில் விருத்தியானாலும் க்ஷயமானாலும் அவைகளுக்கேற்ற அளவைக்கொண்ட பதினைந்தாம்பங்கான ஒருமுகூர்த்தகாலமே சந்தியகாலமாம். உதயகாலந்தொடங்கி சூரியன்மூன்றுமுகூர்த்தகாலம் செல்லுமளவும்பிராதகாலமென்று சொல்லப்படும். அதுபகலின் ஐந்திலொருபங்கும் அதற்குமேல் மூன்றுமுகூர்த்தகாலம் சங்கவமென்று சொல்லப்படும். அந்தசங்கவகாலத்தின்மேல் மூன்றுமுகூர்த்தகாலமானது அபரான்னகாலமாம். அந்த அபரான்னகாலமான பின்புள்ளது மூன்று முகூர்த்தகாலம் சாளான்னகாலமாம், இப்படிச்சரியான பதினைந்து முகூர்த்தமுள்ள பகலானது விஷுவத்காலத்திலாம் இந்த நாளானது உத்தராயண தக்ஷிணாயனங்களினாலே வளர்ந்துங்குறைந்தும் ஒருபோது பகலினாலிரவு விழுங்கப்பட்டும் மற்றொருபோது இரவினாற்பகல் விழுங்கப்பட்டு மிருக்கும் சரத்துருதியின் ஆரம்பமானது துலாராசியில் சூரியன் வருகையிலும் வசந்தருதுவின் ஆரம்பமான மேஷராசியில் சூரியன்வருகையிலும் விஷுவம்யென்கிற காலம்உண்டாகின்றது. அது தான் ஏற்றக்குறை

வில்லாத இராப்பகல்களையுடையது. சூரியன் கர்க்கட விராசியிலி ருக்கையில் தக்ஷிணாயனமும், மகரவிராசியிலிருக்கையி லுத்தரா யணமுமென்றறிவாய் உமையே! முன்புநான் முப்பதுமுகூர்த்த அளவானது ஒரு நாளென்று சொன்னேனே, அவைபதினைந்து கூடினது ஒருபக்ஷம், இரண்டு பக்ஷங்கள் ஒருமாதம், சூரியகதியி னாலாகும் இரண்டு மாதங்கள் ஒரு ருது, மூன்று ருதுஒருஅயன ம்-இரண்டு அயனங்கள் கூடில் ஒருவருஷம்பேர்பெரும் இவ்வரு ஷமானது சவுரம்-சந்திரம்-சரவனம்-நக்ஷத்திரம்என்று நான்குவி தமாக விகற்பிக்கப்படும். இப்படி விகற்பிக்கப்படுகிறவருஷங்கள் ஐந்துகூடி ஆரம்பம்போல் விகற்பமின்றி முடிதலாலே யுகமென் கிறபெயரை அடையும்; அவற்றுள் முதல் சம்வச்சரமென்றும் நான்காவது இத்வச்சர மென்றும் ஐந்தாவது அனுவச்சரமென் றும் சொல்லப்படும்.

### தானகாலம்.

வேறுகாலத்தில்அயனவிசுவத் காலங்களுண்டாகிற முகாந் திரங்களைச்சொல்லுகிறேன்கேளும், சுவேதசைலத்திற்குவடக்கில் (ஸ்ருங்கவானென்கிற)பருவதமுண்டென்று முன்சொல்லியிருக் கின்றேன் அதற்கு அப்பெயர் வரக்காரணமாய் மூன்றுகோடிமு டிகளுண்டு-அவற்றுள்ஒன்று தென்புறத்திலும்-மற்றொன்று வ டபுறத்திலும்-இன்னொன்று நடுவிலுமிருக்கின்றன. தென்புறச்சி ருங்கத்திற் சூரியன் சஞ்சரிப்பதனல் தக்ஷிணாயனமும்-வடபுறச் சிருங்கத்திற் சஞ்சரிப்பதனல் உத்தராயணமும்-நடுச்சிருங்கத்தி ல்வருவதினல் விசுவமும் உண்டாகின்றன. கிருத்திகையின் முத ற்பாதத்திலே சூரியனிருக்கையில்சந்திரன் விசாகநக்ஷத்திரத்தின் நாலாம்பாகத்திலிருப்பவன் சூரியன் விசாகநக்ஷத்திரத்தின்மூன்றா ம்பாதத்தில் சஞ்சரிக்கும்போது கிருத்திகையின்முதல்பாதத்தில் சந்திரனிருப்பானென்று நிச்சயித்துக் கொள்ளும் இப்படிபட்ட காலந்தான் மகாவிசுவமென்கிற புண்ணியகாலமாம் அப்போது சிரத்தையுள்ள புருஷர் தேவதைகள்-பிதுர்க்கள் இவர்களை யுத் தேசித்து பிராமணர்களுக்குத் தானங்கொடுக்கவேண்டும் இது தான் தானத்தினத்திற்குரிய காலமென்றறிவாய் அக்காலமறிந் து தானங்கொடுப்பவன் மகா புண்ணியஞ்செய்தவனாகிறான்.

## யாககாலம்.

யாககாலங்களறியும்படிச் சொல்லுகிறேன் கேளும்; பகல் இரவு அர்த்தமாசமென்கிற பக்ஷம்-கலை-காஷ்டை-க்ஷணம்-பவுர்ணமாசை-அமாவாசை-சந்திரன் காணப்படும்படியான கினிவாலியென்பதும் சந்திரன் காணப்படாத குருவென்பதுமான அமாவாசையின் பிரிவுகள் பூரணச்சந்திரனுள்ள இராசைஎன்பதுமான பவுர்ணமாசையின் பிரிவுகள்-தபம்-தபசி-யம்மது-மாதவம்-சுக்கிரம்-சுசியென்கிற மாசிமுதலான மாதங்களாலாகிய உத்தராயணம் இருதுக்கள் மூன்று நபம், நபசியம், இஷமஊர்ச்சகம், சகசியம் என்கிற ஆவணிமுதலான மாதங்களாகிய தக்ஷிணாயன இருதுக்கள்மூன்று இக்காலங்களெல்லாம் முக்கியமாக அறியவேண்டிய யாககாலங்களாம்.

கேளும்பார்வதி! முன்பு லோகாலோகமென்னும் ஒருபருவதம்உண்டென்று உனக்குச் சொன்னேனே அதின் நாற்புரங்களிலும்(கர்த்தமப்பிரசாபதியின்) குமாரர்களான சுதன்வா, சங்கபா, என்பவர்களும்; இரண்ணியரோமா-கேதுமான் என்கிற வேறிருவருமானலோகபாலகர் நால்வரிருக்கிறார்கள் இவர்களுக்கெல்லாம்சுகதுக்கங்களும் ராஜதுவேஷாதிகளுமான துன்பங்களொன்றுமில்லை; இன்னும்கேளும் பெண்ணேபார்வதி! அகஸ்திய வீதிக்கிவடக்காயும், அஜவீதிக்குத் தெற்காயும்-வைசுவானர மார்க்கத்திற்கு வெளியிலிருக்கிற மார்க்கம்-பிதுர்யானம்-(பிதுர்யானமென்றால் தக்ஷிணமார்க்கம்) தூமாதிமார்க்கம் அதாவதுமுதலில் தூமம்பிற்பாடு கிரமமாய் இராத்திரி அமரபக்ஷம் தக்ஷிணாயனமாதங்கள்பிதுர்லோகம் ஆகாசம் இவை சந்திரன் எல்லைகளாம்; இவ்வழியிற்போனவர் கர்ம்மலோகானுபவ முடிந்தவுடனே திரும்பிச்சந்திரனைவிட்டு ஆகாசம்-காற்று-புகை-மேகம் - மழைத்தண்ணீர்-விதைகள் இவற்றின்வழியாக ஸ்ரீபுருஷர்களையடைந்து கன்மங்களுக்கேற்ற தேகத்தோடு பிறப்பார்கள்-இதுவே பிதுர்லோக மார்க்கமாம். அங்கே அக்கினிகோத்திரமுடையவர்களாய்மகானுபாவர்களான கிலரிஷிகள் வாசஞ்செய்துக்கொண்டு வேதத்தின் கர்ம்மகாண்டங்களைத் துதித்துக்கொண்டு யாகமுயற்சியைச் செய்வித்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்வுலகத்தையடைய விரும்புவோர்களுக்குத்தான் பிதுர்யானமென்று முன்சொல்லப்பட்ட

துமாதிமார்க்கமுண்டு அவ்வுலகத்திலிருக்கிறபிதுர்க்கள் கர்ம்ம காண்டம் அழிந்துபோகாமலிருக்கும்படி சந்ததிகளினாலும்-எற் பாடுகளினாலும்-தவசிகளினாலும்-வேதாத்தியயனங்களினாலும்-யு கந்தோறும் ஸ்தாபித்துவருவதல்லாமல் முந்தினவர் பிந்தினவர் களுடையவம்சத்திலேயும் பிந்தினவர்முந்தினவர்களுடைய வம்ச த்திலேயும் ஜனித்துகொண்டே இம்மூன்றுலகமும் அழியுங்கா லமாகிய பிரம்மாவின் தினம்வரைக்கும் இருப்பார்கள். மேலும், நாகவீதிக்கு வடக்காயும் சப்தரிஷிகள் வீதிக்குத் தெற்காயு மு ள்ளமார்க்கம் (தேவயானமென்று) சொல்லப்படும். அவ்விடத்தி லே இந்திரியஜயமுள்ளவர்களாய் சித்திபெற்றவர்களாய் நிர்மல ராய் பிரம்மசாரிகளான சிலமகாத்துமாக்களிருக்கின்றார்கள் அவ ர்கள் சந்ததியை வெறுத்திருப்பதினாலேமிருத்து யுவைவென்று நித்தியர்களானார்கள். அந்த எண்பதினாயிரம் இருடிகளும்சூரிய னுடைய வடவண்டைவழியை ஆசிரயித்துப் பிரம்மாவின் ஆயுள் பரியந்தம்யாதொரு துன்பமும் அழிவுமில்லாதவர்களாயிருப்பார் கள்இந்த இருப்பு அமிர்தத்துவமென்று மோக்ஷம்போலே உபசா ரமாகச்சொல்லப்படும். ஏனெனில் உலோபமும் அதனடியான குரோதாதிகளும் ஸ்திரீசம்போகமும்விருப்பமும் வெறுப்புகளுமில் லாமையாலும் கருமசம்பந்தத்தைவிட்டிருக்கிறதினாலும் யோகத் திநின்றும் நழுவாமையினாலும் சத்காதி விஷயங்களிற் குற்றத் தைக் காண்கையினாலும் அவ்விடத்திருப்பவர் பிரமனாயுள்முடியு மளவும் நிலைநிற்பரென்றறியவும். இந்த பிரமாந்தகாலமேபிரமஹ த்திசெய்த பாவத்தின்பயனாக நரகமனுபவிப்பதற்கு ஏற்படுத்தி யகாலமென்றறியும் அந்தகாலத்தில் பூமிமுதல் துருவனிருக்கும் ஸ்தானமளவும் அழிந்துபோய்விடும்.

## பரமபதம்.

சப்தரிஷிகளுக்குமேலே வடபுறத்தில் துருவனிருக்குமிடம் யாதுண்டோ அது திவ்வியமாயும் மகாப்பிரகாசமாயுமிருக்கிற மூ ன்றாவது ஆகாசஸ்தானம்அது விராட்புருஷனுக்குஇருதயநாடி ஸ்தானமானதுபற்றி அங்கே விஷ்ணு எழுந்தருளி யிருக்கிறரா கையால்அதற்கு விஷ்ணுபதமென்று பேருண்டாயிருக்கிறது அ துகர்மாதிதோஷங்களைக்களித்துப் பரமாத்துமாவினிடத்தேமன தை ஸ்திரப்படுத்தின யோகிகளுக்குப் புண்ணிய பாவ கருமங்க

ளெல்லாம் க்ஷபித்தபோது அடையத்தக்க ஸ்தானமாயிருக்கின்றது. யோகிகள் பாபபுண்ணியங்கள் ஒழிந்ததனாலேசுகதுக்கானுபவரூப சம்சாரஹேது இல்லாதவர்களாய் எந்தஉத்தமமான விடத்திலேசென்று ஆனந்தத்தோடிருப்பார்களோ அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதம்லோகசாக்ஷிகளான தருமன் துருவன் முதலிய மகாத்துமாக்கள் எங்கேயிருந்துக்கொண்டு அந்த ஸ்ரீவிஷ்ணுவினுடைய அயிசுவரியத்துக்குச் சமானமான அயிசுவரியமாகிய இந்திரியஜயத்தினாலே சிர்ப்பட்டிருக்கிற யோகப்பிரபாவமுள்ளவர்களாய் விளங்குகிறார்களோ அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடையபரமபதமாம் சராசரங்களெல்லாம் எங்கே நெடுக்காகவுங் குறுக்காகவுங் கோர்க்கப்பட்டவையாய் எங்கேயிருப்பனவாய் எங்கே யினியுண்டாவனவாயிருக்குமோ அதுதான் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய பரமபதமாம் எதுஆகாசத்திலே பரவிநிற்கிற சூரியனைப்போல மகாத்துமாக்களுக்குச் சுத்த விவேகஞானத்தினாலே பிரத்தியக்ஷமாய்விளங்குமோ அதுதான் ஸ்ரீவிஷ்ணுவினுடைய பரமபதமாம் அங்கேசென்றவர்கள் மறுபடிசம்சார சம்மந்தமடையாமல் பிரம்மாவோடுகூட மோக்ஷமடைவார்களாகையால் அதுகிரமமூர்த்தி தானமானதுபற்றி மோக்ஷஸ்தானமான பரமதமென்றுசொல்லப்பட்டது. அது லோகாதாரமான விதம்சொல்லுகிறேன்கேளும், மகாதேஜசுகள் துருவனானவன்அங்கே நடுக்கூச்சம்போலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறானன்றோஅந்தத்துருவனிடத்திலேசகல கிரகநட்சத்திரங்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கிரகநக்ஷத்திரங்களில் மேகங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன. மேகங்களிலே மழையேர்படுத்தப்பட்டிருக்கின்றன மழையானது சகல ஔஷதிகளின்மூலமாய்ச் சிருட்டிக்குக்காரணமாயும் தேவதைகள்முதலானோருக்குப் போஷணமாயுமிருக்கின்றது. அதனாலே நெய்முதலிய அவிசொரிகிற ஆதிமூலமாகத் தேவர்கள் திருப்தியடைந்தவர்களாய் லோகசிருட்டிக்கும் ஸ்திதிக்கும் காரணமாகின்றார்கள். இந்தப்படி இந்த விஷ்ணுபதமென்கிற பரிசுத்தமான மூன்றும் ஸ்தானமானது மூன்றுலகங்களுக்கும் ஆதாரமாயும் விருத்திக்கு ஹேதுவாயுமிருக்கின்றது.

## கங்கைப் பிறப்பு.

கேளும் பார்வதி! மகாபிரபுவான ஸ்ரீ ஹரிபகவானுடைய சிம்சுமார மென்கிற ஜந்துபோலேதோன்றுகிற நட்சத்திரகூட்டமாகிய ரூபம் யாதொன்றுண்டோ அதின் வாலில்துருவனிருக்கிறான் அந்தத் துருவன் அங்கிருந்து சுற்றிக்கொண்டு சந்திரசூரியாதி கிரகங்களையெல்லாஞ் சுற்றித்திருப்ப, அவைகளும் சக்கரம்போல அவனைச் சுற்றித்திரும்புகின்றன. சந்திரசூரியர்களும் மற்றுமுள்ள கிரகங்களும் நட்சத்திரங்களும் காற்றின்வடிவான கயிறுகளினாலே கட்டப்பட்டுத் துருவனிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆகாயத்திலிருக்கும் நட்சத்திரக்கூட்டமெல்லாம் சிம்சுமாரமென்கிற ஜந்துவைப்போல காணப்படுகிறதென்றேனே, அதன் இருதயத்தில் சகல தேஜோலோகங்களும் ஆதாரபூதனான ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளி யிருக்கிறான். உத்தானபாதனுடைய புத்திரனான துருவன் அந்தலோகநாதனை யாராதித்துநட்சத்திரமயமான அந்தச் சிம்சுமாரத்தின் வாலினிடத்திலே யிருக்கப்பெற்றான். அந்தச் சிம்சுமாரத்திற்கு ஆதாரம்ஸ்ரீயப்பதி, அந்தச் சிம்சுமாரமோ துருவனுக்காதாரம், அந்தத்துருவன் சூரியனுக்காதாரம், அந்தச்சூரியனோ தேவாசுர மனுஷ்யாதி சகலத்துக்குமாதாரமாம், சூரியன் சகலலோகத்திற்கும் ஆதாரமான காரணஞ்சொல்லுகிறேன். பார்வதி! நீ உன்னிப்பாய்கேளும், சூரியன் தான் ரசவத்தானசலங்களை எட்டுமாதங்களினாலே இழுத்து திரும்பவும் வருஷிக்க, அம்மழையினால் சகலஜந்துக்களும் உபயோகமான உணவுகள் உண்டாகின்றன. அவ்வருஷத்தினாலேதான் சகல ஜகத்துமுண்டாகிவளர்கின்றன; இன்னமும் அதின் விவரஞ் சொல்லுகிறேன்கேளும், சூரியன் உக்கிரமான தன் கிரணங்களினால் லோகத்திலிருந்து தண்ணீரை ஆகர்ஷித்து சந்திரனிடத்திலேபெய்ய, அந்தச்சந்திரனும் வாயுநாடிமயங்களான வழிகளினாலே புகையும் நெருப்பும் காற்றுமானவடிவுள்ள மேகங்களிலேவிட, அந்த மேகங்களி னின்றும் ஜலமானது உலகத்தில் விழுகின்றது. இந்த மேகங்களினின்றும் தண்ணீர் நழுவி விழாமையினாலே அம்மேகங்களுக்கு அப்பிரபங்களென்று பெயர்வந்தது, ஆனாலும், காற்றினால் அம்மேகங்கள் அலைக்கப்பட்ட காலத்தினாலுண்டான பரிபாகத்தினால் அந்தத் தண்ணீர் நிர்மலமாகிவிழுகின்

௭௩. ஆறுகளிலிருக்கிறஜலம் சமுத்திரங்களிலுள்ள ஜலம் பூமியிலுண்டாகிற ஜலம் பிராணிகளாலுண்டாகிற ஜலம் ஆகிய நால்வகைஜலத்தையும் கவர்ந்துதான், சூரியன்வருஷிக்கிறான். அன்றியும், ஆகாச கங்கையின் ஜலத்தைத் தன்கிரணங்களாலேகொண்டுமேகங்களிற் சேர்க்காமலேவருஷிப்பதுமுண்டு அந்த பரிசுத்த தீர்த்தம் படுவதினாலேமனிதன் பாவந்தீர்ந்து நரகமடைவதில்லை; அந்த ஸ்னானம் திவ்வியஸ்னானமென்று சொல்லப்படும். ஓபார்வதி! சூரியன் காணப்பட்டுக்கொண்டே யிருக்கையில் எந்த நீர் மேகமின்றி ஆகாசத்தில் நின்றுவிழுகின்றதோ அதுதான் ஆகாசகங்காசலமென்று அறியும். அன்றியும் கிர்த்திகைமுதலானஒற்றைப்பட்ட நட்சத்திரங்களாலே சூரியன் விளங்கிக்கொண்டேயிருக்க ஆகாசத்தில்நின்றும் விழுகின்றதீர்த்தமானது திக்கஜங்களினாலே வருஷிக்கப்படுகிறஆகாசகங்காஜலமென்றறியவும் ரோகணிமுதலான இரட்டைப்பட்ட நக்ஷத்திரங்களாலே சூரியன்பிரகாசிக்கையில் மேகமில்லாமல் வானத்தில்நின்றும் விழுகின்ற தண்ணீரைசூரியன்பெய்யும் ஆகாசகங்காஜலலென்றறியவும் எந்த தண்ணீரானது மேகங்களினாலேவருஷிக்கப்படுகின்றதோ அது பிராணிகளின் பிழைப்புக்காக தாபரங்களைப்போஷிக்கும்அமுதமென்று சொல்லப்படும். இவ்விதமாக மழையினாலே ஒஷதிகள் பயன்கொடுக்கவும போஷிக்கப்பட்டனவாகி நிற்க; அவைகளைக் கொண்டு சாஸ்திரக்கண்களையுடைய மனிதர் வேதவிதிப்படி பலவகைப்பட்ட யக்கியங்களைச்செய்து தேவதைகளைத்திருப்திபண்ணுகிறார்கள், இவ்விதமாய்யாகங்களும் வேதங்களும் பிராமணாதியவர்ணங்களும் தேவதைகளும் பசுபக்ஷியாதிகளுமான இந்தஉலகமெல்லாம் மழையினாலே விளங்கப்பட்டுவருகின்றன; அன்னபானாதிகட்கு மழையேஆதாரம். மழைபெய்வதற்குசூரியனே ஆதாரம்அச்சூரியனுக்கு ஆதாரமானவன் துருவன் அந்த துருவனுக்கு ஆதார சிம்சுமாரசக்கரம் அச்சக்கரத்திற்கு ஆதாரம்ஸ்ரீமந்நாராயணன் இப்படி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே அந்த சிம்சுமாரச்சக்கரத்தின் இருதயத்திலிருந்துக்கொண்டு சகலப்பிராணிகளும் உற்ஜீவிக்கும்படி தாங்கிக்கொண்டிருக்கிறார்.

## ஆதித்தர் பன்னிரண்டுபேரும் அவர்களுக்குச் சகாயமாயிருப்பவர்களுடைய நாமதேயங்களைச் சொல்லப்பட்டது.

கேளும் பார்வதி! சூரியன்சஞ்சரிக்கிற தக்ஷிணாயன உத்தாராயண எல்லைகளின் நடுவாகிய கிராந்திவிருத்தங்கள் நூற்றெண்பத்துமூன்றுளது அந்தமண்டலங்களிலேதான் சூரியன்உத்தாராயணத்தில் ஏறுவதும் தக்ஷிணாயனத்தில் இறங்குவதுமான முந்நூற்றறுபத்தாறு கதிகளினாலே ஒருவருஷத்தைக் கழிக்கிறான், அந்தச்சூரியரதமானது சூரியர்களாலும்-ரிஷிகளாலும்-கந்திருவராலும்-அச்சரசுக்களாலும்-இயக்கர்களாலும் - சர்ப்பங்களினாலும்-ராக்ஷசர்களினாலும்-ஏற்பட்டிருக்கும். இப்படி இவ்வேழுகணங்களும் ஒவ்வொருமாதமும் வரும் விதஞ்சொல்லுகிறேன்.

சித்திரைமாதப் பிரவேச ரதத்தில் தாதாஎன்கிற சூரியனும் கிருதஸ்தலையென்கிற அச்சரசும்-புலஸ்தியர் யென்கிற ரிஷியும்-வாசுகியென்கிற சர்ப்பமும் - ரதமிருத்துவென்கிற இயச்சனும்-ஹேதியென்கிற ராக்ஷசனும்-தும்புருவென்கிற கந்திருவனும்-வசித்து நடத்துவார்கள்.

வைகாசிமாதத்தில்அயர்மாவென்கிற சூரியனும்-புலகன்யென்னும்ரிஷியும்-தஞ்சிதஸ்தலை யென்கிற அச்சரசும் - மாதௌசாயென்கிற யக்ஷனும்-கச்சவீரனென்கிற சர்ப்பமும் - நாரதனென்னுங் கந்திருவனும்-பிரஹேதிஎன்கிற ராக்ஷசனும் வசிப்பார்கள்.

ஆனிமாதத்தில் மித்திரனென்கிற சூரியனும் - அத்திரிரிஷி தக்ஷகசர்ப்பம்-யவுருஷேயராக்ஷசன்,மேனகாச்சரதி - ஹாஹூகந்திருவன்-ரதஸ்வயன யக்ஷன் இவ்வேழுபேரும் இருந்து நடத்துவார்கள்.

ஆடிமாதத்தில் வருணனென்னும் சூரியனும்-வசிஷ்டரிஷி சகஜனிய அச்சரசு-ஹூஹூ-கந்திருவன்-நாகமென்னும் சர்ப்பம் ரதராக்ஷதன்-சித்திரயக்ஷன் இவ்வேழுபேரும் வசிக்கிறார்கள்.

ஆவணிமாதத்தில் இந்திரனென்னுஞ் சூரியனும்-விசுவாவசு கந்திருவனும்-சுரோதாவென்னும்யக்ஷனும்-எலாபுத்திரனென்

னும்சர்ப்பமும்-அங்கிரசுயென்கிறரிஷியும் பிரமலோசையென்னு ம் அச்சரசும்-சர்ப்பியென்னும் ராக்ஷசனும் - யிருந்து நடத்து வார்சள்.

புரட்டாசிமாதத்தில் விவசுவான்யென்னும் சூரியனும்-பிருகுமகாரிஷி-அனுமிலோசா அச்சரசு-சங்கபால சர்ப்பம்-வியரக்கிராக்ஷசன்-உக்கிரசேனகந்திருவன்-ஆபூரணயக்ஷன் இவர்கள் யிருந்து நடத்துவார்கள்.

ஐப்பிசிமாதத்தில் பூஷாஎன்கிறசூரியனும்-சுருசுஎன்னுங்கந்திருவன்-வாதராக்ஷசன்-தனஞ்சயசர்ப்பம்-கவுதமரிஷி-கிருதாசி என்னும் அச்சரசு-சுவேணயக்ஷன் இவர்கள் வாசமாயிருப்பார்கள்.

கார்த்திகைமாதத்தில் பர்ச்சனியென்னுஞ்சூரியனும்-வசுவாவசுவென்கிற கந்திருவன்-பரத்துவாசரிஷி-ஐராவதசர்ப்பம்-விசுவாசி அச்சரசு-ஜெனஜித்துயக்ஷன்-ஆபராக்ஷசன்-ஆகிய இவர்கள் வாசஞ்செய்வார்கள்.

மார்க்கழிமாதத்தில் அத்சனென்கிற சூரியனும்-காசிபரிஷி தார்க்ஷய யக்ஷன்-மகாபத்தும சர்ப்பம்-வித்தியுத்து ராக்ஷசன்-சித்திரசேன கந்திருவன்-ஊர்வசியென்கிற அச்சரசு-ஆகிய இவர்கள் இருப்பார்கள்.

தைமாதத்தில் பகன்என்னும் சூரியன்-கிரதுவென்கிற ரிஷி ஊக்ஷயுவென்கிற கந்திருவன்-ஸ்பூர்ஜராக்ஷசன் - கார்க்கோடக சர்ப்பம்-அரிஷ்டநேமியென்கிற-யக்ஷன் பூர்வசித்தியென்னும்அச்சரசு-இவர்கள் யிருப்பார்கள்.

மாசிமாதத்தில் துவஷ்டாயென்கிற சூரியனும்-ஜமதக்கினிரிஷி-திலோர்த்தமையென்னும்அச்சரசு-கம்பளசர்ப்பம்-பிரம்மாபேதராக்ஷசன் இருதசித்துயக்ஷன்-திருதராஷ்டிரகந்திருவன்-இவ்வேழுபேரும் வசிக்கிறர்கள்.

பங்குனிமாதத்தில் விஷ்ணுயென்கிற சூரியனும்-விசுவாமித்திரரிஷி-ரம்பையென்னும் அச்சரசு-சூரியவாச்சசுஎன்கிறகந்திருவன்-சத்தியசித்துயென்கிற யக்ஷன்-அசுவதாரனென்னும் சர்ப்பம் யக்கியாபேதராக்ஷசன் இவ்வேழுபேரும் வாசஞ்செய்வார்கள்.

கேட்டாயோ கௌரியே! இப்படி ஒவ்வொரு மாதத்திற்கு எவ்வேழுபேராக இவர்களெல்லாம் ஸ்ரீவிஷ்ணுசக்தியினலேவியா

பிக்கப்பட்டு லோகப்பிரகாசநிமித்தியமாய் சூரியரதத்தில் இருக்கின்றார்கள். இவர்களுடைய செய்கைகளைச்சொல்லுகிறேன் கேளும்? அந்தமண்டலத்தில் பிரகாசிக்கிற சூரியனுக்குத் தேஜசுவிருத்தியாகும்படி ரிஷிகள் துதிக்கிறார்கள், கந்திருவர்கானஞ்செய்கிறார்கள், அப்சரப்பெண்கள் ஆடுகிறார்கள், இராக்ஷதர் சூரியன்பின் செல்லுகின்றார்கள், சர்ப்பங்கள் சுமக்கின்றன, இயக்கர் கடிவாளமுதலானவற்றைத் தாங்கிப்பிடித்துக்கொண்டிருக்கிறார்கள், இவர்களல்லாமல் வால்கில்லியர்பென்கிற மகாரிஷிகள் எப்போதும் சூரியனைச்சூழ்ந்து உபாசித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படி சூரியமண்டலத்திலே வாசஞ்செய்கிற எழுகணங்களும்அந்தந்தச் சமயங்களிலே பனி-வெப்பம்-தண்ணீர் இவைகளைப் பெய்வதற்குக் காரணமாக இருக்கின்றனர்களென் றறியக்கடவை.

---

## கிரியா விசேடம்.

இப்படி சிவபெருமான் அருளிச்செய்ததைக்கேட்டுஎமதன்னையாகிய பார்வதியம்மை வினவுகின்றாள்? ஓசுவாமி! சூரியமண்டலத்தில் பனி-வெப்பம்-மழை இவற்றிற்குக் காரணமாக எழுகணங்களிருக்கின்றனவென்றும் அந்தக் கந்திருவர்-யக்ஷர்-ராக்ஷசர்-முனிவர்-வால்கில்லியர்-அச்சரசுகள்-நாகர் - இவர்களுடைய தொழில் இன்னின்னதென்றும் தேவரீர் அருளிச் செய்ததைக் கேட்டறிந்தேன். ஆனல் சூரியனுடையதொழில்எதுவோ அதை அருளிச்செய்யவில்லை. அந்தக்கணங்களாலே பனி-வெப்பம் - தண்ணீர் இவைகள் வருஷிக்குமானல் சூரியனுக்குக் காரியமென்ன; சூரியனலே மழையுண்டாகிறதென்று முன்ன மருளிச்செய்தீரே; அன்றியும் ஜனங்கள் சூரியன்உதயமாகி உச்சியில்வந்து அஸ்தமிக்கிறனென்று சொல்லுகிறார்களே. இப்படிப்பட்ட செய்கைகள் இந்த எழுகணங்களும் பொதுவாகவே யிருக்குமானல் சூரியனைச் சிறப்பாய்ச்சொல்லுவதென்ன? இந்தவிவரம்அருளிச்செய்யவேண்டுமென்றுக்கேட்கச் சிவபெருமான் அருளிச்செய்கின்றார். ஓபார்வதி! நீகேட்ட விஷயங்களுக்குச் சமாதானஞ் சொல்லுகின்றேன்கேளும்? அந்த மண்டலத்தில் வாசஞ்செய்கிற ஆதித்தன் முதலான கணங்களேழிலும் நடுமயமாய்நின்ற ஆதித்த

னே மூலபுருஷனாகும். ஏனெனில் இருக்கு-யஜுர்-சாமமென்கிற மூன்றுவேத வடிவாகிவிசேஷமாகிய ஸ்ரீவிஷ்ணுசக்தியே சூரியரூபமாகிப் பிரகாசித்துக்கொண்டு காய்வதுமல்லாமல், உலகத்தின் பாவகிருத்தியங்களைப் போக்கிக்கொண்டிருக்கின்றனவென்றறிவாய் சகலலோகரக்ஷகனாய். ஸ்திதியைநடத்துகிற ஸ்ரீவிஷ்ணுமூர்த்தியின் சத்தியேஇருக்கு-யஜுர்சாமமென்கிற மூன்றுவேதஸ்ரூபமாகிய சூரியனுடைய உள்ளேயிருக்கின்றது. அந்தந்தமாதத்தில்வருகிற சூரியனிடத்திலே திரிவேதமயமான ஸ்ரீவிஷ்ணு சத்தியானது பிரவேசித்துவிளங்குகிறது; விடியற்காலத்திலே இருக்குகளும் மத்தியானகாலத்திலே யசுரர்களும் சாயங்காலத்திலே சாமங்களும் சூரியசரீரகனைச் சூரியனுக்குள்ளே விளங்குகிற ஸ்ரீவிஷ்ணுவை மூன்றுவேதங்களும் துதிக்கின்றன இந்த இருக்குமுதலிய மூன்றுவேதங்களும் ஸ்ரீவிஷ்ணுவுக்குச் சரீரமாயிருக்கின்றமையால் விஷ்ணுசக்தியானது சூரியனுக்குள்ளே மாத்திரமன்று பிரம்மாதிகளுக்குள்ளும் பிரவேசித்துஅந்தக் காரியங்களை நடத்துகின்றது. கேளும் பார்வதி! சிருஷ்டியாதியில் இருக்குவேதமயமான பிரம்மாவாகவும் திதியிலே யசுர்வேதமயமான சிவமாகவும் ஸ்ரீமந்நாராயணனுடைய சக்தியானது பிரகாசிக்கின்றது. ஆதலால், என்சம்பந்தமான சாமத்தொனியானது மற்றவேதங்களோதுகையி லோதக்கூடாமையாலே அது அசுத்தமான தேசகாலாதிகளில் சம்பந்தப்பட்டதை பரிசுத்த வஸ்துகளைப்போல் மிகவும் சுத்தமென்றெண்ணப்படுகிறது. இவ்வாறுவேதத்திரயஸ்ரூபமான ஸ்ரீவிஷ்ணுவினுடைய சுத்தசாத்விகசத்தியானது தன் சரீரமாயிருக்கிறஏழுகணங்களுக்குள்ளே சூரியனிடத்திலே விசேஷித்துப் பிரவேசித்திருக்கிறதினாலே சூரியன்விசேஷமாய்ப் பிரகாசித்துக்கொண்டு லோகத்திலுண்டான அந்தகாரங்களையெல்லாம் நாசஞ்செய்கிறான்.

இப்படிக்கு வேதமயமான ஸ்ரீவிஷ்ணுசக்தியின் அனுப்பிரவேசாதிசயத்தினாலே சூரியன்பிரதானமானதைப்பற்றியே அச்சூரியனை ரிஷிகள் துதித்துக்கொண்டும் கந்திருவர் பாடிக்கொண்டும் அரம்பையர் ஆட்டத்தினால் களிப்பித்துக்கொண்டும்இராக்கதர் பின்றொடர்ந்துக்கொண்டும் நாகர்சுமந்துக்கொண்டும் இயக்கர்கயிற்றைப்பிடிப்பதினால் சேவித்துக்கொண்டும் வால்கில்லியர் உபாசித்துக்கொண்டும்வருகிறார்கள், அந்தமண்டலத்திலேசக்தி

சொருபத்தைத் தரித்திருக்கிற ஸ்ரீவிஷ்ணுவானவர் சப்தகணங் களைப்போலதோன்றுவதுமில்லை அழிவதுமில்லை அந்தசத்தகண மும் ஸ்ரீமகாவிஷ்ணுவின் மாயாசக்திபெற்ற அனுப்பிரவேச வித ம் யெப்படியென்றால், ஒருஸ்தம்பத்திலிருக்கிற கண்ணாடிக்குச் சமீ பத்தில் எவனெவன்வருகின்றானோ அவனவனெல்லாம் தன்னு டையநிழலைஅக்கண்ணாடியிற் காணும்படிஅதன் காந்தியையடை வதுபோலே அம்மண்டலத்திலே ஸ்திரமாயிருக்கிற விஷ்ணு சக் தியைஅங்கே மாதந்தோறும் வருகிற சூரியர்அடைகின்றார். அப் படிப்பட்ட சூரியன்-பிதுர்க்கள்-தேவதைகள்-மனுஷியர் முதலா னோரைத் திருப்திசெய்துக்கொண்டு இராப்பகலுக்குக் காரண மாய்ச் சுற்றிக்கொண்டிருக்கிறான். பிதுர்க்கள் முதலானோருக் குத்திருப்திசெய்யும் விதமெப்படியென்றால்; சூரியகிரணப்பிரபா வத்தினாலே நிறைக்கப்பட்டுஅமிர்தமயமாயுமிருக்கிற சந்திரனைக் கிருஷ்ணபக்ஷத்திலே அக்கினிமுதலான தேவதைகள் ஒவ்வொ ருகலையாகப் பானஞ்செய்கிறார்கள். இப்படி சதுர்த்தசிவரையில் தேவதைகள் பானஞ்செய்து மிகுந்திருக்கிற யிரண்டு கலைகளுள் ஒன்றை அமாவாசையில் பிதுர்க்கள் பானஞ்செய்கிறார்கள். இது தான் அவர்கள் திருப்தியடையும் விதமென்றறிவாய். பூமியிலிரு ந்து தன்கிரணங்களினாலே இழுக்கப்படும ரசத்தை மருபடியும் மழையாகப் பொழிந்து பயிர்களை விர்த்திசெய்து மனுஷியாதி களைத் திருப்திசெய்கிறது சூரியனென்று முன்னமே தெரிவித்தி ருக்கின்றேனல்லவா? கேளும்பார்வதி! இவ்விதமாய்ச் சூரியபக வான் தேவர்களுக்குப் பக்ஷத்திருப்தியும் பிதுர்களுக்கு மாசதிரு ப்தியும் மனுஷீயாதிகளுக்கு தினத்திருப்தியும் செய்துக்கொண்டு விளங்குகின்றான்.

## சந்திரமண்டலச் சிறப்பு.

சிவபெருமான் அருளிச்செய்கிறார் கேளும்! பெண்ணேபார் வதி? சந்திரனுடைய ரதமானதுமூன்றுசக்கரங்களை யுடையதாய் முல்லைப்பூவர்னங்களான பத்துக்குதிரைகள் இடப்பக்கம் வலப் பக்கங்களில் கட்டப்பெற்றதாயிருக்கின்றது. துருவனை யாதார மாகக்கொண்டு வேகமுள்ளதாயுமிருக்கின்றது. அத்தேரினாலே சந்திரன் நாகவீதிமுதலான வீதிகளிலடைந்திருக்கும் நக்ஷத்தி

ரங்களிலே சஞ்சரித்துவருகிறான் சூரியக்கிரணங்களுக்கு யெப்படி யோ அப்படியே அந்தச் சந்திரனுக்கும் உதயாதி காலங்களிலே குறைவுவளர்ச்சி ஆகியமுறையுண்டு. சூரியரதத்தின் அசுவங்களை ப்போலே ஜலத்திற்பிறந்த அந்தச் சந்திரரதத்தின் அசுவங்களும் கல்பத்தின் ஆதியிலே ஒரேதரம் ரதத்திற் கட்டப்பட்டவைகளா ய் கல்பத்தின் முடிவுவரைக்கும் வசித்துக்கொண்டிருக்கின்றன தேவதைகளாலே பானஞ்செய்யப்படுவதால் தினத்திற்கொருக லையாகக்குறையப்பட்டு முடிவில் ஒரேகலையோடு நிற்கின்றனன். அதனை குறைமதியமென்றும் தேய்பிறையென்றும் உலகத்தார் சொல்லுவார்கள் ஒளிமழுங்கி யொரேகலையோடுநின்ற சந்திரனைச் சூரியனானவன் தனதுகிரணங்கள் ஒவ்வொன்றினாலும் ஒவ்வொ ருகலையாக முன்புதேவர்கள் பானம்பண்ணிய முறைப்படியே வளரச்செய்கின்றமையால் ஒருபட்சமென்னும் பதினைந்தாவது தினத்தில் பழையபடிசோடசகலையை யடைகின்றான் அன்றயதி னத்தில் பூரணச்சந்திரனென்றும் பவுர்ன்னமியென்றும் உலகத் தார்சொல்லுவார்கள். உணர்ந்தனையோ உமையவளே;

இப்படி அரைமாதத்திலே சந்திரனிடத்தில் நிறைக்கப்படு கிறஅமிர்தத்தைத் தேவதைகள் பானஞ்செய்கிறார்கள் ஏனெனில் அவர்கள் அமிர்தத்தையே உண்பவர்களாகையா லென்றறியவும்; அந்தச் சந்திரனைப்பானம்பண்ணுகிற தேவர்கள் முப்பத்துமூன் றாயிரத்தி முந்நூற்றுமுப்பத்து மூவரென்றறியக்கடவாய். இவ் வாறுதேவர்களாலே பானஞ்செய்யப்பட்டு இரண்டுகலைகள் மிகு ந்தவனாய் சந்திரன் சூரியகிரணங்களில் மறைவதினாலே சூரியம ண்டலத்தில் பிரவேசித்தவன்போலாகிஅரையென்கிற கிரகணத் தில் வாசஞ்செய்கிறான்; அதனாலே (அந்தநாளை) அமாவாசையெ ன்னப்படும் அந்தநாளில் இராப்பகல்களில் சந்திரன்முந்தித் தண் ணீரிலும் பிந்திக்கொடி முதலானவைகளிலிருந்து பின்பு முறை யேசூரியனையடைகிறான்; ஆனதினாலே, அந்தநாளில் எவனாகிலும் கொடிமுதலியவைகளைச் சேதித்தாலும் இலையை உதிர்த்தாலும் பிரம்மஹத்திசெய்தபாவத்தையடைவான். காலரூபமான பதி னைந்தாம் பங்கினாலே சிறுதுமிகுந்திருக்கிற அமாவாசையின் அ பரான்னத்திலே குறைந்தவனான அந்தச் சந்திரனைப் பிதுர்க்கள் அமிர்தபானத்திற்காக உபாசித்து அமிர்தமயமான அந்தப்பதி

னைந்தாங் கலையைப்பானஞ்செய்கிறார்கள்-சவுமிய ரென்னும்-பர்ஹிதரென்றும்-அக்கினிஷ்வாத்தரென்றும்-மூன்று பிரிவாயிருக்கிறபிதுர்க்கள் அமாவாசையிலே சந்திரகிரணத்தினின்றும்ஒழுகுகிற அமிர்தத்தையுண்டு மேன்மையான மாசத்திருப்தியடைகிறார்கள். இவ்விதமாகச் சந்திரன் அமிர்தமயங்களாயும் குளிர்ச்சியுள்ளவையாயுமிருக்கிற ஜல பரமாணுக்களாலே சுக்கிலபக்ஷத்தில் பிதுர்க்களையும் புல்-பூண்டு-கொடி-செடிமுதலானவைகளை யுண்டாக்குவதினாலேயும், தனது கலைகளாகிய ஒளியினால் உலகமுழுதும் பிரகாசிக்கச்செய்வதினாலேயும், மனுஷ்யர் மிருகம் பட்சி முதலானவைகளையும் திருப்திசெய்துக்கொண்டு வருகின்றான்.

---

## புதன் முதலிய கிரக ரதம்.

இந்தச் சந்திரன் புத்திரனான புதனுடைய ரதமானது வாயுவு, அக்கினி இவைகளினாலே பூமியிற்பிறந்ததாய், பொன்னிறமான எட்டுக்குதிரைகளோடுகூடிவரும்என்கிற முன்தாங்கும் வயமும் அனுகர்ஷமென்கிற அடித்தாங்குமவயவமும், உபாசங்கமென்கிற உட்காருமிடமும், பாதாகை முதலான மற்றையவயவமு முடைத்தாகிவிளங்குகின்றது, சுக்கிரனுடைய ரதமும் இப்படியேஅவயவாலங்காரங்களைப் பெற்றதாய் எட்டுக்குதிரைகள் கட்டினதாய் மிகப்பெரிதாய் பொன்மயமாய்விளங்கும். அங்காரகனுடையரதமும்பெரிதாய் அக்கினியிற்பிறந்தவர்களாய் பதுமராகம்போல்சிவந்திருக்கிற எட்டுக்குரைகள்கட்டப்பெற்றதாய் பொன்மயமாகிவிளங்குகிற பகரிய ரதத்திலேயிருந்துக்கொண்டு பிரகஸ்பதியானவர் ஒவ்வொருராசியில் ஒவ்வொருவருஷமிருக்கிறார். ஆகாசத்திற்பிறந்த சித்திரவர்ணமான ரதத்திலேறிக்கொண்டு சனியானவன் மெல்லமெல்லசஞ்சரிக்கிறான். இராகுவின் தேரானதுகிஞ்சித்துவெண்ணிறமுடையதாய் வண்டின்நிறமுள்ள எட்டுக்குதிரைகள் கட்டப்பெற்றதாயிருக்கின்றது, இந்தராகுவானவன் இப்படிப்பட்டரதத்தோடு சூரியனுக்குமேலே அந்தகாரமான மூன்றாம்ஸ்தானத்திற் சஞ்சரித்துக்கொண்டு பர்வகாலங்களிலேஅங்கிருந்து திரும்பிப் பூமிமுதலானவைகளின் சாயையிலேபிரவேசித்துச் சூரியசந்திரர்களை மறைக்கிறதினால்அந்ததினத்தை முறைப்படி சூரியக்கிரஹணமென்றும், சந்திரக்கிரஹணமென்று முலகத்

தார்சொல்லுவார்கள். அன்றியும், இராப்பகல்விளங்கும் கடவுள ரென்ற காட்சிப்பிரமாணத்தாலும், உலகினர் யாவரும் அன்றை யதினம் கிரஹணம்பிடித்ததுமுதல் சர்ப்பங்கள் விடுகிறவரையில் அன்னபானாதிகளை நீக்கினவர்களாய் அதர்வண வேதவாக்கியங்க ளையோதியிருந்து முடிவில் ஆழியில்மூழ்கி சிரவணஞ்செய்து மீ ண்டிரோ கடவுளரேயென்று வேண்டுதலுடையவராய் விவகாரத் தையடைவார், அப்படியே கேது ரதத்திற்கட்டியிருக்கிறகுதிரை கள்எட்டு. அவை சத்தைக்கொளுத்தினபுகை வர்ணமாயும்அரக் கின் ரசத்தின்வர்ணமுடையவைகளாயுமிருக்கும் இக்கேதுவும்ரா குவைப்போலவே மேற்படி கிரஹணகாரணமாம்.

இவ்விதமாய் சூரியன்முதலான நவக்கிரகங்களுடைய ரதங் களிருக்கும்விதத்தை உனக்குத் தெரியச்சொன்னேன் இந்தக்கிர கநக்ஷத்திரங்களுடைய மண்டலங்களெல்லாம் வாயுருபமான கயி றுகளினாலே துருவனிடத்திலேகட்டப்பட்டுத் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கிற சாரத்தின்படி சுற்றிக்கொண்டிருக்கின்றது. ஆ காசத்திலுண்டான மண்டலங்களத்தனையும் காற்றுக் கயிறுகளி னாலேகட்டப்பட்டுக் கிழக்கு மேற்குகள் தாங்கள் சுற்றிக்கொண் டே அச்செகத்தையும் சுற்றுவிப்பதுபோல் தாங்கள் சுற்றிக்கொ ண்டு தங்களுக்குஆதாரமான துருவனையும்சுற்றிவிக்கின்றன. அ ன்றியும் இந்தக் கிரகமுதலானவையெல்லாம் காற்றின் வடிவான சக்கரத்தினாலே தினந்தோறும்ஏவப்பட்டு கொள்ளிக்கட்டையா னது சக்கரம்போலக்காணப்பட்டுச் சுழல்வதுபோலே சுழன்றுக் கொண்டிருக்கின்றன. ஆதலால், அந்தக்காற்றுக்குப் பிரவாமமெ ன்கிறபேர் உண்டாயிருக்கின்றது. இவைநிற்க, முன்பு நான் சிம்சு மாராக்கிருதியான துருவாதார ரூபமொன்றுசொன்னேனே அதி லிருக்கும்விதத்தை நன்றாய்க்கேளும்! அதாவது, அந்தஸ்வரூபத் தைக்காண்கிறவன், அன்றுபகல்செய்த பாவத்தினின்றும்விடுபடு வதுமன்றி அந்தச் சிம்சுமாரசக்கரத்தில் எத்தனைநட்சத்திரங்கள் சேர்ந்திருக்கின்றனவோ அத்தனைவருஷங்களினளவும் சுகமாகச் சீவித்திருப்பான் நட்சத்திரரூபிகளான சில தேவதைகள் அதன் அவயவமாகயிருப்பார்கள். அந்த விவரஞ்சொல்லுகிறேன், அந்த சிம்சுமாரத்திற்கு உத்தபாதன் மேல்வாயிலிலும், யக்கியன் கீழ் வாயிலிலும், தருமன் சிரத்திலும், நாராயணன் இருதயத்திலும்,

அசுவினி தேவதைகள் கால்களிலும், வருணனும் அபர்மாவும் பின்தொடைகளிலும்-சம்வச்யாம் குறியிலும்-மித்திரன் அபான த்திலும்-அக்கினியும்-மகேந்திரனும்-காசிபனும் துருவனும் வாலிலும் இருக்கின்றார்கள். இந்த அக்கினிமுதலான நான்கு நக்ஷத்திரங்களும் மற்ற அவயங்களிலுள்ள நக்ஷத்திரங்களைப்போலே அஸ்தமிக்காமல் எப்போதுங்காணப்பட்டுக்கொண்டேயிருக்கும்.

ஓ பார்வதி! நீ கேட்டபடி பூமியின் இருப்பும் அதில்பர்வதங்கள்-சமுத்திரங்கள்-தீவுகள் - வருஷங்கள் முதலானவைகளின் சிறப்பும் ஆகாசத்திலிருக்கும் கிரகநக்ஷத்திராதிகளின் பொருப்பும்சொன்னேன்; இன்னும் அதின்சுருக்கஞ் சொல்லுகிறேன் கேளும் விஷ்ணுவேயானுகியும் யானே விஷ்ணுவாகியு மிருக்கிற எமது சரீரமானது ஜலம் யாதுண்டோ அதில் நின்றும் தாமரைப்பூப்போலே பூமியானது பருவத சமுத்திராதிகளோடுகூட உண்டாயிற்று; ஆனதால், இந்தப்பூமியும் எம்முடைய சரீரமேயாம் இதுமாத்திரமேயன்று சூரியாதிசோதிகளும் பூமிமுதலான லோகங்களும்- வனங்களும்-மலைகளும்-திசைகளும்-நதிகளும்-சமுத்திரங்களும் என்று மிருக்கிறதென்றுசொல்லத்தக்க அசித்து யாவும் எம்மிருவர்மயமான சரீரங்களாயிருக்கின்றன; ஞானமே வடிவான சகலஜீவன்களையும் சரீரமாகக்கொண்டிருக்கிற யான் சுத்தஸ்வரூபமல்லது தேவமனுஷியாதி ஸ்வரூபமன்று. ஆகையால்-பர்வதசமுத்திரபூமியாதி ரூபபேதங்களெல்லாம்ஜீவன்களுடைய கர்மவசத்தினுலுண்டான ஞானபேதத்தைப் பற்றியவையேயென்றுணர்வாய். எப்போது இப்படிப்பட்ட அஞ்ஞான ஹேதுவான கர்மம் க்ஷயப்படுமோ அப்போது ஞானமயமான தன் சொரூபம் சுத்தமானதாகத்தோன்றச் சகலமும் கர்மமூலமான நினைப்பின்பேதத்தாலேவெவ்வேறுவண்ணமாகத் தோன்றியதேயல்லாமல் சுபாவாய் அவ்வஸ்துக்களில் அந்தப் பேதங்களே இருக்கமாட்டாது. ஞானமயமான வஸ்துவே ஸ்திரமாகையாலே (ஆஸ்தி) 'இருக்கிறது-என்று உள்ளபொருளாய்சொல்லப்படும். ஞானமில்லாத ஜடமெல்லாம்மாறிப்போம்ஆகையால், (நாஸ்தி)' இல்லை-என்றபொருளால் சொல்லப்படும். எனெனில் - ஆத்தும ஸ்வரூபத்தைவிட ஆதியும்மத்தியமும் முடிவுமில்லாததுஎப்போதும் மாறாமல் ஒரேரூபத்தையுடையதுமான வஸ்து வேறொன்

றுங்கிடையாது. நாமரூபங்களால் வேறுபாட்டையும் மாறுபாடுள்ளடையுமடைவதுபோற் காட்டினினும் வஸ்துவொன்றே நித்தியமென்பதை விளக்கிக்காட்டுகிறேன் கேளாய்பெண்ணே! முதலில் பிருதிவியானது மண்ணுருண்டையாயிருந்துபின்பு குடமாகிஅதன்பின்புஅதுவுடையசபாலமாகி அக்கபாலம் துண்டுதுண்டாக சூர்ணமாகி அப்புறம் தூளாகி அதன்பின் அணுவாகமாறுகின்றது.

இவையெல்லாம் ஆத்தும ஸ்வரூப யதார்த்தந்தெரியாமல் தேவ மனுஷாதிரூபமாக நிச்சபித்துக்கொண்டவர்களுக்குத் தங்களால் அனுபவிக்கப்படுகிறவெவ்வேறு பொருளாகத் தோன்றுகின்றனவன்றோ; இதையோசித்துப்பார்த்து அவற்றுள் எதைவஸ்துவென்று சொல்லலாமென நிச்சயிக்குமிடத்து ஞானகாரணமான ஆத்துமவஸ்துதவிர வேறேயாதும் இருக்கிறதென்று சொல்லத்தக்கபொருள் இல்லை பார்த்தாயா அந்த ஞானகாரணமோ அவரவருடைய கர்மபேதத்தினாலே மாறுபட்டசித்தமுடைய ஜனங்களுக்கு தேவாதி சரீரப்பிரவேசத்தினாலே அந்தந்தரூபமாகத்தோன்றுகின்றது. ஆத்துமஸ்வரூபமானது சுபாவத்தில் கர்மமில்லாதது அதனால்வரும் பிரகிருதிசம்பந்தமான மனமில்லையாகையால்அதை யனுசரித்துண்டாகத்தக்க சோகமோஹ லோபாதிதோஷ சம்பந்தமில்லாததும் தேய்தல்-வளர்தல்முதலியவை இல்லாமல் ஒரே ரூபமானதுமாயிருக்கின்றது. இப்படிப்பட்ட ஞானரூபமான ஆத்துமஸ்வரூபம் ஸ்ரீவாசுதேவனுடைய சரீரமாகையாலே தன்மயமாயிருக்கின்றது. ஆதலால் அந்த ஸ்ரீவாசுதேவனும் யானுமல்லாதவஸ்து ஒன்றுமில்லையன்றோ ஓ பார்வதி! இவ்விதமாய் ஞானஸ்வரூபமொன்றே நித்தியமாயிருக்கையாலே சத்தியபதார்த்தமென்றும் மற்றது மாறிமாறியழிகையாலே அசத்தியமென்றும் யதார்த்தத்தை யுனக்கு நான் நன்றாய்த்தெரிவித்தேன்.

## அண்ட அளவின் சுருக்கம்.

ஓ பெண்ணே? இவ்வாறு பூகோளமும் ககோளமும்சொன்னேன். ஆனால் சோதிடசாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட விதமோ வேறுஎங்ஙனமெனில் பூமியானது விளாங்கனியைப்போலமுற்றுமுருட்சியான வடிவுடையதாய்இரண்டுபங்கு சமுத்திரஞ்சூழ்ந்த

தாய் இடையில் தெற்கிலிருந்துவடக்குவரையிலும் ஒருகாராசமு
ருவம்போ லிருப்பதுபோலே மேருபர்வதம் நிற்கப்பெற்றதாய்
யாதோராதாரமுமில்லாமல் அந்தரத்திலிருக்கிறது இதன் சுற்ற
ளவு ௪௲௯௱௯௰௭-காதமாகும். முற்றளவுஏழுலக்ஷத்தி௮௫௩௫௪
யோசனையாயிருக்கிறது பூமியின் மத்தியம் இலங்கை அதுமுதல்
தொண்ணூறு பாகங்களில் ஒவ்வொருபட்டணமாக மூன்றுபட்
டணங்கள் சூரியஉதய அஸ்தமய மத்தியான அர்த்தராத்திரங்க
ளைக் குறிக்குமிடங்களாயிருக்கின்றன. ஆகப்பூமி முந்நூற்றறுப
துபாகமாகப் பிரிக்கப்படும். எங்கிருந்து கணக்கிட்டாலும் இப்ப
டிச்சமானமான முந்நூற்றறுபது பாகங்களேயிருக்கும். இப்பூமி
யில்வடமுனைக்கு சுமேருவென்றும் தென்முனைக்கு மேருவென்
றும்சொல்லப்படும். இப்பூமியின் மத்தியஸ்தானமாகிய இலங்கை
க்கு ௨௪-பாகங்களுள்ள இடத்தில் உத்தராயணரேகையுண்டு. அப்
படியே தெற்கில் ௨௪-பாகங்களுள்ள யிடத்தில் தக்ஷிணாயணரே
கையுண்டு. இச்சமுத்திரத்திலேதானே பிரிவுகள் இந்தப்பூமிக்கு
மேல் சந்திரமண்டலம்-அதற்குமேல் புதமண்டலம்-அதன்மேல்
சுக்கிரமண்டலம்-அதன்மேல் சூரியமண்டலம்-அதற்குமேல்அங்
காரகமண்டலம்-அதற்குமேல் பிரகஸ்பதிமண்டலம்-அதற்குமே
ல்சனிமண்டலம்-இவையெல்லாவற்றிற்கும்மேல் நக்ஷத்திரமண்
டலமிருக்கின்றது; இவையெல்லாம் பூமியைச்சுற்றித் திரிந்துக்
கொண்டிருக்கும்ஒவ்வொருகிரகமும் தன்தன் மார்க்கத்தில்நாள்
ஒன்றுக்கு(௧௰௮௫௮௮) யோசனைதூரமே ஓடும். ஆனால்-அந்தந்
தமார்க்கவட்டங்களின் அளவினாலே கிரகங்களுடைய சிரு சக்க
ரம் யோககாலம் சிறிதும் பெரிதுமாய் வித்தியாசப்பட்டிருக்கும்.
ஆகாசமண்டலமெல்லாம்பன்னிரண்டு ராசிகளாகவும் ஒவ்வொரு
ராசி முப்பதுபாகங்களாகவும் ஒவ்வொருபாகம்அறுபதுகலைகளா
கவும்பிரிக்கப்பட்டிருக்கும்; ஆகையால் ஒவ்வொரு கிரகமார்க்க
சக்கரமும் ஏற்றபடி சிறியவையும் பெரியவையுமான ராசியாக
கலைகளென்கிற பிரிவுகளையுடையனவாயிருக்கும். இனி சந்திரச்
சாயை நேராய் சூரியனைமறைக்கும்போது சூரியக் கிரகணமும்.
பூச்சாயை சந்திரனைமறைக்கும்போது சந்திரக்கிரகணமும் உண்
டாகின்றன. சந்திரன் முதலான சகலக்கிரக நட்சத்திரங்களுக்
கும் சூரியக்கிரகண சம்பந்தத்தினாலேயே பிரகாசமுண்டாகின்ற
படியால் சந்திரன் சூரியனைவிட்டுத் திரும்பத்திரும்பச் சந்திரகா

ந்தி பூமியிலிருக்கிறவர்களுக்குப் படிப்படியாய்விளங்குகிறதினால் அந்த காலம்வளர்பிறையென்றும்-சுக்கில பக்ஷமென்றும் சொல்லப்படும். மறுபடியும்சூரியனைநோக்கி சந்திரன் செல்லச்செல்ல ஜனங்களுக்கு சந்திரகாந்திப்படும்படியாய் குறைந்துவருவதனால் அக்காலம் தேய்பிறையென்றும்-கிருஷ்ணபக்ஷமென்றும் சொல்லப்படும்; சோதிடநூலும் வேதாங்கமாயிருப்பதனாலே புராணத்தைப்போல வைதிகசாஸ்திரமாயிருக்கின்றது. இப்படி சாஸ்திரத்திற்கும் அனுபவத்திற்கும் விரோதமாய் பூகோளகிரகங்களைப் புராணத்திற் சொல்லியிருப்பது ஏனெனில் கேளும் ஓ பார்வதி? இவ்விஷயத்தைப்பற்றி சில சாதுக்கள்விசாரித்து யெழுதியிருப்பவர்களைச் சொல்லுகிறேன். சோதிடத்தில் பூகோளகோளங்களை விவரிப்பது வருஷ-மாசபக்ஷ திதி-நக்ஷத்திராதி சகல பேதங்களைக்கணித்து ஏற்படுத்துதற்காக புராணத்திலேயே எமது விஸ்வரூபத்தையறிந்து அஷ்டவிதயோகங்களால் ஆத்மஞானிகள் யாவரும் உபாசனைசெய்வதற்காக எமது விராட்அளவினாலே பூகோள அளவுகள் விசிதமாகும். பலபுராண வியாக்கியாதார்களும் புராணக்காரருக்கு வைராக்கியத்தையும் தத்துவஞானத்தையும்உண்டாக்குவதே உத்தேசியமான அபிப்பிராயமன்றிக் கணிதாதிகளில்அப்படிப்பட்ட அபிப்பிராயம் இல்லையென்று ஸ்தாபிக்கப்பட்டிருக்குமாதலின்புராணங்களின் காலாந்தரத்திலிருந்த பூகோளாதிகளைக்கொண்டு உபாசனார்த்தமாக உத்தேசித்து சொன்னார்களென்றறியவேண்டும். சூரியாதிசிம்சுமார சக்கரமுதலானவர்ணங்களை உபாசனைக்காகவே புராணங்களில் சொன்னதாக நேரே வியாக்கியாதார்களும் எழுதிக்கொண்டார்கள். கிருஷ்டிகள் கல்பந்தோறும் பேதப்பட்டிருக்கின்றனவென்றும் சாஸ்திரங்களாலறியப்படுகின்றன. இப்படிப்பட்ட ஏதுக்களால் விராட்புருஷனுடைய மகிமையை விசேஷமாய் விளக்கத்தக்க ஆச்சரியகரமான கோள்விசேஷங்களை ஸ்துலோபாசனைக்காகவும் ஐசுவரியச்செருக்குடையார்க்குக் கிரியாவைராக்கியங்களுண்டாவதற்காகவும் நான் அருளிச்செய்தேன். சோதிடநூல் கிரகசாரங்களைக்கொண்டு காலங்களைச் சரியாய்அறிவிக்கவேண்டியதற்காக பூகோள ககோளஸ்திதிகளை உள்ளபடி அறிவித்திருக்கிறேனென்று தெரிந்துக்கொள்ளவேண்டும், அன்றியும்-இந்த அண்டம் அல்லது உலகினளவை யறியவேண்டியவிதி இருபத்தினான்கு கதிரெழுத்துகொண்

ண்டது (மயிர்நுனி) மயிர்நுனி யெட்டுகொண்டது (ஈர்) ஈர் நாலுகொண்டது (பேன்) பேனெட்டுகொண்டது(நெல்லு) நெல்லுமூன்றுகொண்டது(தேவாங்குலம்) தேவாங்குலம் இருபத்தநாலுகொண்டது (மஹாகரம்) மஹாகரம் நான்குகொண்டது(தனு) தனு இரண்டுகொண்டது (கண்டம்) தண்டம் இரண்டாயிரம் கொண்டது (குரோசம்) குரோசம் நான்குகொண்டது யோசனையென்றறிந்துக்கொள்ளவும், என்று அருளிச்செய்த சிவபெருமானைநோக்கி ஓ சுவாமி? தாங்கள் விவரித்த அண்டபிண்ட பிரம்மாண்டங்களின் அளவையும்அவைகளுக்குட்பட்ட சூரியசந்திரக்கிரகங்களின் தொழில்கள் முதலான சகலமும்அறிந்தேன். இவ்வுலகத்தில் மானிடஜென்மமுண்டான விதத்தையும் அதின் காரணத்தையும் கிருபைகூர்ந்து திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று துதித்த பார்வதியைநோக்கிச் சிவபெருமான் சொல்லத்தொடங்கினர்.





# மானிடஜென்மஉற்பத்தி.

விருத்தம்.

பங்கயமுகத்தினெந்தாய் பார்ப்பதிசிவத்தைநோக்கி
மங்களவடுக்காமண்ட விண்டலத்துடர்பையெல்லாம்
இங்கெனக்குரைத்தீரையா இனிமனுப்பிறப்பேதென்னத்
திங்களைமுடித்தவேணித் திகழ்பரமுரைக்கலானார்

கேளும், பெண்ணேபார்வதி? உலகமென்னும்அசைதலாகிய
சிறவீட்டை கணிக்க நிமித்தியம்மால்மகனாகிய நான்முகனுக்கு
தலைநாளிற்றானே கிட்டாக்கருவியாகிய தண்டமும்,பாசமுங்கொ
டுத்திருக்கின்றனம். அந்த தண்டத்தைநோக்கிப் பார்வையிட்டு
தன்னால் சிருஷ்டிக்கவேண்டியதை நினைத்தால்மாத்திரம்உடனே
தோற்றமாகும். அந்த தண்டத்தை நோக்காமலாவது கரத்திற்
றாங்காமல் நீற்றாவது தானே நினைப்பானாகில் யாதொரு வஸ்து
வும் சிருஷ்டியாகாது. ஆகையால் தண்டமென்னுங் கருவிற்கு நி
னைக்கும் சத்தியும்பிரமனுக்கு உண்டுபண்ணும் சக்தியும் தனித்த
னியே கிடையாது. தண்டமும் பிரமனும் ஒன்றுபட ஏந்திநோக்
கும் நிமிஷமே பிரமன் நினைவில் நினைத்தபடி யெல்லாம் விழியிற்
றோன்றி எதிரில்நிற்கும் இஃது யெப்படியென்றால் இந்திரனுக்கு
கற்பகத்தருவை யீந்திருப்பதுபோல் உந்திலந்தோனுக்கு தண்ட
மென்னுங்கருவியை உண்டுபண்ணும் நிமித்தியம் கொடுத்திருக்
கின்றோமென்றறிவாய் ஓபார்வதி இவ்வாந்திரீகமானதுநீலம் பி
றந்தமேனியனாகிய திருமாலுக்கும் ஆலங்கரந்த கண்டனாகியஎ
னக்கும் தெரியுமேயன்றி உனக்கும் இம்மட்டிலு முரைத்தேனில்
லைமற்றதேவர்களும் மனுக்களாகிய பாமரரும்அரியமாட்டார்கள்.
ஆகையால் தொன்றுதொட்டு இன்றளவும் உலகிற் பலரும் தேவ
ரிற்சிலரும் அவரவர் வினைக்கிடாகவினைவந்து உருத்துமிடத்து
அடாபாவி பிரமதேவா! யான் யாருக்கென்செய்தேன் எனக்கே
னிந்த விதிவிதித்தாய்; என்வதை உனக்கிடிக்காதா; உன்கோயி
லிடிந்து குட்டிச்சுவராய்போகாயா;புட்பமற்றுபூசையற்றுப்போ
காயா;யென்றுபலவாரும் வீணே பிரமனை நிந்தித்தும்புலம்புவார்

கள் ஐயோ பாவம் ஓர் ஆத்மாவைசிறப்பிக்கவும் குறைப்பிக்கவும் பிரமனால்ஆனகாரியமேயன்று கேளாய்கெளரீ! பிரமனுக்கு தண்டங்கொடுத்தலை நாளிற்றானே ஓர் உத்திரவுண்டுஅஃதுயென்னெனில், ஏ பிரமா! வருவிக்கும்பொருளை விருவிக்கக்கடவாயே யன்றிகெருவிக்குமளவில் அன்றே உன் ஆலயமும் பூசைமுதலிய தாம்தகாச்சடவையென்று யாமே பிரதிவரம் கொடுத்திருக்கின்றனம் அவ்வாரிசைந்து தன்றொழில் நடத்தமுயன்றனன்.

அண்டமும் பிண்டமும்கூடிய சர்வ உலகங்களும் ஒன்றின் மீதொன்றாய் முறையே அடுக்காக சிருஷ்டிக்கப்பட்டு மோட்சலோகத்தைக்கடந்த புறச்சுவரை பாதாளபட்டில் ஊடுருவப்பொருத்தி மற்றவையுந்திருத்திஒன்றமழியாதென்று மனமகிழ்வுகொண்டனன். ஆனால்அடுக்கடுக்காகஎத்தனைபோ அண்டங்களும்மண்டலங்களும் அமைக்கப்பட்டு பின்னெங்கணும் இடமின்றிபுரச்சுவரும்பொரித்தினனே அப்போது நீரெங்குற்றீரெனச் சந்தேகங்கொண்டாயோ சத்தியே, அந்த சந்தேகத்தில் மனதைவிடாமல் ஊக்கமாய்க்கேட்பாயாக? பாதலமாகிய பூமியின் அடிப்பரப்புமுதல் மீதலமாகியமோட்சலோகத்தின்மேற்கவிழ்ந்தபுரச்சுவர்மட்டும் விரிந்தஅண்டங்கள் யாவினும் பறந்து நீன்டவன் யானே, எல்லா உலகங்களும் எனது தேகத்திற்றானே யிடங்கொண்டிருக்கிறது. எனது தேகமன்னியில்லோகமில்லை. இந்தரகயசித்தை மாலும் மாலின்மகனும் அரியமாட்டார்கள், இவைநிற்க, மண்-விண் இரண்டு, அண்டம்-பிண்டம் இரண்டு, அக்கினி-ஜலம் இரண்டு, நல்வினை-தீவினை இரண்டு, நரகம்-மோட்சம் இரண்டு,விஷம்-அமிர்தம் இரண்டு, இருள்-வெளி இரண்டு, சூரியன்-சந்திரன் இரண்டு, தோற்றம்-ஒடுக்கம் இரண்டு, ஆண்-பெண் இரண்டு,சத்தி-சிவம் இரண்டு, ஆகிய இவையெல்லாம் எனது சொரூபத்தினிடமே அரூபமாயிருந்து யெருவெளி ஹற்றும் பாவிநிற்கின்றது. இவ்வாதாரத்தைக்கொண்டே பிரமனவன் சகல ஜீவராசிகளையும் சிருஷ்டிக்கும்போது நால்வகை யோனி எழுவகைத்தோற்றம் எண்பத்துநான்கு நூராயிரம்பேதமான வெல்லாப்பிரவிகளிலும் ஆண்-ஒன்றும், பெண்-ஒன்றுமாக சிருஷ்டிக்கப்படுகையில் ஊர்வன, நடப்பன, பறப்பனவாகிய பட்சி-பரவை-விலங்கு முதலிய மிருகஜாதிகளுடனே-மனிதரூபத்திலும், ஆண் - ஒன்றும், பெண்-ஒன்றும் சிருஷ்டித்தான், அப்படி சிருஷ்டிக்கப்பட்டபெ

ண்-ஆண் இரண்டுவிலங்கினமாகிய மிருகங்களுடன் தானும் ஓர் மிருகம்போல தாபரவர்க்கங்களையும் காய்-கனி-கிழங்குமுதலிய வற்றை ஆகாரமாகப்புசித்து மாத்தின்மீதும் கிளைகளின்மீதும்உ ரங்கிகாலம்போக்கிக்கொண்டிருந்தன. ஆனல் பெண்ரூபமிருந்த யிடம் ஆணுக்கும் ஆண்ரூபமிருந்தயிடம் பெண்ணுக்கும் தெரியா மல் தனித்தனியே நிர்வாணிகளாக மிருகங்களோடுகூடவே சில நூற்றாண்டுகள்கழித்தார்கள். ஓ பார்வதி! சிலநூற்றாண்டுகளென் ருல் நீண்டவருடங்களாகிறதே அவ்வளவு ஆயுள் மனிதருக்கே தென்னும் சந்தேகமுளதோ அந்த சந்தேகத்திற் கிடங்கொடா தே பிரதான பிதாமகன் நாட்களில் மனிதர் தேவாங்குலத்தால் எழுநூறடி உயரமும் மூந்நூறடி கனதியுமுள்ளவர்கள், அத்துடன் பாபமிசைத்தோருமல்லர். பெண்ணெனும்பேய்பிடித்தோருமல் லர். விந்தகன்று நெஞ்சழிந்தோருமல்லர்.உயிர்மாற்றி உண்டோ ருமல்லர். ஆகையால், அவர்களுக்குஆயுள் ஆயிரத்திருநூறாகும் இவைநிற்க மேற்கூறியபடி சிலநூற்றாண்டு வரையில் கானகத்தி ன்மிருகங்களோடு திரிந்திருக்கையில் ஓர் நாள் பெண்ணும்-ஆணு ம்சந்தித்தன. அப்படி சந்தித்த விரண்டுபேரும் ஒருவரையொரு வர் உற்றுநோக்கி மிகுந்தஆச்சரியமும் களிப்பும் கருணையும்உண் டாகி (தன்னினம்தன்னைக்காக்கும் வேலி பயிரைக்காக்கும்) என் பதுபோல அன்றுமுதல் மிருகத்தொடர்ச்சி விட்டு இவ்விருவரு ம் ஒன்றுசேர்ந்து யெங்குந்திரிந்து இரையெடுத்து ஒன்றையொ ன்றுதரித்து வாழ்நாட்கடக்கையில் பெண்ணென்றமாய்கை சம் பந்தப்பட்டவுடன் கலவிக்கிடமுண்டாகி மருவிவாழ்ந்தன. இவ் வாறு இடை இடைபுணரப்பெற்றமையால் ஆண்-பெண் யென்ற அருவருப்புண்டாகி ஆண்குறியென்றும் பெண்குறியென்றும் மா ஞபிமானம் தோன்றி நிர்வாணயோக்கியதையற்று, இலைமுதலிய சருகுகளால் ஆடைபோன்றுஅரையில்உடுத்தப்பட்டு நாம் மனி தரென்றதடிப்பு தனக்குத்தானே யுண்டாயிற்று. வேறுகதிவிட த்திலுதிக்காமல்வேதா விநோக்கத்தால் தலைப்பிறப்பாயுதித்தமை யால் அந்தபுருஷனுக்கு(சுவாயம்பு) என்னும் நாமதேயமுண்டா யிற்று. அல்லது சுவாயம்பு மனுவென்று பின்வரும் மனுக்களால் வழங்கப்படுகிறது. அந்தசுவாயம்பு மனுவுக்கு மனைவியாகக்கிடை த்த மடந்தைக்கு சதரூபமென்னும் காரணப்பெயர் நேமித்துக் சொல்வதானர்கள்.

மேலும் இந்தச் சுவாயம்பு மனுவும் சதரூபியும் சதிபுருஷ
கோலமாய் சுகங்களையனுபவித்து வாழுங்காலத்தில், அந்தகான
கத்தினிடமாகத் தன்னைச் சூழ்ந்திருக்கிற ஒவ்வொரு வஸ்துக்க
ளுந் தன் கண்களுக்குநூதனமும் ஆச்சரியமுமாய்த் தோற்றுகிற
ஓஷதிகளைப்பார்த்துத் தன் மனதில் தினம் தினம் இச்சையுண்
டாகி ஒவ்வொரு புல் பூண்டுகளாதிகளின் புஷ்பங்களுடைய ம
ணத்தினால் இன்பமேலிட்டு அதுகளினுடைய யிளங்காய்கள் செ
ங்காய்கனிகளினுடைய ஆச்சிரிய உருவம்நன்றுதீங்குகளறிந்து அ
திற் சிலகனிகளையுண்டுத் தன்னுடையபசியைத் தீர்த்துக்கொண்
டுஅதினால் நாவுக்குண்டாகிய உருசியைப்பருகித் தன்பிராணனை
ப்போஷிக்கவேண்டிய முயற்சியில் திடத்தைக்கற்பித்துக்கொண்
டுமேலும் தன்னைச்சூழ்ந்துக்கொண்டிருக்கிற ஒவ்வொரு பதார்த்
தங்களிலும் பலஜீவர்களிடமிருந்துஉண்டாகிறஒலியையும் ஓசை
களையும் காதிற்கேட்டு மதிப்புக்கிடமாகிய ஜீவகாருண்ணிய நற்குண
மேலிட்டு தினந்தோரும் தன்பசிக்கி உணவுகளைச் சேகரிப்பதில்
முயன்றுஆரணியத்தில் திரிந்துக்கொண்டிருக்கிறபோது சிலகா
லம் சென்று இவ்விருவருக்கும் மகப்பேருண்டாகிப் பிரிய விரத
னென்றும் உத்தானபாதனென்றும்சொல்லப்பட்ட இரண்டுபுதல்
வர்களும் ஆகுதி-தேவஹூதி-பிரகுதி - என்று மூன்றுபுதல்விக
ளும் உதித்து நாளுக்குநாள் செல்வமாகத்தழைத்துச் செழித்தி
ருந்தார்கள். இக்குடும்பம்யாவரும் புசிப்புக்குவேண்டிய விலங்கு
புள்ளினம் ஜஷகம்-காய்களும்-கனிகளும்-கிழங்குகள் முதலான
பலவிதங்களாகிய தானியவஸ்துக்களையும் சமைத்துஉண்டுப் பசி
யைத் தணித்துக்கொண்டிருந்தார்கள். இந்தப்படியாகக்காட்டி
லிருக்கும் காலத்தில் யாவருக்கும் நாளோட்டத்தில் தனக்குத்
தானே தயை-சாந்தம்-பொறுமை-அறிவு-சொற்றிரமும்-கல்வித்
திரமும் உண்டாகி ஞானமுதித்துதங்களுடையநிலமையைத் தா
ங்களே ஆராச்சிசெய்து பிருதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாசமென்
கிற பஞ்சபூதங்கள்செய்யும்படியான நன்றுதீதுகளையறிந்து மகி
ழ்ந்து புகழ்ந்து அனைவரும் துக்கமின்றிச் சுகமாய் வாழ்ந்துவரு
கிறபோது இவர்கள் ஒருவரோடொருவர் யோசித்து நாளுக்கு
நாள் பசியைத்தேடியுண்பதைப்பார்க்கிலும் ஆரணியத்தில்தங்க
டையாய் மேய்ந்து ஆகாரம் நித்திரை-பயம் - மைதுனம் ஆகிய
நான்கு அறிவுகள்வகித்தச் செம்மறியாடுகள்-வெள்ளாடுகள்-ஒட்

டகங்கள்-பசுக்கள்-குதிரைகள் - கோழிகள் - பக்ஷிகள் முதலான சகல ஜீவன்களையும் பிடித்துக் கூண்டிற்சேர்த்து அதுகளுக்கு வேண்டிய ஆகாராதிகளைப்போட்டுக் காப்பாற்றி அதுகளாலுண்டாகும் பலனை யநுபவித்துக்கொண்டு சுகமாய் யிருந்தார்கள்.

இப்படியிருக்கிறபோது விண்ணிலும்-மண்ணிலும்-உண்டாயிருக்கிற சகல விதங்களாகிய வஸ்துக்களினுடைய நிலையையும் தங்களுடைய நிலமையும்பிரித்து உணரும்படியான காலவேற்றுமைகளையும்-பஞ்சபூதங்களுடைய நன்மை தீமைகளையும் புல் - பூண்டு-காய்-கனிகள்முதலான சகலவஸ்துக்களினுடைய சுபாவகுணங்களை யறியத்தக்க கூர்மையுள்ள தங்கள் புத்தியை விசாலமாகப்பெருக்கி மண்ணிற் சுபாவமாய்ப் பலனைத்தருகிற சுவையும் பலமுந்தாத்தக்க பலவிதங்களாகிய தானியங்களைப்பார்த்து அதுகளில் இவர்கள் தங்கள் ஜீவனத்திற்குறிய அரிசி-கேழ்வரகு-சோளம்-கோதுமைமுதலான தானியங்களைச் சேகரிக்க யோசித்துப் பயிர்செய்யத்தொடங்கித் தங்களுடைய கருத்தையும் ஜாக்கிறதையையும் ஒருவருக்கொருவர் தங்களுக்குத்தாங்களே மெச்சிப்புகழ்ந்து அடங்காமகிழ்ஷி யடைந்திருந்தார்கள். அப்போது அவர்களுக்குசகல ஆகமசாஸ்திர கலைக்கியானங்களும் தனக்குத்தானே உதித்தது; பின்பு சுவாயம்புமனு தன்மனைவியுடன் புதல்வர்கள் இரண்டுகுடும்பமாகப்பிரிந்தார்கள். மூத்தோனாகிய பிரியவிரதன் குடும்பம் பயிர்மூல ஜீவனஞ் செய்பவர்களானார்கள்; இவர்களுக்கு சூரியவம்சமென்று மறைபன்னுகின்றது. இளையவனாகிய உத்தானபாதன் குடும்பம் ஆடுமாடு மந்தைகளை மேய்க்கிற இடையர்களானார்கள் ; இவர்க்குச் சந்திர வம்சமென்று வேதங்கூறுகின்றது.

கேளும் பார்வதி! இவ்விரண்டு குடும்பத்தார்களுக்குள்ளே பயிரிடுகிறவர்களுக்கு மற்றவர்கள்வேண்டிய பால்-தயிர்-நெய்-முதலியதுகளைக்கொடுத்துப் பதிலுக்குப் பலவித தானியங்களைப் பெற்றுக்கொள்ளுவது.இந்தப்படியாக ஒருவருடையவஸ்துவை மற்றொருவருக்குக் கொடுத்துமாற்றிக்கொள்ளுகிற படியினாலே வாணிபமுண்டாகியது. அதினால் பயிரிடுகிறவர்களுக்குப் பூவைசியரென்றும் ஆடுமாடுமந்தைகளை மேய்க்கிறவர்களுக்குக்கோவைசியரென்றும் பெயருண்டாயிற்று மந்தைமேய்க்கிறவர்கள் தங்களுக்குக்கிடைத்த பாலைச்சாப்பிட்டு மிகுதியை தயிர்தோய்த்துக்

கடைந்து வெண்ணையை நெய்காச்சுவதையும்-பயிரிடுகிறவர்கள் வெல்லம்சர்க்கரை இவைகளைக் கரும்புரசத்திலும்-பரிசத்தியிற்பஞ்சும் எள்ளிலும் முத்துக்கொட்டையிலும் யெண்ணெய்யுண்டாக்க இவ்வண்ணமாக ஒவ்வொருவஸ்துக்களையும் பதப்படுத்துகிறகுணம் இவர்களுக்குள்ளே சிலருக்குண்டாகி இதுவேதொழிலில் முயன்றிருந்தபடியால் அவர்களுக்குச் சூத்திரரென்று பெயருண்டாயிற்று.

அப்போது இருதிரத்தாராகிய பயிரிடுகிறவர்களும் மந்தைகார்க்கிறவர்களும் பயிரினாலுண்டாகிய விளைச்சல்களுக்கும் வளர்க்கிற மிருகசீவன்களுக்கும் துஷ்டமிருகங்களாலேயும் விஷசெந்துக்களினாலேயும்-ஆபத்துநேரிடாமலிருக்கும்பொருட்டு வாளாயுதங்களை யிடையிற்றரித்துக்கொண்டு வெகு ஜாக்கிறதையாய் பாதுகாத்துக்கொண்டிருந்தமையால் இவர்களுக்கு க்ஷத்திரிறரென்று பெயருண்டாயிற்று.

இதில் உத்தானபாதன் வம்சத்தோர்களில் சிலர் தங்கள்மந்தைகளை மேய்த்துக்கொண்டிருக்கிறபோது கோடைகாலமானதால் காடுபற்றிக்கொண்டு தீயெரிகிறதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு தீயடங்கித் தணிந்தபிரகு நெருங்கிப் பார்க்கிறபோது ஒவ்வொரு யிடங்களில் பலவிதமான நிறமும் பசுமையும் ஒளியுள்ளதாயும் சிலவிடங்களில்மண்ணானது உருகிக் கறடுஞ்சிட்டமாகவும் மிகவும் உறுதியும் பலமும் துவரும் கருக்குக்கூர்மையும் துருவுமுள்ளக் கருவி உருக்குக்கட்டிகளுண்டாயிருந்தன. இதுகளைப்பார்த்துஅவர்கள் இதுவென்னப் புதுமையாகயிருக்கிறது இதுகளெவ்விதமா யிப்படியாயிற்று? இதனை யோசிக்குமிடத்தில் நினைப்பதற்கரிய ஆச்சரியத்தையும் பிரமிப்பையும்உண்டாகச்செய்கிறது. இது மண்ணினுடைய சுபாவகுணமென்று தோன்றுகிறது தீபற்றி எறிந்ததினால் இந்த மண்ணானது யிப்படி பேதப்பட்டதல்லவாவென்று இதனை நன்றாயறிவோமென்று அதுகளைப்பரிசோதித்து பார்க்கையில் இது யிரும்பென்று கருதிய மாத்திரத்திற்றானே அன்றுமுதல் இன்றளவும் அதற்கு இரும்பென்றே உலகத்தில் பேர்வழங்கிவருகிறது. மேலும் பலவித சாஸ்திரங்களையுங் கடன் கொடுப்பதும் கடன் வாங்குவதையும்எழுதிவைக்க எழுத்தாணியாகவும் எதிரிகளை ஜெயிக்கவல்லச் சகல ஆயுதங்களும்நன்மைக்கும் துன்மைகளுக்கும் உறவினற்கும் பகைவர்களுக்கும் காரண

மாக யாவருக்கும் அகத்தியம் தேவையுள்ளதென்று அதுகளைக் கொண்டுசகல ஆயுதங்களையும் உண்டுபண்ணிபின்னும் பஞ்சலோ கக்கருவிகளையும் பாகப்படுத்தினார்கள். இதினாலேஇவர்களுக்குக் கருமாரென்று பெயருண்டாயிற்று.

மேலும் இவ்விருதிரத்தாருக்குஞ் செய்யும்படியானதொழில் களினால் கிடைக்கும் பலனாகிய பால் தயிர்நெய்|எண்ணெய்தானி யங்கள் முதலான வஸ்துக்களை வைத்துக்காப்பாற்றிவைக்கபாத் திரங்களும் கசாம்பக்கூடு முதலாகிய பாத்திரங்கள் கிடையாத படியால் மூங்கிற்குழாக்களிலும் சுரைக்குடுக்கைகளிலும் கொப் பரைகளிலும் சங்குமுதலான பாத்திரங்களிலும் வைத்துக் காப் பாற்றிக்கொண்டுவருகிறதேதவிர வேறு பெருந்தபாத்திரங்கள் கிடையாது. மிருகங்களுடைய தோற்களையும் மரங்களுடைய இ லை சருகுகளையும் ஆசனமாகவும்உடையாகவும் கையாண்டுக்கொ ண்டுவந்தார்கள்.

அப்போது பிரியவிரதன் வம்சத்தாரில் சிலர் மண்ணினாலே பாத்திரங்களைச்செய்து வெய்யலிற் காயவைத்து அதுகளையனுப வஞ்செய்யுமிடத்தில் வேக்காடுசெய்யாமையினாலே அதுளுடைந் துபோகப் பின்னும் பாத்திரங்களைச்செய்து வைக்கோலும்விராட் டிக் கட்டைகளையுங் கூடச்சேர்த்து அடுக்கி தீயிட்டெறித்துத் த ணிந்தபிறகு பார்க்குமிடத்தில் ஒவ்வொரு பாண்டமும்வெந்து உருதியாயிருந்தது. இவ்வாறு சூளைபோட்டுப் பாண்டஞ்செய்த வர்களுக்குக் குயவரென்று பெயருண்டாயிற்று.

இன்னும் பிரியவிரதன் வம்சத்தாரில் சிலர் சிலந்தி பூச்சிபா னதுகூடுகட்டிக்கொண்டு அதுகள் நூல்இழைகளினாலே பின்னி அதினடுவே கோடைக்கும் வாடைக்கும் தங்கியிருப்பதற்கு அ மைத்திருக்கும் சிலந்திப்பூச்சியினுடைய நுண்ணறிவைப்பார்த்து இவர்களும்அந்தப்படியே பஞ்சிநூல்நூற்கவும் வஸ்திரங்களை நெ ய்யவும் கற்றுக்கொண்டார்கள் இத்தொழிலினால் இவர்களுக்குச் சேணியரென்றுங் கைக்கோளரென்றும் இரண்டு பெயருண்டா யிற்று.

கேளும் பார்வதி! இன்னுஞ்சிலர் களிமண்ணிற்கு மனிதனு டைய சரீரத்தின் அழுக்கைப் போக்கடிக்கிறகுணமுண்டாயிருப் பதை யுணர்ந்து அந்த மண்ணிற் கூடியிருக்கிற தென்னவென்று

பகுத்தறியுமிடத்தில் உவர்மண்-எண்ணெய்-சுண்ணும்புங்கூடின து சவுக்காரமென்று தெரிந்துக்கொண்டதினுலே வஸ்திரங்களை வெளுக்கவும் சலவைசெய்யவும் ஏர்ப்பட்டார்கள். இவர்களுக்கு வண்ணுரென்று பெயருண்டாயிற்று.

அப்போது குயவர்கள்பலவிதங்களாகிய சிலைகளையும் விக்கி ரகங்களையும் வாகனங்களையும் செய்து அதுகளுக்குப் பூசை நை வேத்திய ஊர்பிரதக்ஷணமுதலான ஆரம்பரங்களைச் செய்வித்து வந்தார்கள்-இந்தச் சிலைகளையும் விக்கிரகங்களையும் வாகனங்களை யும்பற்றவர்கள் வாங்கவும் பூசிக்கவும் ஏர்ப்பட்டபடியால் இவர் களுக்குக் குசப்பூசாரிகளென்று பெயருண்டாயிற்று.

மேலும் கற்சூளைகள்போட்டு அந்த கற்களினுலே வீடுகள் கட்டவும் கால்கையொடிந்து மூட்டுகழிகிப்போனதிலும் அதுக ளைகூட்டிச் சேர்த்துக்கட்டி சொஸ்தப்படுத்துவதுமுதலாகிய அ னேக சாமார்த்தியங்களில் பழகித் தேர்ந்தபடியினுலே அவர்க ளுக்கு குசப்பூசாரிகள்யென்று பெயருண்டாயிற்று.

இதுகளை யெல்லாம் பார்த்த உத்தானபாதன் சந்ததியோ ரிற் சிலர் மரங்களினுலே பலவித பொம்மைகளையும் வாகனங்களை யும் ரதங்களையுஞ் சூத்திரங்களையும்செய்து விற்பனைசெய்யஆரம் பித்தார்கள். அதினுல் இவர்களுக்குத் தச்சர்களென்றும் பெயரு ண்டாயிற்று.

இன்னுஞ்சிலர் கருங்கல்லினுல் பலவுருவங்களையுங் கட்ட டங்களையுஞ்செய்ய ஏர்ப்பட்டார்கள். இத்தொழில்களினுலே இ வர்களுக்குச் சிற்பிகளென்றும் கல்தச்சர்களென்றும் பெயருண் டாயிற்று.

அப்பொழுது-பிரியவிரதன் வம்சத்திற்சிலர் சூரியன்சந்திரா தி கிருகநக்ஷத்திரங்கள் முதலான சகல கிரகசாரங்களும் தங்க டையேயிருக்க அதினுல் ஒவ்வொருவருக்கும் உண்டாகும் நன் மை-தீமை-செல்வம்-வருமை-அதிர்ஷ்டம்-ஆயுள்-நிரியாணம் மு தலானசெயலும்-கிரகபலன் இராசியோக காரணங்களில் பிறப் பும். அவன் இன்னஜாதியென்றும் ஜாதகங்கணிக்கவும் சகுணம்- பொருத்தம்-நிமித்த முதலான சகல பலன்களையுஞ்சொல்லவும்- வானமண்டலத்தில் ஒவ்வொரு நக்ஷத்திரங்களும் உதயமாகிற தும்அதுகள் திரும்பவும்அஸ்தமிக்கிறதும்வினுவுடன் கருத்தோ

டுங் கணிதம்பண்ணி இன்னகாலத்தில் இன்னவெள்ளி யுதயமா குமென்றும்-இன்னகாலத்திலே இன்ன நக்ஷத்திரம் அஸ்தமிக்கு மென்றும்-வசந்தகாலம்-கோடைகாலம்-மாரிகாலம் - முதலான காலவேற்றுமைகளுடைய பலன்களையும்சொல்ல வல்லவராகியும் வியாதியஸ்தருக்கு அவிழ்தம் பத்தியம் நன்மைதீமைகளுக்கு ஓம யக்கியசடங்குகளை விதிப்படி தங்கள்சகோதரர்-சகோதரிமுதலா ன பந்துக்களுக்கு உபதேசஞ் செய்கிறவர்களானபடியால் இவர்க ளுக்கு சோதிடர்-பண்டிதர்-கருமத்தலைவர்யென்ற பெயருண்டா யிற்று.

பின்பு உத்தானபாதன் குடும்பத்தாரில் சிலர்ஆடுமாடு முத லான மிருகங்கள் இறந்துபோனபோதிலும் அல்லது கொன்றுதி ன்னப்பட்டபோதிலும் அதுகளினுடைய தோல்-மயிர்-கொம்பு-முதலியதுகளைப் பழுதுபோகவொட்டாமல் பதனப்படுத்தி அ வைகளினால் அங்கி-தோல்பாய்-கச்சை-வடக்கயிறு-சால்-வீணை-நரம்பு-கம்பளம்-துருத்தி-செருப்பு முதலான அனேகம் சாமான் களை உண்டுபண்ணின படியால் இவர்களுக்கு சக்கிலிகளென்று பெயருண்டாயிற்று.

அப்போது பிரியவிரதன் வம்சத்திலுதித்த வள்ளுவர்கள் ப யிரிட்டுத் தங்கள் கொல்லைகளில் ஆடுமாடுகள் மேயாமற்படிக்கும் காய்கனிகள் முதலான பலதானியவகைகளை இராத்திரிகாலத்தில் கள்ளர்கள் கவர்ந்துக்கொண்டு போகாவண்ணம் தங்களுக்குள்ளே பலசாலிகளும் தைரியவான்களுமாகிய சிலரைக் கொல்லைகளைக் காவற்காற்கவும் பறைகளையடித்து மிருகங்கள் பக்ஷிகள்முதலா னவைகளை ஓட்டவும் நியமித்து இவர்களைக் காவற்காரர் தலையா ரிகளென்று ஏற்படுத்தினார்கள். ஆதியிலே இவர்கள் பறையை உண்டுபண்ணி உலகமுழுதும் பறைசாற்றினபடியால்இவர்களுக் கு வள்ளுவர்களென்று பெயருண்டாயிற்று.

இவ்வாறாக மனிதர்கள் சந்ததி மேலுமேலும்விர்த்தியாகிய படியால்அந்தந்தநிலத்தில் குடியேறியிருந்தார்கள். அன்னிலங்க ளின் வளப்பத்தையும் அங்கங்கேகிடைக்கிற பண்டு பதார்த்தங்க ளையும் புசித்து இந்த பூவுலகத்தை ஐந்துவித நிலமாகப்பகுத்து அந்த நிலத்தில்வாசஞ்செய்யப்பட்டவர்களுக்குறிய பெயரும் பெ ருமையுங் கூறப்படுகிறது.

குறிஞ்சி நிலம்:—மலைகளைச்சார்ந்த நிலங்களுக்குக் குறிஞ்சியென்றுபெயர். அதில் வாசஞ்செய்யப்பட்டவர்கள் குறவர்-சாணவர்-மள்ளர்-குன்றவர்-புனவர்-இறவுனர் இவர்கள் காடை-கவுதாரி-காட்டுக்கோழி முதலியவைகளைப்பிடித்து விர்பனைசெய்து ஜீவித்து வளைகளிலிருக்கிற எலி-உடும்பு-முதல்-நரி முதலியவைகளைப் பிடித்துச் சுட்டுப் புசித்து-பாட்டைசாரிகளை அடித்துப் பரித்து - மலைகளிலும் - குகைகளிலும் காடுகளிலும் சஞ்சரித்து-நாய்-கழுதை இவைகளுடன் வாழ்பவர்களேயாம்.

இவர்களில் குறவர்கள் உப்பு-புளி-வற்றல்-மயில்எண்ணெய் முதலியவைகளைக் கழுதையின்பேரிற் பொதியேத்திக்கொண்டு ஊரூராய்த்திரிந்து விற்பனை செய்யப்பட்டவர்கள். இவர்கள்யிருப்பிடத்திற்குக் குறிச்சி-சிற்றூர்-சீறுர் என்று பெயர்.

பாலைநிலம்-புல்-பூண்டுகள் விளையாத கல்லுங்கரடும் நிறைந்தவெப்பமான காஎல்வீசப்பட்ட நிலம். இதில் வாசஞ்செய்யப்பட்ட மேடர்கள்-எயினர்-புள்ளுவர்-மறவர்களாகிய இவர்கள்தெளியும் வழியறியாக் கோபத்தையும் கானலையும் ஜலத்தையும் பகுத்தரியமாட்டாத குன்றவரானவர்கள் தங்கள் வீட்டுநாயானது குலைக்கும் ஓசையுடன் விளாமரத்தில்கொம்பில் வலையானதுதொங்கப் பன்றி கூடி கலைமான் இவைகள் பார்க்கப்பெருகிறது அல்லாமல் கர்பாறையாகிய முற்றத்தில் மலைநெல்லானது உலரும் பாட்டைசாரிகளையடித்துப் பரித்து போஜனஞ்செய்யும் வேடருடைய திணைப்புனங்களைக் கவர்ந்துகொண்ட மலரூபங்களுடைய மான்கூட்டங்களும் இதுகளைப்போல சுற்சிக்கும் ஆனைக்கூட்டங்களும் நிறைந்திருக்கும் இவைகளைக்கண்ட கருத்தமேனியையும் வலியதொழிலையுமுடைய மறவராகிய வேடர்கள் தங்களிடத்தில் பயமும் கிருபையுமில்லாதவர்களாய் அவைகளின்பேரில் சரங்களைக்கொடுத்துக் கொல்லுவார்கள். என்றும் ஜீவகாருண்ணியமில்லாதவரும் கள்ளையும் மாமிசத்தையும் உணவாகக்கொள்பவரும் விஷமூட்டிய அம்பையுடையவருமாகிய வேடர்களுக்கு அதிபதி நாகனென்பவன் இவர்கள் வாசஞ்செய்யுமிடம் வேடச்சேரியென்றுபெயர்.

முல்லை நிலமானது-வனங்களைச் சார்ந்த நிலம். இக்காட்டில் வாழும் இடையர்கள் தமதிருப்பிடயாகிய படல்களால் மூடப்

பட்ட சிறியகுடிசைகளில் வாசஞ்செய்துக் காலில்செருப்பும் கையில்தடியும்புள்ளாங்குழலும் பிரகாசிக்கஆடுமாடுகளை மேய்த்துக் காப்பாற்றும்படியான இப்புருஷர்களுக்கு முல்லையர்-பொதுவர்-அண்டர்-கோவிந்தர்-அனவல்லர்-குடவர்-பாலர்-கோவலர் - கோபாலர்-அமுதர்-ஆயுர்-தொருவர்-இடையர் யென்றும்பெயர் ஸ்ரீகளுக்கு கொழுவி-பொதுவி-ஆய்ச்சி-இடைச்சியென்றும்பெயர்.

நெய்தல்நிலம்-கடலுங் கழியுஞ் சேர்ந்தநிலம். இதில்வசிப்பவர்கள்மீன்பிடிக்கப்பட்டபரதவர். நுளையர்-கரையார்-புட்டினர்-கடலர்-கழியர்திமிலரெனுமவர்களாம். இவர்கள் அலைபொருந்திய கடலோரத்தில் நிலைபெற்றுவாழும் பழமையாகியவலைவலங்களையுடைய உணவினால் நிறைந்த தன்மையாகவாழுங் குடிகள் நெருங்கிய நுளையர்கள் வலைகளையிழுப்பவருடைய சத்தமும் மீன்குப்பலைக்குவித்துச்சேர்த்துக் கூடிட்டு விற்கப்பட்ட நுளைச்சியருடைய சத்தமும்-ஒரு தன்மையான வெள்ளைச்சங்குகளைப் பிடித்துக்குவிக்கும் சத்தமும்-இச்சத்தங்களெல்லாம் கடலொலிக்கெதிரொலிபோன்றதென்பலாம். இவர்கள்வாசஞ்செய்யப்பட்ட இடத்திற்கு குப்பம்-கரையாங்குப்பம்-பட்டினம் - கடலோரம் எனப்பெயர்.

மருதநிலம்-ஊரைச்சார்ந்த நஞ்சை-புஞ்சை-தெங்கு-பலா வாழை கரும்பு விளையா நின்ற நிலத்தைச்சேர்ந்தது ராஜதானியில் சகல ஜாதிகளின் வாசமும் சர்வவியாபாரமும் அபிவிர்த்தியாகி மெத்தைமேடைகளாகிய வீடுகளும்அதில் சுபாசுபங்களும் நடப்பதே மருதநிலமெனப்படும்.

## காலப் பிரமாணம்.

சிருஷ்டிகர்த்தாவென்று சொல்லப்பட்டபிரம்மதேவனுக்கு ஏழுகோடி இருபதுலக்ஷம் சதுர்யுகங்களும்-தேவமானத்தில் எண்பத்தாராயிரத்தி நானூறுகோடி வருஷங்களும்-மநுஷியமானத்தில் முன்னூற்றிப்பதினேருலக்ஷத்து நாலாயிரங்கோடிவருஷங்களுங்கொண்ட சகாப்தம்ஆகிய முடிவுகாலத்திற்குநடந்திருக்கிற பிரம்மகல்பத்திலும் நடந்துகொண்டிருக்கிற சுவேதகல்பத்திலும் இதுவரையில்சென்றிருக்கின்ற சதுர்யுகங்களும் தேவமானவருஷங்களும் மனுஷ்யமானவருஷங்களும் மநுவந்திரங்களும் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட்பிரமாணங்களும் நைமித்திகப்பிரளயங்களும் திரிலோகசிருஷ்டிகளும் இந்தசுவேதவராககல்பத்திற்கு இனிச்சொல்லவேண்டியிருக்கின்றது.சதுர்யுகங்களும் தேவமானவருஷங்களும் மனுஷியமான வருஷங்களும் மநுவந்தரங்களும் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் நைமித்திகப்பிரளயங்களும் திரிலோக சிருஷ்டிப்புகளும் நீவிர் யெளிதில் தெரிந்துக்கொள்ளும்படி விரித்துரைப்போம்.

## கால அளவு.

நிமிஷம் பதினைந்துகொண்டது காஷ்டை 1. காஷ்டைமுப்பதுகொண்ட கலை 1. அக்கலை முப்பதுகொண்டது முகூர்த்தம் 1. முகூர்த்தம் முப்பதுகொண்டது இராப்பகல் இரண்டுங்கூடியது ஒருநாள்-நாள் பதினைந்துகொண்டது ஒருபக்ஷம்-சுக்லபக்ஷம்-கிருஷ்ணபக்ஷம் இரண்டுங்கொண்டது ஒருமாதம்-மாதமிரண்டு கொண்டது இருதுஒன்று- இருது மூன்றுகொண்டது அயனம் ஒன்று. தேவர்களுக்குப் பகற்காலமாகிய உத்தராயணம்இரவாகிய தக்ஷிணாயனம் இரண்டுகொண்டது மனுஷியமானவருஷம் ஒன்று ஷ வருஷம்ஒன்றுக்குத் தேவநாள்ஒன்று தேவநாள்முப்பதுக்கு தேவமாதம்ஒன்று - தேவமாதம்பனிரெண்டிற்கு தேவமானவருஷம்ஒன்று இந்தப்படி தேவமானத்தில் நாலாயிரத்தெண்ணூறுவருஷங்களும் மனுஷியமானத்தில் பதினேழுலக்ஷத்திருபத்தெண்ணாயிரம் வருஷங்களுங்கொண்டது கிருதயுகம தேவமானத்தில் மூவாயிரத்தறுநூறு வருஷங்களும் மனுஷியமானத்தில் பனிரண்டு லக்ஷத்தித்தொண்ணூற்றாறாயிரம் வருடங்களுங்

கொண்டது திரேதாயுகம் தேவமானத்தில்இரண்டாயிரத்திநா னூறு வருடங்களும் மனுஷியமானத்தில் எட்டுலக்ஷத்திஅறுபத் தினாயிரம் வருடங்களுங்கொண்டது துவாபரயுகம். தேவமா னத்தில் ஆயிரத்திருநூறு வருடங்களும் மனுஷியமானத்தில் நா லுலக்ஷத்து முப்பத்திரராயிரவருடங்களுங் கொண்டது கலியுகம்- தேவமானத்தில் பன்னீராயிரம் வருடங்களும் மனுஷியமானத்தி ல்-நார்பத்துமூன்றுலக்ஷத்தி யிருபதினாயிரம் வருடங்களுங்கொ ண்டது தேவர்களுக்கு ஒருயுகமென்று சொல்லப்பட்ட சதுர் யுகம் ஒன்று.

இப்படி ஆயிரம் சதுர்யுகங்களும்தேவமானத்தில்ஒருகோடி இருபதலக்ஷம் வருடங்களும் மனுஷியமானத்தில் நானூற்று முப்பத்திரண்டுகோடி வருடங்களுங்கொண்டது பிரமனுக்கு (ஒ ருபகற்) காலமென்னும் இந்தப்பகற்காலத்துக்குள் பதினாலுமனு க்களுடைய அத்திரங்களும் பதினாலு தேவராஜாக்களுடைய அதி காரங்களும் ஆயுட்பிரமாணங்களும் சம்பூரணமென்றும் அவர்க ளில் ஒவ்வொருவருக்கும்அதிகாரங்களும் ஆயுட்பிரமானங்களும் எழுபத்தொரு சதுர்யுகங்களும் தேவமானத்தில் எட்டு லக்ஷத் துஐம்பத்திராயிரம் வருடங்களும் மனுஷியமானத்தில் முப்பது கோடி அறுபத்தேழுலக்ஷத்து இருபதினாயிம் வருடங்களுங்கொ ண்ட காலங்களென்றும்இரண்டாயிரம் சதுர்யுகங்களும்தேவமா னத்தில்இரண்டுகோடி நாற்பதுலக்ஷம் வருடங்களும் மனுஷிய மானத்தில் எண்பத்தாறு லக்ஷத்து நாற்பதினாயிரம் வருடங்கள் கொண்டது பிரம்மதேவனுக்கு(ஒருநாள்) இதுமகாவிஷ்ணுவினு டைய யோகநித்திரைக்குக் காரணமாகிய இந்தநாளிரவில் (நைமி த்திகப்பிரளயம்) உண்டாகுமென்றும் அந்தப்பிரளயாக்கினி ஜ் வாலையினால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு மறுதினம் பகலில் முன்போல சிருஷ்டிக்கப்படுமென்று உணர்ந்துக்கொள்ளவும்.

மேற்கண்ட பிரம்மதினம் முப்பதும் அறுபதினாயிரஞ்சதுர் யுகங்களும் தேவமானத்தில்எழுபத்திரண்டுகோடி வருடங்களும் மனுஷியமானத்தில் இருபத்தையாயிரத்தித் தொளாயிரத்தி யி ருபதுகோடி வருடங்களும்கொண்டது பிரமனுக்கு ஒருமாத மென்றும்-இந்த ஒருமாதகாலங்களுக்குள் நானூற்றிருபதுமனு வந்தரங்களும் நானூற்றிருபத்தைந்து தேவராஜாக்களுடையஅ திகாரங்களும் ஆயுட்பிரமாணங்களும் சம்பூரணமென்றும் இதில்

முப்பதுதரம் நைமித்திகப்பிரளயத்தால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு மறுபடியும் சிருஷ்டிக்கப்படுமென்றும் மேற்கண்டமாதம்பனிரெண்டும் ஏழுலக்ஷத்திருபதினாயிரம் சதுர்யுகங்களும் தேவமானத்தில் எண்ணூற்றிருபத்தினான்கு கோடிவருடங்களும் மனுஷியமானத்தில் மூன்றுலக்ஷத்திப் பதினோராயிரத்தி நாற்பது கோடிவருடங்களுங்கொண்டது பிரம்மனுக்கு ஒருவருடமென்றும்-இந்த ஒருவருடகாலத்துக்குள் ஐயாயிரத்தி நாற்பது மனுவந்திரங்களும் ஐயாயிரத்திநாற்பது தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட்பிரமாணங்களும் சம்பூரணமென்றும் - இதில் முன்னூற்றிருபதுதரம் நைமித்திகப் பிரளயத்தால் திரிலோகங்களுந் தகிக்கப்பட்டு மறுபடியும் சிருஷ்டிக்கப்படுமென்றும்-மேற்கண்டவருடம் நூறும் ஏழுகோடி யிருபதுலக்ஷம் சதுர்யுகங்களும் தேவமானத்தில் எண்பத்தாராயிரத்தி நானூறுகோடிவருடங்களும் மனுஷியமானத்தில் முன்னூற்றிப் பதினொருலக்ஷத்து நாலாயிரங்கோடி வருடங்களுங்கொண்டது பிரம்மனுக்கு சகாப்தமாகிய முடிவுகாலமென்றும்-இந்த நூறுவருட காலங்களுக்குள் ஐந்துலக்ஷத்துநாலாயிரம் மனுவந்தரங்களும் ஐந்துலக்ஷத்து நாலாயிரம் தேவராஜாக்களுடைய அதிகாரங்களும் ஆயுட்பிரமாணங்களும் சம்பூரணமென்றும்-இதில் முப்பத்தாராயிரந்தாம் நைமித்தியப் பிரளயத்தால் திரிலோகங்களும் தகிக்கப்பட்டு முப்பத்தையாயிரத்தி தொளாயிரத்தித் தொண்ணூற்றெண்பதுதரம் சிருஷ்டிக்கப்படுமென் றறியக்கடவாய். அந்த அளவைஉலகோரறியும்பொருட்டு மகாரிஷிகளால் அனேகசுருதிகளிற் புகட்டியிருக்கின்றது.

## காலப்பிரிவு.

கேளும் பார்வதி! காலமென்பது ஆகாயத்தைப்போல் அகண்டமானதோர்பொருள். அளவின்றிப் பொங்கிவருகின்ற ஒரு பேராற்றிற்குத் துறைகளில்லாவிடின் அஃது உபயோகப்படாதது போல இக்காலமும் பிரிவுகளில்லையாயின் எதற்கும் பயன்படாது. ஆனதால் வரைவுண்டாகப்பட்டது.

சூரியன்முதற் சனிவரையிலுமுள்ள ஏழுகிரகங்களும்படைப்புக்காலம்போல மறுபடியும் மேடவிராசியிற் சரியாய்ச்சேருங்காலத்தை யுகமென்று கற்பித்தனர். அதின்தொகை நாற்பத்து

மூன்றுலட்சத்திருபதினாயிரம். அதனைப் பத்துப்பங்காக்கிமுதல் யுகமாகிய கிருதயுகத்திற்குநான்குபங்கும்-இரண்டாவதாகியதிரேதாயுகத்திற்கு மூன்றுபங்கும்-மூன்றாவதாகிய துவாபரயுகத்திற்கு இரண்டுபங்கும்-கடைப்பட்டதாகிய கலியுகத்திற்கு ஒருபங்குமாகப் பிரித்துவைத்தார்கள். ஏன் அப்படிப் பிரித்தனரெனிற்-தருமமானது அந்தந்தக் காலத்தில் நான்குபங்கு-மூன்றுபங்கு-இரண்டுபங்கு-ஒருபங்கு இப்படி நடப்பதனாலெனவறிக.

சனிக்குக் ககோளமண்டலத்தை ஒரு தரஞ்சுற்றிவர ஏறக்குறையமுப்பது வருடஞ்செல்லுகின்றமையாலும், குருவுக்குப்பன்னிரண்டுவருடஞ்செல்லுகின்றமையாலும்-அங்காரகனுக்குப்பதினெட்டுமாதஞ்செல்லுகின்றமையாலும்-சூரியனுக்கு ஒருவருஷமுஞ் சுக்கிரன்-புதன் இவர்களுக்கு நாலுமூன்றுமாதமுஞ்-சந்திரனுக்கு இருபத்தேழுநாளுஞ் செல்கின்றமையாலும் - இக்கிரகங்களுடைய மத்திமகதியின் சிறுகுணனம் அறுபதுவருடமாவதுபற்றி அறுபதுவருடம் ஒரு சக்கரமென்கிற ஏற்பாடுண்டாக்கப்பட்டது. அவ்வருடங்களுக்குப் பிரபவாதி முதலான பெயர்களோ நாரதருடைய மக்கள் பெயராலிடப்பட்டன.

வருடஞ் சூரியனது இயக்கத்தினால் ஏற்படுத்தப்பட்டது; சூரியனியக்கத்தினாலானது சௌரமானவருடம் என்னப்படும். அமாவாசைக்கமாவாசை ஒருமாதமெனக்கொண்டு சந்திரனியக்கத்தால் ஏற்படுத்திய வருடஞ் சாந்திரமானவருடம் என்னப்படும். முந்நூற்றறுபதுநாட் கணக்கிட்டு ஏற்படுத்தியவருடஞ் சாவனவருடம் என்னப்படும். முந்நூற்றறுபத்தைந்துநாட் கணக்கிட்டு ஏற்படுத்திய சௌரமான வருடந்தான் உலகத்திற் பெரும்பாலும் உபயோகமானது.

சூரியன்-ஒரு ராசியிலிருந்து மற்றோரிராசிக்குப்போகுங்காலத்தை மாதமெனக்கொண்டு வழங்குகின்றார்கள். அது சௌரமானமாதம். இவைகளுக்கு மேஷமாதம்-ரிஷபமாதம்-மிதுனமாதமென ராசிப்பெயர்வழங்குவதுண்டு. சித்திரை முதலானபெயர்களோ வடமொழியிற் சாந்திரமானப்பெயர்களின் திரிபு ஆனாலுஞ் சௌரமானமாதங்களுக்கே வழங்குகின்றன. எப்படியெனிற் சித்திரைநட்சத்திரத்தோடு கூடிய பௌர்ணமை எந்தமாதத்தில் வருகின்றதோ அதுசைத்திரம்; அது சித்திரை யென்றாயிற்று.

விசாகத்தோடுகூடிய பௌர்ணமையுடைய மாதம் வைகாசம்; அது வைகாசியெனத்திரிந்தது ஆனியென்பது மூலநக்ஷத்திரம், அதனோடுகூடிய பௌர்ணமையையுடையது ஆனிமாதம். தேவதைகளின்பகலுக்குக் கடைசியாதலால் ஆஹாமென்றாகித் தமிழில்ஆனியெனத் திரிந்ததென்பாரும் உளர். ஆஷாட நட்சத்திரத்தோடுகூடிய பௌர்ணமையுடைய மாதம் ஆஷாடமென்றாகித் தமிழில் ஆடியென்று இடைக்குறையும் இகரவீறுமாக வழங்குகின்றது இப்படிப் பன்னிரண்டு மாதமும் பன்னிரண்டு நக்ஷத்திரங்களின் பெயரினாலே வழங்குகின்றன.

## வாரங்களின் பிரிவு.

வாரங்களுண்டானவிதஞ் எவ்வாறெனில் ஒரு தினத்திற்கு இருபத்துநான்கு ஓரைகளுண்டு. ஆகவே ஒருஓரை இரண்டரை நாழிகைஅது ஜோதிடபலனுக்காக ஏற்படுத்தப்பட்டது அஃது ஓரிலக்கனத்திற்முற்பாதியும் பிற்பாதியுமாகின்றது.முற்பாதியை பகலென்றும், பிற்பாதியை இரவென்றுஞ்சொல்வார்கள். எந்தத் தினத்திற்கு எந்தக் கிரகத்தினோரை முதலில் வருகின்றதோ அந்தக்கிரகத்தின்பெயரால் அந்தத்தினம் வழங்கப்படும்; சனி-குரு அங்காரகன்-சூரியன்-சுக்கிரன்-புதன்-சந்திரன் என்பது கிரகங்கள்நிற்கும் வரிசையாம். இவ்வரிசைப்படியே ஞாயிற்றுக்கிழமைக்குச் சூரியன்முதல் இருபத்துநான்கோரை எண்ணிக்கழிக்கமறுநாட்காலமே சந்திரஓரைவரும். அதனல் அது திங்கட்கிழமையாயிற்று. இப்படி முறையே இருபத்துநான்கு இருபத்துநான்காகக் கழித்துப்போக ஏழுவாரங்களும் ஏற்படுகின்றன.

திதிகள் சந்திரன்சூரியனைச்சேர்ந்தும் பிரிந்துஞ் செல்வதனல் உண்டாயின. மற்றவைகளும் இப்படியே காரணப்பற்றினவைகளேயன்றிக் காரணம் இல்லாதவையல்ல. கௌரியே! நீ விரும்பியபடி காலஏற்பாட்டைச்சொன்னேன். இனிக் கல்பாந்தப் பிரளயயென்னும் கதையைமுடிக்கின்றேன் கேளென்றியபலாயினர்.

## கல்பாந்தப் பிரளயம்.

கேளும் பார்வதி, யுனக்கு போதனசக்தியுண்டாகும்படி காலஅளவை விரித்துச்சொன்னேன். இனி கற்பத்தின்முடிவையுஞ் சொல்லுகிறேன் கவனித்துக் கேட்கக்கடாவாய். உலகத்தில்மூன்றுவிதப் பிரளயங்களுண்டு அதுயாதெனில் நைமித்தகமென்றும்

பிராகிருதமென்றும் ஆத்தியந்தகம்என்றும் மூன்றுவகைப்படும். கல்பத்தின் அந்தியத்தில் நான்முகனுளுண்டாவது நைமித்திகப் பிரளயமென்றும், இரண்டாவது பரார்த்த அளவாயுள்ள பிரம தேவனது ஆயுளின் அந்தியத்தில் நேரிடுவது பிராகிருதப் பிர ளயமென்றும் சாமானிய மனிதருக்குக்கிட்டாத மேலாகியமோ க்ஷப் பிராப்திபெஆத்தியக்தகப் பிரளயமென்றுரைக்க சிவத்தை பார்வதி நோக்கி ஓ சுவாமி! பிராகிருதப் பிரளயத்தின் அளவை யறிந்து தெளிவடையும்படி பரார்த்தத்தின்கணக்கை அடியாளுக் கு விரித்துரைக்கவேண்டுமென்று வேண்ட பாமசிவன் அருளிச் செய்கிறார்.

கேளாய் பார்வதி! ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் பத்துலக்ஷம் கோடி பத்துகோடி நூறுகோடி என்று வரி சைக்கிரமமாய்சொல்லப்பட்ட கணக்கின்படியே பதினெட்டாவ து ஸ்தானத்தை பரார்த்தமென்று சொல்லப்பட்டது. இந்தபரா ர்த்தகாலம் இரண்டு கடந்தால் பிராகிருதப்பிரளயமுண்டாகும், அத்ததியில்வியக்தமானது தனக்கிடையில்விளங்கும் அவ்வியக் தத்சில்லயித்துவிடும் மனிதருடைய ஒருமையை நிமிடமென்று சொல்லப்பட்டது ஒருமாத்திரை, இம்மாத்திரைகள் பதினைந்து கூடியது ஒருகாஷ்டை இப்படி முப்பது காஷ்டைகள்கூடியது ஒ ருகலை. இக்கலைகள் பதினைந்துகூடியது ஒழிநாழிகை. இந்த நாழி கைப் பன்னிரண்டரைப்பலம் நிரையுள்ள ஜலத்தினால் நாழிகை யென்று கணக்கிடப்படும். அதெவ்வண்ணமெனில் மகததேசத்தி ன்ஒருபடி நீரளவாகும் அதையும் விள்ளச் சொல்லுகிறேன் கே ளும் மின்னினொளியைப்பழிக்கும் திரேகாந்தியையுடைய பெண் ணே! இருபதுகுன்றியின் இடையுள்ள பொன்னினால் நான்கு அங்குல நீளமாகச்செய்தஊசியைக்கொண்டு மகததேசத்துப்படி யைத் துளைசெய்து அதைத் தண்ணீரில்மூழ்த்த எவ்வளவுநேரத் தில்அப்படிநிரையுமோ அவ்வளவு காலம் ஒருநாழிகையென்று கருதப்படும். அல்லது அப்பாத்திரத்தில் தண்ணீர்விட்டு நிரைப் பி துவாரத்தின்வழியாகத் தண்ணீர்முழுமையும் ஒழுகிவிடும்கா லம் ஒருநாழிகை. இந்த நாழிகையிரட்டித்தது ஒருமுகூர்த்தம். இந்தமுகூர்த்தங்கள் முப்பதுகூடியது பகலிரவுஞ் சேர்ந்த ஒரு நாள்; இந்தநாள் முப்பதுசேர்ந்தது ஒருமாதம். பனிரண்டு மா தங்கூடியது ஒருவருடம்; இந்த வருடம் தேவர்களுக்கு ஒரு இராப்பகல் அப்படிப்பட்ட இராப்பகல் முன்னூற்றறுபது ஆகில்

தேவவருடம்ஒன்று. அப்படி பன்னீராயிரம் வருடம் சேர்ந்தால் சதுர்யுகம் ஒன்று. அந்தச் சதுர்யுகம் ஆயிரமானால் பிரமனுக்கு ஒருநாள். அதற்குத்தான் கல்பமென்றுபெயர். அதின்அந்தியத்தில் நேரிடுவதுதான் சதுர்முகசம்பந்தமான நைமித்திகப் பிரளயம்; (இனி)அதிக உக்கிரமான கல்பப்பிரளயத்தினது பிரபாவத்தைச்சொல்லுகிறேன்.

கேளும் மலமகளுங் கலைமகளுங்கொண்டாடும் மலைமகளே! ஆயிரஞ்சதுர்யுகங்களின் அந்தியத்தில்க்ஷாமம்-பசி-தாபம்-நோய் முதலியவைகளாலே மண்ணுலகமானது பெரும்பாலும் நசித்து மிருகடுமையாய் நூறுவருடங்கள் வரையில் மழையில்லாமல் புல் பூண்டு முதலியனவெல்லாம் தீய்ந்து கட்டாந்தரையாயிருக்கும்; அந்தக்கொடிய தீக்ஷண்ணியத்தினாலே ஜெந்து ஜாலங்களெல்லாம் மடிந்துபோகும் பின்பு ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் சங்காரத்தொழிலைப்பூண்டு ரௌத்திராகாரமான ருத்திரவடிவங்கொண்டு அகிலபிராணிகோடிகளையும் தமது வயிற்றிலிருக்கும்படி வகித்துச் சூரியனிடஞ்சென்று அவனது கிரணங்களைக்கொண்டு கிணறுகள்-ஓடைகள்-நதிகள்-மடுக்கள்-கடல்கள்-அருவிமுதலானதுகளிலும் பிராணிகளிலும் பூமிகளிலும்உள்ள நீரையெல்லாம் கிரகித்துத் துளித்தண்ணீரேனும் பெங்குமில்லாமல் உண்டபடியினாலே அந்த ஆதித்தக்கிரணங்களேழும் மிகப்பெருத்துவிளங்கியது. அதனைக்கண்டபுருடோத்தமன் ஏழுகிரணங்களையும்,ஏழுசூரியர்களாகச் சிருஷ்டித்துக் கீழுமேலுமாகச் சென்று மூன்றுலோகங்களையும் எரித்துச் சாம்பலாகும்படி கட்டளையிட.அவ்வாறேஏழுசூரியர்களுஞ்சென்று வாட்டுகிறபோது புல்பூண்டுமுதலான ஓடதிகள்யாவும் எரிந்துபொரிந்து கறிந்துச்சாம்பலாகி எங்கும்பசையென்பது இல்லாமல் ஆமையோடுபோல் கடுமையாக விளங்கும். அதன்பின்பு ஆதிமத்தியாந்தாதிகள் பாதாளலோகத்திற்குச்சென்று ஆதிசேடனதுசுவாச வாயுவினாலுண்டாகிய காற்றினால்காலாக்கினி ருத்திரவடிவங்கொண்டு அப்பாதாளலோகங்களையெல்லாம் சுட்டுக்கரிக்கிவிட்டு ! பூமிக்குவந்து பூமியையுங்கொளுத்தி, அங்கேநின்றும் அந்தப் பிரளயகாலாக்கினி ஜ்வாலைமிகுந்தஆக்கிரகத்துடன் மேலுலகங்களிற்சென்று புவர்லோக சுவர்லோகங்களையுஞ்சுட்டுக் கொளுத்திக்கொண்டு அங்குதானே யுலாவிக்கொண்டிருக்கும். இந்தப்படியாக பிரளய காலாக்கினி ஜ்வாலைக

ளாலே கவியப்பட்டு மூவுலங்களினுமுள்ள சராசரவஸ்துக்கள் யாவும் நசித்து மூன்றுலோகங்களும் பொரிவருக்கப்பட்ட கறுகயுத்த சட்டியைப்போலவிருக்கும்.

மேலும் கேளாய்பார்வதி! புவர்லோகசுவர்லோகங்களில் வசிக்கிற மனுவாதிஅதிகாரிகள் அந்தப்பிரளயகாலாக்கினி ஜ்வாலைகளினாலே அதிகதாபமடைந்தவர்களாகிச் சகிக்கமுடியாமல்மகாலோகஞ்சேருவார்கள். அங்கும்பிரளயகாலாக்கினி ஜவாலைகளுக்குத்தாளாமல் பெருந்தாபமுற்றவர்களாகி அதற்குமேன்மையானஜனலோகத்தைஅடைவார்கள். அவர்களுக்குள் யாவர்பரப்பிரம்மத்தையடையவேண்டி பக்திசெய்தார்களோ அப்படிப்பட்ட உத்தமபுருடர்கள் மேலுங்கிழுமாய் பத்துதரம் உலாவிஉலாவி தபோலோக சத்தியலோகங்களையடைந்து முடிவில் பரப்பிரம்மத்தையடைந்து நிரதிசயானந்த சுகத்தை யனுபவித்துக்கொண்டிருப்பார்கள் ஆதிமத்திமம் அந்தியமென்று சொல்லப்பட்ட மூன்றுலகங்களிலுமிருக்கப்பட்ட மற்றபிராணிகள் யாவரும் பிரகிருதியில் இலயப்பட்டிருப்பார்கள்.

## நைமித்திகப் பிரளயம்.

இந்தப்படியாக ருத்திரரூபம்பெற்ற ஸ்ரீவிஷ்ணுபகவான்சகலசராசரங்களையும் சாம்பலாக்கித்தன் சுவாசத்தினிடமாய் அனேக மேகங்களையுண்டாக்குவார் அதனாலே அந்த மேகக்கூட்டங்கள் யானைக்கூட்டங்களைப்போல அதிகபயங்கரமான மின்னல்யிடிகளுடன் கூடிப்பிரளயகால மேகங்களாகத் தோன்றி ஆகாய வீதியிற் சென்று விளங்குகின்றன. அவைகளின் வர்ன்னபேதங்கள் பலவுண்டு அது யாதெனில் கறிநெய்தல் மலருக்கு நிகராகிய சிலமேகங்களும் ஆம்பலைப்போல சிலமேகங்களும் கறுஞ்சிவப்புங் கலந்த சிலமேகங்களும் பொன்னிறமாகிய சில மேகங்களும் கருமை நிறமாகிய சிலமேகங்களும், வைடூரியத்திற் கிணையாகிய சிலமேகங்களும், இந்திரநீலத்தின் நிறமாகிய சிலமேகங்களும், சங்குமுல்லைகளுக்கு இணையாகிய சிலமேகங்களும், மைவண்ணமாகிய சிலமேகங்களும், தாம்பூலப் பூச்சிகளைப்போல் சிலமேகங்களும், கூந்தற்பனையையொத்த சிலமேகங்களும், பறவையின் சிறகை நிகர்த்த சிலமேகங்களும் தோன்றும் இந்தப்படியாகப் பற்பல நிறங்களுடன்கூடிய அந்தப்பெரிய மேகங்களின்பருமன்

எவ்வளவெனில் நீண்டு விசாலம்பொருந்திய பெருத்தநகரங்களை நிகர்த்து-சிலது பர்வதங்களைப்போலவும் கரியைப்போலவும்-பரியைப்போலவும். சிறிய பெரிய உருவங்களைப்பெற்றமேககூட்டங்களானது மகாமேருவும்அதிரும்படிக் கர்ச்சித்துக்கொண்டுவிண் முழுதும் மறைத்துநின்று பெருந்தாரைகளைப் பொழிந்து முன்னம் நவின்றதுபோல மூன்று லோகங்களையும் பற்றியெறிக்கின்றஅந்தப் பிரளயகாலாக்கினியென்னும் பெருந்தீயைத் தணிக்கின்றன. அத்தி தணிந்தபின்னும் இராப்பகல்ஓயாமல்மலைகளைக் கொண்டு கொட்டுவதைப்போல வருஷித்து அப்பெருந் தாரைகளினுலே பூமிமுழுதையும் ஜலமயமாக்கிப்பின்பு முறையே புவர்லோகத்தையும் அதற்குமேலுலகங்களையும் அந்தப்படியே ஜலமயமாகச்செய்யும். இந்தப்படியாக அந்தகாளமேகங்கள் சராசரங்கள்அனைத்தும்அந்தகார யிருள்மூடிய மூன்றுலகத்திலும்இடைவிடாது நூருவருஷத்துக்குமேலும் மழைபொழிந்துக்கொண்டிருக்கு மென்றறிவாய்பார்வதி? நித்தியனுகியும் உத்தமனுகியும் எந்திசையிலும் வியாபித்து பரமாத்துமாவாகியும் விளங்குகின்ற பரப்பிர்ம்மத்தினுடைய மகிமையினுலே கல்ப காலாந்தியத்தில் இந்தப் படியெல்லா மாகின்றது.

## பிராகிருதப் பிரளயம்.

கேளாய் பார்வதி! இந்தநைமித்திகப் பிரளயஜலமானது சப்தரிஷிகள்வசிக்கும் உன்னதஸ்தானத்தை யளாவிநிற்கின்றதனுல் மூன்றுலோகங்களும் ஏகார்ணவமாய்நிறைந்து சூழ்ந்திருக்கும்அதுகால் பரப்பிரம்மசொரூப லலாடத்தி னின்றும் ஒரு சுவாசக் காற்றுண்டாகி விடாதமழைபெய்கின்றன அந்தபிரளயகாலமேகங்களை எல்லாம் பஞ்சுபோலப் பரக்கடித்து நாசஞ்செய்துக்கொண்டு நூறுவருஷம்வரையில் ஜெஞ்சமாருதமென்னுங் காற்று வீசிக்கொண்டிருக்கும். பின்பு சர்வஜெகத்தையும் தன் குக்ஷிக்குள் வைத்து ரக்ஷிப்பவனுகியும் யோகீஸ்வரர்க்கும் வேதங்களுக்கும் நினைக்கஅறிதாகியும்அனுதிபுருஷனுகியும் இவ்வுலகத்திற்குஆதி அந்த மகதாவாவாகியும் விளங்கும் விராட்புருஷனுனவர் அந்த ஜெஞ்சமாருதக்காற்றை புசித்துப்பரப்பிரமசொரூபத்துடன்அந்தஏகார்ணவ ஜலப்பிரளயத்திலே ஆதிசேஷன்மீது சயனித்து யோகநித்திரையிலிருப்பார். அப்போது ஜனலோகத்தில் வசிக்கும்சனகாதியோகீஸ்வரர்களும் பிரம்மலோகத்தில் வசிக்கும் முக்

திக்குடைய முமுட்சுக்களும் வாசுதேவனென்னும் திருநாமத்தைத் துதித்துக்கொண்டாடத் திருக்கண்வளர்ந்தருளுவார். இதற்குத் தான் நைமித்திகப் பிரளயமென்னுந்திருநாமம். ஏனெனில் ஸ்ரீவிஷ்ணுவானவர் பரப்பிரமசொரூபந்தரித்து அந்தகாலத்தில் சேஷன்மீது சயனிப்பது காரணமாகயிருப்பதனு லென்றறியும். சர்வாத்துமகனை அந்தஜெகதீசன் எப்போது துயிலெழுந்து எழுந்திருப்பாரோ அப்போது உலகங்களெல்லாம்அசையும் அந்த பகவான் யோகநித்திரையிலிருப்பாராயின் உலகங்கள்யாவும் அந்தகாரஞ்சூழ்ந்து கண்மூடிப்போம் ஆயிரம் சதுர்யுகம் அளவான பிரமதினம் யாதுளதோ அவ்வளவுகாலமே இரவாகும். இவ்விரவின்அந்தியத்தில் ஸ்ரீஅச்சுதன் திருக்கண்விழித்துக்கொண்டு பிரமரூபத்துடன் மருபடியும்உலகத்தை சிருஷ்டித்தருளுகிராரென்று முன்னமே உனக்குச்சொல்லியிருக்கிரேனன்றோ இந்த கல்பத்தின் அந்தியத்தில் செய்யும் சங்காரம்தான் அவாந்தரப்பிரளயம் இஃது நைமித்திகப்பிரளயத்தின் உட்பிறிவாகும் இனிப் பிராக்ருதப் பிரளயத்தின் விவரத்தைச் சொல்லுகிறேன் கவனித்து கேட்பாயாக.

கேளும் பார்வதி! முன்னம் யான்சொல்லியபடி மழைபெய்யாமல் க்ஷாமம்நேரிட்டுசிதாகமாகிநோய்முதலானவைகளினலே சகலலோகங்களும் பாதாளங்களும் நசித்து க்ஷீணிக்கும்படியாக ஜெகதீசன துநினைப்பினுலே பிரளயம்நேரிட பிரதமத்தில் ஜலம்பூமிஇவைகளின் சாரமாகிய சத்தைக்கிரகிக்கிறது-சத்தைக்கிரகித்தவுடனே பூமியான துலயப்பட்டதாகி நசித்து ஜலமாய்விடுகிறது அந்தஜலம்பெருகி அதிகவேகமும் அதிக ஓசையுமுள்ளதாகியாவற்றிலும் பூரணமாய்நிறைந்துக்கொண்டுஅலைகளுள்ள பிரவாகத்துடன் லோகங்களின்அந்தியமளவும் ஓடியுலாவி நிறைந்திருக்கும் அந்தஜலத்தின்குணமான சாரத்தைப் பிரகாசம்கிரகிக்க-அந்தஜலம் ரசதன்மாத்திரையற்றுப் பிரகாசமாகின்றது இவ்வண்ணம் ஜலம்அக்கினியாகி மிகுந்தப்பிரகாசம்பொருந்தினதாய் யாவற்றிலும் நிறைந்துயிருக்கிறது இந்தப்படி நாற்புறமும் ஜ்வாலைமயமாய்நிறைந்திருக்கிற அவ்வக்கினியின்குணமாகிய ரூபத்தைக் காற்று கிரகித்துக்கொள்ளுகிறது. ரூபசாரம் நசித்ததனலே அக்கினியற்று காற்றுமிகவும்வீசுகின்றது. இதனலே யெங்கும் ஒளியற்று காற்றே பேரிரைச்சலுடன்ஆகாயத்தைப்பற்றி வீசிக்கொண்டிருக்க அதன்குணமாகிய சாரத்தைவானம்கிரகித்துக் கொள்ளு

கின்றது. பிறகுவாயு நசித்து வானமொன்றேஆவரணமின்றிநிற்கும். ரூபரச கந்த சத்தமே இலக்கமுடையனவாய் அவயமில்லாததாய்மிகவும்பெருத்திருக்கிறஅந்தவானமானது யாவற்றையுஞ்சூழ்ந்துக்கொண்டு விளங்கும் இவ்வண்ணம் எட்டுதிக்கு சுற்றும்வட்டமாய்அனைத்தையுங் கொள்ளுமிடமாய் யாவற்றையுஞ்சூழ்ந்துக்கொண்டு நின்ற அந்த ஆகாயத்தின் குணமாகிய சாரத்தைபூதாதிகிரகிக்கின்றது. அந்தபூதங்களும் இந்திரியங்களுங்கூடிபூதாதியில் லயப்படும்-அபிமான ரூபமாகிய இந்தப் பூதாதியானது தமஸ்சைப் பிரதானமாகக் கொண்டதனாலே தாம்சமென்றுசொல்லப்படும். இந்தப்பூதாதியென்று சொல்லப்பட்ட அகங்காரத்தை புத்தியேக்ஷணமாகக் கொண்டமகத்துக்கின்றது இந்தஅண்டத்துக்குள்ளாக பூமியும் மகத்தும் முதலெல்லையும் கடையெல்லையுமா யிருக்கின்றன.

ஓ மதியில்மிகுந்த பார்வதியே! இந்தப்படியே இவ்வண்டத்திற்குப்புறத்திலுள்ள பிரகிருதிமுதல் மகத்தீராகின்றஎழுபிரகிருதிகளுஞ் சங்காரகாலத்தில் முன்னுரைத்தபடி தத்தமக்குள்ள வஸ்துகளிலே தாம்தாம் லயப்படுகின்றன. அதெப்படியெனில்இவ்வுலகத்தை மூடிக்கொண் டிருக்கின்ற அந்த அண்டரூபமானபிருதிவியானது அதைச் சூழ்ந்திருக்கும் அப்புவிலும்-அவ்வப்புஅகங்காரத்திலும்-அகங்காரம் தேஜசிலும் - தேஜசுவாயுவிலும்-அவ்வாயுஆகாசத்திலும்-அவ்வாகாசம் பிரகிருதிகிரகிக்கப்படும்அதிகப்படாமலும் குறைபடாமலும் முக்குணங்கள் சமமாகவிருப்பதுதான் பிரகிருதியென்றுசொல்லப்படும். அது மூன்றுலகங்களுக்குங் காரணமாகயிருப்பதால் பிரதானமும் ஏதுவுமாகியிருக்கின்றது இந்தப்படிபிரகிருதி வியத்தஸ்வரூபமாகியும் அவியத்தஸ்வரூபமாகியு மிருக்கின்றது. ஆகையால் வியத்தம் லயப்படுகின்றது எப்போதும் சாந்தகுணத்தையே பொருந்தினவனாகியும் சீலமாகிய சுபாவனாகியும் மரணமில்லாதவனாகியும் சேதனாசேதனங்களின் உள்ளும் புறம்புமாய் வசிப்பவனாகியும் விளங்கும்பதுமநாபன் பரமாணுரூபியாகையினாலே-பிரகிருதியிலும் சம்பந்தபடாதக்கவனாகியுமிருக்கிறபுருஷனும்-பிரகிருதிபோல பரமாத்துமாவினுடைய அம்சமாகவிளங்குகின்றான். பரமாத்துமா எப்படிப்பட்டவரென்றால் நாமம்ரூபம்பேதம்முதலாகிய குரோதங்களற்று சுபேதனாகிஎன்றும்அழிவில்லாமலிருப்பதே யியர்க்கையாக வுடையவ

ஞகி எவர்களும் நன்னே பக்திபண்ணியடையவேண்டிய உன்னித பதவிக்குக்காரண கர்த்தாவாகியும் பரமாநந்த சொரூபனுகியும் ஜெகதீசனுகி சர்வஜீவாத்துமாவுக்கும் மேற்பட்டவனுகி விளங் கும் மகாவிஷ்ணு அந்தவிஷ்ணுவேபரபிரமம். யோகியானவன் அ ந்த விஷ்ணுவையடைந்து மருபடி திரும்பாமல் கலந்திருப்பான். வியத்தாவியத்த சொரூபமான பிரகிருதியும்-புருஷனென்றுசொ ல்லப்பட்ட ஜீவனும் இவ்விரண்டும் அந்த பரமாத்துமாவிலேதான் கலந்துவிடும். அந்த பரமாத்துமாவே யாவற்றிற்கும் காரணகா ரியமான சர்வேஸ்வரன். அவன் கர்மகாண்டமான வேதத்திலும் பிரமகாண்டமான வேதாந்தத்திலும் விஷ்ணுமுதலிய ஆயிரநாம ங்களிலே தோத்திரம் பண்ணப்பட்டவனுகியிருக்கின்ருன். பிரவி ர்த்தி மார்க்கமென்றும்-நிவர்த்திமார்க்கமென்றும்இருவகையான வைதீககருமங்களினுலே சகலதேவதைகள் சொரூபியான அந்த விஷ்ணுவே சகலராலும் ஆராதிக்கப்படுகின்ருன். அது யெப்படி என்ருல்- இருக்கு-யசுர்-சாமம்என்கிற வேதங்களாகிய பிரவிர்த் திமார்க்கங்களினுலே யக்கியேசுவரனுகியும்அந்த ஸ்ரீவாசுதேவன் பஜிக்கப்படுகிருன்.

நிவர்த்தி மார்க்கத்திலே ஞானசொரூபியாகியும்-ஞானநந்த மயனுகியும் விளங்கும் அந்த விஷ்ணுவே மோக்ஷங்கொடுக்கவல்ல வனுக ஞானயெக்கியத்தைக்கொண்டு யோகிகளால் பஜிக்கப்படு கின்ருன். மேலும் குறுகலென்றும் நீட்சியென்றும் சொல்லப்பட் ட அசித்தும்வாக்குக்கு மனதுக்குமெட்டாதசித்தும் அந்தவிரா ட்சொரூபம் யாங்களேயாம். வியத்தமும் புருடனும் முத்தனும் சகலமும் எம்முடையசொரூபங்களே. அதெப்படியெனில்ஸ்ரீமந் நாராயணனே ரூபமாகி அகிலலோகங்களையும் எனது சரீரமாகக் கொண்டு விளங்குவதனுலென்றறியும். வியத்த அவியத்த சொரூ பமான பிரதானமும் புருடனும் ஒடுங்குகிருர்கள். ஆதலால்அவ் வண்ணம் ஒடுக்குவதற்கிடமான எம்விஸ்வரூபத்திற்கு இரண்டு பதார்த்தகாலமென்று சொல்லியது ஒருபகலும்-வியர்த்தமெல் லாம் பிரகிருதியிலும் அப்பிரகிருதி புருஷனிடத்திலும்-அந்தப் புருஷன் பரமாத்துமாவிலும் கலந்திருக்கும் காலம் எவ்வளவோ அது இரவாகும் ஓ பார்வதி! அழிவில்லாத நித்தியனுன அந்தபர மாத்துமாவுக்குப் பகலென்பதும் இரவென்பதுமில்லை. ஆகிலும் சிருஷ்டி-திதி-சங்காரமென்னும் இக்காரணங்களைக்கொண்டு உப

சாரவழக்கமாக இராப்பகல் வுண்டென்று சொல்லப்படுகின்றது இந்தப்படியாக நடக்கும் பிராகிருதபிரளயத்தின் பிரபாவத்தைச்சொன்னேன். ஆழியிற்றுயன்றமாயன் சகோதரியே கேள்! ரூபம்-அரூபம் என்றபதம் உனக்குத் தெரியுமாதலால் சிருஷ்டி-திதி சங்காரமென்ற ஆக்கல்-அழித்தல்-காத்தலென்னுமுத்தொழிலின் காரணத்தைபற்றியே வெவ்வேறு ரூபநாமங்கள் பெற்றேமன்றி முடிவில் விராட்டென்பதும்-பிரமமென்பதும்-பரப்பிரமமென்பது யாயேயென்றறியக்கடவாய்; ஓர் காரணத்தைப்பற்றி உனக்குத்தெரிவிப்பதால் பேதமற்றுஅளவற்று நீண்டயமது விராட்களையில் ஒன்ருகிய காத்தலுடையோனை காட்டி ப்போதிப் போமாகையால் வேறுவழியில் மனதைநாட்டி வாட்டங்கொள்ளாது நாட்டமாகக்கேட்பாயாக; இனி ஆத்தியந்திகப் பிரளயத்தின் கிரமத்தைச்சொல்லுகிறேன்.

---

## ஆத்தியந்திகப் பிரளயம்.

கேளும் பார்வதி! எத்திசைகளிலுமுள்ள பக்தர்களும் முத்தர்களும் நித்தநித்தந் துதித்தேத்தும் ஞானசக்தியே நுண்ணறிவுடைய புருஷனனவன் ஆத்யாத்மீகமென்னும் தாபங்களில்தீவிரமதியுடையவனுயிருந்து மேலாகிய பதவியையடைவான். ஆத்தியாத்மீகமென்பது யாதெனில் முதலில் ஞானம் - இரண்டாவது வைராக்கியம், இவ்விரண்டும் நாளுக்குநாள் விசேஷித்து மோட்சமென்னும் ஆத்தி யந்திகத்திற்குள்ளாகி லயத்தையடைகிறுன். ஆத்யாத்மீகதாபமானது தன்னுத்துமாவையும் தேகத்தையும் பற்றி யுண்டாகும்துக்கம். அந்த துக்கம் சரீரத்தைப் பற்றியதும் மனதைப்பற்றியதுமென இரண்டுவகைப்படும். அதில் சரீரத்தைப்பற்றிய துக்கம் பலவகைப்படும்; அவையாதெனில் - தலைவலி-பீனிசம்-சுரம்-சூலை-சோகை-ரத்தபேதி-மகோதரம் -சுவாசம்-குன்மம்- அதிசாரம-வாந்தி-குஷ்டம்-கண்வலி-பேதி முதலாகிய அனேக ரோகங்களேயாம் மனதைப்பற்றிய துக்கத்தைச்சொல்லுகிறேன் கேளும்பார்வதி! காமம்-குரோதம்-உலோபம்-மோகம்-மதம்-மாச்சரியம்-பயம்-சோகம் - அவமானம் முதலாகிய பலவகை ரோகங்களோடும் ஆதிபௌதிகமாவது ஜந்துக்களைப்பற்றி யுண்டாவது அதுயாதெனில்-மிருகப்பட்சி பிரகாச சர்ப்பமனுஷ்யா

திகளால் வுண்டாவதினலே அதுவும் அனேகவிதமுள்ளது. ஆதி தெய்வீகமென்பதுயாதெனில் அது தெய்வத்தாலுண்டாவதே யாம்; அதெவ்வண்ணமெனில் குளிர்காற்று-வெப்பம்-மழை-இடி களென்னும் பலவிதமாகும். இந்ததாபங்கள் மூன்றும், கருவினு லும்-பிறப்பினுலும்-இறப்பினுலும் மூப்பினுலும், நகரத்தினுலுஞ் செனித்துஅனேகமாயிரம் வகைகளாகின்றன. அவைகளை விபர மாகச்சொல்லுகிறேன்.

கேளும் பார்வதி! ஒரு ஜந்துவைப்பற்றி யோசித்துப் பார்க் குமிடத்தில் அந்தஜந்துவின் தேகம் வெளிப்பார்வைக்குமட்டும் அழகாகவும், மெல்லியதாகவும், ஒருவகை தோலால்மூடப்பட்டு விளங்கும், அதைப் பார்க்கப்பார்க்க மிகவும் மேன்மையாகக் கா ணப்படுகின்றது. அந்த தேகத்தினுள்ளே யிருக்கின்ற துர்க்கந்த மோவெனில் எலும்பு-தசை-நரம்பு-சீழ்-ரத்தம்-புழுக்கள்-நிறைந் த மலமூத்திரங்களால் நிறைந்து வளைந்த முதுகு கழுத்துகளி லெலும்புடையதாக விளங்கும். தாயின் கருப்பையில் யிருந்து கொண்டு சிசுவானது அன்னையுண்ணுகிற புளிப்பு-கசப்பு-துவர்ப் பு-இனிப்பென்னும் அறுசுவை யுணவுகள் தன்மேல்பட அச்சிசு அளவில்லாத வேதனைகளையடைவதுந்தவிர தன்தேகத்தைநீட்ட வும் மடக்கவுங்கூடாமல் மலமூத்திரங்களாகிய சேற்றிலே கிட ந்து ஜடாக்கினியினுலே தகிக்கப்பட்டு இப்படியும் அப்படியும் அ சைவதற் கிடமில்லாமல் துன்பமேலிட்டு மூச்சுவிடமாட்டாமல் அறிவுமேலிட்டுக்கடந்த அனேக ஜென்மங்களை நினைத்து நினைத் து மகாவிசனமுற்று கருமத்தினுற் கட்டுண்டிருக்கும். அச்சிசு வைப்பிறப்பிக்கும் நிமித்தியம் பிரமதேவன் ஒருகாற்றையேவுகின் ருன். அக்காற்றினுல் அச்சிசுவின் எலும்புகள்யாவும் நறுங்கிப் போம்படி பீடிக்கப்பட்டுபின்பு மிகுந்த பலமான பிரசவவாயுவி னுல் தலைகீழாகத்திருப்பப்பட்டு வலிவருத்தத்தினுல் மெலிவுண்டு தாயின் வுதிரத்தைவிட்டு வெளிப்படுகின்றது. அச்சிசு பூமியில் விழுந்தவுடனே வெளிகாற்றுப்பட்டு பெருமூச்சுண்டாகிமுன்னி ருந்த ஞானத்தைமறந்து தான் வெளிப்படும்போது முட்களா லே தைக்கப்பட்டதைப்போலும் துர்க்கந்தமான இரணத்திற் கொப்பாகிய யோனித்துவாரத்தினின்றும் விழுவதாலும் அச்சிசு வுக்குண்டாகும் சிரமத்தைச்சொல்லிமுடியாது. இவ்வண்ணமாக பெருத்தகஷ்டத்துடன்பிறந்த அச்சிசுவுசொரிந்துக்கொள்ளவும்

பிரளவும் சக்தியில்லாததாய் ஸ்நானபானஆகாராதிகளைப் பிறரு டைய யிச்சையின்படி பெருகின்றது. அன்னியிலும் மூத்திராதி களினாலே அசுத்தமாகிய படுக்கையிற்கிடந்து எறும்பு கொசுமு தலியவைகள் கடிக்கினும்அவற்றைத் தடுக்கமாட்டாமலிருக்கின் றது. இப்படியாக அனேகபிறப்பின் துன்பங்களையும்பிறந்தபின் னுண்டாகுந் துன்பங்களையும், மற்றுங் கணக்குமிதமில்லாதத்து ன்பங்களெத்தனையையோ வடைகின்றது, பிறகு நாளுக்குநாள் வளர்ந்து யௌவனபருவமடைந்து, மனிதன் அஞ்ஞானமாகிய அந்தகாரம் மூடிக்கொண்டிருப்பதனாலே மூடனாகி, நான்! எங்கி ருந்துவந்தேன்? இந்தஜென்மமெடுத்த எனக்கென்னபயன்? பிர வித்துன்பத்திற்குக் காரணம்யாது? காரணமல்லாததெது? எது சொல்லத்தக்கது? எதுசொல்லத்தகாதது? எது தருமம்? எது அதருமம்? என்றுபகுத்தறி வில்லாதவனாகியிருக்கிறான்.

இப்படி மிருகங்களைப்போல முழுமூடனாகிஉண்பதும், புண ர்வதும்-உடுப்பதும்-உறங்குவதுமே முக்கியமானதென்றெண்ணி அஞ்ஞானத்தினாலுண்டாகிய அனேக துக்கங்களை யனுபவிக்கின் றான். அஞ்ஞானமென்பதுயாதெனில் தாமசகுணத்தின் இயற்கை யாதலால்அதுவே மனிதர்களைக் கெட்டகாரியங்களிற் பிரவேசிக் கச்செய்து வைதீககருமங்களை மாற்றுகின்றது; சத்கருமவாசனை யின்மையினாலேயே நரகமுண்டாகின்றது; ஆகையால், அஞ்ஞானி களுக்கு இகத்திலும்-பரத்திலும் துக்கமுண்டாகின்றது; இவ்வ ண்ணம் எவ்வனங்கடந்து முதுமைநேரிடும்போது தேகமெலிந்து க்கட்டுத்தளர்ந்து பற்களாடியுதிர்ந்து திரைகள்நேர்ந்து நரம்பு கள் வெளிப்படையாகத்தோன்றி கொஞ்சதூரத்திலிருக்கும்வஸ் துக்கள் காணப்படாமல் கருவிழிஆழ்ந்து உள்ளேபோய், மூக்கின் துவாரத்திலிருந்து ரோமங்களுதிர சரீரம்நடுங்கி எலும்புகள் யா வும் வெளிப்படையாகத்தெரிய முதுகெலும்புவளைந்துபோக, ஜீ ரணமாகாததாலே உணவு நன்றாய்ச்செல்லாமல் ஈளையிருமல்மே விட்டு நாளுக்குநாள் செய்கைகள் குறைந்து படுக்கவும் எழுந்தி ருக்கவும் பெருவருத்தமாகி-காது கேளாமலும்-கண்தெரியாமலு ம்-வாயில்நின்றும் நீரொழுகத் தவித்துக்கொண் டிருக்கின்றான்; இவ்வாறு சகல இந்திரியங்களும் சுவாதீனமற்று மரணகாலம்சமீ பித்திருக்கையில் முன்னம் தான்அனுபவித்த சுகங்களைநினைத்து உருகிக்கொண்டு ஒருவார்த்தையுஞ்சொல்ல சக்தியற்றுசுவாசகா

சமுண்டாவதனாலே தூக்கமின்றி மிகுந்த ஆயாசமும்வருத்தமும் துக்கமுமுடையவனாகி எழுந்திருக்கவும் குந்தியிருக்கவும் அன்னியர்உதவிவேண்டியதால் வேலைக்காரர் மக்கள் மனைவிமுதலாகயாவரும் நிந்திக்கப்பட்டவனாகி அசுத்தனாகிஉண்ணவும் உலாவவும் மிகுந்த ஆவல்கொண்டவனாகி ஊழியர் பரிகாசஞ்செய்யவும்பந்துக்கள் வெருப்படையவும் தன்னுடைய யௌவனானுபவத்தைப் பூர்வஜென்மத்தில் அனுபவித்ததைப்போல நினைத்து நினைத்து மனஸ்தாபத்துடன் பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறான்.

இந்தப்படியாக மூப்புதிசையில் பலதுன்பங்களை யனுபவித்துமரணமடைகின்றான்; அந்த மரணத்தில் நேரிடும் துன்பங்களை கேளும் பார்வதி! கால்-கை-கழுத்துகள் கட்டுவிடப்பட்டு பெருநடுக்கமுள்ளவனாகிசித்தசுவாதீனமற்று சற்றுநேரம்அறிவும்சற்றுநேரம் அறிவழிவுமுள்ளவனாகி அசையும்பொருள் அசையாப்பொருள்முதலானவைகளிற் சுத்தப்பிரமைகொண்டு இவைகளெல்லாம் நமக்குப்பின்எப்படியோவென்று துக்கித்துவீடுமாடுஆடுமக்கள்பெண்டீர் தனம்-தானியம் முதலானவற்றிலே பெருமம்மதையடைந்து ஏங்கிக் கலங்கினவனாகியிருக்கையில் திடிரென்று இயமனுடைய மிகக்கொடியவைகளான வாள்களைபொற்றசரங்களாகிய பாசம்தோன்றிட அதைக்கண்ட மாத்திரத்தில் கண்கள் சுழலக் கைகால்களை யுதறிக்கொண்டு நாக்கும் உதடும் உலர்ந்து உதானவாயு வெழும்பித்துன்பப்படுத்தக் கண்டமடைத்து கண்கள்பஞ்சடைந்து குருகுருவென சத்தமுண்டாகிஅதிகதாபமும்பசியும்-தாகமும்-நேரிட்டு யமதூதர்களாலே பிடிக்கப்பட்டு வெகுபிரயாசத்துடன் தேகத்தைவிட்டு பிராணவாயுவெளிப்பட உடனேயமதூதர்கள் யாதனாசரீரத்தில் பொருத்தச்செய்து பாவத்துக்குத்தக்கபடி தண்டிக்கப்படுகிறான்; இதுநாகத்தில்அனுபவிக்கும்துக்கம், இந்தப்படி நரகத்தில் தான் துக்கமடைகின்றான் யென்றுயோசிக்கில் சொர்க்கத்திலும் துக்கமுண்டு; அதெப்படியெனில், இவன்செய்த புண்ணியபலனை யனுபவித்துக்கொண்டுநாளுக்குநாள் புண்ணியம்நசித்து இனிநாம் சொர்க்கானுபவத்தை விட்டுதள்ளப்படப்போகிறோமேயென்ற நினைப்பினாலே பெருந்துக்கத்தை யடைகின்றானாதலால் மனிதருக்குமோட்சமென்கிற தருவின்னிழலல்லாமல் மற்றெதினாலும் சுகமுண்டாவதில்லை, ஆகையால், கெற்பம் ஜெனனம்பாலிய முதலானவைகளிலே உண்டா

1 நாழிகை = 24 நிமிஷம்



குந்தாபங்கள் மூன்றுக்கும் அவிழ்தம் யாதென்றால் மற்றெந்தசுக த்திலும் இன்பமுண்டாகாதிருக்கும்படியான ஞானநேத்திரனைச் சேவிக்க சுகாநந்தத்தை தருவதாகியும் துக்க ஹேதுவொன்று மில்லாதாகியும் என்றும் ஜெனனமரணமில்லாத நித்தியபிராப்தி யை யளிப்பதாகியுமுள்ள எமது பதவியேயாம்; ஆகையால்-தெளி வுடையமனிதர்கள் துற்குணங்களொன்றுமில்லாமல் சகலநற்கு ணங்களும்பொருந்திய எனது பதவியை யடையும்பொருட்டாகிய தியானத்திலேயே சதாகாலங்கழிக்கவேண்டும். தியானமென்றால் சருகாதிகளைப்புசித்தும் மலைவளங்களிலிருந்தும் அட்டாங்கயோ கமென்றும்-யோகாதிகருமமென்றும்-யாகாதிக்கிரமமென்றும் உ லகம்பிரமிக்கும் கலகமல்ல. மனமென்னும் ஆலயத்தில் சிவமெ ன்னும் சிலாசாதனம் செய்து இல்லரத்திலிருந்து எல்லாமனுப விப்பதே உயர்ந்ததவமாகும் பாவமென்பதற்குப் பயந்து சிவமெ ன்பதைநினைக்கவேண்டும். இதுதான் ஆத்தியந்திகப் பிரளயம்.

இனி

# இல்லற தருமம்.

## முதலாவது

## மனிதர்களின் பிராண நிலை.

| இந்தியா அளவு. | | பிராண நிதானம். | இங்கிலீஷ் அளவு. | |
|---|---|---|---|---|
| நாழிகை முதல் | நாழிகை வரையில் | காலையில். | மணி முதல் | மணி வரையில் |
| ௫ | ௰ | சூரியகலை | 6 | 8 |
| ௰ | ௰௫ | சந்திரகலை | 8 | 10 |
| ௰௫ | ௨௰ | சூரியகலை | 10 | 12 |
| ௨௰ | ௨௫ | சந்திரகலை | 12 | 2 |
| ௨௫ | ௩௰ | சூரியகலை | 2 | 4 |
| ௩௰ | ௩௫ | சந்திரகலை | 4 | 6 |
| | | மாலையில். | | |
| ௩௫ | ௪௰ | சூரியகலை | 6 | 8 |
| ௪௰ | ௪௫ | சந்திரகலை | 8 | 10 |
| ௪௫ | ௫௰ | சூரியகலை | 10 | 12 |
| ௫௰ | ௫௫ | சந்திரகலை | 12 | 2 |
| ௫௫ | ௬௰ | சூரியகலை | 2 | 4 |
| ௬௰ | ௫ | சந்திரகலை | 4 | 6 |

அறிவையே ஆதாரமாயுன்னி ஆரியராகும் சீரியரே (கருமானுலைக்குக் காற்றுவீசும் துருத்திக்கிணங்க) நாசியென்றுசொல்லும் நமது மூக்கின் வழியாகப் பழகிவரும் காற்றுக்குப் பெயர்கள். காற்று-ஜீவன்-சவாசம்-மூச்சு-பிராணன்-ஆவி-உயிர்-உயிர்ப்பு; மனம்-சரம் இவைமுதலாகச்சொல்லப்பட்ட பெயர்களாம். அன்றியும் ஆன்றோர்களால் இன்னும்பலபெயர்களும் விளங்சப்படுமென்று மெண்ணப்படலாம்.

பலவித இயற்பெயர் பூண்டுள்ள நமது ஆன்மாவாகிய பிராணனது (எருதுக்குமூக்கணங்கயிருந்து ஆட்டுவிப்பதுபோல) காலை ஆறுமணி துடங்கி எட்டுமணிவரையிலும்-சூரியகலை என்னும் வலது மூக்கின் துவாரத்திலும்-எட்டுமணி துடங்கி 10-மணிவரையில் சந்திரகலையென்னும் இடதுமூக்கின் துவாரத்திலும் ஆக இரண்டுமணி நேரத்திற்கு ஒருகலையாக அல்லும்பகலும் கூடிய அறுபதுநாழிகையிலும் 5-நாழிகைக் கொருமுறையாக மாரிமாறிஓடிகொண்டேயிருக்கும்.

## சூரியகலையில் செய்யக்கூடிய காரியங்களாவன.

பிங்கலையென்றும் சூரியகலையென்றுஞ் சொல்லப்படுகிற வலது நசியில் சரம் ஓடும்போது ஸ்திரீசம்போகம்-வித்தியாப்பியாசம்-சாஸ்திர அப்பியாசத்துவக்கம்-மந்திர துவக்கம்-வாகன துவக்கம்-யந்திர நிர்மிதம்-சித்திரப்படமெழுதல்-விவகாரம்-ஸ்நானம்-போஜனம்-பிரசங்காரம்பம்-தானம்-தருமம் - வேட்டையாடல்-கால்நடைகளின் விக்கிரியம்-ஸ்தம்பனம்-மோகனம்-உச்சாடனம் மாரணம்-நூதனவஸ்திரமணிதல்-வடக்கு-கிழக்கு-பிரயாணமுதலான காரியங்களைச்செய்வது மிகவும்உத்தமம்.

## சந்திரகலையில் செய்யக்கூடிய காரியங்களாவன.

இடகலையென்றும் சந்திரகலையென்றுஞ் சொல்லப்படும் இடது நாசியின்வழியாக சரம் ஓடும்போது தெற்கு மேற்குப்பிரயாணம்-யுத்தம்-உபநயனம்-சாந்திகழித்தல்-கிரகப் பிரவேசம்-இராஜதெரிசனம் விதை விதைத்தல் அவுடதப்பிரயோகம்-சற்புருஷகோஷ்டி-யோகாப்பியாசம்-விவாகம் - தேவப்பிரதிஷ்டை தூரதேசப்பிரயாணம்-அலங்காரம-சுரதோஷசிகிச்சை முதலிய காரியங்களைசெய்ய மிகவும் உத்தமமென்று ஆன்றோர்களால் கூறப்பட்டிருக்கிறது.

## சரசாத்திர சமாதானம்.

இந்த சரசாஸ்திரலக்ஷணம் தெரியாதவர்களுக்கு விளங்குமாறு சுருக்கமாகயெழுதலாயிற்றேயன்றி-மற்றவர்களுக்குபோதிக்க யாம்பெரியோனல்ல. ஏனெனில் சமம்பார்ப்பான் பரம்பார்ப்பான் என்பதற்கிணங்க சரபோக அப்பியாசிகளான மகான்கள் சர்வஜீவான்மகோடிகளுக்கும் அன்றாடம் நடந்தேரமுன்னிற்கும் திருகால நன்மை தீமைகளையும் தாங்களேதெரிந்துகொண்டு பரத்தின்திருவிளையாடலைப் பகுத்தரிவார்கள்-ஆயினும்பெருமையை விரும்பி தம்மகிமையை அகத்தைக்கடந்து இகத்தியல்பில்செல்லவிடார்கள். அவ்வாறு செல்லவிடாத வல்லோராகிய நல்லோரின் குரியாதெனில் (தாயுமானவர்) "பாலரோடுபேயர்பித்தர் பான்மையெனநிற்பதுவே சிலமிகுஞானியர்தம்செய்கைப்பராபரமே" என்பதுபோலாம். இங்ஙனம் ஞானிகளுடைய தன்மைகளும் சரசாஸ்திரப்பெருமையும் யோகாப்பியாசவிவரமும்-விவரித்தெழுத அருளில்லாத அபாத்திரனுகையால் - இல்லரவாழ்க்கைக்கியன்ற தொழில் முகாந்திர சாத்தின் குரிமாத்திரம் வருநாலைக்கொண்டெழுதப்பட்டிருக்கிறது.

## சரசாதனத்திற்கு ஆசனமும் பலனும்.

| | |
|---|---|
| மான்றேல் ஆசனத்திற்கு | ஞானசித்தி |
| தர்ப்பையாசனத்திற்கு | மோக்ஷசித்தி |
| புலித்தோல் ஆசனத்திற்கு | செல்வசித்தி |
| வெள்ளைவஸ்திரம்-ரத்தினக்கம்பளம், சித்திராசனம் இவைகட்கு | சர்வமங்களசித்தி |

மற்றெல்லாவித ஆசனமும் தரித்திரத்தையுண்டாக்கும்.

## சரசாதன வியல்பு.

மேற்கூறிய ஆசனங்களில் தத்தமக்கு எப்பொருள் விருப்பமோ அவ்வாசனங்களிலிருந்து சூரியகலையென்னும் வலதுநாசியின்வழியாக சுவாசத்தை நடக்கச்செய்து-இராப்பகல்கூடிய தினமொன்றுக்கு ஒருமுகூர்த்தகாலமாவது தமது இஷ்ட தேவதாத்தியானம் செய்வோர்கள்-பிரர் விரும்பிக்கேழ்க்கும் பிரசனையும் ஆரூடமும்-மனக்குரையாகிய யெல்லாவிதகேள்விகளுக்கும் குறிசொல்வதுபோல-அவரவர் நன்மைதீமைகளை யெளிதில் சொல்ல

லாம் அப்படிசொல்வதற்கு வலநாசியிலிருக்கும் சுவாசத்தை யிடநாசியில்ஓட்டவும் இடநாசியிலிருக்குஞ் சுவாசத்தை வலநாசியில்ஓட்டவும்-ரேசிக்கவும் - பூரிக்கவும்-தம்பிக்கவும் சரயோகஅப்பியாசிகளான சாதுக்களால் தெரிந்துக்கொள்ளவேண்டும். சாதுக்கள்கிடைப்பதும் சொல்வது சாத்தியமல்லவென்றுஞ் சொல்லுவாருமுளர், ஆகையால் மேலோட்டைஆதாரமாகக்கொண்டுஉற்பத்தியாகிய புளியம்பிஞ்சானது சுவைக்கு சம்பந்தப்படும்பருவம் ஏறஏற மேலோட்டின் பற்றுதல் கிஞ்சித்தேனுமில்லாமல் தனித்துநிற்கும் புளியம் பழம்போலவும், மண்ணிலும் புழுதிலும். சேற்றிலும் பூமியிலும், வியாபித்திருக்கும் புள்ளைப்பூச்சியானது எவ்வாறு பற்றற்றிருக்கிறதோ அவ்வாறுபோலவே பாவிடமென்னுஞ் சட்டைபூண்டு சமுசாரமென்னும்சேற்றிலே கால்நுழைந்திருந்தாலும் ஆத்மசன்னியாசிகள் அடக்கமாகத்தானிருப்பார்கள், தேகசன்னியாசிகள் தெருவெங்குந்திரிவார்கள். ஆகையால், கடவுளினது கருணைக்குப் பாத்திரவான்களாகிய சாதுக்கள் காட்டிலும் உண்டு வீட்டிலுமுண்டென்பதேயாம் (இதற்கு சாட்சி)

மனத்தகத் தழுக்கறுத மௌனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு வனத்தகத் தழுக்கறுர்
பனத்தகத் தழுக்கறுத்த மௌனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே.

சரத்தைக்கொண்டு அரத்தைப்புரிதல்

## அதாவது குறிசொல்லுதல்.

பிராணன் காற்று ஆவி ஆன்மா உயிர் உயிர்ப்பு ஜீவன் சுவாசம் சரம் மனம் மூச்சி என்றுசொல்லப்பட்ட சரசாதகத்தைக் கிஞ்சிற்றேனும் அனுஷ்டித்தவரும் புண்ணியவான்களையாராவது ஒருவன் அடுத்துதான்னினைத்தகாரியம் நடக்குமோநடவாதோ அல்லது ஆகுமோஆகாதோவென்று எந்நேரத்தில்கேட்டபோதிலும் அந்நேரத்தில் சந்திரகலை சூரியகலையென்னும் இருநாசியும் நோக்கி எந்தநாசியில் பூரணமாக சரம் ஓடுகின்றதோ அதை நிதானித்துக் கொள்ளவேண்டுவது முதற்காரணம் பிரசினைகேட்க வந்தவன் பூரணமாக சரம்ஓடுகிற பக்கத்தில் நின்றானாகில்அவன்

கேட்டஆருடமெல்லாம் தடையின்றி நடக்குமென்றும், சரம்பார்க்கிறவர் கட்டிலின்மேலாவது மச்சுவீட்டின் மேலாவது மரத்தின்மேலிருக்கும்போது மற்றெந்த உயர்ந்தஆசனத்தின்பேரிலாவது இருக்கும்போது கேட்கவந்தவன் பள்ளம் அல்லது பூமியிலிருந்து கேட்பானாகில்அவன் நினைத்து வந்த காரியமெல்லாஞ் சித்தியாகுமென்றுஞ் சொல்லப்படும். அப்படிச்சொல்லுவதிலும் கலையறிந்து சொல்லவேண்டியது அவசியம் அதென்னவெனில்,

## சூரிய குறி.

சூரியகலை பூரணமாய் நடக்கும்போதுஅதேபக்கத்தில்வந்து நின்றுகேழ்ப்பானாகில் குருவிடத்தில் உபதேசம் செய்துக்கொள்ளலாமா, நான் ஒருவருக்கு உபதேசம்செய்யலாமா, வித்தை ஆரம்பஞ்செய்யலாமா, எதிரியைவெல்லலாமா, வியாபாரஞ்செய்யத் துடங்கலாமா, திருடப்போகலாமா, சூதாடத் துவக்கலாமா, இத்தனைநாளாய்தீராத வழக்குவெல்லுமா, யானை-குதிரை-ஒட்டை-வண்டி இதுகளில் ஏறலாமா, பத்திரம் சாதனம் முதலியதெழுதலாமா, சங்கீதம் கற்கத் துவக்கலாமா, பிரசங்கஞ்செய்தால் ஜெயிக்கலாமா, மந்திரங்கற்றால் சித்தியாகுமா, மருந்து சாப்பிட்டால் பிணிதீருமா, விருந்துபோஜனஞ் செய்யலாமா, பகையாளியை ஜெயிக்கலாமா, இந்த வியாதி நீங்குமா என்னும் இவ்வித கேழ்விகளில் எதுகேட்டபோதிலுந் தடையின்றி நடக்கும், அல்லது ஜெயமாகுமென்று சொல்லப்படும்.

## சந்திர குறி.

சந்திரகலை பூரணமாய்நடக்கும்போது அதேபக்கத்தில்வந்து நின்றவன் மனைவாங்கலாமா, வீடுவாங்கலாமா, குளங்கிணறுவெட்டலாமா, யான் எண்ணிய விஷயத்தைப்பற்றி தூதனுப்பலாமா, நான்போய்பேசலாமா, புதுவஸ்திரந்தரிக்கலாமா, ஆபரணம் பூட்டலாமா, விவாக எத்தனம்செய்யலாமா, குடிபோகலாமா, அரசரைக்காணலாமா, இஷ்டதெய்வம் பிரதிஷ்டைசெய்யலாமா, சுரத்திற்கு மருந்தருந்தலாமா, சமாதானஞ்செய்யலாமா, கல்வி கேட்டுக்கொள்ளலாமா, என்கிற இவ்வித கேழ்விகளைக் கேட்கில் தடையின்றி நிறைவேறும் அல்லது ஜெயமுண்டாகும் என்று சொல்லக்கூடும்.

## சூன்னியக் குறி.

சூரியகலை சந்திரகலை ஆகிய இரண்டு கலைகளிலும் சரமானது சமரசமாய் ஒத்துவருமாகில் அதற்குச் சுழிமுனையென்றுபெயர் அப்படிச் சுழிமுனைநடக்கும்போது ஒருவன்வந்து யாதாமொரு காரியத்தை உத்தேசித்து கேழ்ப்பானாகில் அவனை சும்மாயிருக்கச்சொல்வதே மிகவும்நலம், அவன் நினைத்தகாரியம்ஒன்றேனும் ஆகாது. இந்தப்பொருள் அகப்படுமோவென்றாலும் அகப்படாது இந்த சுழிமுனை நடக்கும்போது நன்மையேகிடையாது, கெட்ட காரியமெல்லாஞ் சம்பவிக்கும்.

## பிரதானக் குறி.

சரம் ஓடுகிறபக்கம் பூரணபக்கமென்றும், சரம் ஓடாதபக்கத்திற்குச் சூன்னியபக்கம்என்றுபெயர்; ஆகையால், வழக்குபேசுதல்-தர்க்கம்பண்ணுதல்-பெண்கேழ்க்குதல்-அடிமைகொள்ளல்-அரசரைத்தெரிசித்தல், தனக்கு மேலானவரிடத்தில் வார்த்தையாடல் ஆகிய இத்தொழிற்கெல்லாம் தனக்கு சரம்ஓடாத சூனியபக்கத்தில் எதிரி நிற்கும்படியாய் தான் நின்றுக்கொண்டுபேசினால் அந்தகாலங்களில் எதுவேனுந் தடையின்றி நிறைவேறும்.

### சரத்தின் பரிபாஷை அகராதி.

| | |
|---|---|
| சந்திரகலையென்பன, | இடது நாசிக்குப் பெயர் இடகலையென்றுஞ் சொல்லப்படும். |
| சூரியகலையென்பது, | வலது நாசிக்குப் பெயர் பிங்கலையென்றுஞ் சொல்லப்படும். |
| சுழிமுனையென்பது, | சுவாசமானது இரண்டுகலையிலும் பரவியோடுதலுக்குப்பெயய். |
| சூனியமென்பது, | சரம்ஓடாதபற்கத்திற்குப்பெயர். |
| ரேசகமென்பது, | சரத்தைவெளியே நடத்தலுக்குப்பெயர். |
| பூரகமென்பது, | சரத்தைஉள்ளுக் கிழுத்தலுக்குப்பெயர். |
| கும்பமென்பது, | சரத்தைத்தம்பிக்குதற்குப்பெயர். |

### சரசாதன சாப்பாடு.

இந்தசரசாஸ்திரத்தை விரும்பித்தானே அனுட்டிக்கமுயல்வதிலும் குருமூலியமாய் தெரிந்துக்கொள்வது, சிலைமேலெழுத்

தாகும். அன்றியுஞ் சாசாதனத்திற்குத் துடங்குபவர்கள் சந்திர கலைநடக்கும்போது போஜனஞ்செய்யக்கூடாது. சாப்பிடவேண் டுமானல் உஷ்ணமான பண்டங்களும் உப்பு கசப்பு காரலாகிய பண்டங்களும் வைத்துக் கொண்டு தாகபானத்தை மட்டும் நிறுத்திசாப்பிடவேண்டியது. இவ்வாறு சாப்பிட்டபோதிலும்அ ரைவயர் திண்டியே கொள்ளவேண்டியது. முழுவயர்திண்டிகொ ள்வார்களாகில் சிதளத்தையனுசரித்த தேகநலியும், மந்தபுத்தி யும், மூதேவியுஞ் சம்பவிக்கும் எத்தொழிலும் நடவாது அஜாக் கிறதை மேலிடும்.

சரசாதனத்தை யனுட்டிக்க விருப்பமுள்ளவர்களும்-அனு ட்டித்து வருபவர்களும்-குளித்தல்-முழுகுதல்-நெய்-பால்-தயிர் மோர்-புளிப்பு-தித்திப்பு-துவர்ப்பு முதலாகிய அறுசுவை பண் டங்களைச் சாப்பிடுதல் அரைவயர் சாப்பாடும் கால்வயர் ஜெல மும் அருந்தல்வேண்டும். அன்றியுந் தனக்காகவேண்டியவிஷயங் களைப்பற்றி பிரரிடத்தில் பேசுதல்முதலிய யிக்காரியமெல்லாம் சூரியகலைநடக்கும்போது செய்யவேண்டும்.

## சாயாதெரிசனக் குறிப்பு,

ஆகாயத்தில் மேக மறைவுகளில்லாமல் பரிசுத்தமாய்வெய் யல்காயும்போது. பூமியில் மேடுபள்ள மில்லாதவிடத்தில்நின்று க்கொண்டு தன்னிழல் ஐந்தடிநிகளம்முதல் பத்தடிநிகளத்திற்கு உட்பட்டதருணத்தில், தனதுநிழலின் முகமாகப் பார்த்தபடி நின்று அந்தநிழலின்-தலை-கழுத்து-கைகள்-கால்கள் இவ்வுருப்பு களில் ஒன்றை கண்சிமிட்டாமல் - கால்-அரை நாழிகைமட்டும் பார்த்து அப்படியே ஆகாயத்தைநோக்கிப்பார்த்தால்,அங்கேஅ வனுருவம்தோற்றும். அவ்வுருவமானது பொன்னிரமாயிருந்தா ல்அவனுக்கு செல்வம்வரும், வெண்மையாயிருந்தால் பிராணபய மில்லை,ஆயுள்வளரும்; செம்மைநிறமாகில் மனக்குறை-சஞ்சலம்- அபாண்டம் சம்பவிக்கும்; கருமையாகில் தேகநலியுண்டாகும் அன்றியும்அந்தவுருவில் கையாவது காலாவது தோன்றாமலிரு தால் ஆறுமாதத்தில் மரணமுண்டாம். இதுவுமன்றி தலையேகா ணமல் கவந்தமாய்தோன்றினல், மூன்றுமாதத்தில் மரணம்.இம் மாதிரியாய் சந்திரனிலும் பார்ப்பதுண்டு. இதற்கு சாயாபுருஷ தெரிசனமென்று சொல்லுவார்கள். இச்சாயா தெரிசனத்தை

யிடைவிடாமல் 12-வருஷம் பார்த்துக்கொண்டுவந்தால் தன்முன்னிருக்கும் நிழல் தன்னுடன்பேசும். அப்படிபேசம் பருவம் நேருங்கால் அதின் முகாந்திரமாய் அட்டமாசித்துப் பெறலாகும். பெருவதன்றி பின்னுஞ் சிலநாட்களில், தன்னிழல் உருவமாகித் தன்னுடனேதிரியும். படுத்தால் தானும்படுக்கும்; எழுந்தால் தானுமெழும்பும். அன்றியும், இவனுக்குநேரிடும் நன்மை தீமைகளை முன்னுகாகத் தெரிவிக்கும் இன்னமும் அனேக அற்புதங்களை விளைவிக்குமென்று பெரியோர்சொல்லுகிறார்கள்.

# தெரிசன லட்சணம்.

## சூரிய தெரிசனம்.



வலருதித்தவன்பால் தெரிசனைவினோதம்
　　வகுத்திடக்கேளமாசிமத்யானத்தினால்
இலகியதாமிரவட்டத்தி னறுநெய்யெய்தி
　　யிப்புவியின்மேன்வைத் திவனுருவம்பாற்கி
னிலவைசைதல்நிற்றல்கருத்திடல் சிவத்தலிவைநேர்
　　நிதிபதிவிட்டோட விறப்பிருப்பின்னேர்குணபாற்
குலமனைந்தனர்தாதை துணியவன்வங்கிசந்தாய்
　　குடும்பமிவைக்கவ்வாண்டா குலங்குரைவுற்றிடலே.

## நெய்யில்தோற்றுஞ் சூரியனுருவமும்

### அதற்குப் பலாபலனும் அறியும்படி.

| | |
|---|---|
| சூரியன் ஒளியற்று பரிசுத்த வட்டமாய்த்தோற்றினால் } | அயிஸ்வரியம். |
| அசைந்தசைந்து தோற்றினல் | இடம்விட்டு நீக்கும். |

| | |
|---|---|
| அசைவற்றுத்தோற்றினல் | ஸ்திரகிரகவாசம். |
| கருமையாகத்தோற்றினல் | மாணம் |
| சிவந்துதோற்றினல் | மனேசஞ்சலம். |
| கிழ்த்திசையில் குறைந்து தோற்றினல் | சுயகுலத்திற்காகாது. |
| அக்கினிமூலையில் குறைந்துதோற்றினல் | களத்திரத்திற்காகாது |
| தென்றிசையில் குறைந்து தோற்றினல் | புத்திருக்காகாது. |
| நிருதிதிசையில் குறைந்து தோற்றினல் | பிதாவுக்காகாது. |
| மேற்றிசையில் குறைந்து தோற்றினல் | சகோதரருக்காகாது. |
| வடமேற்கு குறைந்து தோற்றினல் | தனக்காகாது. |
| வடதிசையிற் குறைந்து தோற்றினல் | பந்துகட்காகாது. |

ஈசானியதிசை குறைந்துதோற்றினல் மாதுகுடும்பத்திற்காகாது

ஆதித்தவாரமும் அமாவாசையுங் கூடியதினத்தில் காலையி லெழுந்துகுளித்து முழுகி விரதமிருந்து சூரியபகவான் உச்சியில் பிரகாசிக்கும் மத்தியானகாலத்தில் சமரசமான நிலத்தில்மெழுகி கோலமிட்டு ஒரு தாம்பாளத்தில் நிரையப் பசுநெய்விட்டு அவ் விடத்தில்வைத்து அதற்கடுத்த மேற்றிசையில் மஞ்சளினல்பிள் ளையார் பிடித்துவைத்து அருகுசூட்டி தாம்பூலம்வெல்லம்வைத் துதேங்காயுடைத்து கற்பூரஆராதனைசெய்து கணேசரையும் கதி ரோனையுந் தெரிசித்து அசைவற்றிருக்கும் தாம்பாளத்திலுள்ள நெய்யினிடமாகத்தோற்றுகிற சூரியபகவானை உனதுஇஷ்டதே வதாசிந்தனையுடன் வியாபக சுத்தியாகப் பார்க்கக்கடவாய் அப்ப டிபார்க்கும்போது, முன்கூரியபடி (8) திசைக்கும் பலனறிக.

மேலும் சூரியமண்டலத்தை நோக்கி, வெண்கமல மலரின் மீது செஞ்சோதியமைந்த விருத்தமண்டலத்தின் மத்தியிலிருப் பவராய்-மாதளம்பூவர்ணமுடையவராய் - திருவதனமொன்றும், திருவிழிகளிரண்டும்-திருத்தோள்க ளிரண்டினுமுள்ள விகசித்த வெண்கமலமலர்களின் நாளம் இரண்டையுந்தாங்கும் இரண்டு திருக்கரங்கள் பெற்றவராய் செவ்வாடை யணிந்தவராயிருக்கும் ஆதித்தமூர்த்தியைத் தியானித்து.

ஓம் திவசூரியாயநம என்று செங்கமல மலராகிய
செம்மலர்களா லருச்சித்து,

பேசுவெண்டா மரையாசனமிகிச்சிவந்த
பேரொளிசேர்தருவிருத்த மண்டலமத்தியனு

யாசறுமாதுளங்கமலம்போலு நிறத்தினனு
யலர்ந்தனவாயிரு புயங்களடைந்த வெண்டாமரையின்
காசறுநாளம்பிடித்தக யிரண்டினேடு
கருதுமொருமிகமிரண்டு கண்களுடையவனைத்
தேசுமலிசெய்யவுடை தனையுடுத்தோனுகித்
திகழ்சிவசூரியனை நிதஞ்சிந்தனை செய்திடுவாம்.

வளங்குதண்டிமுதலோராற் சேவிக்கப்படுவோன்
விமலன்முதனுற் சிங்கபதாசத்தின்மேலோன்
களங்கமிலாத்தீத்தைமுதற் சத்திகணசகிதன்
கருதருணமணியொளியன் கடோற்கான்மமூர்த்தி
துளங்கலிறன்னங்கந்தன் னங்கமெனுங்கிரகந்
தொகுமுடுவாதியசூழச் சுவேதகஞ்சத்திவர்ந்தோன்
வளங்கொள்சுவேதாம் பசத்தோட்கரனிரு நல்விழியோன்
வருசிவசூரிய காக்கமகிழ்ந்தடி யேங்களையே.

என்று துதிசெய்து இருறை ஆன்மவலம்வந்து

ஓம்வைகர்த்தநயநம
ஓம்விவஸ்வதேநம
ஓம்மார்த்தாண்டாயநம
ஓம்பாஸ்கராயநம
ஓம்ரவயேநம
ஓம்லோகப்பிரகாசகாயநம
ஓம்லோகசாக்ஷிணேநம
ஓம்திரிவிக்கிரமாயநம
ஓம்ஆதித்தியாயநம
ஓம்மகாசூரியாயநம
ஓம்அம்சுமாலினேநம
ஓம்திவாகராயநம

என்னும் துவாதச திருநாமங்களைக்கூடித் துவாதச நமஸ்காரம் புரிந்து நின்று தொழுது இச்சித்த வரங்களைப் பிரார்த்தித்துக் கொள்ளல்வேண்டும்.

# சந்திர தெரிசனம்.



குறைவறுசோமனைப் பூரணைநிசியிவணுணடுமீக்
　　கொண்டமுக முத்தரமாய்ச் சுசிகொடுநோக்குதலு
நரைமலராதிபனியில் போனண்ணிடிலப்பலமாம்
　　நடுவையிருகரமடித்து நாட்டிதியுங் கலப்பாய்
நிறையவிராப்பகற்பொழு துற்றிடுங்காலம்வடக்காய்
　　நின்மலவான்பார்க்க நிரைவிலுரும்நிரைதன்
றறைதல்வியாகுலநிதிய மரணமிதன்பலமாம்
　　மலையமுனியேகாதற் கிதன்சொல்லுவதுவே.

கடலுலகு முழுமையுமே விளக்கிக்காட்டும்
　　கதிர்மதியுமிருவர்களே கடவுளாகும்
உடலுக்குள் இருகலையாய் பிரிந்தேநாளும்
　　உயிரானோர் இரவிமதி யவரேயென்று
இடைவிடாதிருநேரம் தெரிசித்தோர்கள்
　　ஏருலகப் பெருந்தகையை யெழுதப்போமோ
கடலுவகை உடலுலகிற்கருவமைத்துக்
　　கதிமதியைக் கண்டவரே கடவுளாமே.

சோமவாரமும் பௌர்ணமியும் கூடியதினத்தின் இரவில் பதினைந்துநாழிகையில் பூரணசந்திரன் ஆகாயத்தின் நடுமத்தியில் வரும்போது வடக்குமுகமாகநின்று மல்லார்ந்தபார்வையாய்ப்பார்க்க; முன்பு சூரியதெரிசனத்திற் சொன்னபலன்போல் அவ்வவ்வடையாளங்களுக்குள்ள பலாபலனைத்தெரிந்துகொள்ள (அன்றியும்) சித்திரை-அற்பிசி-இந்தமாதங்களில்-ஆதிவாரமும் பௌர்ணமியும் கூடியதினத்தின் இரவிலாவது சோமவாரமும் அமாவாசியுங் கூடியதினத்தின் இரவு நடுநிசியிலாவது ஆகாசம் நிர்மலமாயிருக்கும்போது இடையை இரண்டுகரத்தாலும் பிய்த்துக்கொண்டு வடக்குநின்று தக்ஷணமூர்த்தமாகப்பார்க்க மேற்கண்டரூபம் அளவுகுறைந்து தோற்றுமாகில் மனோவியாகூலம் குறையாமல் நிறையளவாகத் தோற்றுமாகில் அயிஸ்வரியம் யாதொருரூவமும் தோற்றுமல் மறைந்துகாணுமாகில் மரணகாலம் இவைவருங்காலதெரிசனமெனப்பெயர் இனிநிகழ்காலதெரிசனம் செல்வோமாக.

சந்திர தெரிசனம்-முற்றிற்று.



## கெருடபகவான் தெரிசனம்.

அருக்கனிலரியா தியற்றிடுந்திங்குக
ளனைத்துமேவிலகு மரும்பிறைதன்னில்
திருக்குராபுந்தியும் குருவுமேவெற்றி
பிரபலமாம் வெள்ளியுமுடவன்
தரித்திடுமாயுள் பூரணமென்னத்
தவத்தபிரானுரைத்த தரிசனமாகுங்
கருடனைநிதமும் கண்டாறடையுங்
காட்சியின்மிக்கக் காட்சியில்லையால்.

| வாரங்கள். | தெரிசனம். | பலாபலன்விபரம்- |
| --- | --- | --- |
| ஞாயற்றுக்கிழமையில் | ,, | தான்அறிந்தும் அறியாமலுஞ் செய்தபாவத்தினு லணுகிய பிணி முதலியதும் சூரியனை கண்டபனிபோல் நீங்கும். |
| திங்களுஞ்-செவ்வாயும் | ,, | மன வியாகூலம்நிவர்த்தியாகி நன்மையுண்டாகும். |
| புதனும்-வியாழனும் | ,, | தன்மீதுற்ற பகைவரின்வல்லமை செல்லாது தனக்கே வெற்றியுண்டாகும். |
| வெள்ளியுஞ்-சனியும் | ,, | ஆயுள் விர்த்தியும்குடும்ப சந்தானவிருத்தியுமுண்டாம். |

இவ்வாறு தெரிசித்தல் - ஒருநாளைக்கேயின்றி - பன்னாளும் நீடித்துதெரிசனம்செய்து வருவோருக்கு-சாலோகசாமீபசாரூப சாயுச்சியமென்னும் நான்குபிறவிகளில் தத்தம்மாவிழைத்த பலனுக்கியன்ற பதவிபெறுதலுமன்றி இகத்திலுள்ளளவும்நோயற்ற வாழ்வும், குறைவற்றசெல்வமுமுள்ள சம்பன்னராய் நீடித்த பூரண ஆயுளுடைத்தாய் நாடியோருக்குக் கூடியப்பரோபகாரி யாவரென முன்னோர்களால் பிரசித்தமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

# சயன லட்சணம்.

## படுக்குந் திசை.

(கார்க்கேயர்வாக்கியம்)கிழக்கு தலைவைத்து படுத்தால் தன சம்பத்துபெருகும்-தெற்குத் தலைவைத்து படுத்தால்ஆயுள்விருத்தியாகும்-மேற்கு தலைவைத்துப்படுத்தால் கீர்த்திபெருகும்-வடக்குத் தலைவைத்தால் பிணியும் மனச்சஞ்சலமும் தரித்திரமுமணுகும் என்பதாம்.

## படுக்கையின் ஸ்தானம்.

(விஷ்ணுபுராணம்) தன்மனையில் கிழக்குத் தலைவைத்தும்-பந்துக்கள் மனையில் தெற்குத் தலைவைத்தும்-வழிநடை அல்லது தேசாந்திரஞ் செல்லுகையில்-மேற்குத் தலைவைத்தும் படுத்தல் வேண்டும்-எப்பொழுதும் வடக்கில் தலைவைத்துப் படுப்பது ஆகாதென்றுங் கூறும்.

## படுக்கை லட்சணம்.

ஆவிக்கிசைந்த அறுசுவையுண்டியை அருந்திய பின்னர்தனதுகாலடிகளால்நூறடிகள் பூமியிற்பொருந்த நடந்து பாவியபின் படுக்கையிடத்திற்சென்று தனக்கு இன்பமாகும் மங்களதிரவியமுமணிந்து தாம்பூலமருந்தி பலசிந்தனையும் நீற்று தனது அறிவை இருவிழிக்கும் நாசிக்கும் மத்தியமாகிய சுழிமுனையில் நிமைப்போதேனும் நிருத்தி நிர்ம்மல நிளைவுடையவனுய் ஏகஅகண்ட பரிபூரண சச்சிதானந்த வஸ்துவேயென்று மனத்தால் கடவுளை தியானித்து தனது இஷ்டதேவதையும் தியானித்து பிரமன்-விஷ்ணு-உருத்திரன்-தீக்கடவுள்-சூரியன்-சந்திரன்-அங்காரகன் - செவ்வாய்-புதன்-குரு-சுக்கிரன்-சனி-யாவரும் முன்னிருந்து யான் யின்றிழைத்த இருகருமமும் கைக்கொண்டு இந்தபாபயிரவை தேவயிரவாக்கி சுகநித்திரையளித்து யான் விழிக்குமளவில் நல்லதெரிசனம் கொடுப்பீராக என்று சிந்தனைசெய்து ஆசாரியர் மூலியமாக தீட்சைபெற்றோனுகயிருந்தால் அவராலளிக்கப்பட்ட இராத்திரி சூக்த்தங்களையோதி சாவித்திரி மந்திரங்களையுஞ் செபித்து தலைமுதல் பாதாதிகேசமட்டும் அழுக்கில்லா வஸ்திரத்தால் முக்காடிட்டுபோர்வைபோற்றி இடதுகையை தலைகீழாக வைத்துக்கொண்டு தென்றிசை தலைவைத்துப் படுத்துக்கொள்ளக்கடவது.

## நித்திரையின் ரகசியம்.

மேற்கூறிய வேதவாக்கிய லக்ஷணப்பிரகாரம் நித்திரைசெய்யும் யோக்கியதையுடைய நானனவன் சுகநித்திரைசெய்யும்புண்ணியவான்களை தியானித்து, நாசமற்ற வியாபகப்பொருளுக்கு வணக்கஞ்செய்து-மனத்தை உள்ளத்தின்கண்ணே அசைவாநிருத்தி-இரவில் நித்திரை செய்யவேண்டும்.

## சுகநித்திரை செய்வோர்.

அகஸ்தியர்-திருவாமல்-கமலமுனி-ஆஸ்திக முனி-ராஜவிருடி. இவ்வைவர்களும் சுகநித்திரை செய்வோராகும் பின்னுமனேகருளரென வழிநூல்களில் கூறப்பட்டுவரும்.

## படுக்கைக்கு அவலட்சண யிடம்.

சத்தி கோட்டத்திலும்-யீஸ்வரகோட்டத்திலும்-குமாரகோட்டத்திலும்-முரிந்தகட்டில்மீதும்-ஐவகை மரத்தாற்கூடிய கட்டிலின்மீதும்-முச்சந்தி-நாற்சந்தி-கூடுமிடத்திலும்-இடியால் வெந்த மரத்தடியிலும் முனிகன்னிமுதலிய கிருகமிருக்கு மரத்தடியிலும்-எரியருகிலும்-மணலின்மீதும்-புழுதியிலும்-செங்கல் கிடக்கு மிடங்களிலும்-சிறுவர்கள் நடுவேயும்-நடப்பவர் நடுவேயும்-வேள்வித்தீயின்மீதும்-சாதாரணத் தீயின்மீதும்-புற்றடியிலும்-வெட்டவெளியிலும்-நிர்வாணியாகவும்-ஈரவுடையோடும்- அழுக்காடையோடும் ஒத்தநிலமில்லாத மேடுபள்ளமானயிடத்திலும்-பறப்பிய பச்சிலைகள்மீதும்-எண்ணைத்தலையோடும்-எச்சிலோடும்-கீழ்மக்கள்வாயிலிலும்-ஆரியன்மேலும்-பகலிலும்-படுத்துரங்கலாகாது என்றுகாண்க. இந்த சயனசாஸ்திர லட்சணங்களை உசன முனிவராலும் மார்க்கண்டேயராலும் விஷ்ணுபுராணத்தில் விசிதமாககாண்க.

## படுக்கையின் காலம்.

அஸ்தமானந்துடங்கிய பிரதோஷகாலத்தையும் வீண்போக்காதுதத்தமது மதங்களனுசரித்த அரிஹரக் கோட்டங்களிற்சென்று தெரிசனம்செய்து-ஒருஜாமங் கடந்தபின்பு அறுசுவைக்கூடிய அன்னம்புசித்து பிறகு இரண்டுஜாமம்வரையிலும் இருக்கு வேதாதிக்கிரமங்களையாவது-அரிஹரக்கதாப்பிரசங்கமாவது-செவியமுதாக ஊட்டியிருந்து-கடசியில் ஒன்றரைஜாமமட்டில்அரு

நித்திரைகொண்டிருந்து விடிய அறைஜாமமிருக்கையில் விழித்து காலைக்கடன்கழிக்கக் கடவதென்றுகாண்க.

### படுக்கையின் பொதுலட்சணம்.

தாழைவிழுதின்கீற்றுகளாற் பின்னியபாயினும் - கோரைக் கிற்றுகளாற் பின்னியபாயின்மீதும்-படுத்துநித்திரை செய்பவர்களுக்குஎவ்வித தர்வியாதிகளும்அணுகாது-வாதபித்த சிலேத்துமங்களை ஒன்றைவிட்டொன்று அளவு கடக்காவண்ணம்-தேகத்தினிடம் முத்தோஷங்களுக் கிடங்கொடுக்காது. அன்றியும் தலைச்சுழற்றல்-பாண்டுரோகம்-பித்தரோகம்-நீராமைக்கட்டி-வெகுமூத்திரம்-அக்கினிமந்தம்-சுரதோஷம்- இவ்வித ரோகஸ்தர்களுக்கு அவ்வியாதியைஅதிகரிக்கவொட்டாமல் நாளுக்குநாள் குறைமதியம்போல வியாதியின் சொரூபத்தைக் குறைத்துவிடும்.

### படுக்கைக்காக பாயில்கள்.

சாதிப்பாயென்னும் பிரம்பினால் நெய்யப்பட்டதும், பேரீச்சன் சிற்றீச்சன் பனையோலைப்பாயும் மூங்கிற்றடுக்கும் ஆகியயிவைகள் வனசஞ்சாரியாயிருக்கும் வேடர்கள் வில்லியர் குரவர் மரவர் வலைஞர்முதலிய கானவர்தேகத்திற்கு வொவ்வியதேயன்றி இல்லரத்தானுக்கு எவ்வளவும் இசைந்ததன்று வருமைக்கும் பற்பலவாகிய பிணிகட்கும் உரிமையாகிய வித்தாகமுன்னிற்குமென்று காண்க.

### படுக்கை யினம்.

மகப்பேருடைய இல்லரத்தான் தனதுமக்களை வேறுஒத்துமையாகத் திருத்திய அணையிற் கிடத்தி அதற்கடுத்தயிடத்தில் தானும் தன்தேவியும் சயனிப்பதேவிதி அப்படியல்லவாயின்தன் மக்களை நடுவேயும் இருகடையிலும் ஸ்ரீபுருஷாள் சயனிக்கவேண்டும் அன்றியும் குழந்தைகள் தாய்ப்பால்மறந்து அன்னமுண்ணத்துவக்கு மளவும் புணர்ச்சியிற்றோய்ந்த தாய் தந்தையர் குளித்தாலொழிய அக்குழந்தையைத் தீண்டப்படாது.

### மேலோர் படுக்கை.

ஞானத்தைவிரும்பியமேலோன் மான்றோலின்மீதும்-மோட்சத்தைவிரும்பியமேலோன் தர்ப்பாசனத்தின்மீதும் - செல்வத்தையும் வீரத்தையும் விரும்பியமேலோன் புலித்தோலின்மீதும்-

படுத்து சயனிக்கவேண்டியது நான்கோரியவிருப்பமே கடைப்பிடியாய்பற்றி மனத்தை இரும்புத் தூணுக்கு நிகராத்திருத்திய வைராகிகளுக்குமாத்திரமே மேலோரென்றாயலாயிற்று. சாதாரண மனுஷராசிகளுக்குக் கோரைப்பாயும் வெள்ளைவஸ்திரமேயன்றி மற்றவை தரித்திரமாம்.

☞ இவற்றுள் இன்னும் சில சந்தேகம் நிவர்த்திக்க விருப்பமுடையவர்கள் இந்நூலாசிரியனால் எழுதி அச்சிடுவித்திருக்கும் (நோயில்லாவாழ்வு) என்னும் புத்தகத்திற்காண்க.

சயன லட்சணம்-முற்றிற்று.

---

## விழிப்பு தெரிசனம்.

சூரியன் உதயமாவதற்கு (அரைஜாமம்) முன்னிட்டு மூன்றேமுக்கால் நாழிகைக்குள்ளாக இரண்டு முகூர்த்தங்களிருக்கின்றன அவற்றுள் முதலாவது பிராமமுகூர்த்தம் இரண்டாவதுஇரவுத்திர முகூர்த்தமாம்.

முந்தியமுகூர்த்தமாகிய பிராமமுகூர்த்தத்தில் நாடோறும் விழித்துக்கொண்டு மனத்தையுங் கண்களையுந் தன்விசாரணையை நோக்கச்செய்து தானாகிய கருவிகளிடத்தும் தன்விழிகளுக்கும் எல்லாப்பொருள்களினிடத்தும் பூரணமாய் நிரைந்திருக்கும் நாசமற்ற வியாபகப்பொருளையும் நன்குசிந்தித்து (ஓம்சர்வசம்மதவஸ்துவே) சென்றபொழுதில் யான் என்னபுண்ணியங்களைச் செய்தேன் என்ன மெய்வார்த்தைகளைப் புகன்றேன் என்னவேள்விசெயதேன் யார்யாரைத் தெரிசனஞ்செய்தேன் என்று தன்னைத்தான் விசாரித்துதாநிழைத்த கருமங்களை கடவுளுக்குஒப்படைத்தவாறு பூரணச்சம்மதமாய் தோத்தரித்து, என்கையால் முதலியகருவிடத்தும், நாட்டமாகிய விழியிடத்தும், ஓட்டமாகியமனமிடத்தும், விருப்பாகிய ஆசையினும், வெருப்பாகியகோபத்திலும், என்னுயிரிலும் மன்னுயிரிலும், யெங்கும்நிறைந்த நீக்கமற்றவஸ்துவே இன்றளவில் எனக்கு நல்ல தெரிசனங்கொடுத்து நல்லோர்வரவுதந்து, நல்லோர் உறவுதந்து நல்லநினைவுகொடுத்து நற்கருமங்களிழைக்கச்செய்து, இன்னாளை எனக்கு நல்லநாளாகக் கடவாய், மரணமோ துன்பமோ நோயோ பிரதுன்பமோ யாது

வருமோ அரியேன்! அரியேன்!! என்று அஞ்சிபயந்து கடவுளுக்கு நமஸ்காரஞ்செய்து நல்ல மனத்துடன்விழித்து மங்களவஸ்துக்களை தெரிசனஞ் செய்யவேண்டுமென்று காண்க.

நித்திரைவிட்டெழுங்கால்

## விழிநோக்கு லட்சணம்.

முன்கூறியபடி முதலாவதாகிய பிராமுகூர்த்தத்தில் தன்விசாரணைகளை ஊக்கமாகசிந்தித்து கடவுளைதியானித்து இரண்டாவதாகிய இரவுத்திரமுகூர்த்தத்தில் விழிநோக்கக் கடவதென்று காண்க; அவ்வாறு விழிநோக்குகையில் செல்வம் பெருமை வீரியம் முயற்சி புகழ் பலிக்கத்தக்கவண்ணம் ஆகிய அறுகுணச்செல்வனை (அல்லது) கடவுளை பசுவை வேள்வித்தீயை காலைக்கடன்முடித்து வேதமோதிஆசாரத்துட னுள்ளவர்களைப் பார்க்கின்றவன் சகல பீடைகளினின்று விலக்கப்படுவான்.

தன்னால்பூசிக்கப்பட்ட தாய் தந்தையர்-ஆசாரியன்-தேவவடிவம்-அரசன்-அருணபிம்பம்-தன்னைகாக்குந் தலைவன்-தீபம்-ஆழிமலை இவைகளைத்தெரிசித்தவன் தான் நினைத்தகாரியந் தடைபடாது வெற்றிபெருமென்பர் அல்லது சென்றவிடஞ் சிறப்பெய்துமென்றுகாண்க. மஞ்சள்-குங்குமம்-பூமாலை-பழவர்க்கம்-மங்களஸ்ரீ-கண்ணாடி-புகையொழிந்த நெருப்பு-வெள்ளி-பொன்-வலக்கை-தாம்பூலம்-ஆபரணம் - நாற்றுகுழந்தைகள்-பூரணக்கும்பம்-வயல்-வேசி-இவைகளைத் தெரிசித்தவன் சர்வமங்களகரமும் மனசந்தோஷமும் பெறுவான் என்று காண்க.

### இனி பார்க்கத்தகாத விலக்குகள்.

வேதத்தால்விலக்கப்பட்ட தொழிலியற்றுவோன் அங்கயினன்ஆசாரமில்லாதவன்-நாஸ்திகன்-தரித்திரர் - மூக்கருப் புண்டோன்-பொட்டை-பேடி-கூன்-குருடு-செவிடு-சடை - சன்னியாசி-கொலைதொழிலோன்-குட்டம்-வனிகன்-இருப்பாயுதம்-எணிவலைசாணன்-ஆசூசம்-விதவை-பாம்பு-பூனை-சாப்பல் - எருமைவராகம் இவைகளை அதிகாலையில் விழித்து நோக்கக்கூடாதென சயனசாஸ்திரத்தில் கூரப்பட்டுள்ளது.

விழிப்புதெரிசனம்-முற்றிற்று.

## மலஜல ஒழிப்பு.

மேற்கூறியபடி இராவின்முடிவில் சுபலட்சணம்போல் விழித்தெழுந்து ஜலக்கரைசென்று மூன்று குடிநீர் வாயிற்பெய்துகொப்பளித்து முழிந்துவிட்டு மலஜலங்களை பிரவிர்த்திக்கச் செல்லவும் புல்லுகளாலாவது உலர்ந்த சருகு இலைகளாவது பூமியைமறைத்து ஆடையால் தலையை மூடிக்கொண்டு வாய்பேசாது மலமுத்திரங்களை விடுங்கால் சுவாசத்தை யுள்ளுக்கிழுக்கப்படாது.

## மல ஒழிப்புத் திசை.

பகற்போதில் வடக்கு முகமாயும், இராப்போதில் தெற்கு முகமாயும் உட்கார்ந்து மலமூத்திரங்களை யொழித்தல்வேண்டும். அக்காலத்தில்பூணநூல்உள்ளவனும், தருப்பையாலமைத்த பௌவித்திரமுள்ளவனும், அவைகளை வலக்காதில் அணிந்திருக்கவேண்டியது. இல்லாத்தானுயின் பூணநூலை கழுத்துடன்சுற்றி முதுகின்புறமாகத் தொங்கவிட்டு மலமூத்திரங்களை யொழித்தல் வேண்டும் அல்லது செவிக்காயினும் சுற்றிவிடலாம்.

## மல ஒழிப்புத் திடம்.

சூரியனுக்கு எதிரிலும், அக்கினிக்கெதிரிலும்,பசுக்களுக்கெதிரிலும் வெட்டவெளியிலும், ஆலயத்திற் கெதிரிலும் வேதியர் நிலத்திற்கெதிரிலும், மலர்பரிக்குஞ் சோலையிலும் அருந்துதற்குரிய வாவியருகிலும், நடக்கும்வழிகளிலும், கிழக்கு முகமாயும், மேற்குமுகமாயும், எப்போதும் மலம்கழிக்கப்படாது. அளவுகடந்துஅங்ஙனமே பிரவிர்த்திக்கமுயலுவோர்கள்ஆக்கினையென்னும் சாபம் நிறைந்த பாத்திரமாவதன்றி செல்வமும்ஆயுளும் க்ஷீணித்து நரகலோகத்திற்கு முன்னிற்பார்கள் என்றுகாண்க.

## மலஜலங்களை யடக்கலாகா.

மலஜலங்களைஅன்றாடம் கழிப்பது காலைக்கடனென்பதற்கு காரணம் இக்கடனைமாலைக்காலத்தில் கழிக்கலாகாது. காலையில் கழிக்கயிடமில்லையாயின் மாலையில் கழிப்பதிற்றோடமில்லை. அப்படி இருவேளையும் மலஜலாதிகளை யடக்குவதால் பிராணனுக்குத் துன்பத்தை யுண்டுபண்ணத்தக்க பயத்தை விளைவிக்கும், அதாவது, பலம் இருகுமாயின் வதாதிக்கப்பட்டு உடந்தையாக உஷ்

ணம் சம்பந்தப்பட்டும், ஜீரணசக்தியைக் குறைவுபடுத்தி பலபி ணிகட்கும் வழியை யுண்டுபண்ணுமாதலால்,

வாகடநூலாசிரியர் உரையுமாறு.

திண்ணமிரண்டுள்ளே சிக்கவடக்காமல்
பெண்ணின்பாலொன்றைப் பெருக்காமல்-உண்ணுங்கால்
நீர்கருக்கிமோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
பேருரைக்கிற் போமேபிணி.

என்றபடி-அன்றாடம் மலஜலங்களை யடக்காமலும்-மாதரின் பால் நாதத்தை விசேடித்து விடுக்காமலும்-போஜனம் செய்யுங் கால் நீரைக்காய்ச்சியும், மோரைவிளாவியும்-நெய்யையுருக்கியும்-உண்பவர்களின் நாமத்தை உச்சரிப்பவர்கட்குப் பிணிகள் அடுக் காதெனப் பேசியிருக்கின்றனர்.

## தந்தசுத்தி லட்சணம்.

### பற்கோலுக்குரிய மரங்கள்.

பற்கோலுக்குரிய மரங்களைக் குறிக்குமிடத்து மா-புன்னை-வில்வம்-அத்தி-வேங்கை-கருவேல்-ஜாதிக்காய் மரம்-கருக்குங்கி லியமரம்-அலரி-நாயுருவி - இவைகளாலமைந்த பற்குச்சுகளால் பற்துலக்கவேண்டுவதென சாஸ்திரப்பிரமாணமேயாம்; இதுவு மன்றி மணமுள்ளமரங்களும், முட்களுள்ளமரங்களும்,பாலுள்ள மரங்களும், பற்றுலக்கப்பயன்படுமென்று ரிஷிகளால் சொல்லப் படுகிறது.

### பற்கோல் எடுப்பதற்கு மந்திரம்.

ஆலாப்புன்னையத்தியுமாய் யுட்புறமும்
பாலாய்நிறைந்த பராபரமே-மேலாந்
தாபரஞ்சேர்கானின் றருவரசேமோட்ச
ஞாபகமே நல்கென் ஞான்றும்.

காட்டி தலைவனாகிய ஓய் தருவரசே நீர் எமக்கு ஆயுளையும் ஆற்றலையும்-புகழையும்-ஒளியையும்-மக்களையும் - பசுக்களையும் - பாக்கியத்தையும் பிரமஞானத்தையும் - சூட்சுமகுணத்தையும் - கொடுத்துக் காப்பாயாக என்னும் வாக்கியத்தை சிந்தித்தவர்க ளாய் வியர்த்தமாய் அழியும் பலகிளைகளையும் ஒடித்தெரியாமல் தனக்குவேண்டியதைமாத்திரம் மந்திரப்பிரயோகத்துடன் திண் டியொடித்துக்கொள்ளக்கடவர்கள்.

## பல்விளக்குகிற திக்கு.

பற்கோலை தானே சென்றெடுப்பவர்களும் அல்லது விருட்சத்தடியில்செல்லும்போது மேற்கூறிய மற்றஏவலாளிகள் மூலியமாய் கொண்டுவரப்பட்டு உபயோகிப்பவர்களும் அப்படிக் கொணரப்பட்ட பற்கோலைத் தீண்டும்போது மேற்கூறியமந்திரச்சொற்களை ஒரு முறைஉச்சரித்து அதன்பிறகுஅந்தபற்கோலைத்தீண்டி எடுத்துசுத்த ஜலத்தினால் மூன்றுவிசை அலம்பியபிறகு வலது கையால் வாயில்வைத்து வாய்பேசாமல் கிழக்கு மேற்கு வடக்கு இந்த மூன்று திக்குகளில் எந்த திசையோனும்நோக்கி பற்றுலக்கலாம். தெற்குமுகம் நோக்கி ஒரு பொழுதேனும் பற்றுலக்கக் கூடாது. நடக்கும்போதும் பற்றுலக்கக்கூடாதென்றறிக.

## பற்கோல் அளவு.

வேதியர்க்குப்பனிரெண்டங்குலக்கோலும்-அரசனுக்கு ஒன்பதங்குலக்கோலும்-வைசியனுக்குஆறுஅங்குலக்கோலும்-சூத்திரருக்கு நான்குஅங்குலக்கோலும்-ஆகிய இவ்வளவுடையகோல்களாயிருப்பதுமன்றி-பாலுற்றமரங்களில் தோன்றியதாகவும்-சற்றேறக்குறைய கடைவிரற்பருமனுடையதாகவும் தலைக்கனமுடையதாகவும்-கடை சிருத்துள்ளதாகவும்-இருக்கவேண்டியது பற்கோல்அளவென்று பெரியோர் கூறுகின்றனர். இதுவுமன்றி சிறு பற்களை யுடையவர்களுக்கு சிறுகனமுடையதும் நடுத்தரப்பற்களையுடையவர்கட்கு நடுத்தரப்பற்கோலும் பருத்தபற்களையுடையவர்கட்கும் கோணைப்பற்களை யுடையவர்கட்கும் பருத்தபற்கோலும் ஆக பற்கோலானது மூவகைப்படுமென்று முதியோர் கூறுவர்.

## பல்துலுக்குங்காலம்.

நோயின்றிய சுகசரீரம்பெற்ற ஆடவர்முதலியவனிதைமாரியாவரேனும் சூரியவுதயத்திற்கு முகூர்த்தப்பொழுதுமுந்தி பிராதகாலத்திலெழுந்து பல்துலக்கவேண்டியது அப்படிதுலக்குவோர்புரோட்சித்துக் கொள்ளவெடுத்த சுத்தஜலத்தை அவன் பிதுரர்களும் முனிவர்களும் தாங்களும் கவனித்து அந்தப்புண்ணிய புருஷனை ஆசிர்வதித்துஇந்நாளைப்போலவே தினதினமும் நன்னாளாக நோயின்றிவாழக்கடவாயென வாழ்த்திச்செல்வார். இம்முறைத்தவறி கதிரோனுக்கெதிராக உதகம் உமிழும்பாமரனை நரனை அவன் பிதுர்களும் முனிவர்களும் முகம் காட்டாது பின்

திரும்பி பாபம்நிறைந்த பாத்திரமே பரலோகமிழந்து நரலோக மடையக்கடவாயென கோபமுடன் சாபமிட்டேகுவாரென ஆன்றோர் அருளிச்செய்திருக்கின்றனர்.

### பல்விளக்குவதர்க்கு விலக்காயுள்ளவை.

கமுகு புன்னை நொச்சி கடம்பு ஈந்து கரும்பிசினியுள்ளமுருக்கு செங்குருஞ்சிமரம் தேவதாரம் மற்றவை செம்பருத்தி வாழை இலவு புல்லு வைக்கோல் கரி மணல் சாம்பல் தழைகள் சிறுமுட்கள் கணுவுகள் அவுத்தியொத்த சிறுநார்முதலிய உடையனவாய் பல்சந்திற் கொள்வனவைகள் திக்குணமுடைய மூங்கில்சித்திரமூலம் எருக்கு கள்ளி சேராங்கொட்டை மரம் கூந்தற்பனை வன்னி தருப்பை பனை கருதாளம் பாக்கு தாழைஆல்-பேரீச்சன் தெங்கு கல்லு இந்த வஸ்துக்களால் ஒருபோதும் பற்றுலக்கலாகாது. பொன்மகள் தலைவனாகிய மகாவிஷ்ணு துலக்கினபோதிலும் அயிஸ்வரியமெல்லாம் அழிந்துபோகுமென்று சிரேஷ்டமாகிய தவமுனிகள் கூறியிருக்கின்றனர்.

### பல்துலக்கக் கூடாததினங்கள்.

அமாவாசை பூரணை சூரியகிரணம் மாசப்பிறப்பு ஆகிய இந்நான்கு காலங்களிலும் பெண்புணர்ச்சி செய்யுந்தினம்சிரார்த்தம் செய்யுந்தினம் தான்பிறந்தநாள் மனைவி பிறந்தநாள் விரதநாள் உபவாசமிருக்கும் நாள் இக்காலங்களிலும் பிரதமை சஷ்டி அஷ்டமி நவமி சதுர்தசி இத்தினங்களிலும் பிதுர்கடன்கழிக்குந்தினத்திலும் பற்றுலக்கக்கூடாது. இதுவுமன்றி, மண்கட்டிகற்றாள் ஓடு இவைகளாலும் பெருவிரல் பவுத்திரவிரல் இவ்விரண்டு விரலொழிய மற்ற மூன்று விரல்களாலும் பற்றுலக்கக்கூடாது. பெண்களுக்கென்றாலோ புருஷன் ஊரிலில்லாத காலங்களில் பற்றுலக்கக்கூடாது.

### பல்துலக்க விலக்கிய நாட்களுக்கு சாந்தி.

மேற்கூறியபடி பல்துலக்கக்கூடாத நாள்களிலும்பழுமையில்லாத கேணியிலெடுத்த புதிய ஜலத்தை வாயிற்பெய்து கொப்பளித்துமிழ்ந்து பவுத்திரவிரலினல் பற்களைத்துலக்கிபன்னிரண்டு விசை ஷ சுத்தஜலத்தால் வாய்கொப்பளிக்கவேண்டியது. இச்சந்தற்பங்கள்யாவும் சாமான்னியமனிதரால் சொல்லப்பட்டதன்று கார்த்தியாயனர் உசனர் இயமன் வியாசர் யாஞ்சவல்கியர்முதலிய திரிகாலமுணர்ந்த மகானுக்களால் கூறப்படுகின்றன.

## ஸ்நான விதி.

முன்கூறிய விதிப்படிப் பற்கோலால் பல்விளக்கிக்கொண்டு சுத்தாசமனஞ்செய்துமுயற்சியோடும் வாய்பேசாது நாடோறும் உதயகாலத்தில் நன்ருக நீராடவேண்டும். உஷ்ணகாலம் வந்த அளவிலே, உணர்ந்தவன் செய்யத்தக்க ஒருதலையான தொழிற் கடனைமுடித்து விதிப்படிச் சுத்தஞ்செய்து பரிசுத்தமாகிய ஆற்றுநீரிலே நீராடவேண்டியது. நீராடாமலே செபம் ஹோமம்முதலிய கருமங்களைச் செய்யலாகாது, வாயினின்றும் வடிநீர்(சொள் என்றுவழங்குகின்றது) வியர்வை இவைகளாற் பூசப்பட்டவுடம்பையுடையவன் படுக்கையைவிட்டெழுந்து உடம்புமிகஅழுக்கோடுங்கூடி யொளியற்று ஒன்பது துளைகளையுடையதாய் மலங்களையவற்றின்வழியே இரவும்பகலு மொழுகவிட்டுக் கொண்டிருக்கின்றது ஆதலின், வைகறையில் நீராடுதல் அவ்வுடம்பினைச் சுத்தஞ்செய்வதாக விருக்கின்றது. அந்த முழுக்கு, கண் காணத்தக்கபயனையும் கண்ணுற்காணக்கூடாத புண்ணியப்பயனையுந் தருதலுடையதென்று பெரியோர் புகழ்ந்துகூறுகின்றனர். காலையில் நீராடுவோன் சுத்தமான உள்ளமுடையவனுதலின் செபமுதலிய எல்லாக் கருமங்களையுஞ் செய்தற் குரியவனுகின்ருன்.

## ஸ்நான காரணம்.

அறியாமையாலாயினும், ஆசையாலாயினும், இராக்காலத்தில்செய்யப்பட்ட தீயசெய்கையால் விளைந்த குற்றங்களை யிருபிறப்பாளர் காலை முழுக்கினுல் கழுவிச் சுத்தஞ்செய்துகொள்கின்றனர் இவ்வாறே எப்பொழுதும் உஷக் காலையிலெழுந்து பல்விளக்கி, நீரின்மூழ்கி தேவ தருப்பணமும் இருடிதருப்பணமுஞ்செய்யவேண்டுவது கடமையாம் உஷக்காலங்களிலும் சந்திகாலங்களிலும்,சூரியவுதயகாலத்திலும்,நீராடுதல் பிராஜாபத்தியமென்னும் விரதத்தோடொப்பானது. எல்லாப்பாவங்களையும் நன்கு ஒழிக்கத்தக்கதாம். அப்படி நீராடிமுடிந்தவுடன் இரண்டு கைகளையும் ஒருங்குசேர்த்து நிரம்ப நீரைப் பூரித்துக்கொண்டு பசுவின் கொம்பினுயரமளவாகக் கைமேலெடுத்து, நீர்நிலை நடுவே யந்நீரையிறைத்தல்வேண்டும் உந்திவரையில் நீரிலிருந்துகொண்டு மேல் நோக்கிய உள்ளத்தால் சிந்தித்து தருப்பணம்செய்தல்வேண்டும் பிதிரரரையும் இருடிகணங்களையும், தேவர் கணங்களையும், களிப்

மதுசூதாயனம ஓம் திரிவிக்கிரமாயநமஓம்வாமநாயநமஓம்ஸ்ரீத ராயநம ஓம் ரிஷிகேசாயநமஓம்பத்மநாபாயநமஓம்தாமோதராய நம ஓம் ஸங்கர்ஷணாயநம அதோட்க்ஷஜாயநமஓம் நாரசிம்மாய ஓம் அச்சுதாயநம ஓம் ஜனார்த்தனாயநம ஓம் உபேக்திராயேண நமஓம் க்ஷாயேணநம ஓம் ஸ்ரீகிருஷ்ணாயேணநம.

## மத்தியான காயத்ரீ.

அபஹா புனந்து புருணிவீன் பிரிதிவி பூதா புனாதுமாம் புணர்கியாபிரதானம் ஹக் சச்சு ஷத்வஸாரம் தரிட்க்ஷஸத்தேம் தாவேதி ஷாதிதிர்த்து ரேணசத் மிருஷத்வா ஸதருதஸவியோ ம, ஸதப்ஜா கே ஜாருத ஜாத்திரி ஜாருதம் புருஹத்.

ஓம் மித்தியே காட்க்ஷிரம் பிரம்மஹா அக்னிர்தேவதாபிரம் மஹா, யத்தியாத்க்ஷர வாய்த்திரம். சந்தனம் பரமாத்மம், ஸ்வரூ பம் ஸாயுஜ்ஜியம் வினியோகம்.

ஆயாதுவர தாத்தேவியக்ஷரம் பிரம்மஸம்மிதம் காயத்திரீ சந்தசாமேதேதபிரம்ம சுஷஸ்வமே யதக்னேயிக்குருதே பாபம் தத்க்னே பிரதி முச்சதே யத்திராத் திரியாத் குருதேபாபம்தத் ராத்திரியா பிரதி முச்சதே சர்வர்ண்ணே மகாதேவி ஸந்தியவி த்தியே ஸரஸ்வதி,

## மாலைசந்தியாவந்தனம்.

ஓம் தஸ்-விதுர்வரேணயம் - பர்கோ - தேவஸ்ஸிபதீமகித் யோனப்ரஜோதயாத் ஓம் மாபோ ஜேதி ரசோ மிருதம்பிரம்ம-ஹ்பூர்ப்பவஸ்சுவரோம்-பூர்வோக்தபிரீதியக்பிம்- சந்தியாங்கணம் எதா சக்தி காயத்திரி மந்திதம் ஜபங்கரிஷியே.

## நமஸ்காரம்.

ஓம் யோதேவோச்நௌமோபசு யோவீச்வம்புவனமாவிவே ச-யஓதீஷுயோ வனஸ்பதீஷு தஸ்மைதேவாயநமோநம.

## ஆராதனே.

ஓம் சத்யம் ஞானமனந்தம் பிரம்ம ஆனந்தரூபமமிர்தம்பத் விபாதி சாந்தஞ் சிவமத்வைதம்

## காயத்திரி தியானம்.

ஓம் பூர்புவ ஸுவுதத்ஸவிதுர்வரேண்ணியம் பர்கோதேவ ஸ்யதி மஹிதியோயோந ப்ரபசாவயாத்;

## அடைக்கலம்.

ஏஷாஸ்யபரமாகதி ரேஷாஸ்ய பரமாஸ்பதேஷோஸ்ய பரமேலோக ஏஷோஸ்ய பரமாநந்த ஏதஸ்யை வாநந்தஸ்யாந்யாநி பூதாநிமாத்ரதமுப ஜீவந்தி.

## ஸ்தோத்திரம்.

(க) ஓம் நமஸ்தே ஸ்தேதே ஜகத்காரணாய நமஸ்தேசிதேசர்வலோகாராயா நமோத்வைததத்வாய முக்திப்ரதாய நமோபிர்ஹமணே வ்யாபிநேசாச்வதாய,

(உ) த்வமேகம் சரண்யம் த்வமேகம்தரேண்யம் த்வமேகம் ஜகத்பாலகம் ஸ்வப்ரகாசம் த்வமேகம்ஜகத்தர்த்ரு பாத்ருப்ர ஹர்த்கு த்வமேகம் பரம் நிச்சலம்நிர்விகல்பம்,

(ங) பயாநாம்பயம்பீஷணம்பீஷ்ணாநாம்கதிப்ராணிநாம்பவநம்பாவநாநாம், மஹோச்சைப்பதாநாம் நியந்த்ருதவமேகம்-பரேஷாம்பரம்ரக்ஷணம் ரக்ஷணாநாம்,

(ச) வயம்த்வாம்ஸமராமோவயம்த்வாம்பஜாமோ, வயம்த்வாம் த்ஸாக்ஷிருபம்நமாம ஸதேகம் நிதாநம்நிராலம்பமீசம் பவாம்போதிபோதம் சரண்யம் வாஜாம

## பிரார்த்தனை.

அஸ்தோம ஸத்சமய தமஸோமா ஜயோதிர்கமயம்ருத்யோ ஜகர்மா அம்ருதங்கமய ஆவிராவீர்மஏதி ருத்ர யத்தே தக்ஷணம் முகம் தேநமாம் பாஹிநித்யம்.

## ஆசீர்வசனம்.

ஓம்யரகோவர்ணேபஹுதாசக்தியோகாத்வர்ணாநநே காந்நிஇதார்த்தேத்தாதி விசைதிசாந்தே விச்வமாதௌ ஸதேவ ஸநோபுத்யாஸுபயாஸம் யுநக்து.

### சாந்தி வசனம்.

ஸ்வருக்ஷகாலக்ருதிபி பரோங்யோவஸ்மாத்ப்ரபஞ்ச பரிவர்த்ததேரயம் தர்மமாஹம் யாபஹ்தம்மகேசம் ஞாத்வாத்மஸ்த மமர்தம் விச்வதாமவிச்வஸ்யைகம் பரிவேடிதாரம் ஞாத்வசிவம்; சாந்திமத்யந்தமேதி.

---

### சிலபொதுவிதிகள்.

### விபூதியணியப்படாயிடங்கள்.

கடவுள்-அக்கினி-ஆசாரியன்-பாவிகள் சிவநிந்தைசெய்வோர்-பூப்பிஸ்திரீகள் இவர்கள்முன்னம் விபூதியணியப்படாது. அன்றி-அசுத்தநிலம்-மேற்படியார் வசிக்குமிடம்-நடக்கும்போதுஇவ்விடங்களில் விபூதியைத் தொடுவதும் மகாபாதகமாம்.

### விபூதி யணியுங்காலம்.

விபூதி புண்ணிய சொரூபமாதலால் எப்போதும் தீட்டென்பது கிடையாது அன்றிமேற்சொன்ன இடந்தவரன்றிவிபூதிக்குக் காலத்தவறுகிடையவே கிடையாது.

### அணியத்தகா விதி.

கோமயத்தினுலே தீக்ஷாகிரமத்தோடேயே மகா சிவவிரதிகளாற்செய்யப்பட்டதாயினும், பால்வெண்மையில்லா விபூதி உதவாது அதனைக்கட்டாயம் பெறவேண்டியதாயின் வாங்கிபவிபூதியைநமஸ்காரத்தோடு பத்திர புட்பங்களால் அருச்சித்துப்பெறவேண்டும்.

### விபூதி யணியத்தகாதவர்கள்.

கௌபீன மற்றவர்-நிருவாண மாயுள்ளவர் தேகமலினமாயுள்ளவர், அழுக்காடையுடையோர் முதலினர் விபூதியணியப்படலாகாது.

### விபூதியை குழைத்திடவேண்டியவர்கள்.

சமயி காலையினும்-புத்திரன் காலைமாலைகளிலும்-சாதகன்காலைமாலைமத்தியானங்களிலும்-ஆசாரியன் காலை மாலை-மத்தியான அர்த்தராத்திரிகளினுமேதான் விபூதியை நீரிற்குழைத்துத் தரிக்கவேண்டும்.

விபூதிகுழைப்பதற் கேற்றஜலம்.

ஊற்றுநீர் அல்லது ஆற்றுநீரால்-குளிர்ந்தஜலமாய் வடிகட்டியதா யிருத்தல்வேண்டும் அப்படியல்லாது. உவநீர் - வெந்நீர்-பழையநீர்-பாசி-குமிழி நுரை-கலக்கல் புழுமுதலியவையுள்ளஅசுத்தநீர் இவைகளாகாது.

விபூதியணிவோர் சூரியோதயத்திற்குமுன் எழுந்து மலஜலங்கழித்து, தந்தசுத்திசெய்தபின் சிவத்தியானத்தோடு விபூதியணிந்துக்கொள்ளவேண்டும்.

விபூதியைப் பெறுங்கால் வந்தனோப சாரத்துடன் இரண்டு கையாலும்பெற்று திரிபுண்டரம். உத்தூளமாகத் தரிக்கவேண்டும், சதுரமாகவும் பொட்டாகவும் ரேகைப்பழுதாகவுந் தரிக்கப்படாது.

விபூதி யணியுங்கால் கிழக்குமுகமாய்நின்றுமூன்று விரலால் நெற்றியிலருந்தும்படிதலை நிமிர்ந்துமன சந்தோஷத்துடன் தரித்தல்வேண்டும்.

ஸ்திரீகள் பூப்புநாள்களைக் கழித்து சுத்தமாய் அனுட்டானஞ்செய்து சத்தியோசாதமந்திரத்தை நூருருசெபித்து அணியவேண்டும்.

விபூதியாதி சிவானுஷ்டானங்களை ஏனைய சைவரும்அநுஷ்டிக்குமாறு ஒருவகையாகக்கூறப்பட்டது. மற்றவிஷயங்களைவிரிவாகக் காணவேண்டின் ஆசாரியாபிஷேக தீக்ஷாதிகிரமமாகதெரிதலே உசிதம் அன்றிசைவ நெறியினுங் காணலாம்.

சைவ சமயாதிகாரம் முற்றுங்

கிரமமாகத் தெரியவிரும்பும் விரதிகளுக்கு,

## ஓர் விண்ணப்பம்.

இவ்விதசிவவிரத நஷ்டனான சைவன் - பஞ்சாட்சராராதிமந்திர-செப நியதிகளை யறியவேண்டின் ஷட்வித தாரணம் - பஞ்சசிவமந்திரம் - திரிவித சங்கார மந்திரம் - பஞ்ச பிரணவமந்திரம் பஞ்ச பஞ்சாட்சர மந்திரம்-பஞ்சாஸ்திர மந்திரம்-பஞ்ச பிரம்ம மந்திரம்-ஆதி மகாசத்தி மந்திரம்-சல்லிய தந்திராதி சித்தமந்தி

ரம்-முதலிய மந்திரங்களையும், காயத்திரி மிருத்தியஞ்சய மூர்த்தி ததுவ நீலகண்ட சரப வீர விக்கினேச்சுவர விசாக வித்தியேச்சுவர பிரம விஷ்ணு சூரிய வைரவாதி மகா மந்திரங்களும் கர்மாதிகளுக்குரிய பல்லவாதி கிரியாபேத விதிகளும் மந்திர மந்திரோக்த பீஜ கணித சதசகஸ்ராதி லிகித நியதிகளும் தெரியவெண்டிய தவசியம்.

இவ்வாறு மந்திரங்களை அனுட்டிப்போர்செபிக்குமிடம்செபசங்கியாபலன், செபபேத தேச கால திதி நட்சத்திர கிரகவார யோக ஓரா விதிகளும், யெக்கியாதி கிரியாபரவங்களும், திக் ஆசன சமுக விஷயங்களும் செபமாலிகை செபமணி செபிப்போராது விதி செபவர்ண ரூபம் கற்பத்திரயாதிகள் பிரயோசனுதிகள்சுத்திக்கிரியைகள் அஸ்திராதி முத்திரைபேதங்கள் பீஜா திரவியாதிகள் ஆவாகனுதி உபசாரங்கள் பத்தி சொரூபம்அந்தரங்க பூஜாவிதி சுத்தசைவ லக்ஷணங்கள் சிவவிரத நெறிகள் தீக்ஷாவிதிகள் லிங்கம்பிரமாண சூத்திரவிதிமுதலியவைகளை கிரமப்படமிக்கசுருக்கமாய் எழுதத்தொடங்கினும் பெரியகிரந்தமாகமுடியும். இவைகள் விளங்கக்கிடப்பது ஆகமங்களிலேயே ஆனதால்சமயதீக்ஷையேனும்பெற்றுஆசாரியரால் எல்லாந்தெரிந்துகொண்டால்அதிக எளிதாகவும் சம்பிரதாயமாகவு மிருக்குமாதலால் இவ்வளவிலே யேநிறுத்தி விவாகவிதியைக் கூறத் தொடங்குகின்றேன்.

நித்திய கர்மானுஷ்டானவிதி.

முற்றிற்று.

# கல்யாண மண்டபம்.



# விவாஹ விதி.

விவாகமென்பது இவ்வுலகத்துள்ள ஆடவர் மகளிரிருவரும் ஒருவரோடொருவர் அன்னியோன்னியமா யளவளாவி இல்லற தருமநடாத்தும்பொருட்டு ஏற்படுத்திக்கொள்ளும் ஓர்வித உடன்படிக்கை இது இகபரசாதனங்கட்குரிய எவ்வித சுகத்தையும் அடைவதற்கு முதற்காரணமாயிருக்கின்றது. ஆதலாலன்றோ? இதற்கு விவாகம் மணம் சுபம் மங்களம் மன்றல் என்னும்சிறந்த பெயர்களமைந்திருக்கின்றன. கல்யாணம் என்பது கடவுளாலேயே விதித்தவிதியன்றிவிலக்கல்ல அவருடையவிதியே என்பதை ஆண்பெண் என்றிருவகுப்பாய்ப் படைத்திருப்பதனாலே யறியலாம். எல்லாச் சீவராசிகளையும் இவ்வாறே படைத்திருக்கினும் மானிடர்களாகிய நமக்குமாத்திரமே பகுத்தறிவளித்திருக்கின்றனர். அஃதொன்றில்லாவிடின் மிருகாதிகளைப்போன்ற நாமும் தாயென்றும் தாரமென்றும் தமக்கையென்றும்தங்கையென்றும் தாரதம்மியம நோக்காது நடக்கமுயன்று அதனாற்பலகெடுதிகள் நேரவும் செய்துகொள்வோம். அப்பகுத்தறிவுடைமையினாலேயேமிருகாதிகளுக்கு நடக்கவியலாத அறியவிதிகளெல்லாம்நமக்குவிதித்திருக்கின்றார் அவ்விதிகளைக் கடைபிடித்தொழுகிஇல்லறநடாத்திப் புத்திரப்பேறடைந்து குடும்பவிர்த்தி புரிந்துசுகமாய்வாழும் பொருட்டுத்தான் விவாகவிதியைக் கடவுள் விதித்திருக்கின்றார். வீடுகட்டும் ஒருவன் அவ்வீடு நெடுநாள் அழியாதிருக்கும்படி உறுதியாய்க் கட்டுவதற்கான முயற்சிகள் பலவற்றையும் முன் ஜாக்கிரதையாய்ப் புரிவதுபோல, ஓர் விவாகம் நியமிக்கும்போது மணமகன் மணமகள் என்னும் இருவரும்இகலோகத்தில் ஒற்றுமையாய்ச் சுகஜீவிகளாக வெகுகாலம் வாழும்பொருட்டும், இவ்வில்லறதருமத்தாற் பரலோகத்திற்சதானந்தம்அனுபவிக்கும்பொருட்டும் இன்றியமையாதனவாயுள்ள ஒழுங்குகளனைத்தையும் புரியவேண்டியது அத்தியாவசியகம் விவாகமானது சதிபுருஷாளிருவரின்மனஒற்றுமையாற் பாக்கியத்திற்கும். மனவேற்றுமையால் தௌர்பாக்கியத்திற்கும் அஸ்திவாரம்போலாகின்றது, குடும்பத்திற்கநுகூலம்பாக்கியமும் பிரதிகூலம் தௌர்ப்பாக்கியமுமாமென்பதுசர்வஜன சம்மதமாதலின், அவ்விரண்டுமுறைபே

மனவொற்றுமையாலு மனம்வேற்றுமையினாலுமே விளையக்கூடு மென்பது ஆபாலவிருத்தர்களுமறிவாறன்றோ? அதுபற்றிவிரித் துக்கூறவேண்டியது அனுவசியம், நூதனகுடும்பிகளாகிய மணமகன்மணமகள் என்னும் இருவர்க்கும் விவாகமானது, முதற்கொண்டேபாக்கியமாயினும் தௌர்ப்பாக்கியமாயினும் தொடர்ந்து கொள்வது தேற்றமாகையால், அக்காலமுதல் அத்தகையபாக்கியம்விர்த்தியாகவும் தௌர்பாக்கியம்நிவிர்த்தியாகவும் அவசியமானஒழுங்குகள்எவைகளோ அவைகளே, அவ்விருவரைப்பெற்றோரேனும் சுற்றத்தினரேனும் செவ்வனேயூகித்து, ஒன்வொன்றையும் திருத்தமாய் நடத்திவைக்கவேண்டிய முக்கியகடமையாம்.

## கல்யாணஞ் செய்யுங்காலம்.

சில சாஸ்திரிகள் ஆடவர்களுக்கு உடு-வயதிலும், மகளிர்களுக்கு உம-வயதிலும் விவாகம்முடிப்பது தகுதியென்று ஆடவர்களுக்கு உடு-வரையில்தான் வளர்ச்சியென்றும், மகளிர்களுக்கு உம-வயதுவரையில் சரீரஅஸ்திகள் அவயவங்கள் பூரணபக்குவமடைகிறதென்றும், இவ்வயதிற்குமுந்தி விவாகம்முடித்தல் இருவருடைய சரீரசவுக்கியத்திற்கும் பிரதிகூலமென்றுங்கூறுகின்றார்கள். சிலதேசங்களில் சீதோஷணவேறுபாட்டிற்கும் தேகசுவாபீகத்திற்குத்தக்கபடியும் ஆடவர்களுக்கு உஉ-வயதிலும், மகளிர்களுக்கு மஅ-வயதிலும் விவாகம்முடிப்பது யுக்தமெனச் சிலசாஸ்திரிகள் கூறுகின்றார்கள். நமது முன்னோர்கள்காலத்திலே உடு வயதுக்கும் மேற்பட்டு ருமெ-வதுவயதிலேயே விவாகம் முடித்து வந்ததாகவும் அதுவரையில் அவர்கள் சிற்றின்பம் அறியாதவர்களாயிருந்ததாகவும், அதற்கேற்றபடி அவர்களனைவரும் நீடித்த ஆயுளுடையவர்களாயும் நோயற்ற திடகாத்திரமுடையவர்களாயுமிருந்ததாகவும் கேள்விப்படுகின்றோம்.

## புருஷனுக்குப் பெண்கொடுக்க நிச்சயித்தல்.

ஒருவனுக்கு ஓர்பெண்ணை நிச்சயப்படுத்துவதானால், அப்பெண்ணின் தாய்தந்தையர் கவனிக்கவேண்டிய முக்கியாம்சங்களாவன —

புருஷன் பெண்ணின் அந்தஸ்துக்குத்தக்க நல்லவம்சத்திலுள்ளவனென்றும், அவன் அல்லது அவன்தந்தை மேகம் கா

சம் முதலிய வியாதிகளில்லாதிருக்கிறார்களாவென்றும், கல்வியிற் றேர்ந்து நன்னடக்கையிற்பயின்று விவேகம் புத்திநுட்பம் அடக்கம் ஒழுக்கம் சாந்தம் வணக்கம் தயைதாட்சணியம் முதலிய சற்குணங்களமையப் பெற்றவனாவென்றும், பெண்ணுக்குத்தக்க வயதுள்ளவனாவென்றும் லௌகிகவிஷயங்களிற்றேர்ந்து தன்குடும்பசம்ரக்ஷணைக்குத்தக்க பொருள்சம்பாதிக்கும் திறமையுள்ளவனாவென்றும் நன்றாய்விசாரித்துப் பலவழியிலும் ஆராய்ச்சிசெய்துபார்த்துப் பலநாள் ஆலோசித்துத் திருப்திகரமானபின்னரே பெண்ணைக்கொடுக்கச் சம்மதிக்கவேண்டும். அப்புருஷனுக்கு மேகம்முதலிய தொத்துவியாதிகளிருந்தால் அவ்வியாதி நாளாவிர்த்தியில் அவன்மனைவிக்கேறி, "அரசமரத்தைப்பிடித்தபிசாசு பிள்ளையாரையும்பிடித்தது" என்பதுபோல், யாதோர் அநுபவமுமறியாமல் அவர்களது வயிற்றிற்பிறந்த பிள்ளைக்கும் பிடித்துக்கொள்ளும். ஆதலால் அவ்வித ரோகமுடையவனுக்குப் பெண் தரலாகாது. க்ஷயரோகமுடையவன் உன்மாதவம்சத்திற்சேர்ந்தவன் குடியன் என்னும் இவ்வகையினரைப் பெண்கள் மணம் புரிந்துகொண்டால், அவர்கள்வாழ்நாளளவும் துக்கமும் துன்பமும் அநுபவித்துக்கொண்டேயிருக்கவேண்டும். சிலபுருஷர்கள் தங்களுக்குள்ளே மேகம்முதலிய வியாதிகளைக் கல்யாண காலம் வரையில் இரகசியமாய் ஒளித்துவைத்துக் கொண்டிருப்பார்களாதலால், அப்படிப்பட்ட விஷயங்களை அவர்களுக்குரிய சிநேகிதர்களைக்கொண்டுலளிதமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். திரவியவந்தனா யிருக்கின்றானென்று வியாதிஸ்தனுக்கும் மூடசிகாமணிக்கும் வயோதிகளுக்கும் பெண்ணைக்கொடுக்கச் சம்மதிக்கலாகாது. மூடன்கையிற்சிக்கியபொருள் பைத்தியக்காரன் கையிலிருக்குங்கத்திக்குச்சமானம் பைத்தியக்காரன் எப்படி அக்கத்தியால் தனக்கும் பிறர்க்குங்கேடுவிளைப்பானோ அதுபோலவே மூடனும் தன்கையிற்சிக்கியபொருளாற் பிறர்க்கு கேடுதேடித் தானுங்கெட்டுத் திண்டாட்டமுற்றுத் தெருவில்நிற்பான். ஆதலால் அவ்வித அறிவில்லாப் பாக்கியவானுக்கு வாழ்க்கைப்படுவதைவிட அறிவுள்ள தௌர்பாக்கியனுக்குவாழ்க்கைப்படுதலே அதிகநன்மை, திரவியவந்தனான தீராரோகஸ்தனுக்கு வாழ்க்கைப்பட்டுச் சிந்தைகலங்குவதைவிட அரோகதிடகாத்திரமுள்ள ஏழைக்கு வாழ்க்கைப்படுவதே யானந்தம். ஐசுவரியமுள்ள வயோதியனுக்

குவாழ்க்கைப்பட்டு, ஆயுளுள்வரையிற் சுகாநுபவமின்றி அல்ல றப்பட்டழுங்துவதைவிட வாலிபனுன ஏழைக்கு வாழ்க்கைப்பட் டுச் சுகாநுபவத்திற் சோர்வின்றியிருத்தலே அதிகமேன்மை.

பேராசையுள்ள பெற்றோர்களே! நீங்கள் ஊட்டிவளர்த்த விளங்கிள்ளையைப் பூனைவாயிலொப்பித்தாற்போல, அருமையா கப்பெற்றெடுத்த அரிவைமார்களை முற்கூறிய தரத்தினற்குப் பேராசையாலும் மௌடீகத்தாலும்கொடுத்துவிட்டுப் பரதவிக்க விடாமற் செவ்வைபாய்ஆராச்சிசெய்து, ஏழையாயிருந்தாலும் அரோகதிடகாத்திரனுகவும்-வாலிபனுகவும்-சற்குண சம்பன்ன னுகவும் கல்வியறிவுள்ளவனுகவும்-லௌகீகஸ்தனுகவும், குடும்ப சம்ரக்ஷணைக்குப் போதுமான வருவாயுள்ளவனுகவும் - அல்லது இனிமேல் சம்பாதிக்கத்தக்கவனுகவும்பார்த்துபெண்ணைக் கொடு ங்கள் கண்மூடித்தனமாய்க் கொடுத்துவிடாதீர்கள்.

### புருஷனுக்குப் பெண்பார்த்தல்.

முற்கூறியபடி இவ்விந்துதேசத்தில் தாய்தந்தையரே தங் கள் பிள்ளைகளுக்குப் பெண்பார்த்து விவாகம்முடிப்பது வழக்க மாய்அநுஷ்ட்டானத்தில் வந்திருப்பதால், அதற்குறிய லட்சண ங்களை யடியிற்கூறுவாம். "இனம் இனத்தைச்சேரும்" என்றபடி தாய்தந்தையர், தங்கள் இனத்திற்சேர்ந்து தங்கள் அந்தஸ்துக்குத் தக்கதாயுள்ள பெண்ணைக் குறிக்கவேண்டும் அதன்பிறகு "தா யைத் தண்ணீர்த்துறையிற்பார்த்தல் வீட்டிற்பெண்ணைப் பார்க் கவேண்டியதில்லை" என்ற பழமொழிப்படியே அப்பெண்ணின் தாய்தந்தையர் சகோதரர்கள் இவர்கள் கல்வி-யறிவு-ஒழுக்கம்- அடக்கம்-பொறுமை-சாந்தம்-உண்மை-சண்டை சச்சரவுக்கச்ச முறல்: அரோகதிடகாத்திரம் முதலிய சற்குணங்களமையப்பெ ற்றவர்களா? என்று தெளிவாய்த் தெரிந்துகொள்ளவேண்டும் அதன்மேல் அப்பெண்கல்வி-யறிவு-புத்தி-நுட்பம்-சாந்தம் - அ மைதி-அச்சம்-ஒழுக்கம்-வணக்கம்-முதலிய சற்குணங்களமை யப்பெற்று, சௌந்தரியமுடையவளாய்-வாய்ப்பட்டியிராமல் அ மர்ந்த வார்த்தையும்-அன்னநடையும்-குளிர்ந்த பார்வையும்-சத் தியவாசகமும்-உள்ளும்புறம்பும்ஒத்தநடவடிக்கையும் பாபத்திற் கஞ்சுதலும், சரீரசுசியும் பரிசுத்த வஸ்திரமுடுத்தலும்-சதா கட வுள் தியானமும்-எவ்வுயிரும் தன்னுயிர்போலெண்ணும் எண்ண மும்-வேலையிற் சுறுசுறுப்பும். வீட்டுச்செய்தியை வெளிவிடா

மையும்-பிறர் நிந்தைகூறுமையும்-அதனைப் பிறர்கூறக்கேளாமை யும் சமையற்பாகத்தேர்ச்சியும் ஆகியஇவ்வித குணங்களமையப் பெற்றவளாவென்று,அவள் வீட்டுக்கு அண்டை அயலிலுள்ள வீட்டாரைச்செவ்வையாய் விசாரித்துத் திருப்தியானபிறகுதா ன் அப்பெண்ணை நிச்சயப்படுத்திக்கொள்ளவேண்டும்.

இவ்வித ஏற்பாடே முடிவான விதியென்றுணர்ந்தாலும் தேசத்திற்குத்தகுந்தபடி பலவிதமாகமுடிவு செய்துக்கொள்கி ன்றனர்ஆகிலும் நமது இந்துசமயாசாரப்படி சாஸ்திரங்களுள் விவாகமுடிவை எட்டுவகையாக வழங்குகின்றன.

ஆனல் உலகில் வழங்கும்நால்வகைஜாதியா ரல்லாதமற்ற இழிகுலத்தாருள் அனேகவிதமாக நடந்தேறுகின்றன. அதினி லக்கணமும் அதைச்சொல்லவேண்டிய அவசரமும்அனுவசியமா தலின்அவற்றை நீக்கிமேற்சொன்ன அஷ்டவிதவிவாகமின்னதெ ன்றும் அவற்றுள் வைதிகசம்பந்தமாயேனையோரு மேகதேசமா யனுட்டித்துவருவ திஃதென்றுமே கூறத்தொடங்கினேம்.

---

### விவாகபேதம்.

1. பிரமம்.
2. பிரஸாபத்தியம்.
3. ஆரிடம்.
4. தெய்வம்.
5. காந்தர்வம்.
6. அசுரம்.
7. இராக்கதம்.
8. பைசாசம்.

என எட்டுவகைப்படும். அவற்றுள்.

1. பிரமமணமாவன-மங்கைக்குறிய தாய்தந்தையோர்மருக னின் தாய்தந்தையோர் அநுமதியில்லாமல் பிரமசாரியானமணா ளனுக்கு ஓமாக்கினி முன்னிலையில்தத்தஞ்செய்து கொடுப்பதாம்

2. பிரசாபத்தியமாவன, கன்னிகையைப்பெற்றோரும் பிள் ளையைப்பெற்றோரு மனமொருமித்துபந்து மித்திரரோடு மணம் முடிப்பதாம்.

3. ஆரிடமாவன, பெண்வீட்டில் இரண்டெருதுகளைக்கொ ண்டுபோய் மாப்பிள்ளைவீட்டார்கட்டிவைத்து வந்தவுடன்அவர் கள் எருதை பெற்றுக்கொண்டால் பெண் கொடுக்கிறேமென்

பதற்கு சாட்சியாக முருகனின் பாரி வள்ளியென மங்கையை மனமாறக் கொடுப்பார்கள். அவ்வெருதை யேற்றிக்கொள்ளரா யின்பெண்கொடுப்பதில்லை, யென்றகுறிப்பாம், இது ஒருவகை தேசாசாரவிதிபோலும்

4. தெய்வமாவன மணவாளனில்லாமல் மணாளன்காமேஷ் டியாகம்நடத்திபெண்ணை காருகபத்தியமென்னும்அக்கினிக்குமு ன்பாக நிறுத்தி புத்திரவாத்திற்பிறந்த புதல்வனுக்குத் தத்தஞ் செய்வதாம்.

5. காந்தருவமாவன, மணாளனும்மணாளியும் ஏகவைபோக மாக மனமொத்து சித்தமுருகுவதேயாம்.

6. அசுரமாவன, கன்னிகைக்கு தங்கபூடணங்களும் ஆடை களும் அணிவித்து அன்னாதி பட்சணமுமளித்து ஆசாபாசங் களையுண்டாக்கி, பெண்ணின் தாய்க்கு பொற்பணி பொற்றாசு பொற்காசு முதலியவைகளைக் கொடுத்து உபசரித்து பழக்கமா யபினயித்திருந்து வஞ்சத்தோடு மருவுவதாம்.

7. இராட்சசமாவனஒருவன்ஒருபெண்ணின்மேலிச்சையுண் டாகிவிசாரிக்கும்போது பெண்ணும்பெண்ணின் தாய்தந்தையரு ஞ்சம்மதியாராயின்அக்கால்அப்பெண்ணை தந்திரமந்திராதிகளாற் வலிதிலெடுத்துச்சென்றுமனரம்மிதமாகும்படி இன்சொற்களா ற்பேசிபண்டுபலாதிகளைக்கொடுத்து மாலையணிந்துமணருவதாம்.

8. பைசாசமாவன, பெண்ணினுற்றோரு மற்றோருமறியாது பெண்மதி மாறாது தாதி தாங்கும்போது மணருவதாம்.

இந்த எட்டுவகை விவாகபேதங்கள்ஸ்மிருதியாகிய சாஸ்திர ங்கள் சொல்லியிருத்தலினால் அவைகள் பிரமாணமானதென்று அங்கிகரிக்கும்படிக்கல்ல அப்படி யங்கீகரிப்பதுயுக்தமல்ல இவ்வா றுநடப்பதாக வேதாதிகலைகள் கூறியதேயல்லாமல் அவ்விதம்நட க்கவேண்டும்மென்றல்ல என்னையெனின் மேற்சொன்னானுவி வாகம் நீங்கியவைகள்கொடுப்பதாக கரும்புலையருய்விரும்பத்தக் கது அஃது பேய் மிருகமுதலிய அசம்பிரதாயிகளுக்கேசிறப்பா ம் ஆதலின்வேதசம்மதமாக உயர்குலத்தாரால் வெகு ஜனப்பிரிய மாய் அங்கிகரித்துவரும் பிரமம், பிரசாபத்தியம் என்னும் இரண் டுமேசிறந்ததாம்.

அவற்றுள் பிரமம் என்னும் விவாகம் தற்காலபிராமணருள்ளும் ஏகதேயமாக நடந்தேறுகையாலும் ஆசிரமாதிகள்நிலைதவறியுள்ளதாலும் சமயம்வந்தபோது யோசிப்பாம் எனநிருத்திஇப்போது யாவராலும் கொண்டாடத்தக்க பிரசாபத்திய மணத்தினது இயல்பைமாத்திரம் இங்கு கூறுகிறேன்.

## பெண்களின் அசுபலக்ஷணம்.

அரிய பெரும் புகழை வாய்ந்த இல்லறத்திற்குக் காரணம் ஸ்ரீகளேஇவ்விதஸ்திரீகளெத்தகைய குணவதிகளா யிருக்கவேண்டுமென்னின் ஸ்ரீபுருஷ அவையவலக்ஷணங்களைக்குறிக்கும் சாமுத்ரிகாலக்ஷணம் அங்கசாஸ்திரம் முதலிய நூற்களொருவாறேகுறிக்கின்றவாயினும் அங்கவிலக்கணத்தையே கூறினவன்றி குணுதிசுபலக்ஷணங்களைக்கூறவில்லை. அன்றி அங்க அளவினாலேயேகுணலக்ஷணங்கூறுதலடாது. என்னையெனின் அங்கசுபாவம் நோய் வைசூரி. மல்,ஆசாரம்,அவுடதமுதலியவைகளால்மாறுபடுவதாகலின் அவ்வவ் வவசரங்களில் வேறுவேறிலக்கணங்கூறநேரிடும். காலாதீதமாகக்குணங்கற்பிப்பதன்றி அங்கஅளவினாலென்பதுஅசம்பிரதாயமாகும்எனவேகுணங்களும், தேகமும், காலமும், இடமும், சார்பும் மாறுபடுவதாகலான் ஆன்றோர்கூறிய வடிவிலக்கணம் ஏகதேசமன்றி முற்றும்திறமாகா. என்னைஅந்நூலாசிரியர்களபிப்ராயம் எம்மரபார்க்கும், எவ்வூரார்க்கும், பொதுவாகாதொருசார்பேயாம். இங்ஙனமாகஸ்ரீகளை ஆளுவோர் நூலளவையைப்பிரமாணமாகக்கொண்டு அந்நூற்களில் விலக்கானஅவயவத்தாரைவதும்,புறங்கூறியும், அவநெறிகளைக் கற்பித்துச் சிந்தித்தும்ஒற்றுமையைக்கெடுத்த லறிவின்மையென முக்காலுமறிவாராக ஆயினும் இங்கு ஸ்ரீகளிலக்கணங்கூறவேண்டுவ தவசியமேயாதலானும் ஆன்றோராலத்தியாவசியமாகக் கொள்ளக்கிடக்குமொருவகையிலக்கணங் கூறுவாம்.

மரம்-பக்ஷி-நதி-குப்பை-கிரிப்பெயருள்ளவளும் - பெருவயிறு-நீட்சி-குள்ளம்-வளைந்ததேகம்-சிவந்தமயிர் - பிரட்டைத்தலைவங்குமுகம்-குழிக்கண்-செங்கண்-சப்பைமூக்கு-முறக்காது-தொங்குதடு-எக்குபல்-சுரிகழுத்து - எக்குத் தக்கானகுஜம் வளைதடிபோன்ற கை-தோள்-சுபரேகையில்லாத உள்ளங்கை - புள்ளி த

ழுதலை மயிருள்ளஉடம்பு-பருத்தயிடைகுந்துகால்எக்குத்தக்கா
ன கால்விரல்-விரலோடுவிரல் முட்டாமை-நிலமதிரநடத்தல்-பிடி
வாதம்-பேருண்டி-தேகங்குலுங்கநடத்தல்-வெடிகுரல்-ஈனசுரம்-
சீக்கிரநடை-சுசியில்லாமை-தயையின்மை-சதாபெருங் கூச்சலிட
ல்இத்தகைய துர்க்குணமுடையவளை மணஞ்செய்யலாகாது.

## பெண்களின் சுபலட்சணம்.

சமஉயரம்-மிருதுதேகம்-ஒழுங்காகிக்கறுத்தமயிர் வட்டமு
கம்-பெருத்தகண்-நேர்நாசி-சிறுத்தவாய்-சிவந்தஉதடு-நிலவுபோ
ன்ற தந்தபத்தி-சங்கக்கழுத்து-நெடுந்தோள்-அங்குசம் - சங்கம்-
துவஜம்-பத்மாதி சுகரேகையுள்ளகரம்சிறுத்தவிரல்- ஒத்தபயோ
தரம்-சமவயிறு-சிறுத்தயிடைவிருத்தசகநம் நுண்தொடை-அழ
குகணைக்கால்-மிருதுவானபாதம்-உரோமரகிதமானதேகம்அற்ப
நித்திரைசீக்கிரபணிவிடை இனியவோசை கலகமறியாமைகடுஞ்
சொல்லில்லாமையுமாகிய குணங்களுடையவளை வருவிக்கலாம்.

## சகுனம்.

மாப்பிள்ளைக் குரியவர்கள் இஷ்ட பந்துகளுடன் வடக்கு
நோக்கி இவ்வளவுதூரம் போய்த் திரும்புகிறதென்று ஒருஅத்
தேற்படுத்திக்கொண்டு அந்த அத்துக்குள் இன்னவித சகுனம்
ஆகவேண்டுமென்று உத்தேசம் பண்ணினவர்களாகப் பார்த்து
தாங்களெண்ணியவண்ணஞ் சகுனஞ் சரிப்பட்டால் திரும்புங்கா
லையில் கிராமதேவதைக்குப் பூசைசெய்து தேங்காய்வாழைப்ப
ழம் தூபதீப வுபசாரம்பண்ணி தொழுது தங்கள்வீட்டிற்குப்
போகவேண்டியது. சகுனம் பார்க்கவேண்டிய வழக்கமில்லாத
வர்கள் தெய்வசந்நிதானத்தில் பூவைத்துப் பார்ப்பதுமுண்டு.

## பொருத்தம்.

அந்த பழக்கமில்லாதபேர்கள் பிள்ளைக்கும்பெண்ணிற்கு மு
ள்ள ஜனனக்குறிப்பையாவதுபெண்ணின்ருதுக்குறிப்பையாவது
பார்த்துக்கொள்ளவேண்டும் அப்படிஜனனக்குறிப்புமருதுக்குறி
ப்பு மில்லாமற்போனல் சோதிடரால்முன்சொல்லிய தசவிதப்
பொருத்தங்களில் கழுத்து வயறுகுப்பம்இப்பேர்ப்பட்ட முக்கி
யப்பொருத்தங்களைப் பிரதானமாகக்கொண்டு முகூர்த்தம்நடத்
தும்முயற்சியைத் தேடவேண்டியது.

## பரியம்.

நட்சத்திரம்-திதியாதிகள்-பொருந்தியசுபதினத்தை ஏற்படுத்திக்கொண்டு அத்தினத்தில் நாங்கள் பெண்பார்க்கவருகின்றோமென்று பெண்வீட்டாருக்குமுன்னதாகச் சொல்லியனுப்பிவைத்து சிலமங்கிலியப் பெண்களுடன்போய்ப் பெண்ணைப்பார்த்து தாங்கள் கொண்டுவந்த மஞ்சள்-புட்பம்-தாம்பூலம் - வாழைப்பழம்-தேங்காய்-குங்குமாதிகளைக்கல்யாணப்பெண் மடியிற் கட்டி வாழ்த்திவிட்டு பெண்வீட்டார் உபசரித்து கொடுக்குந்தாம்பூல புட்பங்களை பெற்று தங்கள் வீட்டிற்கு வரவேண்டியது. அப்பால் பெண்வீட்டுக்காரர்கள் தாங்களொருநல்ல நாட்பார்த்துக் கொண்டு மாப்பிள்ளையைப் பார்க்கவருகின்றோமென்று பிள்ளை வீட்டாருக்கு முன்னுடிச்சொல்லி யனுப்பிவைத்துதாங்க ளேற்படுத்திக்கொண்ட சுபாநட்சத்திர சுபலக்கினத்தில் மாப்பிள்ளை வீட்டிற்குப்போய் கலியாணப் பிள்ளையைக்கண்டு கல்விப்பொருள் செல்வப்பொருள் முதலிய நடையுடை பாவனைகளையுங்கருதி பிள்ளைவீட்டார் உபசரித்துக்கொடுக்கின்ற தாம்பூல சந்தனபுட்பங்களைப்பெற்று தங்கள் வீட்டிற்குவருவதுமுண்டு பின்புமாப்பிள்ளைக்குரியவர்கள் பெண்ணிற்குப் பரியம்போடுவதற்காக ஒரு நல்லநாளேற்படுத்திக்கொண்டு பெண்வீட்டாருக்கு முன்னுடித் தெரியவைத்து நாட்டார்கள் முதலியவீட்டாரும் பந்துமித்திரர்களுஞ்சிலமங்கிலியப்பெண்களும் வரிசைகொண்டுவரும்படியாகப்போய்குலாச்சாரமுறைமைப்படிக்குபரியச்சீலை-ஆபரணம்- புட்பம்-மஞ்சள்-சந்தனம்-தேய்காய்த்தொகை-வாழைப்பழவகை இவைகளைப் பெண்வீட்டிற் கூடியிருக்கின்ற பெரியதனக்காரரின் சபையில்வைத்து புரோகிதரால் விநாயகபூசைபுரிந்து மாப்பிள்ளைவீட்டார்கொண்டுவந்த வரிசையை மதிக்கவேண்டியது.

## உறுதிப்பத்திரம்.

பெண்வீட்டிற்கூடிய சபையார் பெரியதனக்காரர்புரோகிதரால் பரியவோலையெழுதி அதற்கு மஞ்சட்காப்பணிந்துகுங்குமார்ச்சனைபுரிந்து விநாயகருக்கு முன்வைத்து தூபதீபங்கொடுத்து வணங்கிவாழ்த்தியெடுத்துஇன்னகோத்திரம் இன்னார்பிள்ளைக்கு இன்னகோத்திரம் இன்னார்பெண்ணைக் கலியாணம்பண்ணிக்கொ

டுத்தச்சம்மதித்தோமென்று பெண்வீட்டாராற் சொல்லிவைத்து பிள்ளைவீட்டாரும் அதேபிரகாரஞ்சொல்லி ஒப்புக்கொள்ளும் போது பரியம் இவ்வளவென்று புரோகிதரால் சபையோரறியக் கூறிவைக்கவேண்டியது.

### சாக்ஷிக்காரர்கள்.

அப்பால் மறுவில் புரோகிதன் முதற்சாக்ஷிக்காரனுனதால் அவர்களின் குலாசாரப்பிரகாரம் பரியத்தொகைவகை யிவ்வள வென்று நாட்டார் முதலியபேர்களுங் கண்ணோட்டமிட்டதைப் புரோகிதரால் மூன்றுதரஞ் சொல்லவைத்து அந்தப்படிக்கே பணிசெய்வோன் ஒச்சன் இவர்களுங் கூவிச்சொல்லி சங்குகுறிக்கவேண்டியது. அன்றி மனுவிக்ஞானவிதிப்படி கலியாணவிசேஷத்தில் பஞ்சாங்கக்காரனும் பணிசெய்வோனும்நோக்கனும் ஒச்சனும்பெருஞ் சாட்சிக்காரர்களாய் பேசியிருப்பதனுல் இந்தப் பெண்ணிற்குப் போட்டபரியமிவ்வளவென்றுமுக்கியம் இவர்களறிவதுடன் கூடமுதலிய விடத்திலிருப்பவர்களுக்கும் கேட்கும் படிக்கு தொழிலாளிகளினுற் கூவச்செய்வதுமன்றி மும்முறை சங்குமுழக்கிவைக்கவேண்டுவது. அவ்வாறு சங்குமுழக்கிவைப்பதில் அந்தந்த இனத்தாருக்குத் தகுந்தபடி ஒற்றைச்சங்குஇரட்டைச்சங்குமூன்று சங்கு பணிசெய்வோன் நோக்கன் ஒச்சன் இவர்களால்முழங்கப்பண்ணுவித்தபின்னர் பஞ்சாங்கக்காரர் மங்களாசனம் பண்ணி பாக்குவெற்றிலை மஞ்சள்புட்பங்களுடன்புடவையையும் பூஷணப்பொருள்களையும் பெண்ணினிடத்திற்கனுப்பிவைத்து உடனே புனையச்செய்து சபைதாம்பூலம்நடத்தி புரோகிதருக்குத்தட்சணைகொடுத் தனுப்பிவிட்டு விருந்துபோஜனமருந்திசந்தனபுட்பதாம்பூலம் பரிமாறவேண்டியது.

### பந்தக்கால்.

அப்பால் பரியத்தினன்று குறித்த முகூர்த்தநாளுக்கிணங்க நன்னுட்கொண்டு பந்துமித்திரர்களுடன் பெண்வீட்டிலும்பிள்ளைவீட்டிலும் பந்தக்கால் நாட்டவேண்டியது இரண்டுவீட்டிலும்பந்தக்கால் நாட்டினுலும்மாப்பிள்ளைவீட்டில்மற்றவேடிக்கைகளெல்லாஞ் செய்தாலும்விவாகமாத்திரம் பெண்வீடிற்கு மாப்பிள்ளையை அம்மான்மணக்கோலத்துடன்கொண்டுபோய்திருமங்கிலியந்தரிப்பித்துவைப்பதுபெருமையும்உரிமையும்சாம்பிரதாயமுமாம்.

## பந்தல்.

பிள்ளைவீட்டார் பெண்வீட்டார் ஊர்நாட்டார்முதலிய உரிமையோர்களும் பெருமையாகவந்து பஞ்சாங்கக்காரர்நியமித்ததிநட்சத்திர சுபலக்கின சுபயோகத்தில்பந்தற்கால்நட்டி பிள்ளைக்கும்பெண்ணிற்கும் நலங்காதி திருமஞ்சனமாட்டி விருந்துமுதலிய தருந்தப்பண்ணி உறவின் முறையோரியாவரும் விவாகவிழாக்கொண்டாடி அன்றுதொடங்கி ஊரார்முதலிய இஷ்டர்களுக்கும்சுற்றத்தார்களுக்கும் தாம்பூலம் வைப்பதும் பந்தற்போடுவதும்விந்தையான விநோதவேடிக்கை செய்வதும்கண்ணாடி பட்டங்கள்-கமலவட்டங்கள்-சையிதமொட்டுந்திட்டங்கள்- ரசக்குண்டுவிட்டங்கள்-ஜாலர்கட்டுஞ் சுட்டங்கள் - சரிகைவேலைசகலாத்துமேற்கட்டியின் மட்டங்கள் வாழைமரங்கள் கமுகுமரங்கள் கரும்புத்தலைகள் தேங்காய்க்குலைகள்-மாங்காய்குலைகள் பலாக்காய்கள்கூந்தற்பனைகள் இவைகளெல்லாங்கட்டி தோரணம் கொடிமுதலிய சம்பிரமங்கள் ஏதேது செய்துவைக்க வேண்டியதோ அத்துடன்கூடமணவறையில் மலர்ப்பந்தலுந் திட்டாணிமேடையுஞ் சிங்காரிக்கத்தக்கது. (இது கெலிப்பின்பேரில் சிறிப்பெண்பதுபோலாம்.)

## திட்டாணிமேடை.

திட்டாணிமேடை போடவேண்டிய தெப்படியெனில்களிமண்ணும் இருமண்ணுங்கலந்து மூன்றங்குல வுயரந் திட்டாணிமேடையிட்டு அதனது நான்குதிசையிலும்வழிவிட்டு மூன்றங்குலந்திண்ணைபோட்டு அம்மேடையின்புறத்தில் செங்காவிக்கோலந்தீட்டி உட்புரத்தில் ஒன்பதுவீடாக மாக்கோலங்காட்டி நடுவில் ஓமாக்கினிக் கிடம்வைத்து அதன்மேற்புறத்தில் கலியாணப்பிள்ளையும் பெண்ணுமிருப்பதற்கு மணப்பீடமுதலிய தாப்த்தாக்களும் இரத்தினக்கம்பளங்களும் விரிக்கவேண்டியது.

## சிக்குகழித்தல்.

பின்னர்க்ஷவரகனால்மாப்பிள்ளைக்குப்பிரமாசரியவிரதங்களைந்து சிக்காய் கழித்து நலங்கிட்டு ஸ்நானஞ்செய்வித்து திவ்வியஅலங்காரத்துடன் யானை அல்லது குதிரைபல்லக்கு முதலிய வாகனங்களிலேற்றிபற்பலவிருதுகளுடனும்சர்வவாத்தியங்களுடனும்

ஆடல்பாடல்களுடனும் வெகுஜனக்கூட்ட வேதியர்களுடனும் வெண்கவிகை அல்லது அவரவர்கட்குரிய தண்கவிகைகவிக்கமண வாளகோலமாகப் புறப்பட்டு சந்தனமாலைதாம்பூலத்துடன்சதிரா கப் பெண்வீட்டார் யெதிர்கொண்டுவந்தழைக்கப் போய்நல்லவே ளையில் பெண்வீட்டில் புகவேண்டியது. அவ்வாறே பெண்வீட் டிலும் பரிகாரியினால் கலியாணக்கட்டிளமைக் கன்னிகைக்கு கா சரணாதிகளிலுள்ள நகம்வாங்கி சிக்காய்ச்சடங்காதிநலங்குகளிட்டு ஸ்நானம் பண்ணிவைத்து பட்டுபட்டாவளி புனைந்து பெண்ணை அலங்கரிக்கவேண்டியது.

## பிதிர்தேவதைபூசை.

அதன்பின் பெண்வீட்டில் சுத்தமுள்ளமங்கிலியப்பெண்களா ல் பொங்கலிட்டு வைத்திருப்பதைகிராமதேவதை பிதிர்தேவதை முதலியபேர்களுக்குப் பிரீதியார்த்தமாகப்பாலுந்தயிரும்பழமும் வெல்லமும்வைத்து பள்ளம்போட்டு கலியாணப் பிள்ளையினாலுங் கல்யாணப்பெண்ணினாலும் படைப்பித்து நீர்மாற்றிப்போற்றித் துதித்து வணங்கி யேற்றி வாழ்த்தியுடனே விடுதியில்வந்துவா ழைப்பழம் நீர்மோரருந்திஇளைப்புகளைப்புமுதலிய ஆயாசங்களை மாற்றிக்கொள்ளலாம்.

மாப்பிள்ளையும் பெண்ணும் களையாறுவதற்குள்ளாகவாவ துபிள்ளை மணக்கோலம் வருவதற்குமுன்னாவதுபிள்ளையின் தந் தையும்பெண்ணின் தந்தையும் ஸ்நானம்பண்ணி மடிவஸ்திரமுடு த்தி வைதிகரைப்போல கல்யாணமண்டபத்தில் முப்பத்துமுக் கோடிதேவர்கள் ரிஷிகள் முதலியவர்களை வேதவிதிப்படி மந்தி ராபூதியுடன் ஸ்தாபித்து பின்னர்.

## விவாகம் நடத்தவேண்டியவர்.

தந்தை அல்லது அம்மான்-அண்ணன்-தம்பி-அக்காள் புரு டன்-தங்கைபுருடன்-சிற்றப்பன் முதலிய முக்கியஉறவினரை கர் த்தாவாக ஏற்படுத்திக்கொண்டு விவாகமகோற்சவத்தை நடத்த வேண்டியது.

விவாக கர்த்தர் பஞ்சாங்கக்காரால் நவக்கிரகம்திக்குப்பால கர் தேவர்கள் முதலியவர்களைவேதமந்திர சகிதமாகஸ்தாபித்து ப்பூசித்து சங்கற்பம் பண்ணிக்கொள்ளவேண்டும்.

### மணவரை.

அதாவது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு நாலுமூலையிலும் நாட்டிய பந்தற்காலுக்குநடுவில் இருபத்துநான்குசிற்பியங்குலம் மேடையிட்டு நான்குபுறமுந் தொண்ணூற்றூறங்குலஞ்சரிப்படுத்திச் சமைத்த மணவரைப்பந்தலுக்குக் கீழ்த்திசையில்ஸ்தாபிக்க வேண்டியது.

### தத்துவ சதுக்கம்.

பின்புசிற்ப வலங்காரத்தின் பெருவிரல்முனைக்கடுத்தவரையளவு இருபத்துநான்கங்குலம் ஒரு அங்கணத்திற்கிவ்வாறமைத்தால் நான்கு அங்கணத்திற்குந்தொண்ணூற்றூ றங்குலமாகும் இதுதான் தத்துவசதுக்கம் இந்த ஸ்தானத்தில் விவாகம்நடக்க வேண்டிய மூலஸ்தம்ப விதியாகும்.

### திக்குப்பாலகர்.

அப்பால் கிழக்கில் தேவேந்திரனையும்-தென்கிழக்கில் அக்கினிபகவானையும்-தெற்கில் யமதருமராஜனையும்-தென்மேற்கில் நிருதிதேவனையும்-மேற்கில் வருணராஜனையும்-வடமேற்கில்ஈசானமூர்த்தியையும்-வேதமந்திரங்களா லாவாகனம் பண்ணிப் பூசை செய்து பொருத்தவேண்டியது.

### கிளைவிளக்கு.

எப்படியென்றால், கிழக்கில் தேவேந்திரனை சகல வாத்தியங்களுடன் வேதமந்திரம் பண்ணி ஆயிரங்கண்ணுடையானுக்குப்பிரதியார்த்தமும் அதிதேவதாரூபமுமாக அனேகமுகமுள்ளகிளைவிளக்கேற்றிவைத்து தூபதீபநைவேத்தியங்கொடுத்து பூசித்துத் தொழுது சங்கற்பம்பண்ணிக்கொள்ளவேண்டும்.

### குடவிளக்கு.

பின்னர் தென்கீழ்த் திசையில் தீக்கடவுளை விதியுடன் அத்தேவனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதிதேவதையாகவும் குடவிளக்கேற்றிவைத்து வந்தனோபசார தூபதீப நைவேத்தியங்களுடன் பூசித்து சங்கற்பம் செய்துக்கொள்ளவேண்டும்.

### புரோகிதர்.

அதன்பின் தென்திசையில் மந்திரங்களால்யமதருமராஜனை ஆவாகனம்பண்ணி அவருக்குப் பிரதியார்த்தமாகவும், அதிதேவதா ரூபமாகவும் தர்ம கர்ம பாபபுண்ணியங்களுக்குறியபுரோகிதரையழைத்து பூசித்து வணங்கிசங்கற்பம்பண்ணிக்கொள்ளவேண்டியது இது வியாசபுரோக்தம்.

### மாணிக்கத்தாள்.

தென்மேற்குத்திசையில் நிருதிதேவனை வேதமந்திரங்களாலாவாகனம்பண்ணி தூபதீப நைவேத்தியஞ்செய்துசங்கற்பித்து வணங்கி அத்தேவனுக்குப் பிரீதியார்த்தமாகவும் அதிதேவதாசொரூபமாகவும் மாணிக்கத்தாளை நிறுத்தி பெண்ணிற்கு உபசாரத்தோழியாக்கிவைக்கவேண்டியது.

### கும்பகலசம்.

உலகவிர்த்திக்குரிய வருணராஜனை மேற்குத்திசையில்வேதமந்திரத்தா னிலைபெறவைத்து தூபதீப நைவேத்தியத்துடன்பூசித்துத் தொழுது அந்தவருணராஜனுக்குப் பிரதியார்த்தமாகவும் அதிதேவதையாகும் இல்லறதர்மத்திற்கிசைந்தகல்யாணப்பிள்ளையைக் கொலுக்கொண்டிருக்கச் செய்யவேண்டியது.

### தோழிப்பிள்ளை.

வடமேற்குத்திக்கில் வாயுபகவானை மந்திரார்த்தங்களுடன் ஸ்தாபித்து தூபதீப நைவேத்தியங்கொடுத்து சங்கற்பஞ்சொல்லி வணங்கி அந்த வாயுதேவனுக்குப் பிரதிபார்த்தமாகவும் அதிதேவதாசொரூபமாகவும் மாப்பிள்ளைத் தோழனைவைத்துவிசிறிகொண்டுகலியாணப்பிள்ளைக்கு வீசிகாற்றுமுதலியஉபசாரங்களைச்செய்யச்சொல்லவேண்டியது.

### பாக்கியவான்.

வடதிசையில் குபேரனைமந்திரங்களுடன் மருவச்செய்துதூபதீப நைவேத்தியங் கொடுத்துத் தொழுது சங்கல்பம் பண்ணிக்கொண்டு ஆவாகனஞ் செய்த குபேரனுக்குப் பிரதியார்த்தமாகவும்அதிதேவதையாகவும்மணத்திற்குறித்தாகப்பனப்பைவைத்தி

ருக்கின்ற பாக்கியவானைப் பதியப்பண்ணி பொற்பூரிகொடுக்கப் பொருத்தவேண்டியது.

## அம்மிக்குழவி.

வடகிழக்குமூலையில் சாமவேத சடையுடன் ஈசான மூர்த்தியை ஆவாகனஞ்செய்து தூபதீப நைவேத்தியமேற்றி தொழுது போற்றி சங்கல்பம்பண்ணிக்கொண்டு அந்த ஈசானனுக்குப்பிரதியார்த்தமாகவும்அதிதேவதாசொரூபமாகவும்அம்மியையும்குழவியையும் அபிஷேகமாட்டி அரிசந்தனுட்சதை பூமாலை சூட்டி வடகீட்டிசையில் வைத்துப் பூசித்தேத்தவேண்டியது.

## முளைகட்டல்.

இப்போது செய்யத்தொடங்கிய கலியாணநாளுக்குமுன்னை நாள் நவதானியங்களை முளைகட்டி நவக்கிரகங்களுக்குஉரியதானியங்களை அந்தந்தக் கிரகங்களுக் குவப்பாக கிரமங்களினால் மண்மடக்கில் வைத்து திக்குப்பாலகர் எட்டுப்பேர்களில்ஈசான மூர்த்தியாக வமைத்திருக்கின்ற அம்மிகுழவிக்குத் தென்பாரிசத்தில்பச்சையரிசி பரப்பி ஒன்பது வீடாகக்கீறி நிறப்பிசூரியகிரகமுதல் கேதுக்கிரகம் வரையிலும்பொருத்தி தருப்பையினாலாவதுமுப்புரிநூலினாலாவது பட்டுமுதலிய மஞ்சள் துணியினாலாவதுபக்தித்து தூபதீப நைவேத்தியம் வைத்துச் சிந்தித்து சங்கல்பம் பண்ணி வந்தித்து வாழ்த்திப் போற்றவேண்டியது.

## சப்தகலசம்.

மண்கரகம் ஏழுகொண்டுவந்து நூல்சுற்றி மாவிலைதற்பை மாலை தேங்காய் வைத்து சப்தரிஷிகளையும்வேதமந்திரங்களினால் ஆவாகனம்பண்ணி ஸ்தாபித்துநவக்கிரகபாலிகைநாட்டியஸ்தானத்திற்கும் அக்கினிபகவானை யமைத்ததென்கீழ்த்திசைக்கும் நடுவில்வைத்து தூபதீப நைவேத்தியங்கொடுத்துச்செபித்து சங்கல்பம் பண்ணிக்கொள்ளவேண்டியது.

சாலுடன் கரகம்ஸ்தாபிக்கவேண்டியது எவ்வாறமைக்கவேண்டியதென்னில்.

## சாலமைக்கவேண்டிய விதி.

கட்டிளமையுள்ள கன்னியர்கள் தலைமுழுகி மஞ்சளணிந்து குங்குமந்தரித்து புஷ்பமுடித்து சுசி சுத்தமாகச்சென்று கங்கை யமுனை சரஸ்வதி நர்மதா காவிரிகன்னியாகுமரி கோதாவிரிஇவ் வேழு தீர்த்தங்களையுங் கொண்டுவந்து ஒருபெரிய சாலிற்குவிபூ திபூசி மஞ்சள் குங்குமஞ்சாற்றி பூமாலைதரித்து அந்தச்சாலை கிழ க்கில் இந்திரனுக்கவமைத்த கிளைவிளக்கு முன்னே மணலைப்பர ப்பிவைத்து அந்தந்தத் தீர்த்தங்களுக்குள்ள மந்திரங்களைச்செப் பிஅழகியசாலில்விட்டு தூபதீபநைவேத்தியங்கொடுத்துத்தொழு து ஒருகரகத்திற்குவிபூதி குழைத்திட்டு சந்தனட்சதைகுங்குமந் தரித்து அந்தக்கரகத்தை சப்ததீர்த்தங்களடங்கிய சாலிற்கு மே ல்மூடியாக மூடிவைத்து சங்கல்பம்பண்ணி வணங்கவேண்டியது இதுதான் சாலுங்கரகமும் என்பது பொருளமைத்துக்கொள்க

## சப்ததீர்த்தங்கள்.

ஏழுதீர்த்தங்க ளெட்டாதபோது தேவராலயம் பிரமராலய ம்விஷ்ணுவாலயம் சிவாலயம் நந்தவனம் மேற்கு ஓடுகின்ற நதிகி ழக்கு ஓடுகின்றநதி இந்தஸ்தானங்களிலிருந்துமொண்டுகொண்டு வந்துபூசிக்கலாகும் மேலும்ஏழுபேர்கன்னிகை போய்க்கொண்டு வருவதற்கில்லா விடில் முதல் மூவரும் பின்புநால்வரும் போய்க் கொண்டுவரலாம்.

## அரசாணிக்கால்.

அரசானிக்குக் காலென்னும் அரசின் செடி ஆலின்கிளை க ண்ணுலமுருக்கின் கொம்பு இம்மூன்றையுந் தருவித்து சத்தோ தகம் பால்தயிறு தேன்சந்தனாதிகளினால் அபிஷேகம்பண்ணி தற்பைப் புல்லாற்பந்தித்து திரிமூர்த்திகட்குள்ள மந்திரங்களைச் சொல்லி சிந்திக்கவேண்டியது.

அரசு பிரம்மா, ஆல் விஷ்ணு, கண்ணுலமுருக்கு ருத்தி ரன் இவைகள் மூன்றும் குணத்தினாலுந்தழைப்பினாலும் ஆதார த்தினாலுங் கடுமையினாலுங் காந்தியினாலும் மும்மூர்த்திகளென் று முனிவர்கள் மொழிந்திருக்கின்றனர் மேலும்வைச்சுவதமது விக்ஞானத்திலும் மும்மூர்த்திசொரூபமான அரசானிக்குக்கானு ட்டவேண்டுமென்று கல்யாணவிதியில்முதலெடுத்துக் கொண்ட

துந்தவிரபிரபஞ்ச வாழ்க்கைக்குச் சிருஷ்டிதிதிசம்மாரமென்னுந் தொழிலையுடைய முத்தேவரும் சாட்சியாயிருந்து,தாட்சியின்றி காட்சியாகிஅநுக்கிரகஞ்செய்து சர்வசாட்சியாகத் தக்கதென்று சுவாயம்பூ மநுவிலுஞ்சொல்லியிருக்கின்றது. ஆதலால் முத்தேவருங் காட்சி கல்யாணத்திற்குத் தகுந்தசாட்சி.

பிரமசொரூபம் அரசின்கன்றானதால் அதற்குப்பால் தேன் முதலியவற்றால் நீராடிவைத்து அரசந்தனுதியட்சதைதரித்து புஸ்பம்பொருத்தி வெண்பட்டுமுதலிய வெண்படாமணிந்து தாமரைமணிமாலைசாத்தி சந்தனங்கோபியிட்டு வந்தனைபுரியவேண்டும். விஷ்ணுரூபமான ஆலிற்குசுத்தோதகம் கஸ்தூரிபன்னீர்வெட்டிவேர்வாசங்களினால் திருமஞ்சனமாட்டி நாமமிட்டு நீலவஸ்திரம் மஞ்சள்வஸ்திரந்தரித்து துளசி துளசிமணி மாலைசாத்தித் தொழவேண்டும். உருத்திரவுருவமாகிய கண்ணாலமுருக்குக்கு அரிசந்தனுதி யபிஷேகஞ்செய்து வைத்து திருநீருசந்தனந்தரித்து செகப்பு வஸ்திரம் காவிவஸ்திரம் புனைந்து உருத்திராக்கமணிமுதலிய வில்வம் புட்பமாலை முடித்து தூபதீபநைவேத்தியமும்மூர்த்திக்குங்கொடுத்து வந்தனையுடன் எடுத்துகாட்டவேண்டியது.

தேவேந்திரனுக்குப் பிரதியார்த்தமாக வைத்தஆயிரங்கிளை முகவிளக்கிற்கும் சப்ததீர்த்தங்கள் விட்டிருக்குஞ்சாலுக்கும் நடுவில் பன்னிரண்டங்குலம் பள்ளந்தோண்டி அக்குழியில் நீர்பால் தேன் விட்டு நவரத்தினங்கள்அல்லது பொன்வெள்ளி தாம்பரம் அல்லது நவதானியங்கள் ஏதாகிலும் அந்தக்குழியில்போட்டுமுதிர்ந்த மங்கிலியப்பெண்கள் மூவர்களைநிறுத்தி சரஸ்வதிஇலட்சுமி பார்வதி இம்மூன்றுருவாகப் பாவனைபண்ணி சந்தனுதி யட்சதைபுட்பங்கொடுத்துஅந்த மூவாலும் அரசாணிக்குக் காலையெடுப்பித்து பன்னிரண்டங்குலப்பள்ளத்தில்விடுத்து பூவாரம்பொன்னாரம் முத்தாரம்பூட்டி தூபதீபங்காட்டி அந்தக்குழியை நெல்லினால்மூடி நீர் பால் தேன் தெளித்தும் பணிந்து சங்கற்பம் பண்ணிக்கொள்ளவேண்டியது.

மும்மூர்த்திகளாக ஸ்தாபித்த அரசாணிக்குக் காலை மூன்று சத்தியின் பாவனையாகக்கொண்டு ஊன்றிய அந்தமங்கிலியமாதர்களுக்குச் சந்தனதாம்பூலங்கொடுத்து பண்டுபலாதிகளுடன் தா

க்சாந்தி செய்துவைத்து அவர்களைமேளதாள முழக்கத்துடன் அழைத்துப்போய் பிர்மாலயம் தேவராலயம்அல்லதுகடைந்தெடுக்கப்பட்டு மூட்டிவைத்திருக்கின்ற அக்கினியைப்பூசித்து புகையாமல் கிகையுடன் வாத்திய கோஷசகிதமாகக் கொண்டுவந்து ஓமகுண்டத்திலிட்டு அக்கினிபகவானுடைய மந்திரங்களைச்சொல்லி ஓமாக்கினியை விருத்திபண்ணிவைத்து சகலவித உபசாரத்துடன்பூசித்து அர்க்கியங் கொடுத்துத்தொழுது சங்கல்பித்துக்கொண்டு அத்தீயையும் அத்தீயை வலக்கரத்திற்றாங்கிய வேதியர்களான சாதியர்களையும் சபையினிறைந்த வெகு ஜனங்களையும் பணியவேண்டியது.

## கவனிப்பு.

மாப்பிள்ளையின் தந்தையும் பெண்ணின்பிதாவும் அல்லது இக்கலியாணத்திற்குறிய பெரியவர்களும் பால்மாறிக் கையற்றவர்களாக முகூர்த்தலக்கினத்திற்கு ஐந்து ஏழுநாழிகைக்கு முன்றொடங்கி பொறுமையாகக் குறைவில்லாமற்செய்பத்தக்கமுக்கிய விதிகள் இத்தாம் (செய்யுங்கருமமந்திரம்தப்பாதே செய்வனதிருந்தச்செய்) என்பது வேதநீதி (கைபிற்பொருள்கள் காந்தவருயினுஞ்செய்யுங் கருமந்திரி யாதியற்றுகவென்று சூத்திரம்.)

## மாப்பிள்ளைவரவேண்டிய விதி.

விவாக முகூர்த்தலக்கினத்தை முன்னிட்டுக்கொண்டு மாப்பிள்ளைக்கு மாலையிட்டு மாப்பிள்ளைத்தோழன் சுண்டுவிரற்கொத்தமைத்து வந்து மணப்பந்தலைப் பிரதட்சணம்பண்ணிவைத்து கலியாணவாசலில் ஆவாகனஞ்செய்திருக்கின்றஅதிதேவதைகளையெல்லாங் காண்கவைத்து வணங்கினவுடன் மணவறைமணையில் பாம்பின் மண்டலம்போல் சர்ப்பவணை போட்டிருக்கச் செய்யவேண்டியது. இதைத்தான் சப்பணம் போடுவதென்பார்கள்.

புரோகிதர் கலியாணப் பிள்ளைகையால் விநாயகபூசை தேவதார்ச்சனை புரியவைத்து அட்சதை புட்பமாலையணிந்து உபநயனமான உபதேசமும் அனுஷ்டான விதியும் அங்கநியாச காநியாசமுங்காட்டி ஓமத்தீமூட்டி யுபசரிக்கவேண்டியது.

### பரதேசம்போவது.

இவ்வாறெல்லாம் நடாத்துகின்ற கருமங்களைக்கண்ட கலியாணப்பிள்ளை பிர்மச்சாரி விரதத்தை யனுஷ்டித்து வாசித்துக் கொண்டிருந்தவனாகையால் அவனுக்குஇவைகளியாவும் விந்தையும்விநோதமும் விபரீதமுமாகத்தோன்றி தன்றோழனைநோக்கி இப்படிக்கெல்லாஞ் செய்வது என்னத்திற்காக வென்று வினவினான். அதற்கு மாப்பிள்ளைத்தோழன் ஓ எனதுநேயனே வாழ்க்கைத்துணை நலத்திற்குரிய நாயகியான கன்னியுடன் இல்லறவிரதம்பெற்று வாழ்வதற்கு இதுதான்வழியென்றான். அச்சொல்லை கேட்டவன் விவேகத்தினாலுன்னி ஆ இதுபழியே கள்ளிமேற்காதல்படரப்படாதென்றும் சமுகவிசாரஞ் சள்ளையென்றும்.

### வேண்டா.

கள்ளிக்கு மாலாக்கிக் காலிற் றளைபூட்டி
பிள்ளைக் கடையாணி பின்னிறுக்கி—மெள்ளக்
கடுவுண்ட சோணேசன் கற்பித்து வுயிரைப்
படுகுழியில் வீழ்த்தினதைப் பார்.

என்று மிருப்பதனால்இந்தச் சள்ளையெனக்கு வேண்டாமென்றுவெறுத்து மாப்பிள்ளை வெளியே புறப்படுவதுதான் பரதேசம் போவதென்பது.

### சம்சாரம்.

தாய்தந்தை பெண்சாதி பிள்ளை அண்ணன் தம்பி அம்மான் மைத்துனன்மார் அக்காள் தங்கை பெரியப்பன் சிற்றப்பன்கொண்டான் கொடுத்தான் முதலியபேரும் வரப்போக வாழ்வதுங் கூடிக்கலந்திருப்பதும் சமுகவிசாரமாம் இதைத்தான் சமுசாரமென்பது.

### பரதேசியை அழைத்தல்.

சமுகவிசாரஞ் சாகரதுக்கமென்று சலித்துச்சென்ற சற்குணப்பிள்ளையை அம்மான் முன்னும் அத்தையும் மைத்துனரும் பஞ்சாங்கக்காரரும் பின்றொடர்ந்துபோயடுத்துமாப்பிள்ளையைத் தடுத்து உலகப்பழக்கத்தைப்போதித்து, அனுபவத்தையுஞ் சுருதிப்பிரமாணத்தையுஞ் சொல்லி,

குறள்.

"உலகத்தா ருள்ளென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப்படும்"

"உலகத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும்."

ஔவையார்.

"இல்லற மல்லது நல்லற மல்ல."

முதலிய இதோபதேசமேற்றி தாய் தந்தைகளினுற் பயமும் புகட்டி சர்வவாத்தியங்களுட னழைத்துவந்து,

கால் மேட்டு.

மகாசனங்கள் நிறைந்த சபையில் மணவரைப்பலகையிலிருத்தி அம்மானும் அத்தையும்வியந்து தாங்கள்பண்ணிக்கொண்ட கல்யாணவைபவத்தை நயந்துபேசி தங்கள்குமாரத்தியைக்கொடுக்கின்றேமென்று மகிழ்ந்து அப்பா மருமகனே இதோ வெள்ளி மோதிரம் போட்டுக்கொள்ளென்றுபுகழ்ந்து மருமகன்காலேப்பிடித்து பெரியதாம்பாளத்தில்வைத்து மஞ்சனீராட்டிவெள்ளிமெட்டைக்காட்டி கால்விரலிற் பூட்டிவிடவேண்டியது இதுதான் கால்விளங்கு கால்கட்டென்பது.

பாத பூசை.

வெள்ளிமெட்டாகிய விலங்கிலகப்பட்டமணவாளன் அம்மானும் அத்தையும் தனதுகாலேப்பிடித்துத் தடைமெட்டுஇட்டார்களேயென்று தனது பாதத்தைப்பற்றிய பழியும் பாவமுந்தீரும்படியாய் அம்மான்திருவடியையும், அத்தையம்மாள்பாதத்துணையையும் பெரிய தாம்பாளத்தில் வைத்து நீரோடு பால்தேன் அபிஷேகஞ்செய்து வஸ்திரத்தினுல்ஈரந்தவட்டி சந்தனுட்சதை புஷ்பஞ்சாத்தி தூபதீபத்துடன் வணங்கிய மருமகப்பிள்ளையை ஆதரித்தெடுத்து வாழ்த்தி தங்கள் பாதங்களில்அர்ச்சித்த புட்பாட்சதைகளேயெடுத்து மாப்பிள்ளேயின்சிரத்தில் வைக்கமுடிதாழ்த்திப்பெற்று ஆசிவசனமுற்று அம்மானுக்கும் அத்தைக்கும் சந்தனபுட்ப தாம்பூலங்கொடுத்துச் சாணம் புரியவேண்டியது.

---

## காப்பு.

உடனே பஞ்சாங்கக்கார நுஜன் கணுவில்லாதமுளைமஞ்சள் இரண்டெடுத்து கன்னிகையா லிழைத்தநூலில் ஒன்பதிழைக்கு மஞ்சட்பூசி நவக்கிரகமந்திரஞ்சொல்லி ஒன்பதுமுடிபோட்டு தூப தீபங்கொடுத்து கலியாணப்பிள்ளையின் வலதுகைக் கணுபுயத் திற்கட்டி இப்போது நீர் தொடங்குங் காரியங்கள் நிறைவேறு கின்றவரையிலும் விரதசீல பயபக்தியாகவிருந்து நடத்துவதற் காகக் கங்கணங்கட்டிக் கொண்டபடியால் வெகு ஜாக்கிரதையுட ன்நிலைநின்று முடிவுபெறச்செயயவேண்டுமென்று வற்புறுத்தி மகிமைகூறவேண்டியது.

அல்லது வேதியர்பன்னிய வேதமந்திரநூலாற் கட்டவேண் டியது அதுவுமகப்படாத பட்சத்தில் கடைநூல் கொண்டுவந்து தண்ணீரிற்றேய்த்துக் கசக்கி கஞ்சிநீர்போக்கி மஞ்சள் தடவி வைத்துக்கொள்ளலாகும்.

கலியாணப்பெண்ணைத் தோழிப்பெண் துணையாக பாலைதரி த்து அரசாணிக்குங் கால்முதலிய தேவதைகளைப் பிரதட்சணம் பண்ணிவைத்து வணங்கிக்கொண்டவுடன் கலியாணப்பிள்ளைக்கு வலப்புறத்திலிருக்கச்செய்து நூற்கட்டிய மற்றொருமஞ்சளைமாப் பிள்ளைகையினல் கலியாணப்பெண்ணின் இடதுகரத்திற் கட்டி வைத்து விபூதி குங்குமம்வைத்து காப்புக்கட்டிக்கொண்ட இரு வருக்குஞ் சங்கற்பம் பண்ணிவைக்கவேண்டியது.

## சங்கற்பம்.

பிள்ளையின் கையைக்கூட்டி வலபுறத்தொடையிலும் பெண் ணின் கையைச்சேர்த்து அதனது இடபக்கத்தொடையிலும்வை க்கப்பண்ணி வைவச்சுதே மன்வந்தரே கலியுகே பிரதமபாதே புண்ணியருதுவென்று வருடம் மாதம் பட்சம் வாரம் திதிநட்சத் திரம் இவைகளெல்லாம் படித்துமுடித்து மாப்பிள்ளையைநோக் கியிதுகாலத்தில் உன் அம்மானுடன்அத்தைமுதலிய சுற்றத்தார் முன்னிற் செய்யத்தொடங்கிய கலியாணச்சடங்குகள்யாவும்தாட் சியில்லாமல் நடாத்துதற்காக விரதம்பூண்டு கங்கணங்கட்டிக் கொண்டபடியே ஒரேமனதாயிருந்து இந்த வைபவகாரியங்களை நிறைவேற்றிக் காண்பதற்குக் கடவுள் வுதவியுங் கருணைக்கடாட்

சமூஞ்செய்து காக்கவேண்டியதென்று புரோகிதர் புகல இதைக் கேட்டு மற்ற கருமங்களையும் பூர்த்திபண்ணவேண்டியது.

## கூரையணிதல்.

மாப்பிள்ளையும்பெண்ணும் மணவறைச்சாலையைவலம்வந்து பணிந்து கலியாணப் பீடத்திலிருந்து ஓமாக்கினியைப்பூசித்த அப்பால் பஞ்சாங்கக்காரரெழுந்து பெரிய தாம்பாளத்தில்வேஷ்டி கூறைபுடைவையையும் மணமாலைகளையும் பாக்குவெற்றிலையுடன் வைத்து தேவதா பூசைசெய்து வேதியர்முதலிய ஜாதியருங் கரங்களினாற்றொட்டு மங்களாசனஞ்சொல்லி வாழ்த்திக்கொண்டு வந்து புட்பாட்சதையுடன் மாப்பிள்ளை கையிற்கொடுப்பது அந்தக் கூறைப்புடவையையும் பிள்ளையும் பெண்ணுந்தரித்துக்கொள்ளும்படிக்குச் செய்யவேண்டியது.

மாப்பிள்ளைக்குக் கலியாணவேஷ்டியுடுத்தி கலியாணமாலைபுனைந்து சிறுவிரற்பற்றிய மாப்பிள்ளைத்தோழனுடன் சகலவாத்தியங்களுமுழக்கமாகக் கலியாணமண்டபத்தை வலஞ்சூழ்ந்துவந்து மணவரை மண்ணையிலிருக்கச்செய்து அப்பால் கூறைப்புடைவையுடுத்திக்கொண்ட கலியாணப்பெண்ணையும் மாணிக்கத்தாளையாவது தோழிப்பெண்ணையாவது மாலையணிவித்து மங்களவாத்தியத்துடன் அழைத்துவந்து சபையைப்பணிவித்து கலியாணப் பிள்ளைக்கு வலது பக்கத்திற் கொலுவாக வைக்கவேண்டியது.

## மாங்கல்ய தாரணவிதி.

மணவறையிலிருந்தபிள்ளை ஆசிரியருக்குப் புதுவஸ்திரதானம்பண்ணிப் பூசிக்கவும், பந்துமித்திரர்கள் புகழவும், தாய்தந்தையர்கள் மகிழவும், மற்றுள்ளோர்கொண்டாடிப்பூரிக்கவும், கலியாணமுகூர்த்தத்திற் கேற்படுத்தியலக்கினம் சமீபித்தகாலத்தில்புரோகிதர் பெரியதாம்பாளத்தில் முத்துரத்தினங்கள் பரப்பி அதன்மீது பாக்குவெற்றிலைபுட்பம் குங்குமம் அட்சதைமஞ்சள் வைத்து ஆன்மதத்துவம்போல இருபத்துநான்குயிழைசேர்த்து முறுக்கில்லாமல் தாலியிலேற்றி, அந்தத்தாலியைஒருதேங்காய்க் குமஞ்சள்குங்குமம் அட்சதையணிந்து, அதன்மேற்சாத்திபுட்பாட்சதைகளினாற் பூசித்தேற்றிதூபதீபநைவேத்தியத்துடன் நீர்மாற்றி தாம்பாளத்தில் வைத்து பஞ்சாங்கக்காரரின் கரத்திலேற்றி

ஸ்ரீவிஷ்ணுமந்திரஞ் செபித்து துதித்து விப்பிரர்களும் பந்துமித்திரர்களும் இருகரங்களிற்றெட்டு இஷ்டதெய்வங்களைக் கும்பிட்டு வாழ்த்துதல்சொல்லவும் வேதியர்கள்மறைமொழி மந்திரங்கூறவும் வாத்தியமுழக்கவும் மேளசங்கத்தொனி வழங்கவும் தாலியைப்புரோகிதர்கொண்டுவந்து மாப்பிள்ளைக்கும் பெண்ணிற்கும் நேராக முக்காலியின்பேரில் வைத்து ஸ்தாபனமந்திரஞ்சொல்லி அர்ச்சிக்கவேண்டியது.

## தாரை வார்த்தல்.

கலியாணப்பெண்ணின் தாய்தந்தையும்மாப்பிள்ளையின் தாய்தந்தையும் கலியாண மண்டபத்திற்குமுன் வந்திருந்து சங்கமுழக்கிவைத்து சங்கற்பம்பண்ணி விநாயகமூர்த்தியைப் பூசித்தேத்தி பெண்ணின் தந்தை தமக்கியன்ற எதாசத்தி இரத்தினம்பொன் வெள்ளி நாணயப்பொருள் இவைகளுடன் தேங்காய் மஞ்சள் புட்பம் வாழைப்பழம்வைத்து இன்னகோத்திர சூத்திரமுள்ள என்குமாரத்தியை வாக்குத்தத்தம் பண்ணியிருந்த வசனப்பிரகாரமும் நிச்சயதாம்பூலமாற்றிக்கொண்ட நெறியின்படிக்கும் தாராதத்தம் பண்ணிக்கொடுத்தேனென்று மும்முறை புகன்று மாப்பிள்ளைக்கு இட்டு நீர்வார்த்துக்கொடுத்து சந்தன தாம்பூலம் பெற்று கலியாணவாசலிற் கலந்திருக்கின்ற தேவதைகளையும் குருஸ்வாமிகளையும் வெகுசனத் தலைவர்களையும் விருப்பத்துடன் வந்தனைசெய்து மகிழ்ச்சி பெறவேண்டியது.

மாப்பிள்ளைக்குரியவர்கள் முன்னமே பெண்ணைப்பேசி நிச்சய தாம்பூலத்துடன் பரியம்போட்டு பருப்புஞ்சாதமும் புசித்து ஒருவருக்கொருவர் மனங்கலந்திருக்க பந்தற்சிங்காரித்து கலியாணவாசலில்வந்து விவாகவிதி நடந்தேறி வரும்போது தாராதத்தம் பண்ணிக் கொடுக்கவேண்டிய தென்னவென்றால்,

குலகோத்திரக் குடிபிறப்புடையவர்கள் பெண்ணைக்கொள்ளவும் பெண்ணைக்கொடுக்கவும் பொருந்தியபோது ஆஸ்திகளினாலும் பரியமிகுதியினாலும் பந்துவிரோதத்தினாலும் சொந்தமுள்ள பந்தத்தினாலும் மரியாதைவாஞ்சைகளினாலும் வார்த்தைப் பிசக்கினாலும் ஜாதி சமயம் பிறழ்ந்து நடந்த தன்மை விசாரணையினா

னும், நான் பெண்ணைக்கொடுக்க மாட்டேனென்றும் பூததேசப் புணர்ப்பினலும், ஆணவ மலக்ஷாத்திரங்களினலும், விரோதங்க ளேரிடுமென்று அடிக்கடி பிரமாணங்களினல் ஸ்திரப்படுத்தி வந் தும் இப்போது கெட்டியாக சகலதேவதைகளும் சகல சாதியரு ம் பந்துமித்திர சபையாருஞ் சேர்ந்திருக்கிற தருணத்தில் தாரா தத்தம் பண்ணிக்கொடுக்கவும் அந்தத்தாரையை நான் ஏற்றுக் கொண்டேனென்றும் மாப்பிள்ளை சொல்லவும் அதை வற்புறுத் துவதற்காக பற்பலவிதத்திலும் பாராட்டுவதாம்.

"மூன்று முடியும் முடிந்து முப்பது இலையுங் குப்பையில் வீழ்ந்தபோதைக்கல்லவோ கல்யாணம் நிச்சயமென்பதும் ஒருவ ன் பெண்சாதி மற்றொருவனுக்கு தாய் என்பதுவும்"

"நிதியுங் கணவனும் நேர்படினுந் தன்றன்
விதியின் பயனே பயன், என்பதுவும்"

தெய்வ வசத்ததேயல்ல வேறில்லையென்றறிந்து முயல்வது போதுமாம்.

## மாங்கல்ய மணியும்விதி.

இப்பால் தாராதத்தம்பெற்றுக்கொண்ட மாப்பிள்ளையெழு ந்து கலியாணப்பெண்ணிற்கு நேரில் முக்கால் அறுகாலிட்ட பீட த்தின்பேரிலிருந்து பஞ்சாங்கஞ் சொல்லுகின்ற ஐயரால் தாலி யைக் கரத்தில் வாங்கிக்கொண்டு மாப்பிள்ளையின் தமக்கை தங் கையிவர்களிலொருவர் மகாலட்சுமிவைத்த விளக்கைப்பிடித்துக் கலியாணப்பெண்ணிற்குப் பின்புறத்தில்வந்து கலியாணக்கன்னி கையின் உட்கழுத்துக் கருமணிகளையவும் வேதியர்கள் வேதகோ ஷ்டம்பண்ணவும் சுஜாதியர்கள் திருமால் திருநாம கோவிந்தம் போடவும் தாய்தந்தையர்கள் மனமும் வயிறுங்குளிர்ந்து மகிழ ச்சியிலூறவும், வந்திருக்கும் பந்து ஜனங்கள் கண்களிகூறவும், மித்திரர்முதலியபேர்கள் பத்திராட்சதையிறைக்கவும், லாலிமங் கலவாழ்த்தொலி வீறவும், டமாரமுதலிய பேரிகள் சங்கீதங்களை நிறுத்தி அந்தந்த குலத்தாருக்குரிய ஒற்றைச்சங்கு இரட்டைச் சங்கு மூன்றுசங்கு இதுகளை ஓமென்னும் பிரணவநாத மொலிக் கும்படியாக முழங்கவும் கலியாணப்பிள்ளை கலியாணப்பெண்ணி ன் செவியில் தாறுமாறான வேறு நாதங்கேட்கும்படிக்கில்லாமற்

செய்து மாப்பிள்ளை காத்தில் தாங்கியதிருமாங்கல்யத்தைகலியா ணப்பெண்ணின்களத்திற்சேர்க்கும்போது நாத்தியார் மூத்தமா மியார் அந்தமங்கிலியத்தைத்தாங்கி தாங்கள்ஜாதியாசாரப்படிக் கு பெண்ணின் மார்பில்எவ்வளவு நிலைநிற்கவேண்டியதோ அவ் வளவுநிற்கவைத்துப்பிடிக்க சகலவைபவ சம்பிரமங்களுடன்மண வாளப்பிள்ளை மணக்கன்னிகை மகிழ்ந்துதிருப்பூட்டிபெண்ணின் பிடரியில் நூன்முடிபோடுகின்ற சுபலக்கினத்தில் புரோகிதர் பிர மமந்திரஞ்சொல்லி முடி யிரண்டும் உருத்திரமந்திரஞ்சொல்லி முடி மூன்றும் போட்டுவைக்கவேண்டியது.

மும்மூர்த்திகளின் மந்திரஞ்சொல்லி மூன்றுமுடியும்போட் டகலியாணப்பிள்ளை அந்தத்தாலியி னூன்முடியை இடதுகாத் திற் பிடித்துக்கொண்டு இறைவனைத்துதித்து வலக்காத்தில் விபூதிவாங்கி அம்முடியின்பேரில் வைத்து-துற்சோபம்-துற்பயங் கரம்-துற்மரணம்-துற்வியாதி நீங்கவும்-சகலபாவரோக நிவார ணமாகவும்-சம்பத்மர சாதுசங்கம்-சாஸ்திரலீலாமகத்துவ முண் டாகும்-பஞ்சாட்சரத்தைப்பண்ணி மாப்பிள்ளை தன்நெற்றியில் விபூதிதரித்துக்கொண்டு பெண்ணெற்றியிலும் திருநீறுபூசி பெ ண்ணின் வலதுசெவியில் விப்பிரர் சொல்லுகின்ற மந்திரஞ்சொ ல்லவேண்டியது.

## உபதேச மந்திரம்.

புரோகிதர் புகலுகின்ற மந்திரமாவது மாங்கிலியந்தந்தனே னேஞு-மமஜீவனவேதுஞு-இந்த மந்திரத்தைப்பெண் செவியி லோதியபின்பு பிள்ளையெழுந்துமணவறையிலிருக்கலாம் உடனே கலியாணப்பெண்ணையெழுந்திருக்கச்செய்து தோழிப்பெண் சகி தமாகப் புருடனைவணங்கி மாப்பிள்ளைக்கு இடது பாகத்தி லிரு க்கச்செய்யவேண்டியது.

## பட்டங்கட்டல்.

மாப்பிள்ளைக்குரியவர்களும்பெண்ணிற்குரியவர்களும்முத்து இரத்தினங் களினாலாகிய பொற்பட்டங்கள்கட்டி பட்டுபட்டா வளி தாப்தா ஷால்வை சரிகைவேஷ்டி சரிகைசோமன் புடவை ஆபரணங்கள் அன்னமுதலிய அனேகவஸ்துகளைவரிசைவண்மை களும் வழங்கவேண்டியது.

## சேஷை.

நித்தியவிதி தப்பாதியற்றி காயத்திரிசெபித்து சத்தியவாக்கியம்பெற்ற உத்தமவேதியர்களால் நவக்கிரக வோமம்பண்ணிவைத்து சந்தனதாம்பூல தட்சணையுங் கொடுத்துவைத்து விசேஷசேஷையிட்டு வெகுபெயர்களாலும் வாழ்த்திப் பிள்ளையும்பெண்ணும் போற்றச் செய்யவேண்டியது.

## பொன்மோதிரமிடல்.

அக்கினிபூஜையாற்றி பிள்ளையும் பெண்ணுமெழுந்து தோழன்தோழியுடன் அரசாணிக்குக்கால பிரதட்சணம் பண்ணிவரும்போது ஒவ்வொருசுற்றிற்கு மைத்துனன் பொரிவாரிக்கொடுக்க கலியாணப்பெண் கரத்திலேற்றி புருடன் கரத்தில் விடுக்க அந்த நாயகன் அந்தணர் சொல்லிய மந்திரத்தின்படி அக்கினியிற் சொரிய இவ்வாறு மூன்றுதரம் வலஞ்சூழ்ந்துவந்து ஓமாக்கினிக்குப்பூரணாகுதி கொடுத்துப்போற்றி வாழ்த்தி யேத்திறைஞ்சி பொரிவாரியிட்டமைத்துனன் கரத்திற்குப் பொன்மோதிரமிட்டு மணவறையிற் பொருந்தி யிருக்கவேண்டியது.

## மாலைமாற்றுதல்.

பிள்ளையும் பெண்ணும் பூமாலைமாற்றிபூச்செண்டெறிந்து சந்தனம்பூசி சரசம்பேசி கந்தங்கிமிர்ந்து காயிலையீந்து கடைக்கண்பாய்ந்து கரமேற்சாய்ந்துசற்றுநேரம் விளையாடிக்கொண்டிருந்து மாணிக்குற்றாளால் நீராஞ்சனமாகிய ஆலஞ்சுழற்றி வைத்துஇருவரும் விரல்கோர்த்தெழுந்து மாப்பிள்ளைத்தோழன் முன்னும் மணவாளன்பின்னும்பெண்ணுந்தோழியும் அட்டமங்கலத்துடன் அரசாணிக்குக்காலைப் பிரதட்சணம் புரியவேண்டியது.

## அட்டமங்கலம்.

கைவிளக்கு-பூரணகும்பம்-கண்ணாடி - அங்குசம் - வெண்சாமரம்-இணைக்கயல்-அவரவர்கட்குரிய விருதுக்கொடி-முரசு இவ்வெட்டும் அஷ்டமங்கலமென்பதாம், இவைகளைபெதும்பைப்பருவமுள்ள பெண்களெடுத்துக்கொண்டு பூமியதிராமல் நடந்துமூன்றுசுற்று வந்தபின் அப்பெண்களுக்கு சந்தனதாம்பூலபுட்பங்களுடன் பழங்களும் தனங்களுங் கொடுத்துவிட்டு பிள்ளையும் பெண்

ணும் வணங்கி கிழக்குமுகமாகிய அரைவீட்டிற் புகவேண்டியது பிள்ளையும்பெண்ணும் அரசாணிக்குக் கால்வலஞ்சுற்றிவரும்போது அம்மிமிதி அருந்ததிதுதியென்றுசொல்லுகின்றார்களே அதென்னவெனில்,

## அம்மிமிதித்தல்.

அம்மியுங் குழவியும் அஷ்டதிக்குப் பாலகரில் ஈசானமூர்த்தியாக வேதமந்திரங்களினால் முன்னமே ஆவாகனம் பண்ணிப்பூசித்து சிவசத்திசொரூபமென்றேர்ப்படுத்தி வைத்திருப்பதைமிதிக்கக்கூடுமா! மேலும் வீடுகட்ட பந்தக்கால் நாட்ட எந்தவேலையுஞ்செய்ய ஈசானியமூர்த்தியைத் துதித்து அந்த மூலையை திரமானதென்று தொடங்குவது உலகமார்க்கம் இதுவுந்தவிர வடதேசத்தில் தாயை அம்மியென்பது பெருவழக்காம் இவ்வாறு தாயாகிய ஆதிமூலசிவசத்தியை கலியாணப்பெண்ணின்காலினால் மிதிக்கும்படிக்குப்புருடன் தூக்கிவைப்பது விதிபிசகு இவ்வாறு செய்யும் பார்ப்பாருக்கும் இதைவேடிக்கை பார்ப்பாருக்கும் தந்தை தாயை நிந்தித்துதைத்தபாவமும் பழியுஞ்சம்பவிக்கும்.

## கவனிப்பு.

பெரியோர்கள் உலோகோபகாரமாகச் செய்து வைத்திருக்கின்ற புராணங்களுஞ்சாஸ்திரங்களும் ஒன்றுசொன்னபடியொன்று சொல்லாமலும் சமயபேதம் சாஸ்திரபேதம் தருமபேத முதலியவற்றால் அதுவோ இதுவோவென்றுகவலைகொண்டலையும்படிக்கு உலகத்தைமாயைக்கட்டுப்பாட்டில் விடுத்துதாங்கள்கொண்டகருத்தை முடித்து கண்டவர் விண்டிலர்விண்டவர்கண்டிலரென்னுங்கட்சியெடுத்துதன்மதங் கோடலென்னுந்தன்மைபிடித்து தாங்களெடுத்ததை முடித்து தங்கள் காலத்தைப் போக்கிக்கொண்டார்களேயன்றி வேண்டுமென்றுபட்சம் வைப்பார்களாகில் கைத்தலத்தில் வைத்த முத்துப்போற் காட்டுவார்கள் ஆயினும் அவர்கள் கூறிய நுட்பா நுட்பங்களை ஜன்மாந்தரவத்யையுடைய அதிதீவரபக்குவமுள்ளவர்கள் கற்பூரதீபம்போற் காண்பவருமுளர் அப்படிக்குசுருதியுத்திசுபாநுபவ முணர்ந்ததூயர்களுக்கு இவ்வுலகம் வேண்டத்தக்கதன்று ஆதலால் உலகத்தோடொத்து வாழென்னும் நீதிக்கிணங்க நிகழ்த்தியவிதியேயல்லது வேறில்லை

புந்திநுட்பத்தினூற் குறித்தவர்களென்று இப்போதிருக்கின்ற நுண்ணறிவாளர் மதித்து மதியைப்பதித்துப் பார்க்கும்போது அம்மிமதிஅருந்ததிதுதி அநுபவவிதியென்பதை அறிந்துட்கொள்வார்கள் அவ்வளவுபுத்திமான்கள் அதிகரித்திருக்கின்றார்கள். உண்மையறிந்து கொள்ளக்கூடும் அப்பால் வினைதான்.

மாப்பிள்ளையும் பெண்ணும் அஷ்டமங்கலங்களுடன் அரசாணிக்குக்காலவலஞ் செய்யும்பொழுதுமுதற்சுற்றில்ஈசானமூர்த்தியாக மந்திரார்த்தங்களினு லேர்ப்படுத்திய அம்மியினிடத்தில் பெண்ணும் பிள்ளையும் வந்துநின்று தேங்காயுடைத்து நைவேத்தியம்வைத்து தூபதீபங்கொடுத்து புட்பாட்சதைகளா லர்ச்சித்துப்பூசித்துப்போற்றி கலியாணப்பெண்ணிற்கு அந்தச்சரித்திரமகத்துவத்தை யுரைக்கவேண்டியது.

## அம்மிமதித்தல்.

அம்மியையுங் குழவியையுஞ் சுட்டிக்காட்டி ஓ! கலியாணப்பெண்ணே!! இந்த அம்மியினுருவமும் ஆதிசிவமும் ஆதிசக்தியும்அர்த்தநாரியாகவமைந்தவா றின்னது, அதுபோல் நீயும்நானும் உடலும்உயிரும் ஒன்று பொருந்திபிரியாப் பிரியத்துடன் மறுவிவாழ்க்கை யுபெறவேண்டிய தென்றுபோதித்து இதோ நீ எனக்கிடப்பாக மாயினையென்று குறிக்கும் வண்ணம்கல்யாணற்பெண்ணின் வலதுகாற் பெருவிரலை மாப்பிள்ளையின் இடதுகாப் பெருவிரலாலும் ஆள்காட்டிவிரலினுலும் பற்றி இந்த ஈசானமூர்த்தியோடு இறைவிபொருந்தியவந்த இறைபோலிருக்க வேண்டுமென்றியம்பிச் சேரவேண்டியது.

## அருந்ததிகாட்டல்.

ஒரு சுற்றிலுரைத்துவிட்டு வணங்கி மறுசுற்றுவரும்போது வடதிசையைத் துதித்து இதோ அருந்ததி துதியென்றுவதிஷ்டரும் அருந்ததியுங்கூடி இல்லறதருமம் நடத்தியதுபோல் நீயும்நானும் இல்லறதருமத்தி லிருந்து வாழவேண்டுமென்று அவர்களின் சரிதையை யெடுத்து விரித்து தூபதீபநைவேத்தியங்களுடன்றெழுது வணங்கவேண்டியது.

## தேவாசிர்வாதம்.

மூன்றாந்தரம்வலஞ்சூழ்ந்து வரும்போதுமணவறையில்வந்துநின்று தென்திசையில்இயமதர்மராஜனை ஆவாகனம்பண்ணியஸ்தானத்திலிருக்கும் புரோகிதரைப்பூசித்து வணங்கியபோது அவர் ஆசிகூறி உலக பழக்கத்தையும், பாவபுண்ணிய வகுப்பையும் பிதுர் தேவாதி பூசை தருமதானமுதலியதையுஞ் சொல்லி

> ”தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்
> றைம்புலத்தா றோம்ப றலை

என்ற இல்லற தருமங்களைச்சொல்லி கிரகஸ்தா சிரமத்தில் அன்புண்டாக்கி அரைவீட்டிற் போகச்செய்யவேண்டியது.

பின்னர் பெண்ணின் சுண்டுவிரல்பற்றி கிழக்குப்பார்த்த வீட்டில் வலதுகாலை முன்வைத்து நுழைந்து இருவரும்பாயின் மேலமர்ந்து மாலைமாற்றி பால்பழமுண்டுதாம்பூலங்கொண்டு மைத்துனமைத்துனிகளோடு விளையாடி சுபசம்பிரமத்தோடு சபையோரை உபசரித்து சாதமுண்ணுதல் முதலியசவுக்கியாதிகளைக் கவனிக்கவேண்டியது.

## சபையோருக்குபசாரம்.

மேற்சொன்னபடி மணவாளர்கள் அந்தப்புறஞ்சென்றவுடன்மற்றோர் யாசகர் வேலைக்காரர் பிராமணர் புரோகிதர்முதலியவர்களுக்கு பூரிமுதலியவைகளைக்கொடுத்து, பின்னர்சபா தாம்பூலம் சம்பந்தி தாம்பூலம், கிராம தாம்பூலம் புட்ப சந்தனபன்னீருமுதலிய உபசாரங்களை உபசரித்து பந்திபோசனம் நடத்தி சந்தோஷித்திருப்பதாம்.

## கங்கண விசர்ச்சனம்.

அதன்பின் முகூர்த்தலக்கினந்தொடங்கிமூன்றுவேளை ஓமம்பண்ணி ஔபாசனங்களை தேவதா பூசையோடு நடத்திமணவாளருக்கு புரோகிதரால் கங்கணவிசர்ஜனஞ்செய்வித்துமுதிர்ந்தபெண்ணாகவிருந்தால் ஊஞ்சல் பந்தாடல், ஆடல்பாடல் கச்சேரி முதலிய சில விளையாடல்களையும் சக்தியானுசாரம் நடத்திவைக்கலாம்.

ஆனல் சிலர் ஐந்துநாள் ஏழுநாள் ஓமம் முதல்பலவாராக மனம்போனபடி ஆறு மாத கலியாணமும் நடத்துகிறார்கள் இது பார்ப்பாருக்கும் வேடிக்கைப் பார்ப்பார்க்கும் லாபமாம் அன்றியும்" ரூக்கலுண்டுவாடு ருத்தேஸ்வர்டு" என்பது ஒக்க அவர்கள் எப்படி செய்தாலும் செய்யலாம். அப்படி செய்யவிதி தந்தம் காரியார்த்தமாகத் தேடிக்கொண்ட மறையோர் வாக்கியமே.

அன்றி தாலிகட்டியதினமே காப்பவிழ்க்கிற தென்னெனில் திரவியமில்லாதவர்கள் மற்ற கிரியாதிகளைச் சுருக்கி முருக்கிய விதி யுக்தமாகச் செய்வதாம். அதனல் யாதொருகெடுதியுமில்லை புரோகிதருக்கு அவ்வளவாக மந்திரவேலை யிராது.

## பந்தல் பிரித்தல்.

பந்தல் பிரித்தலாவது, மணவாளர்களின் தந்தைமுதலிய உரியவர்களும், பஞ்சாங்கக்காரரு மிருந்து முன் ஆவாகனஞ்செய்த ஆரோகண மந்திரம்போல் தூபதீப நைவேத்யாதிகளுடன்நமஸ்கரித்து அவரோகண மந்திரங்களினல் அந்தந்த தேவதைகளை எதாஸ்தானத்திற் கெழுந்தருளச்செய்து சாந்தியோம முடித்து அரசாணிக்கால் முதலியவற்றை அசைத்துவிடுதல்.

பின்னர் அவ்வரசாணிக்காலே, நந்தவனங் கோயில் முதலியவிடங்களில்சுத்திசெய்துதனித்தனிநாட்டிச் சாலிலுள்ளசப்தகங்காசலத்தையும் வார்த்து தினம் பாதுகாத்துவருகையில் அவைகள்தளிர் தழை மலர்முதலியவைகளோடு செழிக்கச்செய்துமணவாளர்கள் பின் சிலாக்கியமுறுவதைக் கவனிப்பதாம்.

## பாலிகை விடுதல்.

அதன்பின் பாலிகையிலுள்ள நவதானியமுளையைஅரசாணிக்காலின் சமீபத்தில் புட்பமாலை, மாவிலை தருப்பை முதலிய வற்றை ஓர் கூடையில் சர்வவாத்தியாதிகளுடன் பந்துசனம்மணவாளர் முதலியேரோடு கொண்டுபோய் மஞ்சனீர், குங்குமங், கதம்பம் முதலியதோடு விளையாடி ஆறு ஏரி குளம் இவ்விடங்களில்விட்டுபூசித்து வரவேண்டியது.

## ஓமாக்கினிவிடுதல்.

மாங்கல்யதாரணம் பண்ணும்போது வளர்த்தியஅக்கினியை கங்கணவிர்ச்சனஞ்செய்தவுடனே தீபதூபபூசாதிகளோடு வாயகன்ற சட்டியி லெடுத்துப்போய் பயிர்ப்புலமில்லாவிடத்தில் வைக்கவேண்டியது.

## கர்ப்பாதானம்.

பின்னர் செய்யவேண்டியதாவது கர்ப்பாதானமாம் அதாவது இஷ்டஜனக்கூட்டத்துடன் விருந்தருந்தி வரிசைகள் நடத்தி சாந்தியோமமுதலிய சடங்குகளை முடித்து மணவாளர்களை அலங்கரித்து சுபலக்கினத்தில் இரவில் மர்மமாக இலைமறைவோ காய்மறைவோ வென்னும் பழமொழிக்கிணங்கப் புணர்த்தவேண்டியது.

இப்படியல்லாமல் ருதுசாந்திகாலத்திலும் சோபனகாலத்திலும் ஊர்நாடெல்லா மறியும்படி பத்திரங்களால்பிரசித்தஞ்செய்து மேளதாள முழக்கத்தோடு பொருளை விரையப்படுத்திக்கொண்டாடுவது பிசகாம் என்னென்றால் எறும்புகடையான சகல ஜீவராசிகளுக்குங் காமமுண்டாயினும், நெடுநாள்பழகிய நாயகனிடத்தில் அநுராகம்விளைக்கும்போதும் நாணமிருக்கவேண்டுவது ஸ்திரீகளுக்கு முழு ஆபரணமென்றிருப்பதனுல் குடிப்பிறப்புடையவர்கள் உற்றார் பெற்றார் முதலினர் செய்யத்தக்க சடங்குகளைப் பகலில் செய்து முடித்து இரவில் பெண்கள் சாங்கியமாகச் செய்வது நியாயமும் சுபாவமுமாகும். அன்றி நமது தேசத்தில் வழங்கும் சாஸ்திரங்களுள்ளும் அந்தரங்க காரியங்களென்றே சொல்லுகின்றது.

## தகாத ருதுசாந்தி.

அந் நியாயத்தைத் தவறி, பத்துநாள் ஒருமாதம் வரையில பற்பல வேஷம்போட்டு ஊரார்களை யழைத்து பெண்ணெதிரே உட்காரவைத்தும் தாசிகள் அல்லது பாப்பாத்திகளைக்கொண்டு அகந்தையாகப் பாடவைத்தும் கொப்பிதட்டி கூத்தாடி நடிக்கச் செய்தும் சந்தோஷப்படுகிறார்கள். இதென்னவிபரீதம் ஐயோ!

சனியனை விலைக்கு வாங்கிக்கொண்டதுபோல விவேகங்கெட்டிவ் வாறுஞ் செய்யலாமா?

ஓ ஓ ஓ, கனவான்களே!

தத்தம் அருந்தவத்தால் வருந்திப்பெற்ற பெண்களுக்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் கற்பிலக்கணங்கள் பொருந்தியிருக்கவேணுமென்று சாஸ்திரங்கள் சொல்லியிருக்கிறதே, அதுவல்லவோ நமது குடிகுலங்களை விருத்திசெய்யும் பெரியநிதி அதைக்கெடுத்து பெண்ணுக்கு வேஷமிட்டு வாலிபர் முதலிய சபாமத்தியி லுட்காரவைப்பது எதற்காகவோ, பெண்ணை அல்லது பெண்ணினழகைப்பார்த்து சபையிலுள்ள பிரபுக்களும் வாலிபருங்கண்டு மனோவுற்சாகங்கொள்ளவோ, அல்லது பெண்ணுக்குச்சபையாரைக் காட்டி இச்சிக்கவோ பெண்ணுக்குள்ள நாணந் தீரவோ அதனால் யென்னலாபம் பெறவோ இவ்வழக்கம்.

---

## வேசிகள் ருதுசாந்தி.

தாசிகள் தங்கள்வீட்டில் நன்மையானபெண்ணை ஊராரறிந்தால் பிழைப்புண்டென்று தாகாளிகள் டாபர்கள் முதலியவருக்கும் காமப்பேய்களுக்கும் தருமஞ்செய்யாத கர்மநாய்களுக்கும் தெரிவித்து இவர்களமர்ந்த பெரியசபையில் (இனிவரும்புதியமாப்பிள்ளைக்கு வசதியான பந்தர், குலோப், சேட் முதலிய விசித்திரமான வேலைகளைச்செய்த) சபையில் நயவஞ்சக் காமக்கிழத்திகளொன்றுசேர்ந்து புட்பிணியை வருவாரிடமெல்லாம் புகழ்ந்து படாடோபப் பகல்வேஷ வெளிச்சங்காட்டி, பொன்காய்க்கவந்த செம்பொற்கொடி பூத்ததென்று மகிழ்ந்து கண்டோர் மோகிக்கத்தக்க பற்பலவேஷமிட்டு பத்து இருபது முப்பது நாள் மட்டும் ஆடல்பாடல் கச்சேரிமுதலிய கோலங்களைக் காட்டிவந்தவர்களுக்கு காமமையலைப்பூட்டி வாசனை தாம்பூல முதலிய அமுதூட்டி பாக்கியவான்களை ஓட்டாண்டி யாக்குவதற்குச் செய்வதாம் ஆனதினால் அதைப்போன்ற சடங்குகளை குலஸ்திரீகளுக்குச் செய்விப்பது தவறன்றோ சற்றே கவனித்துப்பாரும்.

---

## புணர்ச்சி விதி.

மாதர்களுக்கு ருதுகாலம் வழக்கமாய் பதினாறுநாளென்று சொல்லப்படுகின்றது, அதில் மாதவிடாயானது முதல்நாள்பெரியோர்களால் நிந்திக்கப்பட்டிருக்கின்றது. மேற்சொன்ன நாலு நாளுடன் ஏகாதசி திரயோதசி இவ்விரண்டையும் நீக்கி மற்ற பத்துதினத்தில் சேர்வதே உயர்ந்ததாகச்சொல்லுகிறார்கள். மாதவிடாயானது துவக்கிஆறு-எட்டு-பத்து-பன்னிரண்டு-பதினாலு பதினாறு இந்த இராத்திரிகளில் சேர்ந்தால் பிள்ளைகளும் ஐந்து முதல்ஒற்றைப்பட்ட நாள்களில் சேர்ந்தால் பெண்களும் பிறக்கின்றது ஆகையால் புத்திரவிருப்புள்ளவன் இரட்டைதினத்திற் சேரவேண்டியது புருஷனுக்குசுக்கிலம் அதிகமாகவெளிப்படுமானால் புத்திரனாகவும், மாதர்க்குச்சுரோணிதமதிகமாக விருந்தால் ஸ்திரியாகவும் இருவருக்குஞ் சரியாயிருந்தால் பேடியாகவும் இருவருக்குமில்லாமலிருந்தால் அல்லது சொற்பமாயிருந்தால் கெற்ப வுற்பத்தியில்லாமையும் உண்டாகிறது. எவன் நீக்கவேண்டியதான நாலுநாளையும் ஏகாதசி திரயோதசி இந்தநாளையும், அமாவாசி பௌணர்மாவாசியும் நீக்கி மற்றதினத்திரவினில் தன் மனைவியுடன் சேருகிறானோ அவன் கிரகஸ்தனாக விருப்பினும் பிரமசாரியாகவே சொல்லப்படுகிறான்.

பிள்ளைகள்மேல் வாஞ்சையுடைய ஆடவர் தாங்கள்போஷித்த உணவுகள் சரியாய்ஜீரணித்து தேகபலனடைவதற்கு சராசரி ௪ மணிநேரம் நித்திரைசெய்து பிறகுமாதர்களைப் புணர்வது மிகவும் நலம்அன்றிரவில் சாப்பிட்டுபடுத்தவுடனும் பருவகாலங்களிலும் நெடும்பிரயாணஞ் செய்தபிறகும், ஸ்நாநம் செய்தபிறகுஞ் சரியாய்ஜீரணிக்காத சமயத்திலும் மாதர்களோடு சையோகிப்பதினால் பலவியாதிகள் சம்பவிக்கும் பாக்கியங்களில் முக்கியமான புத்திரபாக்கியத்தை விரும்புவோர் வசந்தகாலத்தில் புணர்ச்சிக்கவேண்டும், ஏனெனில் அப்பருவத்தில் தருக்கள் தளிர்ந்து சுத்தமானவாயுவீசுகிறபடியால் சீக்கிரத்தில் கர்ப்பக்கருதரிக்குமென்றுமனுகூறியபடியே சோதிடசாஸ்திர சகிதமாகபுருடனுக்கும்பெண்ணுக்கும் தேக கால லட்சணங்களைத் தெறிந்துஆயுள் வேதியரால் ஒப்பத்தக்க தினத்தை யறிந்து முதல் நிஷேகமுகூர்த்தஞ்செய்வதே சிறந்தது.

புணர்ச்சிவிதி யென்பது உலகத்துள்ள ஆண்பாலர் பெண் பாலராகிய இருபாலரும் கலந்து மகிழ்ச்சியடைந்து நுகரும் ஓர் சிற்றின்பத்திற்கே சம்போகம் எனப்பெயராம். இதைச்சில அறி விலிகள் காமவிச்சையையொழிப்பதற்காகத்தான் ஸ்ரீகளைஉற்பத்தி யாக்கப்பட்டிருக்கின்றதென்றும், அவர்களிடத்திற் சம்போகிப் பது தங்களிச்சையை நிறைவேற்றிக் கொள்வதற்குத் தானென் றும், தப்பபிப்பிராயப் படுகிறார்கள். "நெல்லுக்கிறைத்தநீர் வாய்க் கால்வழியோடிப் புல்லுக்குமாங்கே பொசியுமாம்" என்பதுபோ ல, சந்தானவிர்த்திக்காக ஏற்படுத்தப்பட்ட சம்போகத்தில் ஓர் வித இன்பத்தைக் கடவுளுண்டாக்கியிருக்கின்றாரே தவிரக் காம விச்சையையொழித்துக் கொள்வதற்காகமட்டுமல்லகடவுள்நமது நன்மைக்காகப் பூலோகத்தில் சிருஷ்டித்திருக்கும்சகல பொருள் களையும் அவரால் நிர்ணயித்திருக்கப்பட்ட பிரமாணத்தின்படி நாம் அனுபவிப்போமேயானால் அது நமக்கு நன்மையைச் செய் யுமேதவிரத் தீமையை ஒருபோதும் விளைக்காது ஔஷதத்திற் குபயோகிக்கும் பாஷாணத்தை அதற்குத்தக்க பிரமாணப்படி சேர்த்தால்நன்மையே செய்யும், பிரமாணத்திற் கதிகமாய்ச்சேர் த்தால் தீமை விளைவிக்கு மென்பதற்குச் சந்தேகமென்ன அது போலச் சந்தானவிர்த்திக்காக ஏற்படுத்தப்பட்ட சம்போகத்தை பிரமாணத்துடன் நடத்திவந்தால் அநேகவிதநன்மைகளை விளை க்கும், அவ்வாறின்றிக் காமவிச்சாதிக்கத்தி நிமித்தியம் அப்பிர மாணமாய்ச் சம்போகித்தால் பலவிததீமைகளை விளைவித்துவி டும். இன்னும் நம்முடைய ஜீவனைக்காப்பாற்றிக் கொள்வதற்கா கக் கடவுள் நமக்குப் போஜனத்திற்குரியபதார்த்தங்களைச் சிரு ஷ்டித்திருக்கின்றார். அப்பதார்த்தங்களைப் புசித்தால் அவைகள் ஜீவாதாரமா யிருப்பதுடன் அவைகளை உண்ணுகையில் ஒவ் வோர் உருசிதோன்றுகின்றன, அவ்வுருசியை நாமறிவதற்காக த்தான் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன வென்று அமிதமாய்ப்பு சித்தால் அவைகள்கெடுதிவிளைக்குமென்பதிற் றடையாது, இத னுல் அப்பதார்த்தங்களின் உருசியை நாமறிவதற்கு மாத்திரமே பதார்த்தங்கள் சிருஷ்டிக்கப்பட்டனவல்லவென்று நமக்குப்புல ப்படுகின்றதல்லவா? அதுபோலவே ஸ்திரிகளின் சம்போகமும் சந்தான விர்த்திக்காகவே யுண்டாக்கப்பட்டிருக்கின்ற தென் றுணரவேண்டும். இவ்விதநற்செய்கையை பிரமாணதிக்கத்தால்

துர்ச்செய்கை யாக்கிக்கொண்டுசிலர் அதனால்அனேகவிதகெடு திகளடைவதைக் காமம் என்னும் அதிகாரத்திற் கூறியிருக்கின்றோம். ஆதலாற் சம்போகத்தைக் கிரமமாகவும் ஒழுங்காகவும் நடத்தவேண்டியது. ஒவ்வொருவருக்கும் கடமையா யிருப்பது கொண்டு அச்சம்போகத்திற்குரிய காலப்பிரமாணத்தை அடியிற்கூறுவோம் கேட்பீராக.

அதாவதுஸ்திரிகளின் 15-வது வயதிற்குமேற்பட்டு 20-21 வது வயதுவரையில் அவர்களின் சரீரத்தின்சுபாவத்திற்கேற்க எலும்புமுதலியவளர்ந்து பூரணபக்குவம் அடைகின்றபடியால் முற்கூறிய 20-வது வயதிற்கு மேற்பட்டு சம்போகிக்கத்தொடங்கவேண்டும். அதற்குமுந்திச் சம்போகஞ்செய்யும் பக்ஷத்தில் அவர்கள் சரீர உறுப்புகள் பூரணவளர்ச்சி யடையாதலால்கர்ப்பந்தரித்து முற்றிப்பிரசவிக்குங் காலத்தில் விசேஷசங்கடங்களும் ஆபத்துக்களும் நேரிடுவதன்றியில் அவர்களுக்குப் பிறக்குங்குழந்தைகள் எலிகுஞ்சுகளைப்போன்றும் பூனைக்குட்டிகளைப்போன்றும் அவ்வளவு பலஹீனமாய்ப்பிறப்பதன்றியில் அவர்களும்துர்ப்பலப்பட்டுப் பலவியாதிகட்கு ஆளாகிறார்கள். சம்போகஞ்செய்வதுமாதத்திற் கொருதரமென்றும் இரண்டுதரமென்றும் நான்குதரமென்றும்பிரமாணமிருப்பதால்தேகபலத்திற்கும் வயதிற்கும் தக்கபடிசெய்வதே உசிதம், 50-வயதுக்குமேற்பட்டு மாதத்திற் கொருதரமாயினும் இரண்டுமாதத்திற் கொருதரமாயினும் நான்குமாதத்திற்கொருதரமாயினும் அவரவரின் தேகபலத்திற்குத் தக்க பிரகாரம் புரிவது நலம். 20-வதுவயதிற்குமேல் 35-வது வயதுவரைக்கும் பிரசவிப்பதற்கு அவ்வளவுகஷ்டமிராது ஆனால் 35-வது வயதுவரையிற் சம்போகமே யில்லாமல் அதற்குமேற்பட்டுச் சம்போகஞ்செய்து கர்ப்பந்தரித்தால் 35-வயதுக்குமேற்பட்ட ஸ்திரீகளின் சரீரவுருப்புக்களின் மிருதுவான பாகங்களெல்லாம் வேண்டியவரையில் வளையக்கூடாதபடி தடித்து விரைத்துப்போவதுடன் கருப்பாசயம் சுருசுருப்பின்றி மந்தப்படுதல், கருப்பைகிழிந்துபோதல், உதிரம் பெருகுதல், தளர்வடைதல், தாபமடைதல்முதலிய இன்னும் அனந்தம் உபாதிகளால் பிரசவகாலத்தில் ஸ்திரிகள் துன்பப்படுவார்கள், 20-வயது முதல் 35-வயதுவரையில் தான் பிரசவத்திற்குத்தக்ககாலம், அக்காலத்தில் சுகமாய்ப் பிரசவமாவதுடன் மரணம்நேர்வதும் அபூர்

வம். இன்னும் 10-12வயதில் ருதுவாய்க்கர்ப்பந்தரித்துப் பிரசவ காலத்தில் அனேக இந்து ஸ்திரிகள்படும்துன்பத்தை அனேகர் பார்த்தும் கேட்டுமிருக்கலாம். அதனால்நேரும் மரணத்தின் அளவை யாவர் தானறியார்கள். இவ்விதபிரசவத்தில் தப்பிப்பிழைத்த ஸ்திரீகள் தங்கள் சரீர உறுப்பின்வளர்ச்சி பூரணமாயமையப் பெறாமையால், அதுமுதலாகவே நோயாளிகளாயிருந்து அதியற்பவயதில் மரணமடைகின்றார்கள். இவ்விதகாரணங்களால் 20-வயதிற்கு மேற்பட்ட காலத்தையேசம்போக காலமாகக் கொள்வதுஉத்தமம் நாம் சாப்பிடும் ஆகாரம் ஜீரணமாவதற்கு சுமார் நான்குமணிநேரம் செல்லுமாகையால் ஆகாரஞ் செய்து நான்குமணிக்குப் பிறகே சம்போகம் செய்வது நலம்.

ஆகையால் நாயகனும் நாயகியும் தேகத்தைச் சுத்திசெய்துக்கொண்டு பரிசுத்த வஸ்திரந்தரித்து களபகஸ்தூரிகளைப்பூசி இதயசுத்தியடைந்து மனதைக் கவலைசஞ்சலம் முதலியவைகளில் அலையவிடாமல் அமரிக்கையாய் நிறுத்தி ஏகாந்தமாய் அம்சதூளிகாமஞ்சத்தில் சயனிக்கையில் தாம்பூலதாரணஞ் செய்துகொண்டு பலவித மனக்களிப்பைத் தரத்தக்க வார்த்தைகளாடி இருவரும் ஒரேமனதுள்ளவர்களாய் சந்தோஷ சித்தத்துடன் சம்போகம் ஆரம்பிக்கவேண்டும். அப்படிச்செய்யுங்காலத்தில் வேறு யாதொரு எண்ணங்களும் மனதில் தோன்றாதவண்ணம் கடவுளின்பேரில் பக்திவைக்கவேண்டும். இவ்விதம்புரியின் கர்ப்பத்திற்குயாதொரு விக்கினமின்றிச் சற்குணமுள்ளபாலரைப் பெறுவார்கள் சிலமூடர்கள் தங்கள் நாயகிகளுடன் சம்போகிக்குங்காலத்தில்வேறு ஸ்திரிகளின்பேரில் மனதைச் செலுத்துவார்கள். அப்படிச்செய்வதால் அவர்கள் விபசாரக் குற்றத்திற்குள்ளாவதுடன் கர்ப்பக்குறைவும் நேரிடுகின்றது. இதுபோலவே ஸ்திரிகளும் இதர விஷயங்களில்மனதைச் செலுத்தாமலிருக்கவேண்டும் சம்போககாலத்தில் நாயகிக்கு ஆச்சரியம் சஞ்சலம்பயம் அதிருப்தி முதலியவைகளுண்டாயின் கருத்தரித்தலுக்கு விரோதமாகையால், கூடியவரையில் அவைகளைநீக்கிஅவள் மனதிற்குச்சந்தோஷத்தையும் உற்சாகத்தையும் விருப்பத்தையும் விளைவிக்கவேண்டும் தந்தைதாயின் மனோவியாபாரமே பிள்ளையுண்டாவதற்கு முக்கியகாரணமென்று விவேகிகள் கூறியிருக்கின்றார்கள். ஆகை

யால் அக்காலத்தில் அவர்களுடையமனதுஎவ்வளவுதெளிவாயும் பரிசுத்தமாயுமிருக்கின்றதோ அவ்வளவு சௌந்தரியமுள்ளகுழந் தைகளைப்பெறுவார்கள். இவ்வாறுசம்போகித்தபிறகு ஸ்திரீகள் ஸ்நானஞ்செய்து வேறுயாதொன்றையும் நோக்காது தனதுகண வன் முகத்தையாவது அல்லது கண்ணாடியில் தன்முகத்தையா வது அல்லது அழகுள்ள படங்களையாவது பார்க்கவேண்டும் இப்படிச்செய்வதால் தன்னுருவத்தைப் போன்றாவது தனது கணவனுருவத்தைப் போன்றாவது சௌந்தரியமுள்ள பிள்ளை பிறக்கும். ஸ்திரீ ஸ்நானஞ்செய்தவுடன் குரூபியான ரூபங்களை ப்பார்க்கநேரிட்டால் குழந்தையும் குரூபியாகவே பிறக்குமென் று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதற்குச்சரியாய் அனேக திரு ஷ்டாந்தங்கள் உலகத்தில் நடந்துவருகின்றன. மாதர்களணிந்தி ருக்கும் ஆபரணங்களுள் ஒன்றில் ஊசி காந்தத்தைப்பதித்துச் சதாபோட்டுக் கொண்டிருந்தால் கருப்பந்தரிக்கும் குணமுண் டாவதுடன் சதிபுருஷாளிருவரின் மனவொற்றுமை எக்காலத் தும் மாறாதிருக்குமென்றும் கல்விமான்கள் கூறுகின்றார்கள்மிகப் புணர்ச்சிசெய்யும் விலைமாதருக்குப்பிள்ளையுண்டாவ தரிதாயிருப் பதும் நெடுநாட்பிரிந்த கணவன் வந்தவுடனே சம்போகித்த மா த்திரத்தில் கருப்பந்தரிப்பதும் அனுபவமாயிருத்தலின்அதிகசம் போகத்தினால் மாதர்களுக்குக்கருவைவளர்க்கும்சக்தியற்றுக்கரு த்தரிப்பதற் கேதுவில்லாமற் போகுமென்பது திண்ணமாம்.

---

## விளையாடல்.

கலியாண வாசலில் வெகுஜனங்களுக்குமுன் விளையாடச்செ ய்வதுயென்னவென்றால், விவாகமாகாததற்குமுன்னும் பின்னும் மணவாளன் மணாளி கூச்சப்படுவது வழக்கம். கலியாணஞ்செய் துஇரண்டு மூன்றுவருடமாகியும் நாணமாயிருப்பார்கள் (சின்ன வீட்டுச்சேதி சீமந்தத்திற் தெரியுமென்றபடி) வயிறுபுடைத்துக் காட்டியபோது புருடனும் பெண்சாதியும் பேசுகிறார்களென்று தெரியலாம். அப்போதும் புருடனை கண்டால்வெட்கப் படுவார் கள் ஆனதால் அந்த நாணமும் வெட்கமும் நீங்கும்படியாக சா லில் நெளியிட்டு எடுக்கச்செய்தும் சாலுக்குள் ஒருவர்கையைஒரு வர்பற்றி முருக்கித் திருப்பிபொம்மையை எடுக்கச்செய்வதும் பிள்ளையைப் பெற்றோமென்றும் பிள்ளையைப் பிடியுங்கள் எனக்கு

வேலையிருக்கிறதென்றும், புருடன் பிள்ளையைப்பிடி யென்றும் பால்கொடுவென்றும், ஏணையிற்போட்டு தாலாட்டுங்களென்றும் மூத்திரம்பேய்ந்ததென்றும் தாம்பூலந்தாவென்றும், மாலைமாற் றென்றும், பூச்செண்டெறிதலென்றும், மஞ்சனீர்விளையாட்டெ ன்றும், வெகுஜனமத்தியில் விளையாடச்செய்து கூச்சத்தைத் தெளியச்செய்வதாம். இப்படி விளையாடியும் ஆறுமாதம் ஒரு வருடம் வரையிலும் கூச்சத்தோ டிருப்பவர்களுமுண்டு இவர் களை இஷ்டர்களாலும் தாசிகளாலும் போதித்து நாணத்தைநீக் குவதுமுண்டு. இதன்பொருட்டே உற்ற ருறவினர் புரோகிதர் முதலியவர்களால் பற்பலவிளையாடல்களைச் செய்விப்பது பூர்வீ கப் பழக்கமாம்.

## சங்குகுறித்தல்.

டமாமுதலிய வாத்தியங்களை நிறுத்தி சங்கூதித் தாலிகட் டவேண்டுவதேனென்றால்.

### வெண்பா.

முதற்சங் கமுதளிக்கு மொய்குழாலா ராசை
நடுச்சங்கு நல்விலங்கு பூட்டும்—கடைச்சாங்கு
ஆம்போ தினவூது மம்மட்டோ யிம்மட்டோ
நாம்போது வாழ்ந்த நலம்,

என்று கூறியபடிசங்குமுழக்கியேதாலிகட்டவேண்டும் அச் சங்குவாழ்வுக்கு ஊதுகின்றபோது ஓம்என்று பிரணவநாதமாயும் சாவுக்கு வாள் என்னும் அமங்கலநாதமாகவும் ஊதுவது.

## இருமண்மேடை.

இருமண்கூட்டி மேடைபோடுவ தேனென்றால் நவரத்தின ங்களா லிழைக்கப்பட்டிருந்தாலும், பிருதிதேவி சம்பந்தமிருக்க வேண்டியதாலும். ஜனன மரண ரட்சிப்புக்காலங்களில் பிருதி வியினது பரிசமிருக்கவேண்டு மென்றுபாவகரிஷியி னிச்சயமாத லாலும் என்பதாம்.

## செங்கோலம்.

செங்காவிக்கோலமாவது, பந்தற் போட்டிருப்பதால் சூரிய கிரணத் துலக்கமென்பதாம்.

## மாக்கோலம்.

மாக்கோலமாவது, தானியமகாலட்சுமியின் பான்மையாக அலங்கரிப்பதாம்.

## தோழிப்பிள்ளை.

தோழிப்பிள்ளை யாரெனில், மைத்துனனை யேற்படுத்தினல் வேங்கியமில்லாமல் உபசரிக்கவும், மணவாளருக்குக் கிடைக்கும் காசுபணங்களைக் கிரமமாகச் சேர்க்கவும், பெண்ணிற்குச்சீதனங் கொடுக்கின்ற தோழிப்பெண்ணை சகலாபரணங்களுடன் தத்தம் பெற்றுக்கொள்ளவும்; சுதந்தரமுடையோனுதலால் முற்காலத்தில் பெண்ணுக்குச் சீதனமாக புரோகிதர், வித்துவான், ஆளடிமை, தோழிப்பெண், நிலம், ஏர் முதலியவற்றைக்கொடுத்து வந்தார்கள் அக்கால்தோழிப் பெண்ணிற்குத் தோழிமாப்பிள்ளை சொந்தமாக நடந்துவந்தது. அந்தநெறியாகமைத்துன னிருக்க வேண்டுமென்பதாம். இதுபூர்வ நியதி.

## தாலியினுருவம்.

தாலியாவது, தாலி என்பது தாள்—நீ (தாநீ)என்றப்தமாம்அது விதிகெட்டு தாலியென வழங்குகின்றது—அதனுருவம் புருடனுடைய பாதம்போலாம்—சிலர் பொட்டாக அணிகிறார்களேயென்றால், அதுவும் புருடனுடைய பாதந்தான். எவ்வாறெனனில்பாதத்தை'தாமரைக்குவமானமாகச் சொல்லுவதால் அப்பாததாமரைபோல ஆகிர்திபண்ணிவைப்பதாம்.

## குலாலமரியாதை.

குலாலனை சால் கரகாதிகளை சுபவேளையில் வாத்தியத்தோடுகொண்டுவரும்படிசெய்து அவனுக்கு படியரிசி பாக்குவெற்றிலைகொடுத்து உபசரிக்கவேண்டும்.

## விஸ்வபிரமோபசாரம்.

கலியாணதினத்திற்கு ஏழு ஒன்பது தினத்திற்குள் தட்டாரிடம் பொன்கொடுத்து, தாலிசெய்து மூன்றுதினத்திற்குமுன்னதாகக் கொண்டுவரச்செய்து குலதேவ பூசைகளை நடத்தியபின் உபசரிக்கவும்.

### நாத்தினார் விளையாட்டு.

சிலர் கலியாணப்பெண்ணும்பிள்ளையும் அரைவீட்டிற்போம்போது நாத்தினார் முன்னதாககதவை சாத்திக்கொண்டு விளையாடுகிறதினால் நல்ல லக்கினம்போய் இராகுதியாச்சிய உச்சம் வந்துபோம் ஆதலால் மாப்பிள்ளை பெண் அரைவீட்டிலிருந்து பாலபழமுண்டு பங்களலாவிவரிசைநடந்து எழுந்துவரும்போது கதவைசாத்திக்கொண்டு வெகுநேரமட்டும் விளையாடிவருவது சர்வோத்தமமாகும்.

## முக்கிய குறிப்புகள்.

விவாகத்தில் பாணிக்கிரகணம் முதலிய மந்திரங்கள் கன்னியாப்பெண் விவாகத்திற்கு மாத்திரமேயாம்.

பாணிக்கிரகண மந்திரஞ்சொல்லி விவாகஞ்செய்துக்கொண்டாற்றான் தருமபத்தினியாவாள். அதிலும்தீவலஞ்செய்யும்போது மனைவியை எழடி வைக்கச்செய்து அம்மி மதிக்கிற மந்திரத்தைக்கணவன் சொல்லுகிறதினால் அந்தத் தருமபத்தினியின் பெருமைஅறியத்தக்கதாயிருக்கின்றது.

பிராமணனுக்கு பிராமம் முதல் காந்தருவம் வரையில்கிரமமாக ஆறும், க்ஷத்திரியனுக்கு ஆசுரம்முதல் பைசாசம்வரையில் நான்கும் வைசியசூத்திரர்களுக்குமேற்சொன்னநான்கில் இராக்ஷசம் நீங்கலாக மூன்றும் தருமத்தைக்கொடுக்கத்தக்க விவாகமென்றறியவேண்டியது.

# இரண்டாவது விவாகம்.

மதுபானஞ்செய்பவள் - தீயநடையுள்ளவள் - கணவனுக்கு மாறுபாடுசெய்பவள்-தீராப்பிணியினள்-மிகுந்த கொடுமையுடையவள்-பொருளையழிப்பவள் இவ்வகை மனவியரை ஜீவனத்திற்குக்கொடுத்து நீக்கிவிட்டு இரண்டாவது விவாகஞ்செய்க.

மலடியானமனைவியை எட்டுவருஷத்திற்குமேலும்-சாப்பிள்ளை பெறுபவளை பத்துவருஷத்திற்குமேலும்-பெண்ணையேபெறுபவளை பதினாறுவருஷத்திற்கு மேலும் தீங்கு சொல்பவளை அப்பொழுதேயும் நீக்கிவேறு விவாகஞ்செய்துகொள்க. இந்தமனைவியர்களுக்கு மனமகிழப் பொருள் கொடுக்கவேண்டியதில்லை.

கணவனுடைய நன்மையை விரும்பினவளாயும் நல்லொழுக்கமுடையவளாயும் இருந்தமனைவி பிணியினளாயிருப்பினும் வேறுவிவாகஞ்செய்ய விரும்பினவன் அந்தமனைவியின் அனுமதிபெற்றுக்கொண்டுசெய்க. அவளையொருபோதும் அவமதிக்கக்கூடாது என்று மனுகூறியிருக்கிறார்.

இரண்டாவது விவாகஞ்செய்யக்கூடாதென்றுமுன்னர் சிலகவிகளும் குழறிவழிந்துசேறினர், அந்நெறி அபத்தமாமென மேற்றெள்ளிதி லுணர்த்தும் ஸ்மிருதியைக் கவனிப்பார்களாக!

## பரிய விஷயம்.

பெண்ணைப் பெற்றோர் பரியம்வாங்கிக்கொண்டு பெண்ணைக்கொடுப்பது விற்றுவிட்டதுபோலும் ஆதலினால் பரியம்வாங்குவது வெறென்று சர்வசாஸ்திரங்களும் கூறுகிறது.

## சீதன விஷயம்.

விவாகமானபின் பெண்ணைப்பெற்றவர்கள் அப்பெண்ணின் அருமைபெருமைகளையுணர்ந்து அதன்ஜீவனுசாரவிருத்திக்கென்று வீடு-நிலம்-பணிதி-ஆடை-ரொக்கம் முதலிய சொத்துகளை கொடுப்பது உசிதம். இவ்வழக்கம் பூர்வீகமாய் எல்லாசாதியாருள்ளும் சக்தியானுசாரம் நடந்தேறிவருகின்றன. இந்தசொத்துக்களை பின்னர் தாய்தந்தையல்லது கணவன் முதலினோர் அபகரிப்பதுகூடாது. அப்படி செய்யில் அதோகதி யடைவரென்று ஸ்மிருதிகள் கோஷிக்கின்றது.

இப்படியாக அஷ்டதிக்குப்பாலகர்கள்-அவர்களதிதேவதைகள்-பூதேவி-சரஸ்வதி - சூரியசந்திரர் - அருந்ததி-கிரகாதிகள் - உற்றார்-உறவினர்-ஊரார் பிராமணராதி சர்வஜனங்களின் முன்னிலையில் சப்தரிஷிகள்-நவதீர்த்தங்கள் முதலிய எல்லாங்காணும்படி தாய்தந்தையர் தாரைவார்த்துக்கொடுக்க எல்லாதேவர்களேயுஞ் சாட்சிவைத்து பெண்புருடனை நோக்கி இதுவரையிலும்நான் என் தந்தைதாயின் பாதுகாப்பில் இருந்தேன் இன்றுமுதல் தங்கள் பாதுகாப்பிலிருந்து தங்கள்குலத்தை விருத்திசெய்யவும், தங்களது சுகதுக்க பாபபுண்ணியமாதிய சர்வத்திற்கும் சுதந்திரவதியாகவும். இன்று என்தேகத்தையும், உயிரையும் சர்வ சுதந்திரங்களோடு தங்களுக்கே தத்தஞ் செய்கிறேனென்றும், அப்படியே புருடன் பெண்ணை நோக்கி நீ என் குலவிருத்திக்கும், எனது புண்ணியபாபாதிகளுக்குஞ் சுதந்திரத்திற்கும், என்பிதுரர்கள் முதலினோர்களுடைய போஷிப்பிற்கும் பெருந்துணையாயிருக்கும்படி இப்பெருந் தேவசன மகாசபையார் சாட்சியாகவருவித்துக்கொண்டேனுகையால், என்தேகத்தையும் இத்தேகத்தினுலாகும் எல்லா விஷயங்களும் உனக்கே இம்மகா தேவஜனமுன்னிலையில் தத்தஞ்செய்துக்கொடுக்கிறேனென்று பிரமாணத்தோடு சத்தியஞ் செய்துக்கொடுக்கிறேனென்றும் பிரமாணத்தோடுசத்தியஞ்செய்துக்கொடுத்து, அதற்கு உறுதிப் பத்திரம்போலும் மாங்கல்ய முத்திரையை யேற்படுத்தியபின் ஒன்றிவாழ்கின்றகருத்தே விவாகமானதால் இந்நெறியைப் பிறழ்ந்துநடக்கும் ஸ்ரீபுருஷர்களுக்கு என்னகதி கிடைக்குமோ!

## விண்ணப்பம்.

இதுவரையினுஞ் சொல்லிவந்த விவாகவிதிகளேமுக்கியமானவைகள், இவ்விதிகளேக்கடந்தும், தேசாசார காலாசாரமதசார ஜாதியாசார அனுஷ்டானமாக அனேகவகையால் சில விதியுக்தமாகவேயும் நடந்துவருகின்றன, அது பெரும்பாலும் இந்துமதமல்லாத புறமதங்களிலேயே காணப்படுகின்றன. இது எம்மதமார்க்குமாத்திரமே சிறந்தமையான அனவஸ்யமானவைகளே விடுத்தும் அவஸ்யங்களேத்தொகுத்துக் கூறநேர்ந்தன. புனர்விவாக விஷயங்களேயும், ஸ்மிருதிசாரங்களேயும், முற்றும்விரிக்கப்புகின் சற்றுமிந்நூல் தரிக்கப்பெறுமையால் அவ்வளவிற்றுனே விடுத்து, குலதருமங்களே ஒருவாறு கூறுகின்றேன்.

விவாகவிதி முற்றிற்று.

---

# குல தருமம்.

கற்பதான மந்திரத்தினலும்-சீமந்த ஓமத்தினலும்-சாதகர்மம்-நாமகரணம்-அன்னப்பிராசனம்-சௌளம்-உபநயனம் ஆகிய இவைகளினலும் சம்போகஞ்செய்யக் கூடாததினத்தில் தவறிச் செய்ததாலுண்டாகுஞ் சந்தோஷமும் - தாயினது கருபத்திலிருந்த தாலுண்டாகுந் தோஷமுநீங்குகின்றன. அன்றியும் வேத மோதலினல், கொல்லாமையும் புலாலுண்ணுதையுமாகிய இவ்விரதங்களைக் கைக்கொண்டிருப்பதினலும்-ஔபாசன ஓமங்களினலும், தேவரிஷி பிதுர்தர்பணத்தினலும் பஞ்சமஹா எக்கியத்தினலும்நமது ஆத்மா மோக்ஷத்திற் குரியதாகின்றது.

## ஜாதககர்மம்.

பிறந்த மகவினுடைய தொப்புள்கொடி யறுப்பதற்கு முன்னர்சாதகர்ம சம்ஸ்காரம்செய்யவேண்டுவது. அக்காலையக்குழந்தைக்கு நெய் தேன் இவற்றில் சுவர்னத்தை மந்திரத்தோடிழைத்து நாவினில் தடவவேண்டியது. அக்குழந்தை பிறந்த பத்து அல்லது பன்னிரண்டாவதுதினத்தில் புண்ணியதிதியில் சுபமுகூர்த்தத்தில் நல்ல நட்சத்திரத்தில் தக்க நாமகரணஞ் செய்யவேண்டியது.

## நாமகரணம்.

அங்ஙனம் நாமகரணமிடுங் காலத்து, பிராமணனுக்கு மங்களத்தையும் க்ஷத்திரியனுக்குப் பலத்தையும், வைசியனுக்குப்பொருளையும், சூத்திரனுக்குத் தாழ்வையுங் காட்டும்படியான பெயரையிடவேண்டியது. பிராமணனுக்குச்சர்மனெனவும், க்ஷத்திரியனுக்குவர்மனெனவும் வைசியனுக்குப்குப்தனெனவும். சூத்திரனுக்குத்தாசனெனவும் தொடர்ப்பெயராக இடவேண்டியது பெண்களுக்கு நாமகரணமிடும்போது, அஃதுமங்களமாயும் தீர்க்காயுக்ஷரத்தையுடையதாயும். அன்னியாற் சுகமாகக் கூப்பிடுவதாயும் ஆசிர்வாதத்தைத் தருவதாயு மிருத்தல்வேண்டும்.

## அன்னப்பிரசானம் முதலியவை.

குழந்தை பிறந்தநான்காமாதத்தில் அதனைவீட்டினின்றும் வெளியிற் கொண்டுவந்து சூரியனுக்குக் காட்டல்வேண்டும்.ஆறு மாதத்தில் அன்னப்பிராசனம் நடத்தல்வேண்டும். பிறந்தமுதல் வருடத்திலாவது. மூன்றாம்வருடத்திலாவது வேதத்திற் கூறி யுள்ளவாறு சௌளகர்மஞ்செய்தல்வேண்டும் ஐந்தாவதுவயதில் கல்வியையும். ஏழாவதுவயதில் தனுர்வித்தையையும் பயிற்றல் வேண்டும்.

---

## உபநயனம்.

நூற்கப்பட்ட முப்புரியையுடைய இழைகள்கூடி யிடது தோளின்மேலிருந்து வலதுதோளின் கீழ்த்தொங்கத்தக்க பூணு நூலைப்பிராமணன் பருத்திநூலினாலும் க்ஷத்திரியன் பட்டுநூலி னாலும் வைசியன் வேறுநூலினாலும் தரிக்கக்கடவன் மேற்கூறிய வை கிடையாவழி பூண்நூலை ஆடையினாலாயினும் ஆடைகிடை யாவழி மூன்றிழை நூலினாலாயினும் தரித்துக்கொள்ளலாமெ ன்பது பராசரம். மணம் புரியாதவர்கள் ஓர் சூத்திரத்தையும், மணம் புரிந்தவர்கள் இரண்டு சூத்திரத்தையுந் தரித்தல்வழக்கு, ஆடைபங்கப்பிராயச் சித்தார்த்தமாக மற்றொன்றுசேர்த்து மூ ன்றுமுடி தரித்தலும் வழங்குகின்றது. மூத்திர புரீடங்களைக்கழி க்குங்காலத்தில் மாலையாகத்தொங்குகின்ற பூண்நூலை முதுகின் புறமாக விடல்வேண்டும் ஒரே ஆடையுடையவனாகயிருக்கிறவன் பூண்நூலை வலதுசெவியிற் சுற்றல்வேண்டும்.

துஜர்கள் உத்திரியத்தையேனும் பூணநூலையேனும் இடது தோள்மேலும் வலதுகையின் கீழும் போட்டுக்கொண்டால் உப வீதமென்றும், வலதுதோள்மேலும் இடதுகையின் கீழும்போட் டுக்கொண்டால் பிராசியினாவீதமென்றும், கண்டத்து மாலையா கப்போட்டுக்கொண்டால் நிவீதமென்றுஞ் சொல்லப்படுகின்ற து. மூன்று வருணப் பிரமசாரிகளும் தங்கள் பூண்நூல் அபரிசுத் தமாயினும் அல்லது பின்னமாகப்போயினும் தண்ணீரிற் புதை த்துவிட்டுப் புதிதாய் மந்திரங்கூறித் தரிக்கவேண்டியது.

## சௌளாகர்மம்.

குடுமி பூணூல் இல்லாமற்செய்யும் ஸ்ரௌத ஸ்மார்த்தகரு மங்கள் விருதாகுவாகுமென்றுபிருகுசொன்னர். குடுமியை முடிந்து கொண்டவனுகச் சந்திக்கிரமத்தை யாசரித்தல்வேண்டும் குடுமியைப் பற்றக்களைதல்தருமவிரோதமெனவறிக, அங்ஙனம் செய்து வருபவர் வேதவைதிகத் துவேஷிகள்போலும், குடுமி வைத்தலாகிய சவுளகர்மம் பிள்ளைபிறந்த மூன்றும் ஆண்டிலும், ஐந்தாம் ஆண்டிலும் செய்யத்தக்கது.

பிராமணனுக்கு எட்டாவது வயதிலும். வைசியனுக்குப் பன்னிரண்டாவது வயதிலும் உபநயனகருமம்நடத்தல்வேண்டும் உபநயனம் இரண்டாம் பக்ஷமாகச்செய்யுமிடத்து, பிராமணன் பதினறுவயதுவரையிலும், க்ஷத்திரியன் இருபத்திரண்டுவயது வரையிலும், வைசியன் இருபத்திநாலு வயதுவரையிலும் செய்துகொள்ளலாகும். ஆகவே இதனைக்கடந்து மூன்றுவருணத்தாரும் உபநயனஞ் செய்துகொள்ளுவரேல், அவர்கள் காயத்ரீ மந்திரத்தினின்றும் நீக்கினவர்களாயும், விராத்தியாளென்னும் பெயருள்ள வர்களாயும். பெரியோரால் வைதீககாரியங்களினின்று நீக்கப்பட்டவர்களாயு மெண்ணப்படுகிறார்கள், இங்ஙனமுள்ளவர்களுக்கு வேதம் சொல்லிவைக்கவும் அவர்களிடத்துப் பெண்வாங்கவுங்கூடாது. பின்னர் பூணூற்றரிக்க வேண்டிய விதியை இந்நூன் முகற்பிற்காண்க,

கர்ப்பதானம் - பும்சவனம்-சீமந்தம்-உபநயனம் - சாதககர்மம் நாமகரணம்-உபநிஷ்கிரமணம்-அன்னப்பிரசனம்-சௌளம்-உபநயனம்-மகாநாமியம் - மகாவிரதம்-உபநிஷத்து - சோபனம்-உத்துவகனம்-மிருதி-என 18-ம். இதனோடு யசன-யாசன அத்தியயன தான பிரதிக்கிரகமென்னுஞ் - சேர்த்து 24-ஆக கொள்ளுவதுமுண்டு இஃது உத்தம பிராமணவிதியாம்.

---

லௌகிக வைதிக பரமசாதனமா யுள்ள

# நல்லொழுக்கம்.

முன்னர் கிரகஸ்தாசிரமத்திற்கு வேண்டிய கன்னிகாமாங் கல்யதாரணவிதியையும், பின்னர் கன்னிகையோடு கூடிவாழுங் கால் அத்தியாவசியமாய் நடத்தவேண்டிய குலதருமத்தையும் ஒருவாறுகூறினேம், அவ்வாறு இல்லறநெறியைக் கடைப்பிடித்தகாலையில் லௌகிக வைதிகானுகூலமாக நடந்துகொள்ளவேண்டிய நீதியைச்சிறிது கூறத்தொடங்குகிறேன்.

உலகில் தேகாதிகாரியாய் ஜீவிக்கவேண்டிய ஒருவன்சார்பாலுஞ், சேர்க்கையாலும் வயதாலும் வாழ்க்கையாலும் தொழிலாலும் செய்கையாலும், வாக்காலும் பரிசுத்தனாய் யாதொரு தீமையுள்ளுந் தலைப்படாது தர்மாத்தனாய் வாழவேண்டியதாக லின்வேதாகமாதி சாஸ்திரோபதேச சகிதமாக ஆன்றோரா லனுமதிக்கப்பட்டது நீதியேயாம். அவற்றைஅவமதித்தோர் தீராநரகடைவாராதலால் யாவரும்கவனிக்கவேண்டியநீதியென்னெனில்.

மாதா பிதா குரு தெய்வம் அந்தணர் பசு அக்கிணி சித்திபெற்றோர் கற்றவர்வயதாலும்குணத்தாலும் நிறைந்தபெரியோர் முதலியோர்களைப் பூசிக்கவேண்டும் முக்காலங்களிலும் சந்தியை வணங்கவேண்டும்.

சுசியானவஸ்திரம் சுகபோஜனம் சுகநித்திரை சந்துஷ்டியானமனசு மிருதுவானநடை இனியவசனம் கோபமில்லாமை தன்னைத்தான் தண்டித்தல் வறுமையிலும்தைரியம் ஈசுரபக்தி முதலியபரமதிரவியங்களை ஒருநிமையளவும்விடாது உடலுக்குக்கண்ணெப்படியோ அதுபோல இவைகளை மனசுக்குக் கண்ணாக வைத்திருக்கவேண்டும்.

சாஸ்திரவிசாரணை சாதுசங்கப்பழக்கம் ஆலயசேவை அடியார்பக்தி உயிர்கள்மீது அன்பு குடும்பவொற்றுமை சகோதர

வாய்மை, நம்பினோரைக்காத்தல், தன்னைப்போல்பிறரை மதித்தல் முதலிய குணங்களை உயிர்போல மதித்தல்வேண்டும்.

பொய்-கள்ளருந்தல்-சூதாடல்-பிரர்மனையாளை இச்சித்தல் புறங்கூறல்-உயிர்வதைசெய்தல்-சொன்னசொல்லைமறத்தல்-கற்றதைமறத்தல்-அடுத்தோரைக் கெடுத்தல்-பேருண்டி-சோம்பல் மிகுதுயில் இவைகளில் ஒன்றையுடையவனானும் அவனது மூன்றுதலைமுறையும் நரகலோகத்தை யடைந்து வருந்துமாதலால், அவைகளை விஷம்போல நினைத்துவிடவேண்டும்

பகையைவிரும்பல்-துஷ்டவாகனமேறுதல்-தூஷிப்போன்-மந்தன்-பித்தன்-பலரோடுபகைகொண்டவன்-பாபி-நயவஞ்சகன் கோபமுள்ளவன், இரக்கமில்லாதவன் விபசாரியையுந் தன்மனைவியல்லாளையுஞ் சேர்ப்பவன் அர்பன்அங்கசுகியற்றவன் அழுக்காடையுடையோன் இவர்களைச் சிநேகித்தல் இவைகளெல்லாம் பாமசொரூபமானதால் இம்மையிலும் மறுமையிலும் பயனற்றவராகின்றார்கள்.

தனிவழிபோகக்கூடாது ஜலவெள்ளத்திற் கெதிரேநீந்தலாகாது அக்கினிபட்ட வீட்டிலும், மாத்திநுனியிலேறுவதும் பற்கடிப்பதுவும். மூக்கைதூக்கி யிழுப்பதையுந் தவிர்க்கவேண்டும்.

வாயைமூடாது கொட்டாவிவிடுவதும்-பெருமூச் சிடுவதும் தாண்டுவதும் இரைச்சலிட்டுசிரிப்பதும் பிறரறியும்படி அபானவாயுவைவிடுவதும் மீசையைக்கடிப்பதும் உதட்டைக் கசக்குவதும்கீழ்க்கண்பார்த்தலும்-கண்ணடித்தல் முதலியதுஞ் சிறிதுஞ்செய்யாதொழியக்கடவர்.

அசுத்தமும் அயோக்கியமானஎளிமையும் அம்மணமானஸ்திரீகளையும் உதயஅஸ்தமயகாலத்துச் சூரியனையும் ஒரு ஜீவனை இம்சித்தலையும் விகார ரூபங்களையும் பார்க்கப்படாது.

நீர்சுழி சவத்தைப்பூசிக்குமிடம் பூசிக்கும்வருஷம் மயானம் உத்தியானவனம் கெட்டப்பெண்களிருக்குமிடம் குடிக்காரர் துஷ்டர்களிருக்குமிடம் முதலிய விடங்களி லெக்காலத்திலும்நெருங்கக்கூடாது.

ஸ்ரீகள் நடக்குங்காற்று சுடலைப்புகை மேகயிடி அசுத்தநீர் இவைகள்படும்படி கொள்ளப்படாது.

பூசிக்கத்தக்கவர் தேவர் பிராமணர் ஆசாரியர் எஜமான் இவர்கள் நிழலில் எப்போதும் நடக்கப்படாது.

மயிர் எலும்பு முள்ளு அசுத்தவர் சாம்பல் இவற்றைத்தூரத்தில்விட்டு ஒதுங்கிப்போகவேண்டும்.

கொடியவிஷ ஜெந்துக்கள் மிருகங்கள் யுத்தசமுகம்பாழ்வீடு ஆற்றுப்பெருக்கு இவைகளினெதிரில் தூங்கல் உட்காரல் நின்றிருத்தல் முதலிய காரியங்களைச் செய்யப்படாது.

காலாலும் பல்லாலும் கொம்பாலும் பாய்ச்சாலும் பறப்பாலும் துன்பஞ்செய்யும் பக்ஷிமிருகங்களையும் பணி எதிர்காற்று வெய்யல் இவைகளையும் அணுகப்படாது.

அம்மணமாயும் அழுக்காடையாயும் உன்மத்தமாயுங்குளித்தல் பூசித்தல் தூங்கல் ஆசமனம்முதலியகிரியைகள்செய்தல்பெரியோர்முன்போதல் முதலிய தகாதகாரியங்களைச்செய்தலாகாது இப்படியே ஒற்றைவஸ்திரத்தோடு மிருந்துஞ்செய்யப்படாது.

குழந்தைகள் ஸ்ரீகள் தெய்வம் எஜமான் உபாத்தியாயர் மாந்திரிகர் வித்வான் அரசன் பசு யானை துஷ்டர் பெரியோர் இவர்களிடத்தில் பகைகொள்ளலாகாது.

பிறர்வாழ்க்கையில் சந்தோஷமும் பகைவரிடத்தில் மரியாதையும் உத்தியோகத்தில் மதிப்பும் ராஜாங்கத்திலபிமானமும் சுயகாரியத்தில் ஜாக்கிரதையும் ஆழ்ந்தயோசனையும் எண்ணிச் செய்யுஞ் செய்கையும் ஒருவனுக்கிருக்குமானல் எல்லாவிரதங்களிலும் சிறந்த தருமவானவான்.

முழுகியவுடனே கையினுலுடம்பைத்துடைக்காமல்வஸ்திரத்தினல் துடைக்கவேண்டும் பிறர்மேல் நீர்தெரிக்கும்படி உதரலாகாது தனதுபாதத்தை மற்றொரு பாதத்தால் மிதித்திருக்கக்கூடாது ஆலயம் பெரியோர் முதலியவற்றை வலமாகச்சுற்றவேண்டுமேயல்லாமல் இடஞ்சுற்றிப் போகக்கூடாது.

சூரியன்-சந்திரன் - அக்கினி-காற்று-தீபம்-ஜலம்-பெரியோர்-கடவுள்-கோயில்வழி இவைகளின்முன்பு எச்சில் மலம் ஜலம்

தம்பலம்-ஸ்ரீயோகம்-அம்மணம் - முதலியவற்றைகள் செய்யப் படாது.

நின்றபடி ஜலம்விடுதல் சாதத்தைச்சிந்தல் பூஜையில்லாதுண்ணல் கைஒன்றியுண்ணல் ஒரெறும்புக்கேனும் விருந்தின்றியுண்ணல் கோழை மலமூத்திரம் தம்பலம் முதயவற்றை மிதித்துநடத்தல் இவைகள் ஸ்ரீஹத்தியைச்செய்த பாதகத்தில் சேர்க்கும்.

பெண்களையும் பெரியோர்களையும் சாஸ்திரங்களையும் அவமதித்தல் அன்னத்தைப்பழித்தல் வெறுத்துப்பேசல் முதலியவிடங்களில் மூதேவிகுடிகொண்டு அவைகளில் மிருகஷ்டத்தை கொடுக்கும்.

வெளியிற்போகும்போது மனைவிமக்களை மகிழ்ச்சியாகயிருக்கச்செய்து தெய்வம் புட்பயிரத்தினம் பெரியோரிவற்றைப் பூசித்து போகவேனும்.

மெலிந்தோருக் கனுகூலஞ்செய்யவேண்டும் - விகாதப்பட்டவரை சமாதானப்படுத்தல், அதிதிகளை உபசரித்தல் - விருந்தினரைக்கொண்டாடல் - சுதேசக்ஷேமத்தை அனுசரித்தல்-பயந்தவர்களைத்தேற்றுதல்-வித்தைவிவேகம்-நல்லொழுக்கம்-நம்பிக்கை நயம் இவைகளையுடையவனயிருத்தல்-காமகுரோத லோபாதிகளுக்குட் படாதிருத்தல்-மனமடக்கல் முதலியவைகளை எவனுடையவனே அவன் மோக்ஷபதவியை சொந்தமாகக் கொள்ளுகிறான்.

வெளியிற்போகும்போது குடை-தடி-பாதரக்ஷை - உத்தரீயம் முதலியவற்றோடு-ஒருபுறமாய்-மெதுவாய் செம்படவன் வலைவீசிய அளவுக்கு பார்த்துக்கொண்டுப் போகவேண்டும்.

இவ்வித ஆசாரங்களில்எவனொருவன் தவறபடாதிருக்கின்றானே அவன் இம்மைமறுமை யின்பத்தைக் கொள்ளுவதோடு கீர்த்தியும் புகழும்பெற்று, உலகிற்பிறசித்தனாகிறான் ஆனதால் அவன் உலகிற்கு தாய்தந்தைமுதலிய பந்துவாகக்கொள்ளப்படுகிறான். ஆகையாலத்தியாவசியம் ஒவ்வொருமானிடரும் கைக்கொள்ளவேண்டியதாம்.

## வியாதியனுகா விதி.

உலகில் தேகத்தைப்பெற்றபொழுதே பிணி பசிகாமாதிதுக்கங்க ளுளதாதலாலும் உண்பனவற்று ளளவற்றகாலத்தில்நோய்க்கு ஆஸ்பதமாதலாலும் ஒவ்வொருவரும் உண்பன உறுவனவைகளில் அளவுபட அனுஷ்டிக்கவேண்டும், அவ்வளவைக்கிரமமாகவைத்தற்சென்றே ஆயுள்வேதம் தனுர்வேதம் முதலியவைகள் ஏற்பட்டுள்ளன அவற்றுள் அவிழ்தங்களைக்கொண்டும், சிலம்பமல்யுத்தாதி சாதனங்களைகொண்டும், அருந்தல் பொருந்தலாதிய வைகளைக்கொண்டும், அளவுபடுத்தலாம் அவையளவுறப்பட்டிருப்பினும் முதற்கண் எளிதாக விளங்கப்படுவன அருந்தல் பொருந்தல்களே யானமையான் இங்ஙனம் அவற்றின் சிலமுக்கியவிதிகளைமாத்திரம் கூறுவாம்.

### வியாதியால்வருங் கெடுதி.

ஒருவனுக்கு வியாதி சம்பவித்தால் உடனே அவன்தேகங்கெடும். கெடவே விந்துகெடும், விந்துகெடவே சந்ததிகெடும், அதனுல் குடும்பரட்சிப்பு கெடும் பின்னர் தொழில் ஆசாரம்முதலியவைகெட்டு சோம்பல் வறுமை குடும்பகலகம் முதலியஅனேககாரியங்களுக்கு இடையூருண்டாய் பாதைப்பட்டு பலவகையினுந்துக்கமாகும். ஆனதால் விவேகிகள் நோயில்லாவாழ்வைக் கைக்கொள்ளவேண்டும்.

### வியாதிவருவதற்கு காரணம்.

முனிவர் சாபத்தாலும் முறையப்பட்டாலும் செய்கைத்தவறுலும் காலபேதத்தாலும் இடமாறுதலாலும் உண்டித் தவறுலும் பிறர்மனதை வருத்துவதாலும்தேகத்தை வெறுப்பதாலும் பூர்வ வினைசம்பந்தத்தாலும் தாய்தந்தையர்களின் சம்போகத்தவறுலும் பெரியோர்களையும் மாதரையும் அவமதிப்பதாலும் ஓரம்பேசலாலும் பாவமான காரியங்களைச் செய்வதாலும், தெய்வதூஷணையாலும் பேயாலும் தருமகாரியங்களைக் 'கெடுத்தலாலும், இழிதொழிலாலுமே வியாதிசம்பவித்து தேகத்தையுங்குலத்தையும் கெடுக்கின்றதென்று கர்மகாண்டத்திலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டிருக்கின்றன. அது யாவருக்குமனப்பூர்வகமாவபிரத்தியக்ஷத்தானே—இவற்றுள் தனது அருந்தல்பொருந்தல்

முதலியபாபமில்லாவழியிற் கிடைத்த வியாதிகளை அவிழ்த்
தாலும் இப்பிறப்பில் பாபசம்பந்தமாக உண்டாகும், செய்கை
யாதிகளாலுஞ்சம்பாதித்த வியாதிகளை ஆசார அனுஷ்டானம்ஈச
பத்தி பெரியோரைப்பணிதல் தருமகாரியமியற்றலி வற்றாலும்
பூர்வவினை சம்பந்தமாகக் கிடைத்ததை தருமயாகாதி யோகஞா
னங்களாலும், நீங்குமே யல்லது வேறுவழியால் ஒருக்காலும்
நீங்காது. பூர்வவினையினால் மகாபாதகசம்பந்தமாகக் கிடை
த்தவியாதியானால் எந்தவிதத்தாலுந் தீரவேதீராது, ஆனதுபற்றி
இனிவரும் பிறவியின் சுகத்துக்காகவே நல்லவழியினின்று ஈஸ்
வரனை தியானிக்கவேண்டுமென்று வேதத்துள்ளே கூறப்பட்டி
ருக்கிறது.

## தானேதேடிக்கொள்ளும் வியாதிகளுக்கு முக்கியகாரணங்கள்.

மலஜலமடக்கல் அகாலபோஜனம் பேருண்டி மிகுதுயில்
கடுஞ்சினம் விந்துநாசம் அசுத்தஜலபானம் அசுத்தவாசம் பகற்
புணர்ச்சி பழங்கறிவகைகளைப் புசித்தல் ஸ்தானந்தவறுதல் கடும்
பனிவெய்யல் மழைகளிற்போதல் காரகபதார்த்தங்களையும் வி
ரைவில் ஜீரணமாகாத பதார்த்தங்களையும் கிழங்குவகை மீன்கரு
வாடு ஆமை முதலியவைகளையும் மிகுதியாகப் புசித்தல் கடுந்
தொழில்புரிதல் படபடத்தோடல் அழுக்காடைதரித்தல், கள்
அபினி கஞ்சா மாஜினம் மதத்து செண்டு புகை இவைகளை அனு
சரித்தல் மனோவியாகூலம் மனதிற்கு அதிக சிரத்தையைக்கொடு
த்தல் அழுதல் வேலையின் சோம்பலாயிருத்தல் சுசியின்மை அதி
கநடைநெடுநேரம்பேசல் மூச்சை அதிகமாகவிடுதல் மனத்தியக்
கம் பயப்படுதல் இரவில் நெடுநேரம் விழித்திருத்தல் சதா அவி
ழ்த முண்ணல் மூத்தவள்புணர்ச்சி முதலியவைகளை முக்கிய
காரணம்.

## வியாதியணுகா வகை.

ஆனதால் தருமகாரியங்களையும் பெரியோரையும் வழிப்பட்
டு தருமநெறியிலேயே மனதைச்செலுத்தி முன்தீவினையை யொ
ழிப்பதோடு இப்பிறவியையுஞ்சுகப்படுத்தி திருவருளையடையவே
ண்டும் யார் தனக்குடன்பாடல்லாத விஷயத்தில்தலைப்பட்டுகுறை

கூறுகிறானோ அவன் அவசியங் குற்றமுடையவனாகின்றான். ஆன தால் தன்குற்றங்களைக் களையவேண்டுவதே தர்மமாகுமென்ப தையோசிப்பது மோக்ஷசித்தியாம்.

மனிதராகப் பிறந்தோர் உஷமுன் எழுந்து மலஜலங்களைக் கழித்தல் காலைஸ்நானம் காலைபோஜனம் சமநித்திரை மனோதை ரியம் சோம்பலின்மை கைத்தொழில் மனோசாந்தம் நித்தியானு ஷ்டானம் தேவதாபக்தி முதலியவைகளை அனுசரித்தல் முக்கிய மான வியாதி யனுகாவிதியாம். பதினெண்சித்தர்களில் மகத்துவ முற்ற தேரையர் என்பவர்.

## விருத்தங்கள்.

பாலுண்டோ மெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம்
 பகற்புணரோம் பகற்றுயிலோம் பயோதரமுமூத்த
ஏலஞ்சேர்குழலியரோ டிளவெயிலும்விரும்போ
 மிரண்டடக்கோ மொன்றைவிடோ மிடதுகையிற்படுப்போ
மூலஞ்சேர் கறிநுகரோம் மூத்ததயிருண்போ
 முதனாளிற் சமைத்தகறி யமுதெனினுமருந்தோம்
ஞாலந்தான் வந்திடினும் பசித்தொழியவுண்ணோம்
 நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்குமிடத்தே.
உண்பதிருபொழுதொழிய மூன்றுபொழுதுண்ணோம்
 உறங்குவதிராவொழியப் பகலுறக்கஞ்செய்யோம்
மண்பாவுகிழங்குகளிற் கருணையன்றிப்புசியோம்
 வாழையிளம்பிஞ்சொழியக் கனிபருந்தல்செய்யோம்
பெண்கடமைதிங்களுக்கோர் காலன்றிமருவோம்
 பெருந்தாக மெடுத்திடினும் பெயர்த்துநீரருந்தோம்
நண்பெறவேயுண்டபின்பு குறுநடையுங்கொள்வோம்
 நமனார்க்கிங்கேதுகவைநாமிருக்குமிடத்தே.
ஆறுதிங்கட்கொறுதடவை வமனமருந்தயில்வோம்
 அடர்நான்குமதிக்கொருகாற் பேதியுரைநுகர்வோந்
தேறுமதியொன்றரைக்கோர் தாநசியம்பெறுவோம்
 திங்களரைக்கிரண்டுதரஞ் க்ஷவரம்விருப்புறுவோம்
விருசதுர்நாட்கொருகா லெய்முழுக்கைத்தவிரோம்
 விழிகளுக்கஞ்சனமூன்று நாட்கொருகாலிடுவோம்

நாறுகர்தம்புஷ்பமிவை நடுநசியின்மூகரோம்
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.
பகற்தொழுக்குமாதரயங் கரந்துடப்பமிவைதுட்
படபெருங்கோந்தீபமைந்தர்மரனிழலில்வசியோகஞ்
சுகபுணர்ச்சியசனபச னத்தருணஞ்செய்யோர்
துஞ்சலுண விருமலஞ்சையோகமழுக்காடை
வருப்பெடுக்கிற்சிந் துகச மிவைமாலேவிடுப்போம்
வற்சலந்தெய்வம்பிதுர்ச்சற் குருவைவிடமாட்டோம்
நகச்ஜல்மும் முளைச்சலமும் தெரிக்குமிடமணுகோம்
நமனார்க்கிங்கேதுகவை நாமிருக்குமிடத்தே.

நேரிசை வெண்பா.

திண்ணமிரண்டுள்ளே சிக்கவடக்காமற்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காம-லுண்ணுங்கா
னீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தாம்
பேருரைக்கிற் போமேபிணி.

பசும்பாலே யுண்போமன்றி மேதிப்பாலேகினவிலும்நினையோம் எண்ணெய்யிட்டுக்கொள்ளில் வெந்நீரில் ஸ்நானம்செய்வோம் இரதிக்கொப்பாகிய யிளம்பருவ மின்னார்கள் யிலவசத்திற் சந்தித்தாலும் பகலில் புணர்ச்சிசெய்யமாட்டோம். பகலில் நித்திரையும் செய்யமாட்டோம். தன்வயதுக்கு மேற்பட்ட மாதரையும் இளம்வெய்யலேயும் யிச்சிக்கமாட்டோம். மலஜலங்களேயடக்கமாட்டோம். இந்திரியத்தை யதிகமாய்விடுக்கமாட்டோம். யெப்பொழுதும் இடதுகையைக்கீழாகவைத்து சயனிப்போம். மூலரோகத்தையுண்டுபண்ணும் பதார்த்தங்களே புசிக்கமாட்டோம் அமுதத்திற் கொப்பாயிருந்தாலும் நேற்றையகரியைப் புசிக்கமாட்டோம், பசித்தாலல்லது சாப்பிடமாட்டோம்,

ஒருதினத்திற்கு இரண்டு முறையேயன்றி மூன்றுமுறைபுசிக்கமாட்டோம், புசித்தவுடன் நித்திரைசெய்வது நன்மையென்று சயனசாஸ்திரத்தில்சொல்லியிருந்தாலும்அப்படிபகலில்நித்திரைசெய்யமாட்டோம், பெண்களேமாதத்திற்கு ஒரேமுறை புணர்வோம் மிகுந்ததாகமாயினும் போஜனம்செய்த முடிவில் தான் ஜலமருந்துவோம், கருணேக்கிழங்குதவிர மற்றகிழங்குகளே புசி

யோம்வாழயின் இளம்பிஞ்சொழிய முற்றியகாய் தின்னமாட்டோம் அன்னம் புசித்தவுடன்ஒருநடையாக அரையேஅரிக்கால் நாழிகைஉலாவினுலொழிய எத்தொழிற்கும் புகமாட்டோம்,

ஆறுமாதத்திற் கொருமுறை வாந்தியாகும்படியாயும்மருந் துண்போம் ஒன்றரை மாதத்திற் கொருமுறை மூக்கில் நசியம் செய்துக்கொள்வோம்,மாதத்திற்குநான்குமுறைக்ஷவரஞ்செய்துக்கொள்ளுவோம், நான்குதினத்திற்கொருமுறைஅப்பியங்கஸ்நானம் செய்வோம் மூன்றுநாட்கொருமுறை கண்களுக்கு மையிடுவோம், கஸ்தூரிமுதலிய வாசனை திரவியங்களையும்புட்பங்களையும் ஈரொத்திரியில் முகரமாட்டோம்,

தூரஸ்திரீ நடக்கும்போது பறக்கும் தூசியும், ஆடு கழுதை துடைப்பம் இவைகளாலுண்டாகும் தூசியும் மேலேபடும்படிநெருங்கமாட்டோம், இராவில் தீபநிழலில் மனிதர்நிழலில் விருக்ஷநிழலிலும் தங்கமாட்டோம் போஜனம் ஜீரணமானபிறகுதான்புணர்வோம் மலஜலம் அழுக்காடைசீப்பிட்டுவாருதல் இவைகளைமாலைக்காலத்தில் நீக்குவோம் தன்னுலாதரிக்கும் பசுவையும்தெய்வத்தையும் பிதுர்களையும் ஆசாரியரையும் மாலைக்காலத்தில் பூசிப்போம் நகச்செலமும் சிகைச்செலமும் தெரிக்குமிடத்தில் நெருங்கோம் ஆதலால் நோயைமுன்குறிப்பிட்டுபின்னுல்துடரும் எமனுக்கு நாமிருக்குமிடத்தில் என்னவேலையிருக்கிறது ஒன்றுமில்லையே என்று 18-சித்தர்களில் மருத்துவம் பொருந்திய தேரையாருளிய ஆயுர்வேத விதிப்படி யெழுதியதென்றறிக.

மலசலத்தை அடக்காமலும் விந்துவை அதிகமாகவிடமாலும் உண்ணுமிடத்துநீரைக்காய்ச்சி மோரைவிளாவிநெய்யை யுருக்கி உண்ணலும் ஆகிய இத்தன்மை யுள்ளவர்களின் நாமத்தை யுச்சரிப்பவர்கட்கும் பிணிவிலகும்.

என்று கூறியிருக்கின்றபடி எமராஜனுக்கு நம்மைப்பற்றிய வேலையின்றி திருவருள்சகாயத்தையடைவோம்இதுவேதாதிகள் சம்மதமான பிரமாணம் இவ்வரிய விஷயங்களைத் தவறுகக்கொள்ளுவோர் நரகவேதனையடைவரென்பதை நாம் கூறவேண்டியது அனுவசியமாம்.

அன்றி இவ்விதியை தேகஉற்பவம் முதல்மரணாந்தமாயுள்ளரோய் நோயினிலக்கண முதலியவற்றைக் கூறவேண்டுவ தனுவஸ்யமும் அளப்பரியசாஸ்திர வாசமுள்ள தாதலாலும் அதை நிறுத்தி பரமசாதனமாயுள்ள பிரேதசென்ம மடைவாரைப்பற்றிக் கூறத்தொடங்குகின்றேன்.

---

## பிரேதஜன்மமடைவோர்.

பூர்வஜன்மத்தில் மகாபாபம் செய்தவனே பிரேத சென்மமடைவான் ஒருவன் கிணறும்தடவாவியும் குளமும் பூஞ்சோலையும் தண்ணீர்ப்பந்தலும் சத்திரமும் தேவாலயமும் உண்டாக்கிப் பலருக்கும் உபயோகமாய்த் தருமம்செய்ய அவனுடைய குலத்தில்தோன்றினவன்பின்பு அவற்றைவிலைக்குவிற்பானாயின் அவன் மரித்தவுடனே பிரேதசன்மம் அடைவன் செய்தவன்தானே அவற்றைவிற்பானேல்அவனும்பிரேதசன்மம் பெறுவான்.

பிறர்பூமியை அபகரித்தவனும் கிராமத்தின் எல்லையையும் பூங்காவின் எல்லையையும் ஆரணியத்தின் எல்லையையும் புரட்டி தன்னிலத்தோடு அந்நிலத்தைச் சேர்ந்தவனும் குளத்தைதூர்த்துநிலம் சேர்த்தவனும் சண்டாளனால் அடிப்பட்டிறந்தவனும் சலத்தில்மாய்ந்தவனும் பாம்பேனும் நாயேனும் கடித்துமரித்தவனும் இடிவிழுந்துமாண்டவனும் நெருப்பில் துஞ்சினவனும் மாடுமுட்டிமரித்தவனும் கழுத்தில் சுருக்கிட்டு நான்றுமாண்டவனும் பாஷாணந்தின்று உயிர்துரந்தவனுங் ஆயுதத்தால் மாய்ந்தவனும்சமஸ்காரம்செய்யத் தன்குலத்தில் ஒருவனும் இல்லாமல் இறந்தவனும் தேசாந்திரங்களில் ஒருவனும் அறியாமல் துஞ்சினவனும் குஷ்டமுதலிய கோரங்களால் இறந்தவனும் திருடனால்மாய்ந்தவனும் விருஷோற்சர்க்கம் செய்யாமல் மாண்டவனும் தாய்தந்தையருக்குச் சிரார்த்தம் செய்யாமலிருந்து இறந்தவனும் பிரேதசன்மம்அடைவன்.

இறந்த பிராமணனுடைய சமஸ்காரத்தின்பொருட்டுநெருப்பு எருமுட்டைவைக்கோல் அரிசிமுதலியவற்றைச் சுடுகாட்டுக்குச் சூத்திரன்கொண்டு செல்வனேல்இறந்த அப்பிராமணனும் கொண்டுபோகும் அச்சூத்திரனும் பிரேதசன்மமடைவார்இறந்த

சூத்திரனுடைய சமஸ்காரத்தின்பொருட்டுமேற்சொல்லியநெரு ப்புமுதலியவற்றைப் பிராமணன்கொண்டு செல்வனேல் இறந்த அச்சூத்திரனுங் கொண்டுபோகும் அப்பிராமணனும் பிரேதசன் மமடைவர்.

பருவதத்தினின்று விழுந்துமரித்தவனும் சுவரிடிந்துவிழுந் து இறந்தவனும் கட்டிலிலே படுத்திருந்தபடியே துஞ்சினவனும் மேல்வீட்டில் உயிர்நீத்தவனும் இராமகிருஷ்ணாதித் திருநாமங்க ளைஉச்சரியாமல் மாய்ந்தவனும் ரசஸ்வலைப்பெண் சண்டாளன் முதலியோரைத்தீண்டி ஸ்நானஞ்செய்யாமல் சூதகத்தில் இறந் தவனும் ரசஸ்வலையா யிருக்கும்போது மரித்தவளும் பிரேதசன் மமடைவர்,

தாய் மனைவி பெண் மருமகள் முதலானவர்களுடைய சரீர தோஷத்தைக் கண்ணுற்பாராமலே பிறர்வார்த்தையைக் கேட்டு அவர்களைச்சாதிப் பிரஷ்டஞ்செய்பவனும் மனுநூலுக்கு விரோத மாய்த் தீர்மானம் செய்பவனும் சினேகிதனுக்குத் துரோகம் செ ய்பவனும் பிராமணரையும் கோக்களையும் கொல்பவனும் கட்கு டிப்பவனும்குருபத்தினியைக்கூடுபவனும்வெண்பட்டையும்சொர் ன்னத்தையும் திருடுபவனும் பிரேதசன்மமடைவர் பிரேதசன்ம மடைந்தவரெல்லாரும் பாலைவனத்தில் எப்போதும்சஞ்சரித்து வருந்துவர் என்பதாம்.

மரிக்குங்காலத்தில் சீவனைக்கவருவதற்குகாலன் நியமிக்கப் பட்டிருக்கிறான். சிவரதுபலவிதமான தோஷங்களால் அச்சீவர் ஆயுட்குறைந்து மாய்கின்றனர், மரித்தவீட்டில் போஜனஞ்செய் கின்றவனும் பிறன்மனைவியரைப்புணர இச்சிக்கின்றவனும் தன க்கு தகாத இழிதொழிலைப் புரிகின்றவனும் வாணாளழிப்பவரும் இகபரத்திற்கு உறுதியாய் நல்வினைச்செய்யாதவனும் பெரியோ ர்களைப் பூசியாதவனும் தூய்மையில்லாதவனும் தெய்வபக்தியில் லாதவனும் பாபங்களையே செய்கின்றவனும் எமலோகத்தில்எப் போதும் நரகவாசஞ்செய்வர்.

பிறன்கேடு சூழ்கின்றவனும் பொய்சொல்லுகின்றவனும் சீவகருணையில்லாதவனும் சாஸ்திரப்படி நடவாதனும் தனக்குரி யகருமத்தைத் தவிர்த்துப்பிறனுக்குரியகருமத்தைப் புரிகின்ற வனும் எமலோகத்தில் வாதனைப்படுவர்.

புண்ணியதீர்த்த மாடாதநாளும் ஜபஓமங்கள் செய்யாததிவசமும் - தேவதாராதனம் செய்யாததினமும் புனிதரை வழிபாடியற்றுதபகலும்-சாஸ்திரமுணராதநாளும் வீணாளேயாகும்.

சூத்திரமரபில் பிறந்தவன் பிராமணரேதெய்வமென்றுநினைத்துப்பத்திசைசெய்து அவரிட்டதொழில்புரிந்து தாசனாய் ஒழுகுவனேல் அச்சூத்திரன் நற்கதியடைவன்.

## தேகஸ்திதியும்

### புண்ணிய கிருத்தியங்களும்.

தேகமோ நிச்சயமற்றது-நிராதாரமாயுள்ளது - சுக்கிலசோணிதங்களால் உண்டாகியது, அன்னபானாதிகளால் விருத்தியடைவது-காலையில் உண்டஅன்னம் சாயங்காலம் நசிக்கும்-உடனேபசிக்கும் மீண்டும் உண்ணாவிடின் மெய்குலையும்-ஆதலால் சரீரம் அநித்தியமென்றும் அதுகருமத்தால் வருவதென்றும் எண்ணிசன்ம தடையாமையின் பொருட்டு நற்கருமம் செய்தல் வேண்டும்.

கருமத்தால் வந்ததேகத்தை யாருடையதெனலாம். அதனை வீணேசுமந்துமெலிகின்ற சீவனதுஎனலாமா - அன்னவஸ்திரங் கொடுக்கும்தலைவனது எனலாமா-கருப்பமுண்டு பண்ணும் தந்தையினதுஎனலாமா-பத்துமாதம் சுமந்துபெற்றதாயினது எனலாமா-தாயைபெற்றவனாகிய மாதாமகனதுஎனலாமா- பிதாமகனது எனலாமாவிலைகொடுத்து அடிமைகொண்டவனது எனலாமா-சாம்பர்செய்யும் அக்கினியினது எனலாமா-அல்லதுஈர்த்து அயிலும்நரியினது எனலாமா-சீவன்போயினபின்பு புழுவாகவும் விஷ்டையாகவும்சாம்பராகவும் அழியும் சரீரம் ஒருவரதும் அன்றென்னுமுற்றுறுதியை யாவரும் ஓர்ந்து சரீரத்தில் ஆசைவைக்காமல் பகவத் பாகவதாசாரிய கைங்கரியங்களைப் புரிதல் வேண்டும்.

பாபங்கள் மனோவாக்குக் காயங்களால்செய்யப்படுகின்றன அதிகபாபஞ்செய்தசீவன்நாய்நரிமுதலிய இழிந்தசன்மமடைவன் அதிகம்செய்யாதவன் பூர்வசன்மமேபெறுவான்சீவன் கருப்பவா

சஞ் செய்யுங்காலை தாயினுடைய மலமூத்திராதிகளாலே அதிகம் துன்புறுவான் இறத்தலினும்பிறத்தலில்உளதாயதுன்பத்தையும் கருமகதியையும் எண்ணிநல்லாற்றில் ஒழுகுதல்வேண்டும். தாய் வயிற்றினின்று பிறந்தவன்பாலியத்தில் வுண்டல்விளையாட்டதா தலால்தனக்கு உறுதியாயதை அறிகின்றானிலன் யௌவனத்தில் மன்மதசேஷ்டையா லறிகின்றானிலன். முதுமைபருவத்தில்சோர்வாலும்கிலேசத்தாலும் ஒன்றையும் உணர்கின்றானிலன். இங்ஙனமே உறுதிபுணராமல் ஒழிவோரேபலருளர்.

கருமத்தாலேயேசீவன்பிறந்துபிறந்துஇறக்கின்றான்பிறந்து அதிகவயதிராமல் ஐந்துவருடத்திற்குள் மரித்தல்மகாபாபத்தினா லென்றறிக. கொடும்பாபம் செய்தவனே பிறந்து உடனேமரித்து மீண்டும் பிறந்துமரிக்கின்றான். அவன்பிறத்தலுக்கும் இறத்தலுக்கும் கணக்கிலது, பூர்வசன்மத்தில்நன்னெறியில்ஒழுகித்தானதருமங்கள் செய்தசேதனன் புவியில்தோன்றினால்நெடுங்காலம் மனைவிமக்களோடு சுகமாகவாழ்ந்து இறுதியில் நல்லுலகடைவான்.

---

# ஆன்னிகம்.

## லௌகிகசிந்தனை.

புத்திசாலியானவன் பிராமமுகூர்த்தத்தில் விழித்து எழுந்திருந்துமனதினாலே தருமத்தையும் அதனோடுவிரோதப்படாத அர்த்ததையும் சிந்திக்கவேண்டும் இவ்விரண்டிற்கும்யாதொரு விரோதமு முண்டாக்காத காமத்தையும்சிந்திக்கலாம் இவற்றை யிப்படிச் சிந்திப்பதினாலே இம்மைமறுமைகளின் பிரயோசனம் கெடாமலிருக்கும் தருமவிரோதிகளான அர்த்தகாமங்களை விட வேண்டும், தருமமானாலும் பின்பு சுகத்தையுண்டாக்கமாட்டா ததாயும் லோகவிரோதமாயு மிருக்குமானால் அதையும் விட வேண்டும்.

## காலைக்கடன்,

இப்படி சிந்தித்தெழுந்தபின் தன்னிடத்திற்குநைருதிமூலையிலேஅம்பபாயு மவ்வளதூரத்திற்கு அப்புறமேயோய் ஜலமலாதிகளைவிடவேண்டும், வீட்டிவிடத்தில் கால்கழுவுதல் முதலான

அசுத்தகாரியங்களைச் செய்யலாகாது தன்னிழல்மரத்துநிழல்பசு சூரியன் அக்கினிகாற்றுபெரியோர்முதலானவர்கள் ஆகியஇவை களுக்கு எதிரிலிருந்து மலமூத்திரங்களை விடலாகாது உழுதநில த்திலும்-பயிர்நடுவிலும்- பசுக்களிருக்குமிடத்திலும்-ஜனசமுகத் திலும் - வழியிலும்- ஆறுமுதலானவற்றின் கரைகளிலும்தண்ணி ரிலும் - மயானத்திலும்- இப்படிப்பட்ட இடங்களில் மலமூத்தி ராதிகளை விடலாகாது. அன்றி, யக்கியோபவித்திரத்தைக்காதில் சுற்றிக்கொண்டுவஸ்திரத்தினுல் தலையைமூடிக்கொண்டு பகலில் வடக்குமுகமாயும் இரவில் தெற்குமுகமாயுமிருந்து ஜலாதிகளை விடவேண்டும்.

இப்படிச்செய்ய சங்கடமிருக்குமாயின்தகுந்தபடி செய்யலா ம் அந்தஇடங்களில் நெடுமபோதிராமலும்-ஒன்றும்பேசாமலும் காரியந்தீர்ந்தவுடனே செத்தைகளினுலே அவ்விடத்தைமறை த்துவைவேண்டும். பின்பு மண்ணினுல் அசித்தத்தின் நாற்றம் ஒழியும்படியான விதஞ்செய்தல்வேண்டும்.

பின்னர் சுத்தமாயும் அசுத்தமானசுத்தசம்பந்த மில்லாத தாய்குமிழி கிளம்பாததாயுமுள்ள ஜலத்தினுலேமும்முறை ஆச மனஞ்செய்து வாய்துடைத்தல் சிரசில்புரோட்சித்தல் இருதய முதலான அங்கங்களைத் தொடுதல் முதலிய செய்கைகளை விதிப் படிசெய்து, பின்பு அகமர்ஷண சூக்தமுதலான மந்திரங்களையு ச்சரித்துக்கொண்டே நீராடிச் சந்தியாவந்தன முதலான கிரியை களை, விதிப்படி அனுஷ்டிக்கவேண்டும்.

பின்பு மயிராற்றிக்கொண்டு அலங்கரித்தல்முதலானமங்கள வியாபாரங்களைச் செய்துக்கொண்டு தனக்கு விதித்திருக்கிறவ கையாய் திரவியசமாதானஞ் செய்யவேண்டும். சோமசம்ஸதை கள் அவிஸ்சம்ஸதைகள்-பாகசம்ஸதைகள் என்று சொல்லப்ப ட்ட யாகங்களெல்லாம் திரவியங்களைக்கொண்டே சாதிக்கவேண் டியதாகையால். பிராமணன் தனத்தைசம்பாதிக்கவேண்டும் நியா யவழியினுலே தனத்தைச் சம்பாதிக்கும் முயற்சிசெய்துக்கொ ண்டு மத்தியானமானவுடனே மறுபடிநீராடவேண்டும். எப்போ தும் நீராடுவதைக்குறித்துச் சொல்லுகிறேன்கேள், நதிகள் குள ங்கள் தேவதாதீர்த்தங்கள் இப்படிப்பட்ட ஜலங்களிலேநீராட வேண்டும். இவைகிடையாமற்போனுல் கிணற்றிலிருந்து தண்

ணீரை யெடுத்துக்கொண்டாகிலும் அதற்குச் சக்தியற்றபோது ஒரு பாத்திரத்திற்கொண்டுவந்தாகிலும் நீராடலாம். இப்படி நீராடினபின் பரிசுத்தமானவஸ்திரமுதலானவைகளைத் தரித்துக் கொண்டு தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் பிதூரர்களுக்கும் அவரவர்தீர்த்தத்தினலேவிதிப்படியேதர்ப்பனஞ்செய்யவேண்டும்

## பிதுர்தர்ப்பணம்.

பிதுரர்கள்-பிதாமகர்- பிரபிதாமகர்-மாதாமகர்- மாதுருபிதாமகர்-மாதுரு பிறபிதாமகர் என்னும் இவர்களுக்கும் தர்ப்பணஞ்செய்யவேண்டும் காமியாய்மாதாமாதாவாகிய அவளுடைய தாய் குருபத்தி-குரு-அம்மான் முதலானவர்கள் இஷ்டன், அரசன் இவர்களுக்குத் திருப்தியுண்டாகும்படி தர்ப்பணஞ்செய்யலாம் அப்போது சபிக்கவேண்டிய தென்னெனில்,

## சிந்தனை.

தேவ-அசுர-யட்ச - நாக-கந்திருவ - ராட்சச - பிரசகுஹய்ய-சித்த - சூச்மாண்டவிருக்ஷாதிகளும் ஜலம்-பூமி-காற்று இவைகளைப்பற்றிய செந்துக்களும் என்னால் கொடுக்கப்படும் இந்தத் தண்ணீரால் திருப்தியடையவேண்டும்.

நாகங்களில் பலவாதனைகளி லிருக்கிறவர்களுக்கும் சோர்வு நீக்கும்பொருட்டு இத்தண்ணீரை யான் இப்போது விடுகின்றேன்.

எனக்குப்பந்துக்களாயிருப்பவர்களுக்கும்- பந்துவாகாதவதர்களுக்கும்-சன்மாந்தரத்தில்பந்துக்களாயிருந்தவர்களுக்கும்உயிர்களுக்கும்நான்விடுகிறேன் இந்தஎள்ளுந் தண்ணீரும் சந்தோஷகரத்தோடு திருப்தியுண்டாகக் கடவன என்றுசொல்லி தர்ப்பணஞ்செய்யவேண்டியது.

## சூரியார்க்கம்.

இப்படி தர்ப்பணஞ்செய்வதனல்சகலலோகத்துக்கும் பிரீதியுண்டாகும். அதனல் மகா புண்ணியங்கிடைக்கும் இப்படி மன

சாட்சியில் சந்தோஷகரத்தோடு சிரத்தையுடனே காமிய தர்ப்ப ணஞ்செய்து, பின்பு மத்தியான்னகஞ்செய்து சூரியபகவானெதி ரிலே நின்று சூரியனை நோக்கி.

சிந்தனை.

வேதங்களினாலே பிரகாசித்துக்கொண்டு லோகசிரு ஷ்டி கர்த்தாவாய், மகாசுத்தியுள்ளவராய் கர்மசாட்சி யாய் ஸ்ரீவிஷ்ணு தேஜோமயமாய் விளங்குகிற சூரிய பகவானுக்கு நமஸ்காரம். என்றுசொல்லிச் சூரியா ர்க்கியம் விடவேண்டும்.

---

## வைசுவதேவபூதபலி.

பின்பு தனது கிரகத்திலிருக்கிற தேவதாவிம்பத்திற்குத்திரு மஞ்சனம் கந்தபுட்ப தீபதூபாதிகள் நைவேத்தியம்முதலானஉப சாரங்களால் ஆராதனைசெய்யவேண்டும். இப்படிதேவாராதனஞ் செய்தபின்பு பிரமாகுதிமுதலான வைசுவதேவஞ்செய்து கிரகங் கள்காசியபர் அனுமதிகளுக்கு அன்னபலியிட்டு அதன்மிகுதியை பிருத்து வீபற்கனியர்களுக்காக ஔபாசன சமீபத்திலிடவேண் டியது. பின்புகிருகத்தின் துவாரத்தில் தாதாவிதாதாக்களுக்கும் நடுவில்பிரமாவுக்கும் நான்குதிசைகளில் இந்திரன், யமன், வரு ணன், சந்திரன் என்னும் நான்கு திசைத்தேவர்களுக்கும், சகல திசைகளிலும் வாயுவுக்கும், பிரமா சூரியன் இவர்களுக்கும் வட கிழக்கில் தன்வந்திரிக்கும் அன்னபலி யிடவேண்டும்,

அதன்பின் அன்னத்தையெடுத்து இருதயநிலமையோடுசுத் தமான பூமியிலே சகலமான பூதங்களுக்காகப்போட்டு இப்படிச் சொல்லவேண்டும்.

சிந்தனை.

தேவதைகள்-மனிதர்கள்-மிருகங்கள் - பறவைகள்- சித்தர்-யட்சர்-நாகர்-தயித்தியர்- பிரேதங்கள்-மரங்க ள்எறும்புகள்-பூச்சிகள் புழுக்கள் முதலானசர்வபிரா ணிகளுள்ளும் யார் என்னாலேகொடுக்கப்படும்அன்ன த்தை இச்சிக்கிறார்களோ அவர்களுக்கும், எவர்களுக்

குத் தாய் தந்தை சுற்றத்தார் யாருமில்லாமலும்அன்னங்கிடையாமலுமிருக்கிறதோ அவர்களுக்கும் இதோ இவ்விடத்தில் அன்னத்தைக் கொடுக்கிறேன் இதனல் அவர்கள் திருப்தியடைந்து சுகமாய்சந்தோஷத்தோடியிருக்கக் கடவார்கள்.

சகல பூதங்களும் நானும் இந்த அன்னமும்மற்ற எல்லாம்ஈஸ்வரரூபமேயல்லாது வேறல்லாமையாலே சகலபூசங்களுக்கும் சரிசமான இந்த அன்னத்தைஅவர்கள்சவுக்கியத்திற்காக இங்கே இடுகிறேன் இது எல்லாவற்றிற்குந் திருப்தியாகக் கடவது.

எட்டுவிதமானதேவகணங்களும் ஒருவிதமானமனுஷிய கணமும் ஐந்துவிதமான திரியக்குக்கணமுமான பதினன்கு பூதகணங்களிலுஞ் சேர்ந்த சகல பிராணிகளுக்கும் திருப்திக்காக இந்த அன்னத்தை இங்கேஇடுகிறேன் இதனல் அவர்களெல்லாஞ்சந்தோஷமடையக் கடவர். என்று சொல்லித்தரையில் அன்னத்தையிட வேண்டும்.

இப்பால் நாய்-சண்டாளர்-பட்சிஇவைகளுக்காகவும் பதிதர்களானுலும் புத்திரனில்லாமலிருக்கிறவர்யாருண்டோ அவர்களுக்காகவும் நிலத்தில் அன்னத்தைப்போடவேண்டும்.

## அதிதிகளை உபசரிக்கை.

இப்படியெல்லாஞ் செய்தபின் நாலுநாழிகையாவது மேலாவது அதிதிகளுக்காக எதிர்பார்த்திருந்து அதிதிகளைநல்வரவு விஞவுதல் முதலானவைகளினலேயும் காலலம்பத்தண்ணீர் கொடுப்பதினலேயும் ஆசனங்கொடுத்து உட்காரவைப்பதினலேயும் அன்போடு அன்னமிடுவதனலேயும் அவர்கள்கேட்டகேள்விகளுக்குபதில் சொல்லுவதனலேயும் போகும்போது பின்சென்றுவழி விடுவதனலேயும் சந்தோஷப்படுத்தவேண்டும்.

## போஜனஞ்செய்யுமுறை.

குலமும் பெயருந் தெரியாதவனய் வேரிடத்திலிருந்துவந்தவனய்நியதமாயோரூரிலே வாசஞ்செய்தவனயிருக்கிறஅதிதியை

நன்ருய்பூசிக்கவேண்டும். அன்னியதேசத்திலிருந்துவந்தவனைத் தனக்குயாதோர் குறவுமில்லாதவனைத்தரித்திரனையிருந்துபோசனஞ்செய்யாமல் தான்சாப்பிடுகிறவன்நரகமடைவான்

இப்படியாகவந்தஅதிதியை குலகோத்திரசாகாதிகளைவிசாரியாமல் சதுர்முகனைப்போல பாவித்துப் பூசிக்கவேண்டும் மேலும் சுதேசியாய்ப் பஞ்சயக்கியபாராயணனைக்குலகோத்திர ஆசாரங்களிலே தனக்கு நன்ருய்த் தெரிந்தவனையிருக்கின்ற ஒருவனேயாகிலும் பிதுரர்களுக்காகச் சந்தோஷமாய்ப் போசனஞ் செய்விக்கவேண்டும்.

சந்நியாசி பிரமசாரிகளுக்கும் மும்மூன்று கவளங்களுக்குக் குறையாமல் சாதிக்கவேண்டும்விபவமிருந்தால் தடையில்லாமல் எவ்வளவாகிலும் யாவருக்கும் வேண்டியமட்டும் கொடுக்கலாம் இப்படியாக முன்சொன்னவர்களுள்பட நான்குவகைப்பட்ட அதிதிகளையும்பூசிக்கிறவன் அதிகடினமானபாதகங்களினின்றும்நீங்குவான் அதிதியானவன் எவன் கிருகத்துக்குவந்து தன்னாசைமுறிந்துபோகிருனே அந்தக்கிரகஸ்தனுடைய புண்ணியங்களை யெல்லாம் அவ்வதிதி எடுத்துக்கொண்டு தன்பாவங்களை அவனுக்கு கொடுத்து விட்டுப்போகிருன்.

தாதாவும்-பிரமனும்- இந்திரனும்-வசுக்களும் - அக்கினியும் சூரியனும் ஆகிய இவர்கள் அதிதியினிடத்திற் பிரவேசித்து கிரகஸ்தன்கொடுக்கின்ற அன்னத்தைப் புசிக்கிருர்கள்; ஆதலாலே அதிதிபூசைசெய்ய முயலவேண்டும்.

எவன் அதிதியைவிட்டு உண்கிருனே அவன் அன்னத்தை யுண்கிருனில்லை, மற்றதையெனில் பாவத்தையேயுண்கிருன்.

பின்பு புத்தகம்போந்த கன்னிகளையும் கருப்பவதியையுங் கிழவர்களையும் பாலகரை முந்திப்புசிக்கும்படி செய்து பிந்தித்தான்புசிக்கவேண்டும் இவர்களெல்லாம்உண்ணுமலிருக்கதான் முந்தியுண்கிறவன் இங்கேபாவத்தையேயுண்டு மரணமடைந்த பின்நரகத்துச்சுருப்போய்ச் சிலேக்ஷ்மத்தை யுண்பான்.

நீராடாமல்உண்பவன் மலத்தையுண்கிருன் செபஞ்செய்யாமல் உண்கிறவன் சிரத்தங்களை உண்கிருன் வைசுவதேவாதிசுத்தியில்லாம லுண்கிறவன் மூத்திரத்தை யுண்கிருன் பாலர்முதல்

உண்ணுமுன் உண்கிறவன் மிருகமலத்தை யுண்கிறான் ஓமஞ் செய்யாமற் புசிக்கிறவன் கிரிகளைப்புசிக்கிறான் அதிதிகளுக்குக் கொடாமற் புசிக்கிறன் விஷத்தைப்புசிக்கிறான்.

ஒற்றைவஸ்திரமுள்ளவனாகவும் ஈரமான கைகால்களுள்ளவனாகவும் புசிக்கலாகாது சுத்தியுள்ளவனாகவும் சந்தோஷமுடையவனாகவுமிருந்து புசிக்கவேண்டும் கிழக்குமுகமாகவாகிலும் வடக்கு முகமாகவாகிலும் புசிக்கவேண்டும் மூலைக்கெதிராகப்புசிப்பதும் மனக்கவலையோடு புசிப்பதுங்கூடாது. மேலும்சிறந்ததும் இதமான அன்னத்தையே சுத்தநீர்த்தத்தினாலே புரோட்சித்துப்புசிக்கவேண்டும்.

அங்கயீனர் வியாதிபிடித்தவர் முதலானவர்கொண்டுவந்ததும் அருவருப்பாயிருப்பதும் நன்றாய்ச்சாம்பாரஞ் சேர்த்துப்பாகஞ்செய்யப்படாததுமான அன்னத்தைப் புசிக்கலாகாது.

முக்காலி நாற்காலி முதலானவைகளின்மேல் வைத்திருக்கும்பாத்திரங்களிலேயும் அசுத்தமான தேசங்களிலேயும் சந்தி முதலான காலங்களிலேயும் நானாவித ஜனங்கள்சேர்ந்தசங்கத்திலேகியும்போசனஞ் செய்யலாகாது.

அக்கினிக்கும் பசித்திருக்கிறவர்களுக்கும் யோக்கியர்களுக்கும் இட்டுக்கோபதகாதிகளில்லாதவனாகிச் சிறந்ததும் சுத்தமுமான பாத்திரத்திலே பழையதல்லாத யோக்கியமான அன்னத்தை மந்திரங்களாலே மந்திரித்துப் போசனஞ்செய்யவேண்டும்.

கனிகள் கிழங்குகள் வற்றல்கள் நெல்லிவடகமுதலானவடகங்கள் இலட்டுமுதலானபணியாரங்கள்தவிரமற்றப்பழைய வுணவுகளையும் சாரமற்றவுணவுகளையும்ஒருபோதிலும்உண்ணலாகாது மேலும் விவேகமுள்ளவன் தேன்களைத்தவிர மற்றவுண்டமிகுந்தவைகளையு முண்ணலாகாது.

உண்கையில் மதுரமானவைகளை முதலிலும் புளிப்புஉப்புகளை இடையிலும் கைப்புகாரமுதலானவைகளைக்கடையிலும்உண்ணவேண்டும்அன்றிமுன்னே நீதவகைகளையும்புசிக்கவேண்டும் இப்படியுண்பதினாலேபலமும்ஆரோக்கியமும் குறையமாட்டாபோஜனாரம்பத்தில்அன்னத்தை நிந்தைசெய்யாமலும் மவுனத்தோடு

பிராணுதி ஐந்தாகுதிகளை வெகுநியமமாய்ச்செய்யவேண்டும்இவ்விதமாக நன்ருய்சாப்பிட்டு போஜனம்பண்ணிக் கைகால்களை அடிவரையிலும் நன்ருய்ச்சுத்தி செய்துகொண்டு மறுபடி யாசமனஞ்செய்து, சொஸ்தமும்சாந்தமுமான மனதோடுகிழக்கு முகமாய் ஆசனத்தின்மே லுட்கார்ந்து இஷ்டமானதேவதைகளைச்சிந்திக்கவேண்டும். அன்றியும் அக்கினியாவது காற்றினுலேவளர்க்கப்பட்டு ஆகாசத்தினுல் இடங்கொடுக்கப்பெற்று, அன்னத்தைச் சீரணஞ்செய்து என்தேகத்தை திருப்திப்படுத்த அதனுல் உனக்குச்சுகமுண்டாகக்கடவது. அன்னமானது சீரணித்துஎன்உடற்கூறுன பிருதிவி அப்பு தேயு வாயுவுக்கு பலமுண்டாக்க அதனுலேஎனக்குக் குறைவற்ற சுகமுண்டாகக்கடவது. இவ்வன்னமானது என்னுடைய பிராணம்-அபானம்-வியானம்-உதானம் ஸமானம்என்கிறபஞ்சப்பிராணங்களுக்கும் புஷ்டியுண்டாக்க எனக்கு இடையூறில்லாதசுகமுண்டாகக்கடவது. உதராக்கினியும்வடவாக்கினியும்நான் உண்ணஅன்னத்தையெல்லாஞ்சீரணஞ்செய்து அவ்வன்னத்தின் திரியினுண்டானசுகத்தையெனக்கு உண்டாகக்கடவது ஸ்ரீவிஷ்ணுஒருவரே சகல இந்திரியர்களுக்குந் தேகங்களுக்கும் ஆத்துமாவாகி ஞானசத்திபத ஐசுவரிய வீரிலதேஜசயென்கிறயாதொரு சத்தியமுண்டோ அந்தச் சத்தியினுலே நான்வுண்ட அன்னமானது எனக்கு ஆரோக்கிய முண்டாகும்படி சீரணமாகக்கடவது என்று உச்சரித்து வயிற்றைத்தடவிப்பின்எழுந்திருந்து ஆயாசமுண்டாக்கமாட்டாத காரியங்களைச் சோம்பலின்றிச் செய்யலாம்.

ஆன்னிகம் முற்றிற்று.

# சிரார்த்தவிதி.

## சூசனம்.

ஒவ்வொருவரும் உலகிற் பிறந்தபோதே நீட்டிருத்தலாலும் பின்னர் பிறந்தோருக்கும் மனைமகவாதியபந்தங்களின் ஜனனமரண துக்கங்களுக் குடன்பாடிருப்பதாலும் அயுபந்துஜனசகிதமாகப்புண்ணியபாபங்களுக்கேற்ற நரகமோக்ஷ சங்கற்பமுண்டாதலாலும், ஆன்றோரால்.

"புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்
பல்விருக்ஷக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேனெம்பெருமான்"

"இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ
யாதுவரு மோவறிகிலேன்"

எனக் கூறியுள்ளமையில் பிறவிகளுள்ளதென்றும் அப்பிறவிகள்தோறும் வாக்காலும் மனதாலுங்கரசரணாதிகளாலுஞ்செய்யும் வினைக்கிடான துக்கங்களை யேற்று மறுசனனத்திலனுபவிக்க யேதுவாதலாலும், இதுகாரணமாகமுன் பிறப்பிலிருந்தபந்துக்கள் இறந்தாரது ஆன்மசுகத்தித்திற்காக பல கிரியைகள் செய்யப்படுவதுபோல ஒவ்வொருவரும் தத்தம் மூதாதைகளினது ஆன்மசுகத்தின்பொருட்டும், தம் வாழ்க்கைக் காலத்திலடைந்த பிதுரர்களைப்பற்றியும். இனி மரணமடைவாரது சுகத்தைவிரும்பியும். தமது மரணத்தில் நல்லுலகைப் பெறவும் விருஷோற்சனம் முதலியகிரியைகளை நடத்தவேணுமென்று எல்லா ஸ்மிருதி புராண-ஆகமவேதங்களிலும் கூறப்பட்டும் மேலோர்களாலவ்வாறு அனுஷ்டிக்கப்படும் அனுஷ்டிக்கப்படுதற்கு யோக்கியதையாயுஞ் சிறப்புற்றபுருஷார்த்தமாயுமுள்ள சந்தியாதியசிரார்த்தகிரியாகும் ஆகலாலே இதைச் (சிர அர்த்தம்—தலைமையானபொருள்) என்றுகூறப்பட்டது.

இது எல்லா ஆசிரமிகளும், எல்லாபந்துக்களுந் தம்பொருட்டும், பிறர்பொருட்டுஞ் செய்துஞ்செய்வித்துஞ் செயப்படுவனவாயுமுள்ள பலதிறத்தினவாயிருத்தலால், சந்திக்கிரியை-கிரகநியதி-நல்லொழுக்கம்-பிணிவாராமை ஆன்னிகம் முதலியவைகளைச் சொல்லிபின்னர் இதனைக் கூறத்தொடங்கி முன்னர் சங்கற்ப விதூர்வர்க்க தேச கால கிரியா அதிகார திரவியவர்க்கங்களை ஏகதேசமாகக் கூறுகின்றேன்.

---

## சிரார்த்த காலம்.

ஒருவன் சிரத்தையோடு சிரார்த்தஞ் செய்வதனாலே பிரமா இந்திரன் ருத்திரன் அசுவனிதேவர் சூரியன் அக்கினிவசுக்கள் வாயுவிசுவதேவர்பிதுர்க்கள் ரிஷிகள் மனிதர் மிருகங்கள் பட்சிகள் சர்பங்கள்முதலான வூருகிறஜெந்துக்கள் மற்றுமுண்டானபூதங்கள் ஆகிய சகலத்தையும் சந்தோஷப்படுத்துகிறான்.

மாதந்தோறும் அமரபட்சத்திலும் அமாவாசையிலும் அஷ்டகைகளிலும் சிரார்த்தஞ் செய்யவேண்டும்! காமியமான காலத்தைச் சொல்லுகிறேன் சிரார்த்தத்திற்கு யோக்கியமான வஸ்துகிடைத்தபோதும் யோக்கியமான பிராமணன் நேர்ந்தபோதும்வியதீபாதத்திலும் அயனத்திலும் விஷயத்திலும் சந்திரசூரியகிரணங்களிலும் சூரியன்பன்னிரண்டு ராசிகளிற் பிரவேசிக்கிற காலங்களிலும் நட்க்ஷத்திரபீடையும்கிரகபீடையுமுண்டாக்குங்காலங்களிலும் கெட்டகினவுகண்டபொழுதிலும் புதியதாய்த்தானியத்தைக் கொண்டுவந்தபோதும் காமியசிரார்த்தங்கள் செய்யலாம்.

அமாவாசையானது அனுடம் விசாகம் சுவாதி இந்த நட்சத்திரங்களோடு கூடுமேயானல் அப்போதுசெய்கிற சிரார்த்தம்பிதுர்களுக்குஎட்டுவருஷத் துத்திருப்தியையுண்டாக்கும்திருவாதிரை புனர்பூசம் இந்தநட்சத்திரங்களோடு கூடிய அமாவாசையிற் செய்த சிரார்த்தத்தினாலும் பிதுர்க்கள்பன்னிரண்டுவருஷம் திருப்தியைப்பெறுவார்கள், அவிட்டம்சதயம்பூரட்டாதிஇவைகளோடு கூடின அமாவாசை தேவர்களுக்குங்கிடையாதபுண்ணியகாலம் இந்த ஒன்பது நட்சத்திரங்களிலும் அமாவாசை கூடினபோது

சிரார்த்தஞ் செய்வதனாலே பிதூர்களுக்குவிசேஷமான திருப்தியுண்டாகும்.

வைகாசிமாதத்தில் சுக்கிலபட்சதிரிதியையும் கார்த்திகைமாதத்தில் சுக்கிலபட்ச நவமியும் புரட்டாசிமாதத்தில் கிருஷ்ணபட்சத் திரயோதசியும் மாசிமாதத்து அமாவாசையுமாகிய இந்த நான்குதிதிகளும் யுகாதிகளென்றும் அளவற்றபுண்ணியகாலமென்றும் புராணங்களினாலே சொல்லப்பட்டிருக்கின்றன. இவைகளிலும் சந்திர சூரியகிரணங்களிலும் மூன்று அக்ஷயகைகளிலும் இரண்டு அயனங்களிலும் எள்ளுடன்கூடிய தண்ணீரையாகிலும் பிதூர்க்களையுத்தேசித்து ஒருவன்பக்தியோடு விடுவனாகில் அவன் ஆயிரம்வருஷம் சிரார்த்தஞ்செய்தபலனையடைவான். இதாகசியமானசங்கதியென்று பிதூர்க்கள் சொல்லுகிறார்கள். மாசிமாதத்து அமாவாசைஎப்போதாகிலும் சதய நட்சத்திரத்தோடு கூடுமாயின் அதுபிதூர்களுக்குமகாதிருப்திக்கு ஹேதுவானகாலம் அற்பபுண்ணியமுள்ளமனிதருக்கு அதுகிடையாது இந்தக்காலத்திலேயேஅவிட்டம்சேர்ந்ததாகில் அப்போது அன்னமாவது அல்லது ஒருகைத்தண்ணீராவது பிதூர்க்களைக் குறித்துக் கொடுத்தவனுக்குப்பதினாயிரம்வருஷம் பிதூர்திருப்திசெய்த புண்ணியங் கிடைக்கும், அக்காலத்திலே பூரட்டாதிசேருமாகில் அதிற்செய்தசிரார்த்தத்தினாலேபிதூர்க்கள் திருப்தியடைந்து ஆயிரம் யுகமளவும் சந்தோஷமாகத்தூங்குவார்கள்.

கங்கை சத்துரு யமுனை விபாசை சரஸ்வதி கோமதிஎன்கிறநதிகளுக்கும் நைமிசம் என்கிற க்ஷேத்திரத்திற்கும் ஒருவன் சென்று ஸ்நானஞ்செய்து அன்போடு பிதூர்பூசைசெய்வானாகில் அவன் தன்பாவங்களையெல்லாம் போக்கிக்கொள்ளுகிறான் பிதூர்கள்நாம் எப்போ புரட்டாசிமாதத்தில் புத்திராதிகள்செய்தஅமரபட்சதிரயோதசி சிரார்த்தத்தினால் திருப்தி யடைந்து மாசியமாவாசையிலும் புத்திராதிபர்செய்த புண்ணிய தீர்த்தஜல தர்ப்பணங்களினாலும் திருப்தியடைவோமென்று பாடுகிறார்கள். மனிதருக்குப் பரிசுத்தமான பொருளும் மேன்மையான காலமும் சாஸ்திரங்களிற்சொல்லப்பட்ட விதியும் சற்குணமுள்ள பாத்திரமும் சிறந்த அன்பும் கூடுமாயின் சகலஇஷ்டங்களும் சித்திக்கும்.

எவன் திரவியவஞ்சனை செய்யாமல் நமக்குப்பிண்டங்களைப் போடத்தக்கவனே விபவமுண்டாகில் வஞ்சனையின்றிரத்தினம், வஸ்திரம், வாகனம்,வனம் மற்றுமுள்ளசகலபோகங்களையும்நமக்காக பிராமணருக்குத் தானஞ்செய்யும்படியானவனே அன்னம் போடுவதற்கு மாத்திரமே தகுதியான விபவமுடையவனாகில்இப்படிப்பட்ட காலங்களில் மிகுந்த அன்போடு நல்லபிராமணருக்கு அன்னமிடத்தக்கவனே அதற்குஞ்சக்தியில்லாமற் போனால்தனக்குஇயன்ற அளவுதானியத்தை யாகிலும் பிராமணருக்குஆமமாய்க்கொடுக்கவல்லவனே அல்லதுசிறிது தட்சணையாவதுகொடுக்கும்படியானவனே, அதற்குஞ் சக்தியீனனாய் நுனிகையினாலே சிலஎள்ளுகளையாவது ஒரு நல்லபிராமணனுக்கு நமஸ்கரித்துப் பக்தியோடு வணங்கிக்கொடுப்பனே இதுவுமிசையாதபோது எழெட்டு எள்ளுசளுடனேநமக்கு ஒருகைத் தண்ணீரையாவது பூமியில்விடமாட்டுவனே இதுவுமல்லாதபோது எங்கிருந்தாகிலும் பசுக்களுக்குத்தக்க வுணவைச்சம்பாதித்துநம்முடைய உகப்புக்காகச்சிரத்தையுடனே பசுக்களுக்குகொடுப்பானே ஒன்றுமில்லாதபோனால் காட்டுக்குப்போய்க்கைகளை நன்றாயுயரவெடுத்துக்கொண்டு சூரியன்முதலான லோகபாலகரைப் பார்த்து உரத்த சத்தத்துடனேஎனக்கு பிதுரர் சிரார்த்தஞ் செய்யத்தக்கதனமாவது மற்றெந்தப்பொருளாவது ஒன்றுமில்லை என்பிதுர்க்கள் திருப்தியடைய வேண்டுமென்பானே. பிதுரிச்சையொன்றுதவிர மற்றொன்று மெனக்கில்லையென்றும் இதோ என்னிரண்டு கைகளையும் வாயுவின் மார்க்கமான ஆகாசத்தில் தூக்கிவிட்டேன் என்று இவ்வசனங்களைப்படிப்பானே, அப்படிப்பட்ட புண்ணியவானும் புத்திமானுமான ஒருவன் நம்முடையகுலத்திற் பிறக்கவேண்டும் என்று பிதுர்க்கள் பாடியிருக்கிறார்கள் இப்படி பிதுர்க்கள் தனமுள்ளபோது இல்லாதபோதும் நடக்கவேண்டியமுறையைச் சொன்னவிதமாய் செய்பவன் பூரணமாகச் சிரார்த்தஞ்செய்தபலனை எப்போதும் அடைவான்.

---

# மாஹளய வைபவம்.

சிராத்தமென்பது வருடாந்த மாதாந்தத்தில் மரண
மடைந்தோர் நரகமெய்தாபடி சுகித்திருப்பதைக்
குறித்து தத்தஞ்சமயதெய்வத்தைக்கோறி
ச்செய்யும் எக்கியாதி கிரியையாம்.

## மாஹளய சிரார்த்தஞ் செய்யுங்காலம்.

வருஷருது புரட்டாசிமாத கிருஷ்ணபக்ஷ திரயோதசியில் தேன், பாயாசமிவைகளால் வேள்விசிரார்த்தஞ்செய்யவேண்டும் அதனால் பிதுரர்களுக்கு அக்ஷயமான திருப்தியுண்டாகிறது. தன் குலாச்சாரமாக முன்சொன்னபடி திரயோதசியில் அபராணகாலத்தில் நமக்குத் தேன் நெய் பாயாசம், இவைகளுடன்சிரார்த்தஞ்செய்பவன் புனறுஜனன மடைவானென்று பிதுர்கள் பேரவா அடைவரென்று வேதங்கூறுகிறது.

கிருஷ்ணபக்ஷ தசமிமுதல் சதுர்த்தசி நீங்கலாக அமாவாசைவரையிலுள்ள திதிகள் எப்படி மாதசிரார்த்தத்திற்குச்சிறந்தவையோ அதுபோல மற்றதிதிகள் சிறந்ததல்ல கலியுகத்தில் புலால்நீங்கலாகச் செய்யவேண்டுமென்று வியாக்யாதா நிர்ணயங்கோறுகின்றது.

இரட்டைத்திதி இரட்டைநக்ஷத்திரங்களில்மாஹளய சிரார்த்தஞ்செய்பவன் சர்வாபீஷ்டங்களையும் ஒற்றை திதி நக்ஷத்திரங்களில் செய்பவன் புத்திரசந்தானத்தையும் மிகுந்த கல்விப் பொருளையு மடைகின்றான்.

சிரார்த்தஞ் செய்வதற்குச் சுக்கிலபட்சத்தைவிட கிருஷ்ணபக்ஷமெப்படி விசேஷித்ததோ அவ்வாறே பகலில் முன்பாதியைவிட பின்பாதி யுசிதமானது

பூணூல் இடபாகமிட்டுக்கொண்டு வல்லிகைமறித்தும்கையில் பவுத்திரத்துடனும் செய்யத்தக்கதான இந்தப்பிதுர் சிரார்த்தத்தை மரணகாலம்வரையுஞ் செய்யவேண்டியது.

இரவிலும் இரண்டுசந்தியிலும் சூரிய உதயமாயுஞ்செய்கிற யாகம் நித்தியபாகமென்றுசொல்வதால் அவை இராக்கதருக் குரியது

முன்கூறிய விதிப்படி மாதாந்தரம் சிராத்தஞ் செய்வதற்கு சக்தியற்ருல் தீரு ஆண்டில்மருவும்ஏமந்துருது கிரீஷ்மருது இவைகளிலாவது வஞ்சமகாளக்கியத்திற்குப்பின்பு அதில்சேர்ந் தபிதுர்சிரார்த்தஞ் செய்யவேண்டியது.

பிதுர் சிரார்த்தத்தில் ஓமஞ்செய்வதைவிட்டு அக்கினியில்நிறைவேற்றலாகாது, கர்த்தாபத்தியுள்ள கிரகஸ்தனு யிருந்தால் அவன்வைதீக அக்கினியிலும் இல்லாவிட்டால் பிராமணனிடமும்செய்யவேண்டியது ஆகிதாஅக்கினியுள்ள கர்த்தாவானவன் மாதாந்தர சிரார்த்தத்தை கிருஷ்ணபக்ஷத்தில்அமாவாசை யல்லாதமற்றத் திதியில் செய்யக்கூடாது இறந்ததிதியில் செய்ய வேண்டியது சிரார்த்தத்தைமாத்திரமேயாம்.

கொஞ்சமேனுஞ் சக்தியில்லாதவன் ஸ்நானம்செய்து ஜலத்தினுல் பிதுர்களைக்குறித்து தருப்பணஞ்செய்வானுகில் நித்திய தருப்பணஞ்செய்தபலனை யடைகிறுன்.

## பிதுர்வர்க்கம்.

இறந்துபோனவர்களுள் பிதுர்களை வசுதேவராகவும்பிதாமகர்களை உருத்திரராகவும் பிரபிதாமகர்களை ஆதித்தியதேவர்களாகவும் மூன்றுவகுப்பாகச் செய்யப்பட்டு மேற்படிதேவர்கள் நாமத்தினுலேயே மரணமானவர்களுக்குச் சிரார்த்தம்செய்யவேண்டுமென மனுகூறுகின்றூர்.

சிரார்த்தஞ்செய்தவன் விகசத்தையும் அமிர்தத்தையு முட் கொள்ளவேண்டியது.

## தாயாதிகள்.

தன்முதல் ஐந்தாம் பாட்டன் வரையிலுமுள்ள ஏழுதலை முறைகட்குட்பட்ட பங்காளிகளாம்.

---

விகசம்-சிரார்த்தசேடம் (மீதி) அமிர்தம்-எக்கியசேடம் பிதுர்-இறந்தோர்.

## ஆசௌசம். (தீட்டு).

மரணத்தின் தீட்டு பங்காளிகளனைவருக்கும் பொதுவானபி றப்பில் தாய்தந்தையர்களுக்கு மாத்திரம் தொடக்கூடாததீட்டு, அதிலும் மாதாவுக்குமாத்திர மதிகம் தந்தைக்குப் பதினோராம் நாள் ஸ்நானத்தோடுதீட்டு நீங்கிவிட்டது.

காமமதிகரித்து வீரியத்தை வெளியில்விட்டவுடன் அவன்ஸ் நானஞ்செய்தால் சுத்தனவான் தனக்குப்பிறமனையில் பிள்ளைபிற ந்தால் மூன்றுநாள் தீட்டுண்டு.

சாபிண்டர்கள் பத்துதினத்திலும் சோதரர்கள் மூன்று தினத்திலும் தீட்சை நிவர்த்திசெய்துக் கொள்ளுகிறார்கள்.

இறந்துபோன ஆசிரியனுக்கு மாணாக்கன் திலதறப்பணஞ் செய்தால் குருவின் பங்காளிகளைப்போல் தானும் பத்துநாள்தீட் டிருக்கவேண்டும்.

தாயின்கெற்பத்தில் மூன்றுமாதமுதல் ஏழுமாதத்திற்குள் ளாகச் சிசு இறந்துபோனால் எத்தனைமாதத்தி லிறந்துபோகிற தோஅத்தனைமாதத்திற்கும் மாதத்திற்கொருநாளாக தீட்டிருக் கும். உதிரப்பாச்சலுள்ள மங்கைக்கு அவ்வுதிரப்பாச்சல் நின்ற வுடன்நாலாம்நாள் ஸ்நானஞ் செய்தால்பரிசுத்தமாவாள்.

மனிதர்கள் க்ஷெவரஞ் செய்கிறதற்குமுன் குழந்தையிறந் தால் ஒருநாள்தீட்டும் உபநயநகாலத்திற்குள் இறந்தால் மூன்று நாள்தீட்டுமுண்டு,

இரண்டுவயதுக்குள் குழந்தைபிறந்தால்அதைபுஷ்பம் மஞ் சள் முதலியவற்றால் அலங்கரித்து ஊருக்குவெளியில்பரிசுத்தஸ் தலத்தில் க்ஷேமிக்கவேண்டும்இந்தகுழந்தையை தகனம்பண்ண லாகாது திலதருபணமுஞ் செய்யலாகாது விசனமின்றி புதை த்துவிட்டு பங்காளிகளனைவரும் மூன்றுநாள் சூதகங்கார்க்கவேண் டியதவசியம்.

மூன்றுவருஷத்திற்குப்பின் குழந்தைமரணித்தால்அதற்கா க அந்திரவேள்வி செய்யவேண்டியதில்லைநாமகரணஞ்செய்தபின்

பாவது அதற்குரியபழம் பரப்பல் முதலிய கிரியைகள் பந்தினர் கூடிசெய்வது நலம்.

தன்னோடு வாசித்தவனுக்கு ஒருநாள் சூதகங்காக்கவேண்டியது சோதரர்களுக்கு இறப்பிலும் பிறப்பிலும் மூன்று நாள் வரையில் சூதகமுண்டு.

ஒரு பெண்ணை வதுவைக்கு நிச்சயார்த்தஞ்செய்து, விவாகம் செய்கிறதற்குமுன் இறந்துபோனால் யாருக்கு நிச்சையார்த்தஞ் செய்தார்களோ அவனுக்கும் அவன் குடும்பத்தாருக்கும் மூன்று நாள் சூதகமுண்டு. அப்பெண் தகப்பன்தாய் சுற்றத்திற்கும் மூன்றுநாள் சூதகமுண்டு இம்மூன்றுநாள்வரையும் மண்ணுப்பு மாமிசம் புணர்ச்சி இவைகளை நீக்கி நதிகளில் ஸ்நானஞ்செய்ய வேண்டியது.

## பிறப்பிற்கும் இறப்பிற்கும் உள்ளதீட்டு பங்காளித்தீட்டு.

சிசுவிற்குப் பல்முளைக்கும்பொழுது முளைத்தபின்பும்செளளஞ்செய்தபின்பும் இறந்துபோனால் பங்காளிகளனைவருக்குஞ் சூதகமுண்டு.

சாபிண்டர்களுக்கு இறந்த பத்துநாள்வரைக்குஞ் சூதகமுண்டு மறையோதி அக்கினிஹோத்திரஞ் செய்கிறவனுயிருந்தால் அவனுக்கு ஒருநாளு மோதினவனுக்கு மூன்றுநாளும் ஸ்மார்த்தாசாரமுள்ளவனுக்கு நாலுநாளும் இக்கருமாதியொன்று மில்லாதவனுக்குப் பத்துநாளுஞ் சூதகமென்று காண்க.

## தேசாந்திரத்தீட்டு.

இதுவரைக்கும் கூறிய சூதகங்கள் சமீபத்திருக்கும்பொழுது செய்யவேண்டியது இனி தூரதேசத்திலிருக்கும் சாபிண்டரும் சோதரரும் செய்யவேண்டிய சூதகமாவது.

தேசாந்தரத்தில் தன் பங்காளியின் இறப்பையும் பிறப்பையும் பத்துநாளுக்குள் கேள்விப்பட்டால் அந்த பத்துநாளோடேயே அவன் சூதகம் போய்விடும்.

இறந்தசேதி பத்துநாளைக்கு மேற்பட்டு அறிவானானால் சாபிண்டர்களுக்கு கேள்விப்பட்ட நாள்முதல் மூன்றுநாள்வரையுஞ் சூதகமுண்டு ஒரு மாதத்திற்கு மேற்பட்டால் சூதகமில்லைபத்து பதினறு நாளோடே யவன் கேள்விப்பட்டால் அச்சூதகமில்லை ஆனாலும் ஸ்நானஞ்செய்யவேண்டியதவசியம். பிறந்த வதந்தி பத்துநாளைக்கு மேற்பட்டுக் கேள்விப்பட்டால் சூதகமில்லை.

சாபிண்டர்கள் பங்காளியின் இறப்பைப்பத்துநாளைக்குமேல் கேள்விப்பட்டாலும் கட்டின வஸ்திரத்தோடு ஸ்நானஞ்செய்தால் மற்றவர்களைத் தொடுகிறதற்கு யோக்கியமாகிறான்.

சாபிண்டரில் பல்முளையாத பாலகனிறந்தாலும் வேறுதேசத்திலுள்ள சோதரர்களிறந்தாலும் மூன்றுநாளைக்கு மேற்பட்டுக்கேட்டால் கட்டினவஸ்திரத்துடன் நீராடினல் சூதகம்போய் விடும்.

பத்துநாள் சூதகமுள்ள இறப்பிலாவது பிறப்பிலாவதுமறுபடியும் வேறொருத்திட்டு நேரிட்டால் முன்னிருந்த சூதகத்தோடே பின்வந்த சூதகமும் போய்விடும். ஆனல் பத்துநாள் சூதகமுள்ள இறந்தவிட்டில் முன் சூதகமும் போய்விடும் பிறந்த சூதகத்திற்கு இறந்த சூதகமும் ஒக்கும்.

ஆசாரியனிறந்தால் 3-தினமும் அவன் மனைவிபிறந்தால் அல்லது மக்களிறந்தால் ஒருநாள் சூதகமுண்டு இது சாஸ்திரத்தின்முறையே.

வேதமோதினவனும் நன்னடை ஆசாரமுள்ள பிராமணன் தன் வளவிலுள்ளவ ரிறந்துபோனாலும் அம்மானிறந்துபோனாலும் 3-நாள் சூதகமுண்டு. மாணுக்கன் அம்மான்மித்திரர் பந்து முதலியவர்கள் இறந்துபோனல் தொண்ணூறு நாழிகைவரைக்குஞ் சூதகமுண்டு.

இரண்டாம் வருணத்தானகிய க்ஷத்திரியன் தன்தேசத்தரசன் மரணமடைந்தால் பகலானல் பொழுதுபோகிறவரையிலும் இரவானல் நக்ஷத்திரம் மறைகிறவரையிலும் அந்தந்ததேசத்துப் பிரஜைகளுக்குச் சூதகமுண்டு ஆரணவிதித் தெரியாதவன் தன் வளவில் இறந்தாலும் ஓர் தினம் சூதகமுண்டு

இப்பொழுது மொழிந்த பத்துதினத்தீட்டுஆரியராகிய பிராமணர்களுக்கும் அவ்வாறேக்ஷத்திரியருக்கு 12-நாளும். 3-ம்வருணத்தாராகிய வைசியருக்கு 15-நாளும். சூத்திரருக்கு 39-நாளும், சூதகமுண்டு.

மேற்சொன்ன விதிப்படியல்லாமல் சூதகநாட்களை அதிகரித்து வைக்கக்கூடாது. ஔபாசன வைதீககாரியத்தையும் இத்தினங்களுக்குமேல் நிறுத்தக்கூடாது.(இந்திரபகவானே) அக்கினித்தோத்திரம் தினந்தோருஞ் செய்கிறதாயிருந்தால் தன் பங்காளி இறந்துபோனாலும் ஒருநாள் அல்லது மூன்றுநாளைக்குமேல் யாதொரு சூதகமுமில்லை.

## அடக்கவிதி.

மூன்றுவயதிற்குள் ளிறக்கும் பாலகரை புதைத்துவிடவேண்டும், அதற்குமேற்பட்டிறக்கில் தகனமே செய்யவேண்டும்.

---

## சவங்கொண்டு போகுந் திசை.

சூத்திரர் ஊருக்குத் தெற்கும், வைசியர் மேற்கும், க்ஷத்திரியர் வடக்கும், பிராமணர் கிழக்குப்பக்கமாகவும் பிரேதத்தைக் கொண்டுபோகவேண்டியது.

## விருஷோச்சநம்.

மகம் யாக மிவைகளைச்செய்வதினும், விருஷோச்சநஞ்செய்வதே யுசிதம்; அதாவது, கார்த்திகை பௌர்ணமிஉத்தராயண சுக்கிலபக்ஷ கிருஷ்ணபக்ஷ துவாதசியிலாயினும்மற்ற உத்தமகாலங்களிலாயினும் தூயமனதோடு உத்தமபிராமணரால் ஜபஹோமாதிகளைச்செய்து பின்னர் மாதருதேவாருச்சனை நவக்கிரக பூசை, பூர்ணாவிதி, சிரார்த்தகருமம் இவைகளைச்செய்து இடபக்கன்றை வஸ்திர புட்பாட்சதைகளா லலங்கரித்து நான்கு பசுங்கன்றுகளோடு அக்கினியை வலம்வரச்செய்து வடக்குமுகமாக நின்று ஓ! தருமஸ்வரூபமே! பிரமசிருஷ்டியே! என்று துதித்து இந்த கருமம் எவருக்காகச் செய்கின்றதோ அவரைக்குறித்து அதன் வாயில் ஜலம்விட்டு அந்நீரைக் கரத்திலேந்தி சிரசில் புரோட்சித்துக்கொள்ளல் வேண்டும் இதுவேவிருஷோற்சனமாம்,

## சிரார்த்த தானம்.

இறந்தவனைக்குறித்து விருஷோற்சனஞ்செய்யில் உடனே ஏகோதிஷ்ட சிரார்த்தஞ்செய்யவேண்டும் தானுள்ளபொழுதே தன்னைக்குறித்து விருஷோர்சனஞ் செய்யாதவர்கள் தாம்இறந்த பின்பு புத்திராதிகளால் எவ்வித நன்மைகள் செய்யினும் பயனில்லை ஆனதால் மரித்த 11-12-ம் நாட்களிலேனும் சபிண்டிகரணத்திற்கு முன்னமே சோடச சிரார்த்தஞ்செய்து சத்பிராமணர்கட்கு ததியாராதனத்தோடு தானங்களுஞ் செய்தல் வேண்டும் அன்றி பருத்தியின்மேல் சாளக்கிராமம் வைத்து அலங்கரித்துக் கொடுப்பதுமுண்டு.

மரித்தோர் வைதாரணியைக் கடக்கும்பொருட்டு கரும்பினுலோடஞ்செய்து பட்டுசுற்றி நெய்வார்த்த வெண்கலப்பாத்திரத்தை அதனுள் வைத்துக்கொடுக்கவேண்டும்.

எள் - இரும்பு-பொன்-பருத்தி-நவதானியம் இவைகளைத் தவிராது பிராமணருக்கு கொடுப்பது விசேடம். ஏழைகளாயின் அவற்றிலொன்றுகொடுப்பினும் நலமே, சக்தியானுசாரம் தில தானமுஞ் சைதானமுஞ் செய்யலாம்.—மரித்தவர்களின் புத்திர ரில்லாதகாலத்தில் பௌத்திராதிகள் இவ்வாறு செய்வது மிக்க நன்மையாம்.

சரீரதிடமான காலத்தில் நதியாத்திரை செய்வதும் நலமே இறந்தபின் வருடந்தோறும் சிரார்த்தம்செய்யவேண்டியதுமற்ற சகோதர, குரு முதலியவர்களுக்குப் புண்ணியஞ்செய்துகொடுக்கவேண்டியது,

சூத்திரசவத்தோடு பிராமணன் சுடலைக்குப்போனால் அப்பிராமணனுக்கு மூன்றுநாள் ஆசௌசமுண்டு. அம்மூன்றுநாளைக் குப் பின்பு புண்ணியதீர்த்த ஸ்நானத்தால் புனிதனாகின்றான்.

## சிரவண கிரியை.

மரித்த பாபிகளை சிரவணர் பாதுகாத்திருக்கும்படி அவன் சந்ததியார் சிரவணரைப் பூசித்து 12-கலசங்களில் நீரோடு அன்னத்தை நிறைத்து அச்சிரவண பாவவாச மறையோருக்கு வழங்குத லுத்தமம்.

## சந்தியோதக பலம்.

இறந்தவரைக்குறித்துச் சுத்தமாய் சந்தியோடு தினந்தோறுங் கொடுக்கும்உதகத்தால் தூதரும்இறந்தவரும்திருப்தியடைவார் மாசிகம் முதலியவற்ருல் ஜீவன் திருப்திகர்மாகின்றது.

மறித்தவர் பால, விருத்தராயினும் உதக கும்பதானம்அவசியஞ் செய்தல் வேண்டும்.

## இடசுத்தம்.

எக்கருமஞ் செய்யத்தொடங்கினும் திருவலகால்துடைத்து கோமயத்தால் மெழுகி கோலமிட்டு பூசுத்தஞ் செய்தல்வேண்டும் அப்படிச் செய்யாவிடில் செய்யுங்காரியத்தை பைசாசரும் அரக்கரும் குடிகொண்டு முற்றச்செய்யார்கள். பரிசுத்தஞ்செய்த இடமானல் தேவர்கள் பிரீதி கொள்ளுவதோடு பிதிருக்குச்செய்யுங் கருமமும் பிரீதியாகும்.

## திலதர்ப்பணம்.

எள்ளு, சாக்ஷாத் விஷ்ணுவினுடலி லுற்பவித்த பரிசுத்த வஸ்துவானதால், அதனைக் கண்டவுடனே பூதபைசாச ராக்ஷசர்கள் வெருண்டோடுவர். தானங்களில் எள்ளில்லாத தானம் பயன்படாது, சிரார்த்தத்தில் கறுப்பு யெள்ளையே சேர்க்கில் சந்தோஷிப்பார்கள்.

## தருப்பை.

குசைப்புல் ஆகாயத்தி லுண்டாயது, அதன் அடியில்பிரமனும், அதன் கடையில் சிவனும், நடுவில்விஷ்ணுவும் வசிக்கின்றனர் ஆதலால் மூவர் காரணமாக சிரார்த்தங்களில் தருப்பையைக்கொள்ளவேண்டியதாகின்றது. அப்படி தருப்பையில்லாத கருமம் பயன்படாது. இதுபற்றியே பிராமணர் மந்திரம் விபூதி அக்கினி தருப்பை இவைகளுக்குநின்மாலிய தோஷம்கிடையாது உபயோகப்படுத்திய தருப்பையையே மறுபடியும் தடையின்றி உபயோகப்படுத்தலாம்.

## கலசம்.

கலசமாவது இஷ்டதேவதாசொரூபமாகபுண்ணியதீர்த்தங்களால் நிறைத்து சொர்ன புட்பாட்சதைகளை அதனுள்விட்டுமே

லே நூல்சுற்றி, மஞ்சள்குங்குமபுட்ப அட்சதைகளை அணிவித்து சந்தனாதி கலவைகளைப் பூசி தூப தீப நைவேத்தியத்தோடு உபசார வந்தன வணக்கங்களைச்செய்து தமதுகோரிக்கையை விண்ணப்பஞ்செய்வதாம். இவற்றுள் தருப்பைமுடி சிகை. தேங்காய் சிரசு அஷிதா திலர்தம் நேத்ரம் வஸ்திரம் சர்மம் சுற்றியநூல் நரம்பு எலும்புகள் கலசம் அங்க மாம்ஸம் ஜலம் இரத்தம் புட்பமே அகவுருப்பு. சொர்னமே பிரதிதியானம் குணஸ்ரூபம் என்றிவ்வாறாகக் கொள்ளப்படுவனவாம்.

## சிரார்த்தாபசாரம்.

தேவகாரியத்தைவிட பிதுர்காரியம் சிறந்தது. முன்னம் விசுவே தேவர்களையும், பின்பு பிதுர்களையும். முடிவில் விஷ்ணுவையும் கிரமமாக வருவித்து சிரார்த்தஞ் செய்யவேண்டியது. அப்படியல்லாமல் பிதுர்க்களைமாத்திரம் வருவித்து சிரார்த்தஞ் செய்பவன் வம்சத்துடன் அழிகிறான்.

## சிரார்த்த ஸ்தானம்.

சிரார்த்தத்தை நந்தவனம், கோயில், நதிக்கரை கடற்கரை பொழில் இவ்விடங்களிற் செய்வதேசிறந்தது. அப்படி சந்தற்பப்படாத பக்ஷத்தில் பரிசுத்த இடம் அல்லது ஜனசங்கையற்றவிடம் இவைகள் உத்தமம்.

## சிரார்த்த திசை.

சிரார்த்த துக்காகவந்த பிராமணர்கள் ஸ்நானஞ்செய்த பின்தேவர்களுக்குக் கிழக்குமுகமாகவும் பிதுர்களுக்கு வடக்கு முகமாகவும் உட்காரவேண்டும்.

—(✳)—

# சிரார்த்தஞ்செய்யும் விதி.

## ஓமம்.

இதனை முடித்த பின்னர் பிராமணனை முன் பூசித்து அவரது வலது கையில்பௌத்திரத்தைவைத்து எள்ளுடன்ஜலத்தை அர்க்கியமாகக்கொடுத்து. அவன்முன் அக்கினியைவளர்த்திஓமஞ்செய்கிறேனென்று அநுமதிபெற்றுக்கொண்டு அக்கினி சந்திரன் யமன் இவர்களுக்குதனித்தனிஅன்னத்தினுல் ஓமஞ்செய்து பின்பிதுர்களுக்கு ஓயஞ்செய்யவேண்டியது.

## பிண்டக்கிரியை.

பிதுர்களின்பொருட்டு அக்கினியில் தென்புறத்தில் அன்ன ஓமஞ்செய்து பிண்டப்பிரதானஞ்செய்யும் பூமியில்தெற்குநுனியான தருப்பையில் மூன்றிடத்தில் எள்ளுஞ் ஜலமுங் கைமறித்துவிட்டு—மிகுந்த சாதத்தை முப்பாகமாக்கி கைமறித்து முன் எள்ளுஞ் ஜலமும் விட்டவிடத்தில் தென்முகமாயிருந்து பிதுர்களைத்தியானித்துக்கொண்டு பிண்டம்வைத்து அவைகளின்மேல்மறுபடியும் எள்ளுந் தண்ணீரும் விடவேண்டும்.

ஒவ்வொருவரும் சத்தம்சூத்திரங்களிற் சொல்லியபடிபிண்டம் வைத்தபின் பாத்திரத்திலும் கையிலுமொட்டியிருந்த அன்னங்களை பிதுர் பிதாமக பிறபிதாமகர்களைக்குறித்து முன்வைத்தபிண்டங்களினருகில்போட்டு வடக்குமுகமாகத்திரும்பி ஆசமனஞ்செய்து மும்முறை பிராணுயாமஞ்செய்து அதன்பின் தென்முகமாய் வசந்தருது முதலிய ஆறுருதுக்களையும் பிதுர்களையும் மந்திரத்துடன் நமஸ்காரய்புரியவேண்டியது.

எள்ளுந்தண்ணீருமாக முன்விட்டமீதி ஜலத்தைதொன்னையுடன் கைமறித்தலாகபூமியில் விழும்படி மூன்றுபிண்டங்களையுந்தனித்தனி சுற்றவேண்டியது அம்மூன்று பிண்டங்களில்கிரமமாக கொஞ்சங்கொஞ்சமாக யெடுத்து தான்தனித்தனிமோந்துபோடவேண்டும்.

5. வயதானவுட னிறந்தால் அதிகமந்திரமின்றி 10-நாள் பிண்டம்போடவேண்டும் 12-வயதுக்குள் அல்லது 12-வயதுக்கு

மேற்பட்டேனும் இறந்தவருக்கு விருஷோற்சனம்செய்தல்வேண்டும். சபிண்டீகரணம் செய்வதுகூடாது பால்வெல்லஞ்சேர்த்துப்பிண்டம்போடல்வேண்டும். குடை, கடகம், தீபம்முதலியதானஞ்செய்யவேண்டும் இதைசெய்யாவிடில் மறித்தவன் மரமேயாகின்றான்.

## ஏகோதிஷ்ட பலன்.

திலதருப்பையோடு ஏகோதீஷ்டாதி சிரார்த்தஞ் செய்தால் மறித்தவன் மறுபிறப்பில் உத்தம குலத்துதித்து தீர்க்காயுளைப் பெறுவான்.

## சபிண்டீகரண பலன்.

இறந்தவன் வருடாந்தத்தில் சபிண்டீகரணம்செய்து இப்பிண்டத்தை அக்குலத்தில் முன் இறந்தவர்களுடைய பிண்டத்தோடுசேர்த்தல்வேண்டு. அப்படிசெய்தால் இறந்தவன்பிரேதத்துவம்நீங்கி பிதிர்த்தேவரோடுசேர்வான்.

## கிரியாதிகாரீ.

தனது ஆத்மாவே புத்திரனாக உதித்தலால், தந்தைக்குமகனும், மனுக்குத்தந்தையும்கிரியைசெய்யவேண்டிய விதியாயிற்று.

சொந்தமனைவிக்கே பிள்ளைபிறந்தால்பிதுர்தேவர்மகிழ் கின்றார், ஒருவனுக்குப்பலபிள்ளைகள்பிறந்தாலும் முதற்பிள்ளையேகிரியாதிகாரனாகின்றான். என்றாலும் மற்றபிள்ளைகளும் காரியாதிகளைக்கட்டாயம் அனுஷ்டித்தே தீரவேண்டும்.

கன்னிகாதானமாகக் கொடுத்த பெண்வயற்றுப்பௌத்திரனும் சிரார்த்தகாரியங்களுக்கு முக்கியவானவான்.

வைப்பாட்டிமகன் யாதொருகாரியமும்செய்யக்கூடாது. ஆனால்சில தருமங்களைமாத்திரம்செய்யலாம், முற்றும்சிராத்தவிதியைக்கொள்வானேல், செய்தவனும்மறித்தவனும்நரகம்சேர்வார்.

வேசிமகன் தன்னைப் பெற்றவளை மாத்திரங்குறித்துவருடந்தோறுஞ் சிரார்த்தஞ்செய்யலாம். ஆனால்பிராமண போசனாதி தானங்களைச் செய்யலாகாது. மீறிசெய்தவேசிமகனும்பிராமணனும் அதையேற்கும் பிதுரரும்மீளாநரகமடைவர்.

இறந்த 12-ம்நாள், 3-ம்பக்ஷம். 6-ம் மாதத்தில் சபிண்டிகரணம் செய்யலாம். தந்தைக்கு கருமாதிகளைச்செய்து சபிண்டிகரணஞ்செய்யாதிருக்கும்போது புத்திரனுக்குகலியாணம்நேர்ந்தால் உடனே சபிண்டிகரணஞ்செய்து மணவினையைச் செய்யவேண்டும். ஏனென்றால்மறித்தவன் சபிண்டிகரணம் நடத்துமட்டும் பிரேதத்துவத்தோடிருக்கிறான். அதனால் மகனுக்குச்சிறிது அசுத்தியாம்.

சபிண்டிகரணம் 12-ம் நாளில் செய்வதே உத்தமம். அஃது நடத்தியபின் தாய்தந்தையரின் மூன்று தலைமுறைக்கும் சிரார்த்தஞ்செய்தல்வேண்டும்.

கன்னிகாதானமாக வந்த மனைவி யிறந்தால் புருடன்தனது கோத்திரஞ்சொல்லி கிரியாதிகளைசெய்தல்வேண்டும். மாமிசவிற்கிரையம்போல, பரியங்கொடுத்துவாங்கிய மனைவி யிறந்தால் அவள்பிதாவின் கோத்திரத்தைச் சொல்லிக்கிரியை செய்யவேண்டும்.

தந்தைக்குமகனே கிரியைநடத்தல்வேண்டும். ,இல்லாவிடில் அவன் அண்ணன் அல்லது தம்பி அல்லது அவர்கள் புத்திரரிலாரேனும், செய்யவேண்டியது. மனைவிமக்கள்முதல்யாவருமில்லாதபக்ஷத்தில் தாயாதிகள்செய்யவேண்டும். தாயாதியில்லாவிடில் மாணுக்கன் செய்யவேண்டும் அவனுமில்லாவிடில் புரோகிதனே கருமம் செய்யவேண்டும்.

இறந்த ஒருவனுக்குக் கருமஞ்செய்வோர்.

| | |
|---|---|
| புத்திரர் | தாயாதிகள் |
| தந்தை | மாணுக்கன் |
| சகோதரர் | புரோகிதன் |
| பௌத்திரர் | ஆசாரியன். |

கிரியானுஷ்டிப்பு.

பிரேதத்தை குறித்துச் செய்யப்படும் சிரார்த்தத்தில்

| | | | |
|---|---|---|---|
| 1 | பிராமணாசிர்வாதம் | 6 | சேடத்தையுண்ணல் |
| 2 | பிராமணக்ஷேமவிருப்பம் | 7 | விகிரம் |
| 3 | இரட்டைக்குசை | 8 | ஸ்வதாஎன்றசப்தம் |
| 4 | ஓமம் | 9 | உடன்சொல்லல் |
| 5 | சேடத்தைநாய் நகரலாகாதெனல் | 10 | ஆவாகனம் |
| | | 11 | நமஸ்காரம் |

12 எல்லைவரையில்பின்செல்லல் 16 ஏகோதிஷ்டம்
13 வலம்வருதல் 17 பணவம்
14 சம்பிரதாயமாகபூதியணிதல் 18 பதிர்சப்தம்

இதனால்.

ஆகிய இப் 18-ம், வேண்டியதில்லை, மறந்துசெய்யினும் மகாநரகவாசமுண்டாகும்.

மரித்தவுடனே கைகால்களைக் கட்டல்வேண்டும், அங்குஉறவினரெல்லாரும் வந்திருத்தல்வேண்டும் அப்பிரேதமுள்ள கிராமத்தில் அதை தகனஞ்செய்யுமட்டும் அன்னாகாரங் கொள்ளலாகாது, உண்டால் மாமிசமுண்ட தோஷமும், இரத்தமுண்டதோஷமுமடைவர், தாம்பூலதாரணம், தந்தசுத்தி, ஸ்திரீசையோகம் தேவபூசை, வேறுசுபகாரியம் இவைகள் நடத்தப்படாது.

## நித்திய சிரார்த்தம்.

நாள்தோறும் ஓர் சத்பாத்ரியனுக்குபோசனஞ்செய்வித்துஅன்னமும் புனலும் ஒருகடத்தில்நிரைத்து இறந்தவனைக்குறித்து தானஞ்செய்வதால் இறந்தவர் மகாசுகத்தை யடைகின்றனர்

பிராமணனுக்குப் புத்திரனுற்பவித்தாலும், விப்பிறன்மரித்தாலும் 10-நாள் ஆசௌசமுண்டு அவர்வீட்டில் யாருமுண்ணலாகாது.

மிருகம் அக்கினி இவைகளாலும் தேசாந்தரஞ்சென்றும் இறந்தவனுக்கு உடனேகருமஞ்செய்யலாகாது. ஆனால்கேட்டபோதே ஸ்நானமாத்திரஞ் செய்யவேண்டும்.

அரசனுக்கும் தவசிக்கும், யாகம்புரியும் பாப்பானுக்கும், அவர்கள் தாயத்தாரிறந்தாலும் ஆசௌசமில்லை.

ஒருவனுக்குப் பெண்பிறந்தால் அவன்தாயத்தாருக்கு ஆசௌசங்கிடையாது, அவன்தாய்க்குமாத்திரம் 10-நாள் ஆசௌசமுண்டு, தந்தைக்கு ஸ்நானமாத்திரமே போதும்.

மணம் யாகம் உற்சவத்திற்காகக்கங்கணம்; பூசை, அதிகவியாதிஇவைகளைக் கொண்டகாலங்களில் ஆசௌசங்கிடையாது.

ஒரு ஆசௌசம் வந்தவுடனே இடையில்வேறொரு ஆசௌசம்வந்தால் முன்வந்ததோடு பின்வந்ததும் தாயத்தார்களுக்கு நிவர்த்தியாம்.

ஆசௌசம் வருமுன்பிராமணருக்குக்கொடுப்பனவாயுத்தே சித்திருந்ததை ஆசௌசம்வந்தவுடனேகொடுக்கலாம் பிராமணருமப்படியே தான் வாங்கவேணும்.

பசு-பிராமணர்-மாதர்-இவர்களை ரக்ஷிக்கும் விஷயத்திலும் யுத்தத்திலும், உயிர்விடுவானேல் அவனைக்குறித்து அவனையுற்றவர்கள் ஒருநாள்மாத்திரம் ஆசௌசமிருக்கலாம் ஒருக்கால் ஆசௌசமின்று ஸ்நானஞ்செய்தாலும் போதும் ஆசௌசமில்லை.

## விருஷோற்சகம்.

தலசுத்தி செய்து பின்னர், அக்கினிப்பிரதிட்டைசெய்து ஒரேவருணமுடைய காளைக்கன்று ஒன்றும், அதற்குச்சிறிய கடாரிக்கன்றொன்றும், கொணர்ந்து மஞ்சனமாட்டி அலங்கரித்துவாலில்தருப்பணஞ்செய்து விடுத்து சாந்திசிரார்த்தம்செய்து 1-பக்ஷமட்டும் அந்தணருக்கு ஆத்ம திருப்தியை யுண்டாக்கி வெள்ளி, எள்ளு நீர்க்கும்பம் வஸ்திரம் இவற்றைத் தானம்புரியில்101-தலைமுறையிலுள்ளோர் சுவர்க்கம்புகுவ.

தந்தை தன் புத்திரனுக்கும் தமயன் தனது தம்பிக்கும்சிரார்த்தஞ்செய்ய நேரிட்டால் தலைமுறையிலுள்ளோரைக் குறிக்காமல் இறந்தவனைக் குறித்து மாத்திரமே செய்யவேண்டும்.

தாய் தந்தையரைக் குறித்து செய்வானாயின் மூன்றுதலைமுறையைக் குறித்தே செய்யவேண்டும். ஆசௌசம்விருத்திமுதலியவை நேரிட்டால் அவை நீங்கியதினத்தில் செய்யலாம்.

கருமஞ் செய்பவன் பஞ்சணையில் துயிலலாகாது இறந்தவன் குணங்களைச் சிறப்பித்துரைக்கவேண்டும். யமனைத் துதித்தல்வேண்டும், 10-நாட்களிலும் பிண்டத்தால் இறந்தவன் சரீரமடைகின்றான். இடையில் அல்லது செய்யாவிடின் தேகம்பெறுதுவருந்துவன்.

இறந்தவனுக்கு 1-3-5-7-9-11-நாட்களில் நவசிரார்த்தம் செய்யல்வேண்டும். முதல்நாளெவ்விடத்தில் செய்யப்பட்டதோ அவ்விடத்திலேயே மற்ற பத்துதினமுஞ் செய்யவேண்டும், அதன்பின் எந்த ஜாதியாருக்கு எத்தனைநாள் ஆசௌசம் விதிக்கப்பட்டதோ அத்தனைநாளும் அவசியம் பிண்ட தருப்பணஞ்செய்தல்வேண்டும்.

## மாசியம்.

எந்தமாதம், எந்தபக்ஷம், எந்த திதியில் மரிக்கின்றானோ அந்தத் திதியிலேயே மாசியஞ் செய்யவேண்டும்.

எவன் வருத்தப்பட்டிறக்கின்றானோ அவனைக்குறித்துஏகோதிஷ்ட சிரார்த்தஞ்செய்யவேண்டும். அதனாலவன் இன்புறுகின்றான். அந்த சிரார்த்தஞ் க்ஷத்திரியன் 12-ம்நாளிலும், வைசியன் 15ம் நாளும் செய்தல்வேண்டும்.

சூத்திரனுக்கு தாய்தந்தையர் மரிக்கினும் மகவுபிறக்கினும் 1-மாதம் அதவாபக்ஷம் 1-பக்ஷம் ஆசௌசமுண்டு.

## காலம்.

அவிட்டமுதல் 5-நட்சத்திரங்கள் சிரேஷ்டமானதால்அவற்றில் மறிக்கின்றவனுக்கு சமுஸ்காரங்கள் உடனேசெய்யலாகாது அவைகழிந்த பின்னேசெய்யவேண்டும். இவ்விதிஒருவாரேகொள்ளல்வேண்டும். ஏனெனில் உயிர்நீங்கியபின் உடல்வைத்திருக்க உதவாதாதலால் உடனே சமஸ்காரஞ்செய்தல்வேண்டும். தனிஷ்டாபஞ்சகத்தில் சொல்லியபடி. இறந்தகால தோஷநிவர்த்தியின் பொருட்டு சிலகருமங்களை அதிகமாய்செய்யவேண்டும். மேற்படி நட்சத்திரங்களி லிறந்தவர்களுக்கு நற்கதியடையாததால்எள்ளு நெய்-பொன்-மடிமுதலிய தானம் புரியவேண்டும் இவ்வாறு செய்யாவிடில் செய்யவேண்டியவன் துன்பப்படுவன்.

சபிண்டிகரணம் செய்யாமல் மாசிகமாத்திரம்செய்துவரும் போது ஆசௌசம் நேரில் அம்மாசிகத்தை மறுமாசிகத்தோடு சேர்த்து செய்யவேண்டும்.

உபநயனமற்றவன் கிரியைசெய்ய நேரிடின் கங்கற்பவிதானமாய் செய்யவேண்டும்.

ஒரேகாலத்தில் தூரதேசத்தில் அநேகரிறந்ததாகக்கேழ்விப்பட்டால், யார் இறந்தானென்று முன்பு கேட்டானோ அவனுக்குமுன்பும் மற்றவருக்குப் பின்பும் கிரியைசெய்யவேண்டும்.

மறித்ததினந்தெரியாது கேள்விப்பட்டால் அமாவாசையில் சேர்த்து கிரியை செய்யவேண்டியது, தினந்தெரிந்தும் மாதந்தெரியாவிடில் ஆடி-புரட்டாசி-மார்கழி-மாசி-யிம்மாதங்களில் கிருஷ்ண பக்ஷத்தில் அஷ்டமி அல்லது அமாவாசையி லாயினும் செய்யலாம்.

உபநயன மாவதற்குமுன் தந்தையிறந்தால் புத்திரன்கருமங்களைச் செய்யலாம்.

புத்திரனைப் பெறுதவளிறந்தால் புருடன் கிரியைசெய்யவேண்டும். கணவனில்லாவிடில் தாயத்தாரல்லது அவர்கள் புத்திரர் அல்லது புரோகிதர் முதலினேர் செய்யலாம்.

சபிண்டீகரணஞ் செய்தபின் எக்காரணத்தாலேனும் மறந்து பிதுர்த்தேவ ரல்லாரையும் விட்டு இறந்தவனைக்குறித்துமாத்திரம்சிரார்த்தஞ் செய்யில் மறந்தவன் செய்கிறவன் செய்விப்பவன்மூவரும் நரகமடைகின்றார்கள்.

இறந்தவனுக்குப் பலபிள்ளைகளிருந்தாலும் ஒருவருட மட்டும் ஒருவனே செய்யவேண்டும்.

பாட்டனுயிரோடிருக்கும்போது தந்தையிறந்தால் தந்தைக்கு சபிண்டீகரணஞ்செய்யலாகாது, பின் எப்படியென்றால் பாட்டனிறந்த பின்புசபிண்டீகரணஞ்செய்து அதன்பின் இறந்த தந்தைக்குச் செய்தல்வேண்டும்.

பிதாவும்பிதாவைப்பெற்றபாட்டியும் உயிரோடிருக்கும்போது தாயிறந்தால் அவளுக்கு சபிண்டீகரணஞ் செய்யலாகாது, அவ்விருவருமாய்ந்தபின் செய்யவேண்டும்.

கணவனோடு மனைவியும் இறப்பளேல் அவ்விருவருக்குந்தனித்தனியே பிராமணரை வருவித்து சிரார்த்தஞ் செய்யலாம், பாகமாத்திரமொன்றாய் செய்யினும் பிண்டமாத்திரம் தனித்தனியேபோடவேண்டும்.

12-ம் நாள் விதிப்படி சபிண்டீகரணஞ்செய்து ஒராண்டுமட்டும் நித்திய சிரார்த்தம் செய்யில், எவனைக்குறித்துச் செய்கின்றதோ அவனும் செய்வித்தோனும் மோக்ஷமடைவர்.

சிரார்த்தகாலங்களில்சேர்க்கவேண்டிய திரவியங்கள் என்னவென்றுகேட்டால் 'காரைக்கீரை-தேன்-செந்நெல் - வெண்சாமைசாமை-வழுதுணை பிரண்டை-கிழங்குகள்-நவதானியம் எள்ளுஉளுந்து-பயறு-கோதுமை-மலையகத்தி-கடுகு-நெய்-பால் - கதலிஅவரை-மா முதலியவைகளே சிறந்தனவாம், என்று சர்வஇந்துமத சாஸ்திரங்களுங் கூறுகின்றன.

## முக்கியகவனிப்பு.

இதுவரையிலும் கூறிய சிரார்த்த சூதககிரியா பேதங்கள் இந்து சமயாசாராதிகாரிகளுக்கே ஒருவாறு கூறப்பட்டது. இதனைவிரிக்கின் பெருக்குமென குறைக்கலாயினம்.

சிரார்த்தவிதி முற்றிற்று

# சாஸ்திர பேதம்.

## சூசனம்.

இதுவரையினும் உலகமும், ஜீவர்களும்உற்பவித்தவிதமும் ஜீவர்கள் அனுஷ்டிக்கவேண்டிய முக்கியசிலபொது விதிகளையும், ஆசிர்மானுஷ்டானங்களையும். நித்தியகர்மாதி சம்ஸ்காரங்களை யும் பிதுர்காரியாதிகளையும் யுகதர்ம சம்பிரதாயங்களையும் கூறி னோம் இனி அவாவர்கள் தேவ-பூஜா-விரத-முக்தி யிலக்கணங் களைக் கூறத்தொடங்கி, முதற்கண் அவைகளைப்பற்றி விவரமா கத்தெரிவித்திருக்கும்சாஸ்திர சாரங்களைக் கூறஆரம்பித்தனம்.

சாஸ்திரங்கள்-தேசத்தாலும்-காலத்தாலும் - ஜாதியாலும்-சமயத்தானும்-ஆசாரத்தாலும்-தொழிலாலும் அவாவர்களின்வி வேக வன்மை மேன்மைக்குத் தக்கபடி அளவிறந்ததால் விகற்ப சொரூபமாய், பலபாஷாரூபமாகக் காணப்படுகின்றன. ஆதலின் எமது இந்துசமயாசாரசகிதமாய் அனாதியாய் இறைவனாலும் அவ்வழிப்போந்த அறிஞர்களாலும் வழிமுறையேதோன்றிநமது சர்வானு கூலப்ரபாவமாய் நமதுமுன்னோர்களாலும் பின்னோர் களாலும் கைக்கொண்டானந்தித்தும் நாமும் வழிப்பட்டுய்யவே ண்டியதுமாய், எம்மதத்தாரும்புகழத்தக்கதாய் சர்வாதிக்கசிரே யசாய்சித்திமுத்தியாதி ஞானசொரூபமாயுள்ள சாஸ்திரபேதங் களைமாத்திரங்கூறுகிறேன்.

## சதுர்வேஷம்.

ஆதியில் கடவுள் ஆன்மாக்களின் புண்ணியபாப விதிவிலக் குகளின் பொருட்டு, பொதுவாய், சில சாஸ்திரங்களை ஏற்படுத்தி னர், அதின்பேர் (வித் என்னும் தாதுவடியாகப் பிறந்து, அறிவு சொரூபம்என்னும் அர்தத்தைக்குறிக்கும்) வேதம்என்பனவாம்.

அவையாவன.

| | | | |
|---|---|---|---|
| 1. | இருக்கு | 3. | சாமம் |
| 2. | யசுர் | 4. | அதர்வணம் |

எனச் சதுர்விதமாக உள்ளது.

இவற்றில் இருக்குவேதம் 11-சாகைகளையும், எசுர்வேதம் 100-சாகைகளையும் சாமவேதம் 1,000-சாகைகளையும், அதர்வணவேதம் 9-சாகைகளையுமுடையனவா யிருக்கின்றன இவைகளில் 0 விதிவாதம்-அர்த்தவாதம் - மந்திரவாதம்-நாமதேயம்என்னும்பகுதிகளைக்கொண்டே சர்வதர்மங்களையும் கூறுகின்றன.

இவைகளுக்குஅதிகாரிகளையும் அதற்குபாஷியசூத்ராதிகாரிகளையும் பிறஜாகைகளையும், அனுவாகாதி பாகுபாடுகளையும் போதாயன சம்மிதை முதலியவைகளிற்காண்க.

வேதம் ஒருவரால் எழுதப்படாதது அதற்குஎழுதாக்கிளவி என்றும், "ஆற்றலழியுமென் றந்தணர்காணுன் மறையைப்போற்றியிரைத்தேட்டின் புறத்தெழுதார்" என்றுங்கூறி அதனாற்றான் மறையெனவுங்களித்தனரென்றும்ஆன்றோருட்பிரபலருங்கூறியிருக்கின்றனர். அதுஎக்கருத்தானோ தெரியவில்லை என்னெனின் வேதங்களனாதியானேமறையோராலனுஷ்டித்தும் அனுஷ்டிக்கப்பட்டும் அச்சிடப்பட்டு மிருத்தலினாலும் அவற்றின்பாஷியங்களும்சூத்ரங்களும் பிறசாகைகளும் அதனங்கங்களும் உபநிடதாதிகளும் கோஷிக்கப்பட்டிருத்தலானும்எக்கலைகளும் கேதத்தினின்றே தோற்றிற்றுக் கொள்ளலானும் உண்மையினுள்ளதாவுத்தேசியாதொழியார் இங்ஙன மென்னைக் கற்றுங்கல்லாவழிக் கழிறிறைரென்னின் என்னெனின் காலாதீமம் காணப்பெறுது காணுழிவடமொழிக் கண்ணின்றி அவ்வறுமையானுற்ற வேறுமையாற்றலென்ப.

## வேதாங்கம்.

மேற்சொன்னவேதத்திற்கு 6-அங்கங்களுண்டு அதாவது 1 த்திந்தசு என்னும் பாதங்களும், 2-கற்பம்என்னும்கைகளும், 3-வியாகரணம் என்னும் முகமும் 4-சிடசை என்னும்நாசியும் 5-சோதிடம் என்னும் விழிகளும். 6-நிருத்தம் என்னும்செவிகளும் ஆகியபிரதான அங்கங்களிருக்கின்றன இவற்றுள்:—

சந்தசு-மந்திரசுலோகங்களுக்கு அக்ஷரகணிதமும்கற்பம் ஆசுவலாயன, போதாயன, ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில்யக்கியப்

---

0 விதிவாதம். பந்தமோக்ஷாதிவிதிவிலக்குகளைக்கற்பித்தல்அர்த்தவாதம். சத்தியரூபமாகஈசுரனைத்துதித்தல்மந்திரவாதம். கிருத்தியங்களைவிளக்குதல், நாமதேயாம். கிரியாதிகளின் பெயர்களைவிவரித்தல்என்பனவாம்.

ரயோகாகளையும் வியாகிகரணம் வைதீக சகஸ்கிரார்த்த சித்தி யையும் சிக்ஷை பசபாளிக்கிரணவேதாத்தியாயனுதிகளையும் சோ திடம்-திதி-நக்ஷத்ர-வார-யோகலக்னுதிகளையும் - நிருத்தம் வை திக சப்த நிர்வசனத்தையும் கற்பிக்கும்.

## வேதோபாங்கம்.

அந்தவேதத்துக்கு ஸ்மிருதி புராண நியாய மீமாங்கிசை என்னும் நான்கும் உபாங்கமாம்இவற்றினிலக்கணம் மேற்சொல் லுதும்.

## உபவேதம்.

அந்தவேதத்துக்கு-ஆயுள்வேதம்-அர்த்தவேதம் தனுர்வே தம்-காந்தருவவேதமென உபவேதம்நான்குண்டுஅவற்றுள் ஆயு ள்வேதம்-வியாதிநிதானம் வியாதிச்சின்னம் மந்திரௌஷதாதி சிகிச்சைகளால் ஆயுராரோக்கியாதிகளைக்காட்டும் அர்த்தவேதம் தக்ஷிணை-ஆச்சியம்-சருமுதலான உபகரணங்களாம் தர்மாதிசது ஷ்டயத்துக்குச் சாதனமாம் தனுர்வேதம் சத்துருக்ஷயார்த்தமா ன மந்திராஸ்திரபிரயோகங்களைக் கற்பிக்கும் காந்தருவவேதம் சாமவேதாதிகளின், ச-ரி-க-ம-ப-த-நி-என்னும் சத்தஸ்வர கீதபி ரபந்தங்களை விவகரிக்கும்.

## உபநிஷத்து.

அந்தவேதத்தில் சிருத்திரம் பிரகதாரண்ணியம் சுவேதாசு வத்ரம் கைவல்லியம் காலாக்கினி கடம் வல்லி காத்தியாயனம் பிரமம் நாராயணம் அங்கிசம் பரமாங்கிசம் பாஸ்கரம்பிரமபிந்து ஆருணி அமிர்தபிந்து சரசபிந்துபிரமகபாலம் தேஜோபிந்து வா சநேயம் போதாயனீயம் ஆசுவலாயனீயம் சாங்கியாயனீயம்வாசியா யனீயம்சௌனகீயம் சிவசங்கற்பம் சிரவணம் பராக்கிரமம் புரோ ஷ்யம் முத்கலம் மூண்டகம்மைத்திராயனீயம்என்னும் ௩௨ உப நிஷத்துக்களும் ஞானங்கமான விபூதி ருத்திராக்ஷிதிகளையும் பி ரமஞ்ஞானுதிகளையும் விவகரிக்கும்.

## ஸ்மிருதி.

மிருதிகள் மநுஅத்திரி ஔரிதர் விஷ்ணு யாஞ்ஞவற்கியர் உசனர் ஆங்கிரசர்யமர் ஆபஸ்தம்பர் சம்வர்த்தர்காத்தியாயனர் பிரகஸ்பதி பாராசர் வியாசர் சங்கிலிதர் தட்சர் கௌதமர்,

சாதான்மர்-வசிட்டர் என்னும் 19-பெயராலியற்றப்பட்டு அவர்கள்பெயரே நூற்பெயராக வழங்கும் பத்தொன்பதுமாம். இவையே தருமசாஸ்திரங்களாம். இவற்றுள் சங்கலிதமென்னுமிருதியொன்றுமாத்திரம் பொதுவாயுள்ளது, மற்ற பதினெட்டுமிருதிகளுக்குள் கிருதயுகத்தில் மநுமிருதியும், திரேதாயுகத்தில் கௌதமமிருதியும், துவாபரயுகத்தில் சங்கலிதமிருதியும், கலியுகத்தில்-பாரசரமிருதியும், பிரதானமாயிருக்கும்.

## இதிகாசங்கள்.

அம்மிருதிகளிற்கூறும் விதிவிலக்குகளுக்கு காரணமாகச்சரிதைகள் கூறும் சிவரகசியம் இராமயணம் பாரதமென்னும் மூன்றும் இதிகாசங்களாம்.

## புராணங்கள்.

காந்தம்-இலிங்கம்-கூர்மம்-வாமனம்-வராகம் - பௌஷியம் மச்சம்-மார்க்கண்டேயம்-பிரமாண்டம் - சைவம் என்னும் சிவபுராணங்கள் பத்தும், நாரதீயம்-பாகவதம்-காருடம்-விஷ்ணு என்னும் விஷ்ணுபுராணங்கள் நான்கும். பிரமம் - பத்மம் என்னும் பிரமபுராணங்கள் இரண்டும், பிரமகைவர்த்தம் என்னும் அக்கினிபுராணம் ஒன்றும்சேர்ந்து பதினெண்புராணங்களாம் இப்பதினெண்புராணங்களும் வேதவியாச மகாமுனிவர் நாலுலட்சம் சங்கைகளாக ஓதியுள்ளார்.

## உபபுராணங்கள்.

ஆதித்தியர்-காந்தர்-சோமர்-கபிலர்-கௌசிகர்-சாம்பர்-சிவதன்மர்-துர்வாசர்-நாரசிங்கர் - நாரதீயர்-பராசர்-பார்க்கவர்-பிமாண்டர்-மாரீசர்-மானவர்-வசிட்டர்-வாயவியர்-வாருணர் என்னும் இருடிகளாலியற்றப்பட்டு அவ்வவ்விருடிகள்பெயரால் வழங்கும் பதினெட்டும் உபபுராணங்களாம். இவ்வுபபுராணங்கள் பதினெட்டினுள்ளும் வைதிகதர்மங்களையே கூறப்படும்.

## ஆகமங்கள்.

ஆகமங்கள் இருபத்தெட்டு அவை-காமிகம்-யோகசம்-சந்தியம் - காரணம்-அஜிதம்-தீப்தம் - சூக்குமம்-சகத்திரம்-அஞ்சுமான்-சுப்ரபேதம்-விஜயம்-நிசுவாசம்-சுவயம்புவம்-அனலம்-வீரம்-ரௌரவம்-மகுடம்-விமலம்-சந்திர ஞானம்-விபம்-புரோத்கிதம்-இலலிதம்-சித்தம்-சந்தானசருவோத்தமம் - பாரமேச்சுரம் - கிரணம்-பேதம்-வாதுளம் என்பவைகளாம், இவ்விருபத்தெட்டும்

சகுணகிரியாமார்க்கங்களை விசேஷமாய் நிரூபிக்கும் இவ்விருபத்தெட்டினுள் காமிகம் முதல் அசிதம்என்னும்வரைஐந்தும்கௌசிக முனிவர்க்காகவும், தீப்தம் முதல் சப்ரபேதம்வரை ஐந்தும் பாரத்துவாச முனிவர்க்காகவும், ரௌரவமுதல் விபம்வரைஐந்துகௌதமமுனிவர்க்காகவும், புரோற்கீதம் முதல் வாதுளம்வரை எட்டும் அகத்தியமுனிவர்க்காகவும், ஈஸ்வரனுற்கூறியதாம்

## உபாகமங்கள்.

பாதப்பாரகம்-பரம்-சிவம்-சத்தி-கலை-பிரகாசம் - பாரதந்திரம்-சிவாக்கியம்-சொற்பிரகாசம் எனும் 9-ம் உபாகமங்களாம்.

## சாத்திரங்கள்.

மேற்கூறிய வேதங்களும் அவற்றின் அங்கங்களும் உபாங்கங்களும் உபநிடதங்களும் ஆகமங்களும் கூறியுள்ளவிஷயங்களின் சாராம்சங்களைச் சொல்லும்வேதாந்தம், வைசேடிகம், பாட்டம் பிரபாகரம், பூர்வமீமாம்சை, உத்தரமீமாம்சைஎன்றும்ஆறுமாம்

## கலைஞானங்கள்.

கலைஞானங்கள் அறுபத்துநான்கு அவை அக்கரவிலக்கணம்-இலிகிதம்-கணிதம்-வேதம்-புராணம்-வியாகரணம்-நீதிசாத்திரம்-சோதிடசாத்திரம்-தருமசாஸ்திரம்-யோகசாத்திரம் - மந்திரசாத்திரம்-சகுனசாத்திரம்-சிற்பசாத்திரம் - வைதியசாத்திரம் - உருவசாத்திரம்-இதிகாசம்-காவியம்-அலங்காரம்-மதுர பாடனம்-நாடகம்-நிருத்தம்-சத்தப்பிரமம்-வீணை-வேணு- மிருதங்கம் - தாளம்-அத்திரபரீட்சை-கனகபரீட்சை- இரதபரீட்சை-கஜபரீட்சை-அசுவபரீட்சை-இரத்தினபரீட்சை-பூமிபரீட்சை - சங்கிராமவிலக்கணம்-மல்யுத்தம்-ஆக்ருடணம்-உச்சாடணம்- வித்துவேடணம்-மதனசாத்திரம்-மோகனம்-வசிகரணம்- இரசவாதம்-காந்தருவவாதம்-பைபீலவாதம்-கவுத்துகவாதம்-தாதுவாதம் - காருடம்-நட்டம்-முட்டி - ஆகாயப்பிரவேசம்-ஆகாயகமனம்-பரகாயப்பிரவேசம்-அதிரிசயம்- இந்திரசாலம்-மகேந்திரசாலம்-அக்கினித்தம்பம்-சலத்தம்பம்-வாயுத்தம்பம்-திட்டித்தம்பம் - வாக்குத்தம்பம்-சுக்கிலத்தம்பம்-கனனத்தம்பம்-கட்கத்தம்பம்- அவத்தைப்பிரயோகமுமாம்.

## பதினெண்வித்தைகள்.

இதுவரையிற்சொல்லி முடித்தவைகளுக்குள்ளே வேதங்கள்நான்கும்-வேதாங்கங்கள் ஆறும்-உபாங்கங்கள் நான்கும்-உபவேதங்கள் நான்கும் ஆகக்கூடிய பதினெட்டும் வித்தைகளாம்.

## பாஷியங்கள்.

மேற்குறித்த சாத்திரங்களாறினுள்ளே மீமாம்சையென்பது மிகவும் விசேடமாய் இருபது அத்தியாயத்திலே இரண்டுபிரிவாசுக்கூறும், அவ்விரண்டில் முதற்பாகத்தைச் சைமினிமுனிவர் லோகோபகாரமாய்ச் சூத்திரங்களாகப் பன்னிரண்டு அத்தியாயங்களால் வேதாநிகரணமென்னும் பெயரிட்டுச் சாஸ்திரநியாயத்திருலே இயற்றியருளியது. பூர்வ மீமாம்சையென்றும்சைமினிசூத்திரமென்றும்வழங்கும். அச்சூத்திரத்திற்குச் சபரரென்னும் முனிவர் பாஷியமியற்றினர், அப்பாஷியத்திற்குச் சாபரமென்று பெயர் அப்பாஷியத்தைப் பாட்டாசாரியர் வார்த்திகரூபத்தில் ஓர் மதாந்தரநூல்செய்தனர். அதற்குப் பாட்டமென்றுபெயர், அப்பாட்டாசாரியர் சிஷர் பிரபாகரிர் முன்சொன்ன சாபரபாஷியத்துக்கே ஓர்மதாந்தரம் செய்தனர். அதற்குப் பிரபாகரமென்றுபெயர் மேற்படி மீமாம்சையின் இரண்டாம்பாகத்தை வியாசமுனிவர் சூத்திரரூபமாய் எட்டு அத்தியாயத்தில் பரமாத்மகபிரதிபாதிகமாய்க் கூறினர், அதை வியாசசூத்திரமென்றும் உத்தரமீமாம்சையென்றுஞ் சொல்லப்படும் அதில்முதல் நான்கத்தியாயமும் தேவகாண்டமாம்.

## அவைதிக சாஸ்திரத் திரவியம்.

இதற்குமேல் பிரகஸ்பதி-ஆகித-சுகதரென்னு மிவர்களால் கிரமத்திற்சொல்லப்பட்ட சாருவாக-ஜைந-பௌத்தமென அவைதிக சாஸ்திரமுமுண்டு.

## சாத்தீகபாஞ்சராத்திரம்.

இதற்குமேல் சத்திதத்துவவாசியென்னும், ஒரு ஆத்துமனும், வாசுதேவனும் கிரமத்தில பிரதிபாதிக்கப்பட்ட அநுக்கிரமத்தில் சாத்தீகம் பாஞ்சராத்ரமென சாத்ராந்தரத்துவயமுண்டு.

## லௌகிக சாஸ்திரம்

தன்மந்திரியாதிகளாற் சொல்லப்பட்ட ஆயுள்வேத தண்டநீதிமுதலானசாஸ்திரம் திருஷ்டபலன்களைப் பிரதிபாதிக்கும்.

## வைதிக சாஸ்த்திரம்.

ஜைமுனி-அக்ஷபாத-கணாதரென்னும் ரிஷிச்சுரர்களால் கிரமத்திற்சொல்லப்பட்ட பூர்வமீமாம்சைநியாய. வைசேடிகமென திருஷ்டாதிருஷ்ட பலன்களைப் பிரதிபாதிக்கிற சாஸ்திரத்திரயமுண்டு.

ஆத்தியாத்மீகசாஸ்திரம்

கபில, பதஞ்சலி, வியாசரென்னு முனிவர்களால் கிரமத்திற் சொல்லப்பட்ட சாங்கிய, பாதஞ்சல, வேதாந்தமென, ஆத்மக்கியான பலன்களுள்ள ஆத்தியாத்மீக சாஸ்திரத்திரயமுமுண்டு.

ஆதிமார்க்கீகசாஸ்திரம்

மாயாதத்துவ, வித்தியாதத்துவ, வாகளான ருக்கிராற் சொல்லப்பட்ட பாசுபத, கபாலிக, மாவிரதமென ஆதிமார்க்கிக சாஸ்திரத்திரயமுமுண்டு.

மேற்கூறிய சாஸ்திரங்களுக்குப் பிற்கால் ஒவ்வோர்காலத்தில் வழிநூல், சார்புநூல்முதலியஅநேகங் கிரந்தங்கள்தோன்றி அளவில்லாததாயிருக்கின்றன நூறுவயதோடு தபோவரத்தாற் பிறந்த ஓர் தீவிரதான் தன் ஆயுள்மட்டும் சாஸ்திரங்களை முற்றுங்கற்கப் புகுந்தானுயினும் அந்நூற்பெயர்களைமாத்திரங் கற்பதும்கஷ்டம் எனவே சாஸ்திரங்கள் பலவாதலின் "கற்றதுகைம் மண்ணளவு கல்லாதுலகளவென் உற்றகலே மடந்தை யோதுகிறாள்" அன்னம்போர் பிறவிப்பயன் யாதெனத்தேறுதலே வேண்டுமென்றப்படியென்க.

---

# கலிதருமம்.

கலியுகத்தில் மனிதருக்கு வர்ணாச்சிரம ஆசாரமுள்ளநடக்கைவிராது அதில்லாதபோது இருக்கு-யசுர்-சாமம்-என்கிற வேதங்களினலே உணர்த்தப்பட்ட யாகாதிசற்கிரியைகளும் இல்லை மேலும் கலிகாலத்தில் தருமமான விவாகங்கள்நடக்கமாட்டாது குருசிஷிய கிரமமுங்கிடையாது தம்பதிகள் ஒவ்வொருவருக்கொருவர் நடந்துகொள்ளவேண்டிய தருமமில்லை. அக்கினியில் செய்யத்தக்கதே யக்கியமென்ற முறைமையுமில்லை. எக்குலத்தானுனும் பலவானெவ்னே அவனே யாவர்க்கு மாசனுவான், சகல ஜாதிகளிலேயும் பொருளுள்ளவனே கன்னிகாதானஞ்செய்யப் பாத்திரமாவனே யல்லது கல்விபொழுக்கங்களுடையவனுக மாட்டான்.

பிராமணன் எந்தவழியிலாவது தீக்ஷிதனுவதேயல்லது சாஸ்திரங்களிற் சொன்னவிதியாலே என்கிறதில்லை. கலியில் விதிக்கப்பட்டதே பிராயச்சித்த மென்பதில்லை எந்தக்கிரியைபாகிலும்

பிராயசித்தமாக அங்கிகரிக்கப்படும். எவனுக்கு எந்தவாக்கியம் பிரியமாயிருக்கிறதோ அவைச்சகலமும் சாஸ்திரமேயாய்விடும் காளிமுதலான எதுவுந் தேவதையாகக் கொண்டாட்டப்படும்இன்னானுக்கு இந்த ஆச்சிரமம் தகுமென்பதில்லை எவனுக்கும்எந்த ஆச்சிரமும் பிரவேசிக்கலாகும்,ஒருவன்தான் வேண்டியபடி பட்டினியிருப்பதும், வருந்துவதும், கொடுப்பதும் தவமும், சாஸ்திரங்களிற்சொல்லிய உபவாசகிருச்சிராதிகளைப்போலே தருமமென்று எண்ணப்படும்.

அன்றியும், அற்பமானதிரவிய மிருப்பதினாலேயே தாம்கனவான்களென்கிற செருக்குச் சனங்களுக்கு உண்டாயிருக்கும், அப்படியே பெண்பிள்ளைகளுக்கு கூந்தல் செவ்வையாயிருப்பதினாலேயே சவுந்தரிய கருவம்உண்டாயிருக்கும் கலிமுற்றமுற்றப் பொன்னும்மணியும் நல்ல ஆடைகளும் அழிந்து போகும்போது மங்கையர்கூந்தலையே அலங்காரமாகப் பெற்றிருப்பார்கள். மேலும் பெண்பிள்ளைகள் பொருளில்லாத தம்புருஷர்களைவிட்டு எவனாகிலும் பொருளுடையவனாயிருந்தால் அவனையே புருஷனாகத் தேடிக்கொள்வார்கள் எவன் விசேஷமாய்ப் பொருள்வோடுப்பானோ அவனையே ஜனங்கள் சுவாமியென்று கொள்வார்களேயன்றி நற்குலப்பிறப்பு முதலானவைகளைச் சுவாமியென்பதற்கு ஏதுவாகக் கொள்ளமாட்டார்கள்.

இந்தகலியுகத்திலே புத்திக்குப்பயன் பொருள் சம்பாதிப்பதேயன்றி ஆத்துமஞானம்பயனாகக் கொள்ளப்படாது அந்தப் பொருளும் வீடுமுதலானவைகட்ட உபயோகிக்கப்படுமேயல்லது யாகாதிகருமங்களுக்கு உபயோகிக்கப்படாது. அந்த வீடுமுதலானவைகளும் தன்போகத்துக்கு உரியவையாக்கப்படுமேயல்லது அதிதிமுதலானவர்களுக்கு எவ்வளவும்உரியவையாக்கப்படாது ஸ்திரீகளெல்லாம் சளுக்கனாயிருக்கிறவனிடத்தில் காதலுற்று விபசாரிகளாயிருப்பார்கள் புருஷரோ அன்னியாயத்தினாலாவதும் பணஞ்சம்பாதித்தவரிடத்திலேயே மனம்வைத்திருப்பார்கள்எவர்களும் சினேகிதர் வேண்டிக்கொண்டாலும் மனதிரங்காமல் தங்கள் காரியத்தையே பெரிதாய்ப்பார்த்துக்கொண்டு அரைக்காற்பணத்திற்கும் ஆசைவைத்திருப்பார்கள். சூத்திராதிகள் பிராமணரைத் தங்களைப்போல் சாதாரணமனிதராக நினைப்பார்களேயன்றி விசேஷமுள்ளவர்களாக நினைக்கமாட்டார்.

பசுமாடுகளிலும் ஜனங்களுக்குப் பால்கொடுப்பதைப்பற்றி மேன்மையான எண்ணமேயல்லாது ஜாதியைப்பற்றியதாயிராது இக்கொடியகாலத்தில் பிரசைகளெல்லாம் பெரும்பாலும் மழையில்லாமையைப்பற்றின அச்சமுள்ளவர்களாய்ப் பசிக்கும் பயந்துசோர்ந்தவராய் வானத்திலேயே கண்வைத்துக்கொண்டிருப்பார்கள். மனிதர் தவசிகளைப்போலே காய்கிழங்குகளைப் புசித்துக்கொண்டு மழையில்லாமை முதலானவைகளினாலே துக்கப்பட்டவர்களாய் தங்களைத் தாங்களே கொலைசெய்துக்கொள்வார்கள்.

கலிகாலத்தார் சுகமும் உல்லாசமும் அற்றவர்களாய் திரவியம் க்ஷீணித்தவராய் எப்போதும் பஞ்சத்தையும் பலவகைத்துன்பங்களையுமே பெற்றிருப்பார்கள். கலிவளர்ந்துவருகையில் எவர்களும் அக்கினிபூசை தேவதாபூசை அதிதிபூசைகளையும் பிண்டோதகதானரூபமான பிதுர்பூசையையும் செய்யாதவராகி முழுகாமலேயுண்டு காலங்கழிப்பார்கள். ஸ்திரீகளும்வெகு ஆசையுங் குறுகின உடம்புமுள்ளவராய்ப் பேருண்டியுண்டு வெகுபிள்ளைகளைப்பெற்றுச் செல்வமில்லாதவர்களாய் வருந்துவார்கள் மேலும் இரண்டு கைகளினாலேயுந் தலையை சொறிந்துக்கொண்டுபர்த்தா, மாமனார் முதலானோருடைய கட்டளையைமிகுந்த அனாதரத்தோடு திரஸ்காரஞ்செய்துவருவார்கள். இன்னும் பெண்பிள்ளைகள் எப்படியாவார்களென்றால் தேகசுத்தியில்லாமல் தங்களைப் போஷிப்பதிலேயே திடமுற்று ஈனமான எண்ணங்கொண்டுகடினமாயும் பொய்யாயும் பேசுவோர்களாயிருப்பார்கள்.

குலஸ்திரீகள் தாங்கள் தீயொழுக்கமுடையவராதலால் அப்படிபட்டவரிடத்திலே சிநேகித்தவர்களாய்த் தங்கள் புருஷனுக்குப் பலவகைப்பட்ட தீங்கையுஞ்செய்துவருவார்கள். பிரமசாரிகள் விரதானுஷ்டானமில்லாமலே வேதாத்தியாயனஞ்செய்வார்கள் கிரகஸ்தரோ சிறிதேனும் ஓமஞ்செய்யா திருப்பதுமின்றித் தக்கபொருள்களையுங் கொள்வார்கள். வானப்பிரஸ்தரும் ஊரிலுள்ளவைகளைப் புசித்துவருவார்கள் சன்னியாசிகள் புத்திரமித்திராதிகளிடத்து அன்புடையவர்களாயிருப்பார்கள் அரசரெல்லாம் ஜனங்களைப் பரிபாலனஞ்செய்வதை முக்கியமாயெண்ணாமல் அந்தவரி இந்தவரியென்று சாக்கிட்டுக் குடிகளுடைய பொருள்களைப் பறித்துவருவார்கள். எவனெவன் யானைகுதிரை முதலான

சேனைகளை மிகவைத்திருப்பனே அவனவனே அரசனாவான். அப்படிப்பட்ட பலகுனியனாயிருப்பவன் சேவகனாவான். வைசியர் பயிரிடுதல் வாணிகஞ்செய்தல் முதலான தங்கள் தொழிலைவிட்டுச் சூத்திரர்தொழிலாகிய பலதொழில்களைச் செய்துபிழைப்பார்கள் சூத்திரரோ சன்னியாசிக்குறிகளை தரித்தவராய்ப் பிழை வாங்கி யுண்டுகொண்டு அனேகர் தங்களைப்பூசிக்கும்படி செய்துக்கொண்டு பாஷாண்டவிருத்திகளா யிருப்பார்கள் ஜனங்கள் பஞ்சத்தினாலும் வரிவுறுப்பதினாலும் துன்பமுள்ளவர்களாய்க் கோதும்பையவம் என்கிறதானியம் விளையப்பெற்ற நீசதேசங்களுக்குப் போய்விடுவார்கள்.

இப்படி வர்ணாச்சிரம தருமங்கள்கெட்டு வேதமார்க்கமே ஒளித்துப்போய் பாஷாண்டமதங்களைக் கைகொண்டு ஜனங்கள் நடப்பதினாலே அதர்மம் விருத்தியாவதுபற்றி ஆயுள்அற்பமாய் விடும்அரசர்களுடைய குற்றத்தினால் மனிதர் சாஸ்திரங்களுக்கு விரோதமாய் வீணானதவங்களைச் செய்வதினாலே பாலியத்திலே மரணமுண்டாக்கும் பெண்பிள்ளைகள் ஆறேழுவயதுக்குள்ளாகப் பிள்ளையைப்பெறுவார்கள். ஆண்பிள்ளைகளோ ஒன்பது பத்துவயதுக்குள்ளே பிள்ளையுண்டாகுந் திறமுடையவராவார்கள்பன்னிரண்டுவயதினுள்ளே நரைமுதலியவை உண்டாகும்,ஒருவனும்இந்தக்கலிமுதிர்ச்சியில் இருபது வருஷங்களுக்குமேல் பிழைத்திருப்பதில்லை கலிகாலத்தில்ஜனங்கள் அற்பஞான முள்ளவர்களாய் வீண்தவவேடங்களைப்பூண்டு கெட்ட நினைப்புடையவர்களாயிருப்பாராதலால் கொஞ்சநாளிலேயே நசித்துபோவார்கள்.

தருமம் எவ்வளவெவ்வளவு இழிந்துவருகின்றதோ அவ்வளவவ்வளவும் கலிவிருத்தியாயிற்றென்று புத்திசாலிகள் அறிந்துகொள்ளவேண்டும். மேலும் எப்போது பாஷண்டர் விருத்தியாகிறார்களோ எப்போது வேதமார்க்கத்தை யனுசரித்த சத்புருடருக்குத் தீங்குநேரிடுகின்றதோ எப்போது தருமவான்களுடையஎத்தனங் கெட்டுப்போகின்றதோஅப்போது கலிமுதிர்ந்துதிற்கிறதென்றறிந்துக்கொள்ளவேண்டும். எப்போது யக்கியங்களுக்குஈசுரனானஸ்ரீபுருடோத்தமனை யக்கியங்களாலே ஜனங்கள்ஆராதிப்பதில்லையோ எப்போது வேதனால்சொல்லுங் காரியங்களிலே புத்தியில்லாமற் பாஷாண்டவாக்கியங்களிற் பிரீதியுண்டாகின்றதோ அப்போது கலிமகாபலம்பொருந்தியிருக்கின்றதென்றறிய

வேண்டும் என்னென்றால் கலியினால் ஜனங்கள் பாஷாண்டராலே கெடுக்கப்பட்டவர்களாய் சர்வசிருஷ்டிகர்த்தாவாயும் சர்வேசுரனுமிருக்கிற பகவானை ஆராதிக்கமாட்டார்கள் இன்னமும் பாஷாண்டபுத்தியுள்ளவர்களாய் தேவதைகள் எதுக்குவேதங்கள் எதுக்குபிராமணராலென்ன தண்ணீர்விட்டுக் கழுவதினாலென்ன சுத்தியென்று பிதற்றித்திரிவார்கள் இப்படிப்பட்ட அதர்மங்களினாலேமேகம் அற்பசாரங்களாகவே இருக்கும் வஸ்திரங்கள்சணற்கோணிகள்போலிருக்கும் மரங்கள் வன்னிமரங்களைப்போலற்பமாகவிருக்கும் ஜாதிகளெல்லாம் சூத்திரஜாதிபோலிருக்கும் மேலும் தானியங்கள் அணுக்கள்போலவும் பால்நெய்போலவுமாய்விடும் ஓ முனிவரே! கலியில் ஜனங்களுக்கு மாமனார்மாமியார் ஆசாரியர் மைத்துனர்பெண்டாட்டிகள் வேண்டுமான தொகையுள்ளவராயிருப்பார்கள், அன்றியும் மாதாபிதாக்களிடத்திலன்பில்லாமல் மாமியார் மாமனார்களை பிரதானமாயனுசரித்து தாயார் தகப்பன்யார் எவனுக்கெவன் அவனவன் தன்தன் கருமத்தையல்லவோ அனுசரித்திருக்கிறான் என்றுபேசிவருவார்கள் இக்காலத்திலே நரர்அற்பபுத்தியுடையவராய் வாக்கு-மனம்-காயம்-இம்மூன்றுஞ்சுத்தமில்லாமல் தினந்தோறும் பாவத்தையேசெய்துவருவார்கள் சத்திய மில்லாதவர்களுக்கும் சவுசமில்லாதவர்களுக்கும் வெட்கமில்லாதவர்களுக்கும் எந்ததுக்கங்களுண்டாகுமோ அவையெல்லாம் கலிகாலத்திலுண்டாகும்.

இக்கிரந்தங்கள் கோஷ்டிக்கும் யாதோரிறைவனுண்டோ அப்பரமாமான்வி னிலக்கணரூபங்களும் லீலாவிரதாதி பரசாகனங்களும் இப்பிரபஞ்சஉற்பத்தியின் இரண்டாவது தேவகாண்டத்துள் கூறப்பட்டிருத்தலின். இவ்வளவிலேயே சர்வாபீஷ்டசித்திப்ரதாபராகிய எமது தயாவிபவசாட்சாத்திருவருட் சகாயத்தால் பிரபஞ்சஉற்பத்தியைச் சம்பூரணஞ்செய்கின்றேன். சுபம்

பிரபஞ்ச உற்பத்தி.

முதலாவது உற்பத்தி காண்டம்.

முற்றிற்று

---

தெய்வமே துணை.

ஓம்

சிவராமஜெயம்.

பூலோகரகசியமென்னும்,

# பிரபஞ்ச உற்பத்தி.

இரண்டாவது,

## தேவவுற்பத்திகாண்டம்.



காப்பு,

கலி விருத்தம்.

பிரம மானப் பெரும்பொருள் போற்றிமுன்
மருவ மாகிய மாமறை யாய்ந்துபின்
சருவ தேவர் சரித்திரஞ் சொல்லமா
தரும தேவதைத் தாட்டுணை யாகுமே.

## முதலாவது,

## கணேசர் உற்பவம்.

---

பூர்வம் பிரமதேவனது களத்திரவர்க்கத்தில் உதித்த விபுதையென்னும் இராக்கதஸ்திரீயானவள் மரகதமென்னும் தவமுனிவரைக் கூடி கயமுகாசுரனென்கிற பிள்ளையைப்பெற்றாள் அக்கயமுகாசுரனானவன் தனதுபருவந்தொடங்கிக் கைலாயத்திற்குத்தென்பாரிசத்தை யடுத்து ஸ்ரீ உமாமகேஸ்வரனைநோக்கி அகோரமாகிய தவமியற்றி எவ்வித ஆயுதத்தாலும், தேவராலும், மனிதராலும் இறவாதிருக்க வரம்பெற்றுக்கொண்டு அந்த வரத்தின் மகிமையால் தெய்வசிற்பியாகிய விஸ்வகருமாவைத் தருவித்து தன்பிதாவின் பெயர் விளங்கத்தக்கதாக மரகதபுரியென்னும்பட்டணம் ஒன்று நிருமிக்கச்செய்து தேவர்கள் யாவரும்பணிவிடைசெய்யஅரசாட்சிசெய்துக்கொண்டிருந்தான்.

அன்றியும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர்விரோதியாகி யாகாதிக்ரமங்களைத்தட்டழிப்பவனும், தவநிலைகளைத்தவிர்ப்பவனும், துற்குணமே தலைகொண்டிருப்பவனும், யாவரும் தன்னை வணங்கவேண்டுமென்ற எண்ணமே குடிகொண்டிருப்பவனுமாயிருந்தான். இவ்வாறு கயமுகாசுரனானவன் நீதியற்று அநீதியாய் அரசுபுரிந்துவருகிறகாலத்தில்.

விசாலம்பொருந்திய வெள்ளியங்கிரியென்னும் ஸ்ரீ கைலாயப்பொருப்பில் முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், யக்ஷர், கின்னரர், கிம்புருடர், காந்தருவர், சித்தர், வித்தியாதரர், அஷ்டவசுக்கள், அஷ்டவைரவர்கள் நந்தி, பிருங்கி, நாரதர், பதஞ்சலி, வியாக்கிரபாதர், திக்குதேவர்களாகிய இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு குபேரன் ஈசானன்முதலிய அந்தரவாசிகளும், யோகபூமியரும் அளவிடுதற்கரிய சிவகணங்களும் புடைசூழத்தக்க சிறப்புப்பொருந்திய சித்திரக்கூடமென்னும் நான்மணிக் கோபுரமும், ஏழுமணிவாயில்களும் அமைக்கப்பெற்ற எண்ணிறந்த பருதிகளைப்போல ஒளிவீசியசிம்மாசனத்தின்கண் வீற்றிருக்குஞ் சிவபெருமானைநோக்கி அவரது இடபாகத்தி லெழுந்தருளிய எமது அன்னையாகிய பார்வதிசொல்லுகிறாள்.

ஓ சுவாமி! நாம் வெளிசஞ்சாரஞ்செய்து வெகுநாளானபடியால் இன்று அடியாளுக்குப் போய்வர எண்ணமுண்டாகியது ஆதலால் தயைசெய்து வாரும் என அதற்கு சிவபெருமான்புன்னகைகொண்டு பெண்ணே! உன்கருத்தின்படியே போய்வரலாம் வாருமென்றுசொல்லித் தமது பிரதமகணங்கள் யாவையும் நிறுத்தி பார்வதிசமேதராய் ரிஷபவாகனரூடராய் வெளிப்பட்டு கைலயங்கிரியைச் சூழ்ந்திராநின்ற சில சோலைகளின் வனங்களையும் ஆங்காங்குள்ள தடாகங்கள், மண்டபங்கள், ஓடைகள் முதலானவைகளையும் பார்க்கும்படியாக எமது அன்னையாருக்குக்காட்டிக் கொண்டே வருகிறபோது வெள்ளியங்கிரிக்குத் தென்புறத்தில் அதிக ரமணீயமாயுள்ளபூஞ்சோலையின் நடுவிலிருக்கும் மண்டபத்தில் சித்திரத்தாலெழுதியிருக்கப்பட்ட யானையைக்கண்டு அதன் மேலாகிய அற்புதக்கோலமும் துதிக்கையின் திறமும்மெய்த்திறமுங்கண்ட ஆதிசத்தி பிரமித்துசிவபெருமானைநோக்கி ஓ! சுவாமி கால்கரங்கள்முதலிய அவயவங்கள் ஓர்விதமாகவும் சிரசுமாத்திரம் பிரணவாக்ஷர ஓங்காரத்திற்கிடாக மௌனயோகத்தைச் சாதித்துபிரகாசிக்கின்றதே ஆகையால் உலகத்திலுள்ள சகலஜீவான்மகோடிகளிலும் மிக்க புண்ணியத்தாலுதித்த கண்ணிய ரூபமென்றெண்ணி மதிக்கின்றேன் நாதாவென்று மிகவும் ஊக்கமாய்ப்பாக்கலுற்றாள். அப்போது பரமேஸ்வரனும் சற்றுதிருவுளங் கனிந்தபடியால் சத்தி பெண்யானையாகவும், சிவன் ஆண்யானையாகவும்திருக்கோலங்கொண்டு மிருகயோக்கியதைக்கிணங்க அவ்வனங்கள்முழுமையும் ஓடியுலாவித்திருவிளையாடல்புரிந்து அண்டமளாவித்தழைத்தோங்கிய ஓர் சோலைசூழ்ந்தகுன்றையடுத்துஇதுவேநன்றென மதித்துமதன்வாளியைத்தடுத்து மருவிப்புணர்ந்து பிரிவாற்றாது ஒருமித்திருந்து உள்ளமகிழ்ந்து வெள்ளம்பெருகிய மரகதபுரிக்கடுத்த ஓர் பள்ளத்தில் நீர்விளையாடிக் கரைசேற்றப் பொழுது ரிஷிபிண்டம் ராத்தங்காது யென்றும் தேவபிண்டம் தக்ஷணமேயென்றும் மொழிவதற் கிணங்க உடனே பிர்ம்மஸ்வரூபமும், யானைமுகமும், சதுர்ப்புஜமும், திரிநேத்திரங்களும், வாமனமாயும், ஓங்காரப்பிரண வாக்ஷரத்தைப்போல பிரகாசமுடைய ஓர் சிசுஉதித்தது அச்சிசுவைக் கண்டு ஆதிசக்தி புத்திரவாஞ்சை யதிகரித்து விட்டுப்பிரிய மனமில்லாதவளாகி மயக்கங் கொண்டிருக்க இக்குறிப்பினைசிவபெருமான்கண்டு ஓபெண்ணே

நீ இச்சிறுவனைக் காக்க இங்கெவருமில்லையேயென்று தைரியத்தைவிட்டு கவலை மேற்கொண்டு தவிக்கின்றாய் உனக்கேனிந்தத் துயரம் விலாவாக என்பின் வாரிற் சொல்லுகின்றேன் இதின்மகிமையென்றார். அதற்குப் பார்வதி ஓ சுவாமி தாய்தந்தையர்களில்லாத அனாதிப்பிள்ளையைப்போல இச்சிசுவை ஒண்டியாய் இங்கு நிறுத்திவிட்டுத் தாய்தந்தையர்களாகிய நாம் போவதுதருமமோ அல்லது இச்சிசுவை இக்காட்டில் காப்பாற்றப்பட்டவர்கள் ஒருவருமில்லையே மேலும் தங்களுக்கு இச்சிசுவைவிட்டுப் போவதற்கு மனத்துணிவு உண்டாகியதைப்போல் அடியாளுக் குண்டாகவில்லையே நான் என்னசெய்வேன் சுவாமியென பரமசிவம் சிறித்து அடி பெண்ணே இச்சிசுவைக் காப்பதற்கு இன்னுஞ்சற்றுநேரத்தில் தேவேந்திராதிதேவர்களும் நமது பிரதமகணங்களும் வருவார்கள் ஆதலால் உனக்குற்ற பேதமைகுணத்தைவிட்டுசீக்கிரம் என்பின் வருவாயெனபார்வதி பசுபதியுடன் போய்க்கொண்டேயிருக்கையில் முப்பத்துமுக்கோடிதேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகணங்களும்இன்னுமற்றுமுள்ள யாவர்களும்வந்துசிசுவைச் சூழ்ந்துக்கொண்டு இனி நமக்கு கயமுகாசூரன் பயம் இன்றேடொழிந்தது இதி லெள்ளளவும் பிசகில்லை இக்சிறிய உருவங்கொண்டிருக்கும் இவருக்கும் யானைமுகம் துஷ்டனுகியகயமுகாசூரனுக் கிருப்பதும் யானைமுகமாதலால் இவரே கயமுகாசூரனையெதிர்த்து வெற்றிபெறுவாரென்றுயாவரும்களிகொண்டிருந்தார்கள். அப்போது பார்வதி பரமசிவத்தைநோக்கி, ஓ சுவாமி நமது பிள்ளைக்கு நாமகரணங்கூடச் செய்யாமல் வந்துவிட்டோமே அங்கு அதையறிந்து நாமகரணஞ்செய்யப்பட்டவர்கள் அந்தத் தேவர்கள் கூட்டத்தில் யாரேனுமுண்டோ யென்றனள் அதற்குப் பரமசிவம் ஓ பெண்ணே நமது புதல்வனைதேவகணங்கள் முதலானவர்களும் சூழ்ந்துகொண்டிருப்பதினலே சர்வதேவாதிசிவகணங்கள் யாவரும் சூழ்ந்துப்போற்றப்பெறுமாகையால்கணபதியென்ற திருநாமம் அக்கணமேதந்தேன் எனப் பார்வதிமிகுந்த சந்தோஷத்துடன் சிவபெருமானேடு கைலையங்கிரி யடைந்தாள்

தேவகணங்களும்பிரதமகணங்களுஞ்சூழ்ந்திருக்கையில்கணாதரென்கிற அசரீரிப்பெற்று அவ்வாறே வாழ்த்தினர்.

இப்பால்கனாதனைதேவர்கள்முதல்யாவருஞ்சூழ்ந்துக்கொண்டிருப்பதைகயமுகாசூரன் தூதர்களும்சிலராக்கத ஸதிரீகளுங்

கண்டு உள்ளேபுகுவ அங்குயானைமுகமும்நான்குகரங்களும்வெ ண்மையான ஆடையும் பாசம் அங்குசமும் தரித்து விளங்கும் சி றுபிள்ளையைக்கண்டு வியப்புற்றதுமன்றியில் தேவர்கள் முதலா னோருக்கும் உண்டாயிருக்குந் திடதைரியத்தையும் உணர்ந்து அங்கேநின்றும் கயமுகாசூரனுடைய சபைக்குவந்து பணிந்து சொல்லுகிறார்கள்' ஓ அரக்கர்சிகாமணியாகிய யெமதிறைவனே தங்களுக்கு யேவல்செய்துக்கொண்டிருந்த மிகவும் அற்பராகிய தேவகணங்களுக்கும் முனிகூட்டங்களுக்கும் இன்றையதினமு ண்டாயிருக்கும் குதூகலத்தையும் சந்தோஷத்தையும் பார்க்குங் கால்இன்றுமுதல் அரக்கர் வமிசத்தைமதிக்கமாட்டார்போலும் தமது ஆக்கினையைத் தவறிவிட்டார்கள்போலுந்தோற்றுகிறது. நமதுகோட்டையின் அகழிக்குப்புறம்பாகியபெருவெளியில்அர க்கனுமின்றித், தேவனுமின்றிமனிதனுமின்றிப், பலரூபம் பெற்ற ஓர்சிறுவனைச்சூழ்ந்திருக்கும் தேவகூட்டங்களைக் கணக்கிட யெ ம்மால் முடியாது. அவர்களிரையும் ஒலியானது நாம் சுகமடை ந்தோம்;பயத்தையொழித்தோம்; அரக்கர்குலத்தைமுடித்தோம் இனி தவத்தை தோடுத்தோம், என்னும் வீராவேசத்தோடு கூ டியதாயிருக்கின்றது. அவர்கள் செருக்கைப் பார்த்துப் பயந்து தமதிடம் அடைக்கலம் புகுந்தோம் என் மேலுமேலும் அரக்கர் கள் அபயமிட்டோடி வந்த கூக்குரலைகேட்ட கயமுகாசூரன் அ திக கோபாவேசம் மேலிட்டவனாய் கண்களானது கம்மாளனுலை யிலிட்டு உருக்கிய செம்பைப் போலச் சிவக்க,மீசைகள் துடிக்க, புருவம்நெறிக்க ஆக்கிரா குரோதனாய், அமைச்சர்காளென்றுகூ வியழைத்து சிக்கிரம் நமது சேனைவெள்ளத்தைச் சித்தப்படுத்து ங்களென்று கடுகடுத்துக்கூறி, உடனே கயமுகசூரன் யுத்தசன் னத்தனாகி அரண்மனையைவிட்டு வெளிப்படுகிறபோதுசிலதுர்ச்ச குனங்களெல்லா முண்டாயின. அவையாதெனில்; ஆகாயத்தி னின்று குரைக்கொள்ளிகள் வீழ்ந்தன; இரக்தமழை பெய்தன, நரிகள் ஊளையிட்டன நக்ஷத்திரங்களுதிர்ந்தன ஓர் அரக்கியின் அழுகுரலோசைகேட்டன; அந்தப்படி பற்பலஅவசகுனங்கள்யா வும் உண்டாயின இவைகளை யெல்லாம்பார்த்தும் அந்தகயமுகா சூரன் கிஞ்சித்தும் மனங்கலங்காமல் வீராவேசமுடையவனாகிசே னைகளின் திரள்களுடன் அகழிக்குப்புரம்பேயிருக்கும் பெருவெ ளியின்சமீபமாகவந்துநின்று இரணபேரிகையறையச்செய்தான்.

இவ்வோசையைக்கேட்ட தேவர்களும் ரிஷிகளும் திடுக்கிட்டு இதுவென்னமோ யுத்தத்திற் காயத்தமான இரணபேரியின் ஓசை கேட்கிறதேயென்று பார்க்கிறபோது சேனுவெள்ளங்களுடன் திரண்டு வந்திருக்கும் கயமுகாசூரனது இரதத்தைக்கண்டுபிரமித்து ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளுகிறார்கள். எப்படியெனில், கொடியதுஷ்டனாகிய இந்தக் கயமுகாசூரன் இச்சிறு பிள்ளையின்பேரில் யுத்தஞ்செய்யச்சித்தப்பட்டு வந்தவனாகத் தோன்றுகிறதே இதென்ன அனியாயம், தனக்குச் சமானமுடையவர்கள் பேரிலல்லவோ யுத்தஞ்செய்யவேண்டும்? அதைவிட்டு இக்குழந்தை பிறந்துநான்குநாள்கூட ஆகவில்லையே! அன்றி இக்குழந்தை இவனுக்கு என்ன தீங்குசெய்தது? ஒன்றுங் காணுமே! யென்றும் சிலர் ஐயோ இச்சிறுகுழந்தை பிறந்ததுமுதல் இவ்விடத்தைவிட்டு யெங்கும் போகவேயில்லையே யென்றும் பலவாறுபேசி முடிவில் பிரணவஸ்ரூபியாகிய இச்சிறுகுழந்தையினால்இவ்வரக்கன் மடியக்கடவதென்று பலதேவரும் ஆசிகள்கூறி அன்னவர்கள் யாவரும் அச்சிறுகுழந்தையைத் தனியேவிட்டுஅருகிருந்த பூஞ்சோலைகளில் மறைந்துக்கொண்டு ஓபரமேசனேஉமது திருக்குமாரனுக்குத் துணையாயிருந்து யாதொரு ஆபத்தும் நேரிடாமல் காத்து இரட்சிக்கவேண்டுமென்றும், எமது அன்னையாகிய பர்வதராஜ குமாரியே தங்கள் புதல்வரைக் காக்கவேண்டிய கடமை உம்மதே யென்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

அந்த சமயத்தில் கயமுகாசூரனனவன், யுத்தஞ்செய்யும்படி தன்சேனைகளுக்கு உத்திரவுசெய்தான். உடனே சேனுவீரரனைவரும் தங்கள் தங்கள் ஆயுதங்களாகிய பாலா, ஈட்டிதோமரம், பிண்டி, பாலம், கதை முதலானதுகளை குழந்தைவடிவமாகயிருக்கும் பிரணவத்தின்மீது பிரயோகித்தார்கள். இடையில் விற்றிறங்கைத்திறம் மெய்த்திறமுடைய சில வில்வீரர்கள் தங்கள் தங்கள் வில்லைவளைத்து நாணேற்றி குணத்தொனிக்காட்டி, மேகாஸ்திரம், நாசாஸ்திரம் மின்னலாஸ்திரம் இடியாஸ்திரம் வாயுவாஸ்திரம் அக்கினியாஸ்திரம் பிரமாஸ்திரம்சிலீமுகாஸ்திரம் இந்திராஸ்திரம் சந்திராஸ்திரம் முதலாகிய அனேகமாயிரம் பாணங்களை சோனுமாரியாகப் பொழிந்தார்கள் இதுகளைக்கண்ட பிரணவஸ்வரூபியாகிய சிறுகுழந்தை புன்சிரிப்புடன் தன் கையிலிருந்த அங்குசத்துக்குச் சகல அதிகாரமுந் தந்து தனக்கு முன்னுதாய்ப்

பூமியில் நட்டுவிட்டு ஒன்றுமறியாதவரைப்போலிருந்தார். அப்போது அரக்கர்களால் விடப்பட்ட அஸ்திர சஸ்திரங்கள் யாவும் ஒன்றின்பின் னொன்றாக வந்தவைகளைப் பிரணவஸ்வரூபத்தின் மேல்படவொட்டாமல் முன்னேயிருந்த அங்குசமானதுகமளீகரஞ்செய்தது இதனைக்கண்டு அரக்கர்கள் யிதுவென்ன ஆச்சரியம் நமது பாணங்களின் முன்னின்று உயிர்தப்பினபேர்கள் நாளதுவரையில்ஒருவருமில்லை அப்படியிருக்க நாம்விட்டபாணங்களெல்லாம் விழலுக்கிறைத்த நீரைப்போல இச்சிறுவன்பேரில் கிஞ்சிற்றும் பாணங்களெல்லாம் படாமல் யெப்படி மாயமாய்ப்போய் விட்டதென்று ஆச்சரியமும் மாச்சரியமுங்கொண்டு மேலுமேலும்பாணவருஷங்களில் ஒன்றேனும்கணபதியின்பேரில் படவொட்டாமல் யாவற்றையும் அங்குசம் கமளீகரஞ்செய்துவிட்டது அதனால் அரக்கர்படைக் கடலுக்கெல்லாம் கையும்மெய்யும் சலித்து இதுவென்ன புதுமையாகவிருக்கிறது எத்தனையோ யுத்தஞ்செய்துசெய்து ஜெயமடைந்தோம். ஒருகாலத்திலாவது நமக்குஇப்படிப்பட்ட ஆயாசமும் அசக்தியும் நேரிட்டதில்லை இதைப்பற்றி யோசிக்குமிடத்தில் இச்சிறுவன்மெத்த அசகாயசூரனாகும் ஆதலால் இவன் தனக்குஒருவருந்துணையின்றித் தனியேயிருக்கிறான் அன்னியிலும் இவனுக்கு அஸ்திர சஸ்திரங்கள்முதலானதுகளுங் கிடையாது மேலும் இவன் யிருந்தயிடத்தைவிட்டு எழுந்திருக்கவுமில்லை இவன் எப்படிப்பட்ட வீரனோ இன்று யிவனால் நாம் யாவரும் மடியும்படி நேரிடும் யென்று தோன்றுகின்றதுஅரக்கர் குலத்திற்கு நாசமும் தேவர்கள் குலத்திற்கு க்ஷேமமும்உண்டாமென்பதற்கும் தடையேயில்லையென்று நிச்சயித்து இனிஎத்தனை நாள்பூமியிலிருக்கினும் ஒருநாளைக்கிறப்பது உண்மையாதலால் நம்மால் கூடியமட்டும்போர்புரிவோம் ஜெயாபஜெயத்தின்படிமுடிகிறதென்று யோசித்துப் பாணப்பிரயோகஞ் செய்வதற்குசித்தப்பட்டிருக்கிறபோது கணபதியானவர் அருகில் தழைத்திருக்கும் தர்ப்பைப்புல்லில் ஒருதிரணமளவுகிள்ளி அதற்குப்பிரணவ மந்திரத்தையோதி வல்லவனுக்குப் புல்லாயுதமென அரக்கர் பேரில் எவினர். அந்தஅற்பமாகிய புல்லாயுதமானது அதிக உக்கிரமாகச்சென்று கயமுகாசூரன்சேனைகளையெல்லாம்கொன்று ரணக்களத்தைப் படுகளமாக்கிக் கயமுகாசூரனைக் கொல்லகிட்டிய போதும் அவன் மேகமண்டலத்தில் போயொளித்திருந்து சேனை

கள் யாவும் மடிந்துபோயினதற்கா. மெத்தவுங் கிலேசப்பட்டு ஒருவாறுகத்தேறி இராக்கதமாய்கையில் பெருச்சாளிரூபங்கொண்டு பூமியோடு பெயர்ந்துக்கொண்டோட உத்தேசித்து பிரணவத்திற்குப்பின்பாகவந்து பூமியைக்கிண்டிமுதுகடைவாய்நுழைந்து அசைக்கின்றபோது அரக்கனதுவஞ்சனைக்குப் புன்சிரிப்புக கொண்டுகணநாதர் என்ன செய்தாரென்றால் கள்ளவேடம்புனைந்துவந்த அவனை தன்னுடைய பலங்கொண்டு பூமியில் அழுத்துகிறபோது முழிகள் பிதுங்கி நாவைக்கடித்து பிராணன்நீங்குகிற சந்தர்ப்பம் நேரிட்டபடியால் மாயரூபியாகிய கயமுகாசூரன்கணநாதரைப் பலவாறுதுதித்து ஓ சுவாமி தங்களுக்கு எப்போதும் இதேவாகனமாக யிருக்கிறேன் யென்னைக்கொல்லாமல் ரக்ஷிக்க வேணுமென்று வேண்டிக்கொள்ள கணநாதர் கருணைகூர்ந்து அவன் சொற்படியே அந்தகயமுகாசூரனைதனக்கு பெருச்சாளி வாகனமாகக்கொண்டார் அதைப்பற்றி ஆகுவாகனன் யென்ற பெயருண்டாயிற்று.

## இதுவும் கணேசர் உற்பவம்,

ஆதியில் சிவபெருமான் பருவதராஜபுதல்வியாகிய பார்வதி தேவியைமணம்புரிந்துத்திருக்கைலாயகிரியையடைந்துஇருக்கிறபோது ஒருநாள் பார்வதிதேவியைப் பார்த்துத் தாயேசிவபெருமானுக்குப் பிரதமகணங்கள் கணக்கின்றியிருக்கின்றார்கள் அதுபோலதங்களுக்கும் ஒருவரிருந்தால் நலமாக யிருக்குமெனப்பார்வதிஅவள் கருத்துக்கிசைந்து பார்வதிதேவி நீராடச்சென்று அங்குசேகரித்து வைத்திருக்கும் மேன்மையாகிய தேவபரிமள சுகந்தைச்சாந்தை இரண்டு கைகளாலும் யெடுத்துக்கொண்டு தன் இறைவனாகிய சிவபெருமானது திருவுருவை மனதில் கவனித்தும் துதித்தும் அப்படி மணச்சாந்தைத் திரட்டிப்பிடித்த போது உற்பவித்தாரென்றும் சிலர் சொல்லுவார்கள் இக்காரணத்தால் இவருக்குசத்திவிநாயகரென்று பெயருண்டாயிற்று.

---

## கணேசர் விவாகம்,

இவ்வதிசயங்களை யெல்லாம் மறைவிலிருந்துபார்த்துக்கொண்டிருந்த தேவர்கள்முதல் யாவர்களும்அதிக வானந்தமடைந்தவர்

களாகி ஒன்றுக் கொண்டாடி பின்பு கணநாதரையழைத்துக்கொ ண்டு கைலயங்கிரியைச் சேர்ந்தார்கள். அப்போதுகணநாதர் தா ய்தந்தையர்களுக்கு பிணங்கிவணங்கிநின்முர் அப்படிவணங்கிய குமாரனைப் பரமசிவம்பெடுத்துப் பலவாசிகள்கூறி பார்வதியிடங் கொடுத்தார் அவ்வன்னையும் கட்டியணைத்து முத்தந்தந்துப் பல மங்களவாழ்த்துகள் வாழ்த்தி மிகவும் பிரியத்துடன் வளர்ந்து வருகிறபோது கனநாதரும் தாய்தந்தையர்களுக்கு அன்புண்டா கும்படி மிகவம் வினயமாய் நடந்துக்கொண்டுவந்தார் சிவபெரு மானும் கணபதி விஷபத்தில் அதிகமான புத்திரவிருப்பத்தை வைத்திருந்தார். இப்படி யிருக்கையில் பார்வதி பரமேஸ்வரர்க ளிருவரும் கணபதிக்குத்தக்கவயது வருமளவில் யினித்தாமத மின்றி மணமுடித்துப்பார்க்கவேண்டுமென்ற விருப்பகொண்ட னர். இப்படிக்கிருக்கிறபோது திரிலோக சஞ்சாரியாகிய நாரத ரெழுந்தருளிப் பார்வதிபரமேஸ்வரரை சேவித்து அவர்களால் மணத்துக்குரிய விசேடங்களைக்கேட்டு சந்தோஷித்து சிவபெரு மானைநோக்கிச் சொல்லுகிமுர் தெள்ளமுதாகித் திகட்டாதவள் ளலே பிரமதேவன்புதல்விகளாகிய சித்திபுத்தியென்னும் மிகச்சு ந்தரமுடைய கன்னிகைகளை யிக்கணபதிக்கு மணம்புரிவித்தால் மெத்தநன்முயிருக்குமென அதற்குச் சிவபெருமான் சந்தோஷ மடைந்து ஓய் நாரதரே நீர்சொல்லிய கன்னிகைகள் என்புதல் வனுக்குத் தக்கபெண்களாகையால் விரைவாகத் தாங்கள் சத்திய லோகத்துக்குச்சென்று இங்குநடந்தவைகளைப் பிரமனுக்குப்புக ன்று இப்படிச்செய்வது சகலருக்கும் நன்றென்று மகிழப்பேசி யிசையச்செய்து அவ்விடம் விட்டகன்று இங்குவந்து யிந்தசுப காரியத்தை நடத்திவைத்துப் பின்பு யெங்காகிலும்செல்லும் என் றபரமசிவத்தின் வார்த்தைப்படி நாரதர் சத்தியலோகத்திச்குச் சென்று சதுர்முகனிடத்திற் கலந்துபேசி முடிவுசெய்துக்கொண் டுவந்து தேவர்கள்முனிவர்கள் நாவலர் பாவலர் காவலர்முதலிய யாவரும்வந்திருந்து பரமசிவமும் பார்வதியுங் கண்டு களிக்கப் பிரம்மதேவன் வேதவிதிப்படி ஓமசாந்திமுதலிய சகலமுமநடத்த சர்வாடம்பரத்துடன் கணபதிக்குத் திருமணமுடித்து தங்கள் தங்களிருப்பிட மேவினுர்கள். கணபதியும் சித்திபுத்திகளுடன் கூடிக்கலந்து தழுவி சித்தியென்னும் மனைவியினிடம் லக்ஷன்என் னும் பிள்ளையும் புத்தியென்னும் மனைவியிடம் லாபன் என்னும் பிள்ளையும்பெற்றுப் பரமானந்தமுற் றிருந்தார்கள்,

## பூஜாவிரதக்கிரமம்.

அதன்பின்னா ஓர்நாள்சிவபெருமான் பிரம்மா விஷ்ணுதே வர்கள் முதலானோர் முன்னிலையில் கணபதியைப்பூசித்தனர், இர ண்டாவது மகாவிஷ்ணுவும் மூன்றாவது பிரமதேவரும் நான்கா வது பார்வதியும் பின்பு தேவர்கள் யாவரும் மிகுந்த சந்தோஷ த்துடன் பூசித்தனர். இவ்வாறு யாவரும் பூசித்துச் சகலத்திற் கும் பிரபுவாயிருக்கும்படிச்செய்தார்கள். அப்போது சிவபெரு மான் கணேசருக்குப் பலவரங்களைகொடுத்துஉன்பெயர் விக்கின ஹந்தாயென்றார் (இதின்பயன் யாதென்றால், விக்கினங்களனைத் தையும் போக்குபவன் சகலகணங்களுக்குந்தலைவனை நீயாவரும் பூசிக்கத்தக்கவனாக வேண்டுமென்றதே இதன்கருத்து) இவ்வாறு சிவபெருமான் ஆசிகூற சிவகணங்கள் மங்களவாத்தியங்கள் முழ க்க பெரியோர்கள் யாவரும் ஆசிர்வதிக்க தேவர்கள் கந்திருவர் கள் அட்சரசுகள் வாத்திநாட்டிய சங்கீதங்கள்பாடினார்கள். மீண் டும் சிவபெருமான் சபையிலுள்ளவர்களைப்பார்த்து ஆவணிமாத சுக்கிலபக்ஷ சந்திரோதயகாலத்தில் இராத்திரி முதற்சாமத்தில் உச்சகிரஹ பஞ்சகயோகத்தில் பார்வதிதேவி கணபதியை யீன்ற படியால் அச்சமயத்தில் கணபதியை பூசித்தல் ஓர் உத்தமோத் தமமாதலால் அன்றுமுதல் மறுவருஷம்வரும் அந்தத்திதிவரை யில் ஒவ்வொரு சதுர்த்திகளிலும் விரதத்தை நியமத்துடன்எம து கட்டளைப்படிச் செய்யவேண்டும் இப்படிச்செய்வோர் தமது குடும்பத்தில் சகல சவுக்கியங்களையும்பெற்று சுகமடைவார்களெ ன்று கட்டளையிட்டார்.

## கணநாதர் பிரபாவம்.

மேலும் இவ்விரதமானது வருஷந்தோறும் ஆவணிமாதம் அமாவாசைகடந்த வளர்பிறை சதுர்த்தி திதி உச்சிப்போது வ ரையில் உள்ளதினத்தில் செய்யத்தக்கது. இந்த விநாயக மூர்த்தி யை வரசித்தி விநாயகர் என்று பெரியோர்களால் துதிக்கப்படு வார் இம்மூர்த்தி மகாகணபதியின் மூர்த்தி பேதமேயாள் இவ ரைஉண்மை அறிவு ஆனந்தவடிவமாகிய சிவமென்றும் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தி யங்களை நடத்தும் சத்திமயமென்றும் பிரம்மா விஷ்ணுமுதலிய எல்லாத்தேவர்களையும்சகலாண்டங்களையும் தமக்குவடிவமாகக் கொண்டிருத்தலால் விஸ்வமூர்த்தி யென்றும் எல்லாக் கலைஞா

னய்களுக்கும் எல்லாக் கருமங்களுக்கும் மூலகாரணராதலின் வேதமாதாவாகிய பிரணவத்தின் பொருளாயுள்ள இவரை சாத்தேயர் சத்திக்கணபதி என்றும் சைவர்கள் சிவ கணபதியென்றும், வைஷ்ணவர்கள் விஷ்ணுவென்றும், சாங்கியர்தத்துவ கணாதிபதியென்றும் அத்வைதிகள் இந்திரியகணாதிபதியென்றும், பூர்வமீமாம்சிகள் தேவகணாதிபதி என்றும் வையாகரணிகள் சத்த கணபதியென்றும் ஆயுள்வேதியர் மூலகணபதியென்றும் பலவாறு அர்ச்சிக்கின்றனர்.

கிருஷ்ண எசுர்வேதம் அஉ-வது பிரசினம் நாராயணோபநிஷத்தில் கூறப்பட்ட பன்னிரண்டு காயத்திரியுள் ஙு-வது காயத்திரி, கணபதி காயித்திரியாம்.

அதே சங்கிதை ச-வதுகாண்டம் ஸ்ரீ உருத்திரநமோவாகப் பிரசினத்தில் கணங்களுக்கும் கணபதிக்கும் வேதவாக்கிய நமஸ்காரங்கூறப்பட்டுள்ளது.

இருக்கு எசுர் சாமம் என்னுமூன்று வேதத்தினும் கணாநாந்துவா, கணபதி, சாதனம் என்ற ஒரேகணபதி மந்திரங்கூறப்பட்டுள்ளது.

அன்றியும் கணேச உபநிஷத்து விக்னஹரவித்தை காணபதபிரமவித்தை முதலியன வேதாந்தத்துள் பிரசித்தமாக இருக்கின்றன.

சைவாகமம் காணபதாகமம் பார்க்கவபுராணம் ஸ்காந்தம் முதலிய நூல்களுள்ளும் பிரமசூத்திரத்திற்கு கபிலமுனிவர்செய்தகாணபதபாஷியத்துள்ளும் விரித்துக் கூறப்பட்ட மான்மியங்கள் பலவுண்டு அன்னியிலும் இவருக்கு நாமங்களும் அஷ்டோத்திரவிதிகளும் பலவுண்டு. அதுகளை உபதேச முகத்தால் தெரிந்துக்கொள்ளலாம்.

மேலும் இக்கணபதியின் சதுர்த்தி விரதவிதியைப் பதுமபுராணத்துள் அகஸ்தியரால் ஸ்ரீராமருக்கும் காந்தத்துள் தூர்வாச முனிவரால் ஸ்ரீகண்ணருக்கும் பவுஷியோத்தரத்துள் ஸ்ரீ கண்ணரால் தருமராசருககும் பிரயாண்டத்துள் நாரதரால் பகிரதமகாராசனுக்கும் உபதேசித்தபடி கூறப்பட்டுள்ளது.

கணேசர் உற்பவம் முற்றிற்று.

## இரண்டாவது
# சுப்பிரமண்ணியர் உற்பவம்.



ஸ்துதி-நேரிசை வெண்பா.

கங்கா கடம்பா கதிர்கா மாசிவசம்
பங்கா சரவணோற் பவாகங்கா—மைந்தாவே
லாகுபரே சாவுமைபா லாசுப்ர மண்யாகு
காகுணநீ தாவாதா கா.

---

இப்பூமியின்கண் அறுபத்தாறுகோடி ராக்கதர்களுக்கு அர
சனாகிய அசுரேசன், நந்திதேவரிட்ட சாபக்கொடுமையினால் கே
சவனாலும் தேவேந்திரனாலும் அளவற்றராக்கதர்கள் மடிந்தபடி
யால்அசுரேசன் வலுவுகுன்றித் தன்புதல்வியாகிய சுரசையென்
பவளைப் பரிவாகவளர்த்துவருகிறபோது குரவனானசுக்கிரன் அங்
குசென்று அவளுக்கு மாயவித்தைகளனைத்தையும் மந்திர பூர்வக
மாகப்போதித்து அவள்வல்லபத்தைப்பார்த்து மாயையென்னும்
பெயரிட்டு ராக்ஷசா சிறுமையினையும் தேவர்கள் சிறப்பினையும்
அரசனுக்கிருக்குங் கவலையையும் தெளிவுறவெடுத்துக்காட்டி

இனி உன்னால்தான் இக்குலந் தழைக்கவேண்டும் உன்தந்தையின் மனவருத்தமுந்தீரவேண்டும். ஆகிலும், மின்னலின்ஒளியினாலேதய ழைபுட்பிக்கும்எம்மகிமையினால் மழைபெய்யும்அவைபோலவே உன்னால் அசுரர்குலம் விருத்தியடையவேண்டியிருக்கின்றது, ஆகையால் நீதடைசொல்லாமல் இலக்குமிக்குமேலான வடிவுகொண்டுபோய் வனத்திலேதவஞ்செய்யுங்காசிபரைமையல்மூட்டி இரவில்அவரைப்புணர்ந்துவலிய பிள்ளைகளைப்பெற்றுப் பெயரிட்டுப் பரமசிவத்தைக்கருதிச்சிறந்தவரங்களைப்பெறும்படி அவுணருக்கடுத்தவேள்விகளையும் விரதங்களையும் மந்திரபூர்வகமாகப்போதித்துப் பிள்ளைகள் நலத்தைப்பெறவும் விரோதிகளாகிய தேவர்கள் பழியின் மூழ்கவும்அரியதவங்களைச்செய்ய அனுப்பிப்பின் திரும்பக்கடவாயென்று சொல்லினர் அதைக்கேட்டுமாயையானவள் சுக்கிராச்சாரியரை வணங்கி ஓ சுவாமி தங்கள் கட்டளைப்படியே சென்று முடித்துவருகிறேன் என்று தந்தையினிடஞ்சென்று ஆசானிட்டகட்டளையையோதி விடைபெற்றுக் காசிபர் தவமியற்றும் வனத்தைநாடி இலக்குமியும், இரதியும், திலோர்தமையும், மோகினியும் ஏகமாகி ஒரு வடிவங்கொண்டதை யொத்து உலகிற்கிடையாத மிகுந்த அழகுவாய்ந்த உருவுகொண்டு பூதலவாசிகளும் பாதலவாசிகளும் விண்ணுலகத்தாருந்தனது எழில்நலத்தைக் காணப்பெறின்மாரன் கணைகளுக்கிலக்காகி மயங்கி வாடித்தனைத் தொடரும்படி அன்னத்தைப்போல மெல்லனஉலவி அவ்விடத்தில் பரிமளமிகுந்த மலர்கள்வாய்ந்த பூஞ்சோலைகள் மதுரமான ஜலசமர்த்தியுள்ள தடாகங்கள் சித்திர மண்டபங்களாதிசளைத் தன் வல்லபத்தினாலுண்டுபண்ணி மறைந்திருந்தாள், அப்போது ஐம்புலன்களையொடுக்கிப் பொறிகளையடக்கிச்சித்தத்தைச் சிவத்தின்கண் செலுத்தித் தவத்தினின்று காசிபர் கண்களைவிழித்து நூதனமாக விளங்குகின்ற சிங்காரங்களைப்பார்த்து அற்புதமடைந்து யிதனையாவர் நிருமித்தரெனப்பலதிசையிலும்நாடி ஒருவரையுங் காணாது மாயையின் வஞ்சகத்திற்பட்டு ஞானவுணர்வை மறந்து பிரமித்துத் திகைத்து பொன்னுலகு மிளங்கியதோ அளகாபுரம் நழுகியதோ அல்லது பிரம்மசிருஷ்டிதானோ சிவன் செயலோ இன்னதென்று நிதானிக்கப்படவில்லையேயென்று யாதுந்தோற்றாமல் மனவாட்டமுற்று தவத்தினைத் தொடங்கத்தமதிடத்துக்குச்சென்றார், அப்போது அதையறிந்த மாயையென்பவள் இதுசமயமெனக்கருதி வயிரக்குன்றினிடத்துசோடசகலை

கலைவாய்ந்த சந்திரனைப்போலக் காணப்பட்டாள். காசிபர் அவள் வடிவழகை நோக்கி ஜகத்தினைவிளங்கும் இலக்குமியோ அசுரரை மயக்கிய மோகினிதானோ எனது பேரறிவைக் கலக்கிய இவளையாரெனமதிப்பேன் இவள் காலழகுக்கு இந்திராணியும் ஒவ்வாளெனப் பலவிதமாகத் துதித்து மெல்லெலனநெருங்கி இவ்வனத்துக்கோ ரணியாக நிற்கின்ற பெண்ணரசியே உமதுவரவென் பாக்கியவசமாகும் ஆதலால் நின துகுலம் இருப்பிடம்பெயர் தாய் தந்தை முதலியவைகளைத் தயவுசெய்து சற்றேசொல்லுமென்று கேட்டார் அதற்கு மாயை முனிவரைநோக்கி தவத்தினை விரும்பினோர்க்கும் மகாத்துமாக்களுக்கும் உம்மைப்போன்றவர்கட்கும் இதுகளாலாகவேண்டியதென்ன அன்றியும் ஞானஅறிவில்லாத மனிதரைப்போல பேசிக்கிட்ட நெருங்கிவருவது நீதியல்ல நீர்தவஞ்செய்யப்போமென்று மறுத்தாள் காசிபர்மனங்கரைந்து பெண்கள் சிகாமணியே தவசித்தி கிடைத்த பின்பும் வருந்துவதேன் பெயர்முதலியதும் பின்னிட்டுத்தெரிந்துகொள்ளுகிறேன் விரைந்து காமனைப் என்னைவருத்துகின்றதால் சற்றுத்தயவுசெய்யவேண்டுமென்று வேண்டினர் அப்போது மாயை ஓ தவசியே நான் மேருபர்வத தக்ஷிணபாரிசத்திற் பெருகும் கங்கைக்கரையைச்சேர்ந்து பின்பு நலத்தைப்பெற விருப்புற்றவ ளாதலினால் அவ்வாறே போய்வருவேன் நீர் நில்லுமென்று சொல்லினள் அதைக்கேட்டுக் காசிபர்மயங்கி ஓ பெண்ணரசியே கங்கை முதலான நதிகளையும் காசியாதிசிறந்த தலங்களையும் பொன்னுலக முதலிய நாடுகளையும் இன்னுமெவைகேட்கினும் நிமைப்போதில் தருவிப்பேன் ஆனாலென் பிராணனைமாத்திரம் நிற்கும்படித் தாபத்தைத் தீர்த்துரக்ஷியும் போகாதே நில்லும்நில்லுமென்று தொடர மாயை தன் மந்திரவலியால் மறைந்திருந்தனள். அப்போது காசிபமுனிவர்பட்ட துயரத்தைச் சொல்லிமுடியாது உடனே சூரியன் மேற்றிசையில்மறைந்து யிருள்வந்து சூழ்ந்துக்கொண்டது அக்காலையில் பன்னிப்பன்னி யிடர்க்கடலிற் படிந்து வருந்துகின்ற காசிபர் முன்னிலையில் சகல துன்பங்களுக்குங் காரணமான மாயையானவள் தான் எண்ணிவந்த எண்ணத்தை பெறுவதற்கு யிது தருணமென்றெண்ணி அவர்கள்முன் மின்னற்கொடியைப்போலத் தன்னுருவம் வெளிப்படக்காட்டிய அவள்பின்சென்று சொர்ணமயமான ஒரு மண்டபத்தைச்சேர்ந்து முதற்மாசத்தில் அவரோடு சரசசல்லாபமாய்க் கலந்தாள்.

அப்போதுகாசிபரும் அவளைமருவியணைந்துகளித்தின்பமுற்றார் அது காலையில் பிரமன்விண்டு தேவேந்திரன் விண்ணவர் முனிவராதியர்தத்தம் உள்ளம்நடுங்கப் புயவலிக் கொப்பில்லா தசூரபன்மன் மாயையிடத்துதிக்க இவ்விருவர்கள் தேகத்திலுண்டாகிய வியர்வையிற் செயசாலிகளாய் வலிவுபெற்றமுப்பதினாயிரம்வெள்ளம் தானவர்கள் உதித்தனர்கள். இவர்களையும் முதல்புத்திரனையும் அவ்விடத்தில் நிருத்திவிட்டு காசிபரை மற்றொரு சித்திரமண்டபத்திற் கொண்டுபோய் மாயையானவள் முன்னுருவைமாற்றிப் பெண்சிங்கவடிவுகொள்ள அவரும் ஆண் சிங்கஉருவங்கொண்டுபுணர்ந்து இரண்டாஞ் சாமத்தில் ஆயிர முகங்களையும், இரண்டாயிரங் கரங்களையும் பெற்ற சிங்கமுகாசூரன் உதித்தான் அப்போது, அவர்களிருவரிடத்திலும் பெருகியவியர்வையில் நாற்பதினாயிரம்வெள்ளம் சிங்கமுகம் பெற்றஇராக்கதர்பிறந்தனர். அவர்களையும் அவ்விடத்தில்நிருத்தி வேறொரு மண்டபத்திற்சென்று மாயைப்பெண் யானையுருப்பெற்று நிற்க காசிபரும் ஆண்யானையுருக்கொண்டுகூடினார். உடனே மூன்றாஞ் சாமத்தில் நாற்கோடுகளைப்பெற்றயானை முகத்துடன் தாருகாசூரன்உதித்தான் அப்போதவ்விருவருக்கும் உண்டாகிய வியர்வையில் நாற்பதினாயிரம்வெள்ளம் யானைமுகங்களைப்பெற்ற அவுணர்கள்பிறந்தார்கள். அவர்களையும் அங்குநிருத்தி மாயைமற்றொரு சந்திரகாந்த மாளிகையைச்சேர்ந்து செம்மரியாட்டின் பேடாயுருக்கொள்ளமுனிவரும் ஆண்ஆட்டின் உருக்கொண்டு கூடினார்கள் நான்காஞ்சாமத்தில் அசமுகியென்னும் பெண்ணானவள் அவதரித்தாள். அப்போதுண்டாகியவியர்வையில் முப்பதினாயிரம் வெள்ளம் அவுணர் பிறந்தார்கள். அவர்களையும் அங்கு நிருத்தி அவ்விருவரும் மற்றமண்டபங்கள் தோறும் சென்று யாளி, புலி, குதிரை, மான், கரடிமுதலான மிருகங்களினதுவடிவைப்பெற்றுப்புணர விடியற்காலத்தில் அவ்வைந்துமுகங்களைப் பெற்று அறுபதினாயிரம் வெள்ளம் அவுணர்கள்தோன்றினர். இவ்வாறு மாயையானவள் காசிபரைக்கூடி சூரன் முதலாகிய நான்குபிள்ளைகளையும் இரண்டு லக்ஷம் வெள்ளம் சேனைகளையும் ஓரிரவிற் பெற்றனள்.

இவர்கள் உதித்த காலத்தில் சூரன் பெறவிருக்கிற ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் அளவற்ற துர்நிமித்தங்களுண்டாயின அவ்வண்டங்களி லுள்ளவர்கள் இதென்ன அனர்த்தத்துக்குஹே

துவோவென்று மனம் நடுங்கி யேங்கியிருந்தார்கள்- அப்போது சூரபன்மன்சிங்கமுகன் தாருகன்மூவரும் காசிபரைவணங்கிஇனி யாங்கள்செய்யவேண்டியவைகளைக்கட்டளையிடவேண்டுமென்று வேண்டினார்கள். அப்படி வேண்டிக்கொண்ட பிள்ளைகளின்மேல் கருணைகூர்ந்து அப்பா புதல்வர்களே நான்சொல்லுவதைக்கவனி த்துக் கேளுங்கள் முன்னம் நன் மார்க்கத்திலீடுபட்டு பிர்ம்மரிஷி கள், தேவரிஷிகள், ராஜரிஷிகள், ஆசானையடுத்துத் தவம்யாகம் யித்தியாதிகளைச்செய்து வெகுகாலம்மீடித்து அழியாச்சிரஞ்சீவி களாக விருக்கிறார்கள். அவர்கள் யாமரென்றால், மார்க்கண்டேயர், அசுவத்தாமர், ஆஞ்சநேயர், பலிச்சக்கிரவர்த்திமுதலானசாதுக் கள் இவ்வுலகத்தில்கேடில்லாவாழ்வைப்பெற்றார்கள். அதுபோல வே நீங்களும் தவம்யாகம் முதலியவைகளினால் சிவபெருமானுக் குத்திருப்தியுண்டாகச்செய்வீர்களாகில் உங்களுக்கொருதீங்கும் நேரிடாமல்சுகஜீவிகளாய்வாழ்வீர்களென்றுசொல்லிபலமந்திரங் களையும்போதித்துப் போய்வாருங்களப்பா வெனச்சூரன்முதலா னோருந் தவஞ்செய்யும்இடத்தை நோக்கிச்சென்றுதவம் யாகம் யிதுகளை விதிப்படிமுடிக்கிறகாலத்தில் தபாக்கினியும்யாகத்தின் புகையும் சகலாண்டங்களிலும்நிறைந்து அங்கங்குள்ளவர்கள்நிலை தடுமாறி நிற்கயிடமில்லாமற்றியங்கி மயங்கிச்சிவபெருமானைத்து தித்துப்போற்றஅப்போதுசிவபெருமான்ரிஷபவாகனத்தின்மீது பார்வதி சமேதாரய்ச்சென்றுசூரபன்மன் தவநிலையையடுத்துதெ ரிசனங்கொடுத்து அப்பாஅரக்கர்குலவேந்தனே நினதுதவத்திற் கும் நீ செய்தயாகத்திற்கும் மெச்சினேன் உனக்குவேண்டியவர ங்களைக்கேளும் தருகிறேன்என சூரன்விண்ணப்பஞ்செய்கிறான். சச்சிதானக்கடவுளே தேவரீருடைய தெரிசனம்பெற்றுச் சிறப்ப டைந்தேனானாலும் விசாலமாகிய பூமிகளையுடையபலபுவனங்களை க்கொண்டிருக்கும் அண்டங்களனைத்தினுக்கும்சக்கிரேஸ்வரனாய் அரசுசெலுத்தவும் அவைகளைக்காத்துரக்ஷிக்கவல்லஆக்கினைசக்க ரமும் நினைத்ததற் தமுன் அவைகளைச்சுற்றிப்பார்த்துவரும்வேக முள்ள வாகனங்களும் எக்காலமும்அழிவில்லாதவச்சிரதேகமும் தந்தருளவேண்டும். இதன்றியும், அலைகளைவீசுந்திருப்பாற்கடலி ல் பள்ளிகொள்ளும் கேசவன்முதலானவர்எதிர்த்துப்போர்செய் தாலும்பின்னிடையாமல் அவர்களைவாட்டியோட்டும்உருவலியு ம்சமஸ்தகதேவாஸ்திரங்களும்நாசமில்லாமல்என்றுஞ்சிரஞ்சீவியா

யிருக்கையும் கடாக்ஷிக்கவேணுமென்று சூரன் வேண்டிக்கொள்ள சிவபெருமான் அந்தப்படியே யாவத்வரங்களும் நூற்றெட்டு யுகங்கள்வரையில் ஆயுளுந்தந்துச்சென்றார், பின்பு சூரபன்மன் சிவபெருமான் தந்தவரத்தின் பலத்தால்செருக்கடைந்து பிரமன்விஷ்ணுமுதலானோரையும் ஏவலராகக்கொண்டு தவம் எக்கியம் முதலானதுகளைக்கெடுத்துச் சகலரையும் கஷ்டத்துக்குள்ளாகச் செய்து தன்னினங்களை மேன்மையாகவகித்து தனக்கு நிகர் ஒருவருமில்லையென்று யிருமாப்புடன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆக்கினைக்குள் ஏகசக்கிராதிபதியாய் ஆண்டுவந்தான்.

அப்போது பிரம்மா விஷ்ணுமுதலான தேவர்களும், சூரபன்மன்செய்யும் அக்கிரமங்களுக்குத் தாளமாட்டாமல் பரமசிவத்தினிடம் முறையிட்டுக்கொள்ள சிவபெருமான் தேவர்கள் குறைதீரவும் அரக்கர்கள் எமபுரஞ்சேரவும் தக்க யோசனைசெய்து பின்பு சுப்பிரமணியரை உற்பவிக்கச்செய்தார்.

அதெப்படியெனில், ஆலகால விஷத்தினையுண்டு மன்னுயிரனைத்தினையும் காத்தருளிய சிவபெருமான் தமது அனல்விழிகளின் மூலமாய்ப்படைத்த தீக்ஷண்ணியமுள்ள தீப்பொறிகளை வாய்வுதேவனும் அக்கினிதேவனும் சரவணப்பொய்கையிற் சேர்ப்பித்துப் பிரம்மா விஷ்ணு முதலானதேவர்களும் சரவணப் பொய்கையைச்சூழ்ந்து காத்திருந்தார்கள். அப்போது வானவெல்லையிற்செல்லுஞ் சூரியனுக்குப்பிரியமுள்ள வெண்டாமரைகளுடன் செந்தாமரைமலரையும்படைத்துத் தாங்கியிருக்கும் தன்மையைப்போலவே சரவணப் பொய்கையானது சிவபிரான் விழியினிடத்தெழுந்த அனற்பொறிகளையுந் தன்னிடத்தில் தரித்திருந்தது. இப்படிக்கு அருவாய் உருவாய்ப்பலவாய் ஏகமாய்பிரம்மசொரூபமாய் விளங்கும் சோதிப்பொறிகளானது பின்பு ஒரு ரூபத்தினைக்கொண்டு கிருபைவிளங்குஞ் சண்முகங்களையும் பன்னிருகரங்களையும்படைத்த ஒப்பற்ற முருகக்கடவுளானவர் உலகங்களனைத்தும் பிழைத்தற்பொருட்டுத் திருவுருவினைப்பெற்று விளங்கினர். அத்ததியில்நன்னிமித்தங்களுண்டாயின. வானத்தில் தேவதுந்துமி முதலாகிய வாத்தியங்கள் பேரொளியைக்காட்டி முழங்கின. நான்கு வேதங்களுந்துதித்து ஆரவாரங்களைச் செய்தன. பிரம்மா விஷ்ணு தேவேந்திரன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் கருடர்கந்திருவர் சித்

தவித்தியாதரர் பன்னகர் யக்ஷர்முதவானவர்கள் பரிமளமிகுந்த பாரிசாத புஷ்பங்களைவாரிவாரிச் சோனைமாரியைப்போலச் சிவ குமாரன்மீது மங்களாகரமாகத்தூவி கர்த்தனே அடியேங்களிட த்திற் கிருபையுற்றுப்பார்த்து ரக்ஷிக்கவேண்டுமென்று கொண் டாடிச் சரவணப்பொய்கையைச் சுற்றிச்சுற்றித் திரிந்துக்கொண் டிருந்தார்கள். அதில் விஷ்ணுவானவர் கார்த்திகைமுதலிய கன் னியர்களைத்தருவித்துநீங்கள்குழந்தைவடிவுபெற்றிருக்கும் எம துகடவுளுக்கு உங்கள் கொங்கைகளிற்பெருகும் பாலை உண் ணக்கொடுங்களென அவர்களந்தப்படியே பாலைக்கொடுக்க உண் டுவளர்ந்திருந்தார்.

ஆதிசத்தியாகிய பார்வதி மாந்தளிரினும் மிருதுவாகிய தன் பாதங்களிற் றரித்திருந்த சொர்னக் கிண்கிணிகளில் சிலது சழ ண்டு பூமியில்விழுந்தது. அதனைச் சிவபெருமான் கண் ணுற்றமா த்திரத்தில் ஒன்பதுபேர் பெண்ரூபந்தரித்துச் சிவபெருமானுக் கெதிரில் நிற்கக்கண்டு அப்பரமசிவத்தின் அருளுணைக்கினால் அப் பெண்கள் உடனே கருப்பமடைந்து வீரவாகுதேவர்முதல் ஒன் பதுவீரர்களுடன் அப்பெண்களின் வியர்வைஜலத்தினால் ஜெய சாலிகளாகிய லக்ஷம்பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களனைவரை யுங்கண்ட கரைமிடத்தண்ணல், குமாரர்களே! கேட்பீராக நீங்க ளனைவரும் ஜயசாலிகளாகமீறி இந்திரன் முதலிய தேவர்களுக் குப் பகைவராகிய இராக்ஷதர் முதலியோரைக் கண்டதுண்டமா கச் சங்கரித்து வேறறக்களையவிருக்கின்ற நமது திருக்குமாரனா கிய குமாரசுவாமிக்குப் படைத்துணைவராக விருக்கக்கடவீர்க ளென்று அனுக்கிரகஞ்செய்துவேண்டிய வரங்களைத்தந்து விடை தாப்பெற்றுக்கொண்டு சரவணப் பொய்கையி னிடத்தில்வந்து சண்முகக்கடவுளுடன் கலந்துசென்று இராக்கதரோடு யுத்தஞ் செய்து தாருகன், யாளிமுகன், சூரபன்மன் முதலிய ராக்கதர்க ளை வேறறக்களைந்து தேவேந்திரன் வேண்டுகோளினால் தேவ லோகததையடைந்து தேவசிங்காதனத்தில் பட்டாபிஷேகஞ்செ ய்விக்கத் தேவர் சேனாபதியென்று பெயர்வகித்து இந்திரன் புத ல்வியாகிய தெய்வயானையை மணம்புரிந்து சூரபன்மனை மயில்வா கனமாகக்கொண்டார்.

சுப்பிரமண்ணியர் உற்பவம்.

முற்றிற்று.

## மூன்றாவது

# வீரபத்திரரும் காளியும் உற்பவம்.

### அதேகாலத்தில் பூதகணங்களும் காளிகணங்களும் உற்பவம்



### வீரபத்திரர்-துதி

முக்கண்ணுஞ் சடைமுடியும் வாளுங்கொண்ட
முன்னவனை மூவேழு வுலகம்பூத்த
செக்கர்வான் மணிமவுலி யிடப்பாலோங்குஞ்
சேயிழையைப் பெற்றார்தமகஞ் சிதைத்த
உக்கிரமாமூர்த்தியனை யுமையாளன்று
உயிர்த்தமாங்காளி யோடாடல்கொண்ட
விக்கிரமாவீரனையெம் வினைவேர்வீழ்த்தும்
வீரபத்திரதேவைப் பணிந்துய்வாமால்.

சந்திரசடாதரமூர்த்தியாகிய ஸ்ரீசிவபெருமானுக்கு மாமனும் திரிலோகங்களுக் கன்னியாகிய பார்வதிதேவிக்கு தந்தையும் ஆகியதக்கன் யாகத்தில் சிவபெருமானுக்குத் தரவேண்டிய அவிர்பாகத்தைக்கொடாமலும் பரமசிவத்தை அவமதித்துப் பேசியதாலும், பார்வதிகேட்டு மனம்பொறுமல் கயிலைக்கெழுந்தருளி தன்னுதனிடத்தில் விண்ணப்பஞ்செய்யத் தாமதகுணத்தினால் நெற்றிக்கண்ணிலிருந்து உதிர்ந்த அக்கினிப்பொறியொன்றால் சகலஉலகமும் நடுங்கி பூகம்பமானதுபோல அசைந்தாட ஆயிரஞ்சிரங்களும் இரண்டாயிரஞ்செவிகளும் ஆயிரம்வாயும் இளம்பிறையையொத்த கோரைப்பற்களும் இரண்டாயிரங்கரங்களும் அதுகளில் குந்தம், வாள், பலகை, வேல், தோமரம், பிண்டி, பாலம் எழு, குலிசம், சூலம், வில், சரம், தண்டம், வச்சிரம் முதலியபடைகள் மின்னலைப்போல ஜொலிக்கவும் பாதாரவிந்தங்களில்தண்டை வீரகண்டையுடன் உதித்தபடியால் இவருக்கு வீரபத்திரரென்னும் பெயருண்டாயிற்று.

அச்சமயத்தில் உமையவளது கோபாக்கினியினால் கண்ணில் நின்றும் பத்திரகாளியுதித்தாள். அவ்விருவர்காக்ஷியைக் சிவபிரான்உமையவளுடன்கண்டு கிருபாநோக்கம் பாலித்தகாலத்தில்அவர்களிருவரும் சிவபெருமானுக்கும்பார்வதிக்கும்வந்தனம்புரிந்து எங்களுக்கு என்னகட்டளையென்று கேட்டார்கள். அப்போதுபரமசிவம் அவர்களைநோக்கி நம்மையன்றித்தக்கன் வேள்விசாலைக்குட்சென்று அவிர்பாகத்தைக்கொடுத்தால்வாங்கிவருவீர் தடுப்பானாயின் அவன் சிரத்தைக்கண்டித்து அவனுக்குதவியாய்ச் சூழ்ந்திருக்கும் தேவர்முதல் யாவரையும் அதஞ்செய்து யாகத்தைஅழித்து மீண்டும் வரக்கடவீர் அதுசமயத்தில் நாமும் அவ்விடத்திற்கு எழுந்தருளுவோமென்றுரைத்துஉடனேதனது வியர்வையிலும் மயிர்க்காலிலும் அளவற்ற பூதங்களையும் காளிகளையும்படைத்தார். அவர்கள் யாளி, சிங்கம், கரடி, யானை. புலியாதி கொடிய மிருகங்களின் முகம்ஒன்றுபத்துஐம்பது நூறுஆயிரம் பதினாயிரம்விளங்க அதற்கிரட்டித்தகரங்களும் பலவாயுதங்களைக் கொண்டு பிரகாசிக்கப் பாதங்களில் வீரவெண்டையமும் சிலம்பும், ஒலிக்கப் பசியினால் வருந்தி ஒரு நொடியில் உலகங்களனைத்தையும் அழிக்கவல்ல பூதங்களும் காளிக்கூட்டங்கள்சூழவீரபத்திரரானவர் அதிக விரைவாகத் தக்கன் யாகசாலையைக்சூழ்ந்

துக்கொண்டு பூதத்தலைவரைநோக்கி இவன் வாசலினிடங்களினும் புரத்தினும் வானவெல்லையினும் நீங்கள் காவல்கொண்டொருவரையும் விடாமல் பாதுகாத்திருங்களென்று கட்டளையிட்டு தனது வீரமும் பிரதாபமும்யாவருக்கும் தெரியும்படி உக்கிரங்கொண்டு வெகுண்டுசீறி பிரம்மா விஷ்ணு தேவர்கள் முதலானோர் தலைக்காட்டாதபடிக்குவாட்டித் தக்கனையும் அவன்மனைவியையுங் கொன்றுயாகத்தைஅழித்துசின்னபின்னப்படுத்துகிறபோது கைகளறுந்தவர்களும்மெய்களறுந்தவரும் கால்களறுந்தோரும்தோள்களறுந்தோரும் சிரங்களறுந்தோரும் உரங்களறுந்தோரும் இந்தப்படி வீரபத்திர சுவாமியானவர் சினமிகுந்து ரிஷிகணங்கள் தவிரமற்ற தேவர்கள் கூட்டங்களில் ஒருவரையேனும் விடாமல் அடித்து மாய்த்து விட்டபோது பிரமன் சிவபெருமானை வேண்டிக்கொண்டு ஓ கர்த்தனே, எனது குமாரனாகிய தக்கனைத்தருவிக்க வேணுமென்று துதிக்கச்சிவபெருமான் வீரபத்திரரை கடைக்கண்ணாற் பார்த்தமாத்திரத்தில் வீரபத்திரர் அக்குறிப்பையுணர்ந்து தனது கோபத்தைத்தணித்து சந்துஷ்டராகவிருந்தார் உடனேசிவபெருமான்தக்கன்தேகத்தைத் தருவித்து அவிடத்தில் வெட்டுண்டுகிடந்த ஆட்டுக்கிடாவின் தலையைப்பொருத்தித் தமது கடாக்ஷத்தினால் தக்கனோடு அங்குமடிந்துக் கிடப்பவர்களை யெல்லாம் எழுப்பி வீரபத்திரர் முதலான பூதகணங்கள் சூழக் கயிலைக் கெழுந்தருளினார்.

### வீரபத்திரர் உற்பவம்

முற்றிற்று.

## நான்காவது

# பசுக்களின் அங்கலட்சணம்.



வானுலகு மண்ணுலகும் மறையு மெல்லா
வைப்பு மருட்பிரமாதி யாவுமோங்கப்
தானலகுந் தயிர்நெய்யுமோர்ச் சருமங்கோரோ
சனைமயங்கோ சலமாதி யாவுந் தந்திங்
கேனையெக்கி யாதிகட்கு முயிராய்த் தேவ
ரேற்றங்கப் புண்ணிய சொரூபமாகி
ஆனெனப்பே ருற்றுமறை யாதியேற்று
மாதியையெம் பசுத்தேவைப் பணிது மன்றே.

கேளாய்பார்வதி! உலகத்திலுதித்த பசுக் கூட்டங்களுக்குப் புல்முதலகிய ஆகாரங்களைச்சரியாய்க்கொடுத்துப்போஷிக்காமல் எச்சில் தண்ணீர்காட்டுவதும் அதுகளை தூரஸ்ரீகள் யிருக்குமிடத்திலும் அசுசியானயிடத்திலும் பிழக்கடையிலும்கட்டுவதும் கன்றுக்குப் பாலைவிடாமற் கரந்துக்கொள்வதும் அவைகள் பால்கொடாவிட்டால் அடிப்பதும் வைவதுமுதலாகிய அக்கிரமங்களையே விர்த்திசெய்துக்கொண்டு அதுகளின் பாலைக்காய்ச்சித்தயிராக்கிக் கடைந்து வெண்ணையெடுத்து மோரையும் நெய்யையும் விக்கிரயஞ்செய்து மானிடர்கள் ஜீவனஞ்செய்துக்கொண்டு வருகிறார்கள்

அப்பசுவினங்களின் பெருமையெப்படியெனில் பசுக்களின் நான்குகால்களில் பிரமதேவன், பாதங்களில் குபேரன், இடையில் நாராயணன், மயிரில்முக்கோடிதேவர்கள், வாலில்தருமதேவதைகள், யோனியில் ஸ்ரீமகாலட்சுமி, மடியில் அமுதகூபாளர்கள், அடிவயிற்றில் பன்னகர்கள், வயற்றில் அக்கினி, முசுப்பில் சாவித்திரி, நெஞ்சில் பகலனென்னுந்தேவதை, வரிமடிப்பில் நீயும், கண்டத்தில்நானும், தவடையில் அஷ்டவசுக்களும், முகவாய்க்கட்டையில் சந்திராதித்தரும், புட்டத்தில் ஜீவன்முத்தர்கள், நடுநெற்றியில் சித்தர்கள், மூக்கில் வாயு, கொம்பில் எமன், செவிகளில் சப்தரிஷிகள், முகத்தில் தேவேந்திரன், அதினிரத்தம் சந்திரகலை, மாம்சம் சத்தி, இந்தப்படியாக தேவர்கள் ரிஷிகள் அனைவர்களும் பசுக்களின் அவயவங்களிற் பொருந்தியிருப்பதால் அதன் மேன்மையாகிய புனிதத்தைச் சாமானியமனிதர்கள்உணர்ந்து ஆதரிப்பது கடினம். மிகுந்ததெளிவினையுடைய விவேகிகள் அதனுடைய அருமையும் பெருமையும் தெரிந்து வினயத்துடன் போஷிப்பார்கள்.

ஓ பார்வதியே! மேலும் கோவைத்தடிக் கொம்புகளினாலும் முப்பிரி கயிற்றினாலும் பிரம்புகளினாலும் மற்றுமெதைக்கொண்டாகிலும் அடிப்பது மகாபாதம் அன்னியிலும் நஞ்சை புஞ்சை வயல்களில் மேயும்பசுவைக்கண்டால் ஓசைபடக்கைகளைத்தட்டி அதட்டி யோட்டவேண்டும் இவ்வுபாயத்திற்கும் அசையாவிடில் தர்ப்பைப்புல்களினாலும் வைக்கோல்காரைகளினாலும் உதட்டியாய்த்தட்டித் தட்டியோட்டுவது மிகவும்புண்ணியம் இதற்குமேற்பட்டுச் செய்யும்படியானதெல்லாம் அதிகபாவமேயாம் இந்தப்படியாக பசுக்களையடிக்காமலும் கன்றுகளுக்கு எதேஷ்டமாக பாலைவிட்டும் பிரியமாக அருமைபெருமைகளைப் பாராட்டி அனேகம் பேர்கள் ஜென்மசாபல்யம் பெற்றார்கள் அவர்களி லுனக்கொருமகாரிஷியின் கதையை விபரமாகச் சொல்லுகிறேன் கேளாய் மலைமகளே.

பிரம்மஞான சம்பன்னராகிய சுமித்திரமா முனிவரென்னும் தவசிரேஷ்டர் ஒரு பசுவின்கன்றை வளர்த்துவந்தார் அதெவ்வண்ணமெனில் விடியற்காலத்தில் இம்முனிவரெழுந்தவுடன்பசுவின் கன்றினிடம் வந்து தீர்க்கதெண்டனிட்டெழுந்து சென்று ஸ்நானநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திரும்பவும் வந்து அப்பசுவையவிழ்த்து சுத்தமாகிய யிடத்தில்கட்டி புல்முதலாகிய ஆகாரங்களை எதேஷ்டமாய் தந்து ஆசித்துநேசித்துப் போஷித்து இங்

தப்படியாய் அம்முனிவர் பசுவின்மேல் அதிகபிரியம் வைத்துதட விக்கொடுப்பதும் சொரிவதும் குளிப்பாட்டுவதும் புல்லிருக்குமிடத்தில்விட்டு மேய்த்தும் வருகிறகாலத்தில் அங்கொரு எருது வந்து இப்பசுவுடன் பொலிந்துபோயிற்று அதனால் பசு கர்ப்பந்தரித்துப் பூரணமாகிக் கிடாரிக்கன்றை ஈன்றுகன்றைப் பரிவுடன்பார்த்துப் பாலைத்தந்துவர நாளுக்குநாள் அக்கன்று விருத்தியடைந்து சிலவருடங்களுக்கெல்லாம் தாயொருகன்றும் தானொருகன்றும் ஈன்றது அதுகளிரண்டும் தழைத்துக் கன்றுகள்போட இவ்வண்ணம் ஒவ்வொரு வருஷத்திற்குந் தப்பாமல் கன்றுகளை யீந்துவந்ததால் பல துளி பெருவெள்ளமென்பதுபோல பசுக்கூட்டம்பெருகி பெருத்தமந்தையாயிற்று இதைக்கண்டு சுமித்திரமாமுனிவர் ஆசைமேலிட்டு அன்புடன் அப்பசுவர்க்கங்களைமேய்ப்பது தேய்த்தக்குளிப்பாட்டுவது முதலாகிய வேலைகளுக்கு கிஞ்சித்துஞ் சலியாமல் போஷித்துக்கொண்டிருந்தார்.

இந்தப்படியாக நாள்தோறும் சவரக்ஷணை செய்துக்கொண்டிருக்கும் சுமுத்திரமாமுனிவரிடத்தில் பழகியபிரியத்தினால் பசுக்கள் யாவும் அம்முனிவர் சென்றால் செல்லும் நின்றால் நிற்கும் படுத்தால்படுக்கும் இப்படி அவரைவிட்டுப் பிரியாமலிருந்ததுகள் அவரும் அதுகளின்மீது அன்புமாறுமலும் அதுகளின் குறிப்பறிந்து பசிதாக முதலியதும் அருந்தச்செய்வதுடன் நோயண்டாமல் அவிழ்தங்களைத்தந்து காப்பாத்திக்கொண்டு அப்பசுக்களின் கன்றுகளைப்போலத் தானுமொரு கன்றாய்ப் பசுக்களின்முலையில் வாயைவைத்துப் பாலையுண்டு தான் மானிடனென்றும் அதுகள் பசுக்களென்றும் பேதமெண்ணுமல் அவைகளுடன் விளையாடி காலங்கழித்துவந்தார் இவரது நடவடிக்கைகளை அங்கேவசிக்கும் தவசிகள் கண்டு வியப்புற்று இவருக்குப் பீனரிஷியென்றும் நூதனபேரிட்டழைக்கக் காலங்கழித்துவந்தார்.

இவ்வண்ணம் சிலகாலம் பசுக்களைமேய்த்து வருகையில் அமாவாசைகடந்து மூன்றாவதுநாளிலிருந்து சந்திரன் நாளுக்குநாள்விருத்தியடைவதைப்போல பசுக்கூட்டங்கள் கன்களைமேலும்மேலும் ஈன்று விர்த்தியடைந்து ஆயிரம்பசுக்களாகி பெருத்தமந்தையாயிற்று இம்மந்தையை ஒருநாள் பீனமகாமுனிவர்ஒட்டிக்கொண்டுபோய் அங்குள்ள ஓர்மடுவின்கரையோரம்மேயவிட்டுத் தான் ஒருமரத்தடியிலுட்கார்ந்திருந்தார்அப்போது அம்மடுவின்

நடுவிலிருந்து ஜலம் கரைபுரளும்படியாக வெகு ஆரவாரத்துடன் விளையாடிக்கொண்டிருக்குஞ் சிலஸ்ரீகளை கரையோரம்மேய்ந்துக் கொண்டிருந்த பசுக்கூட்டங்கள்கண்டு பிரமித்து அவர்களை நோக்கி நீங்களெந்தவூர் உங்கள்பேரென்ன தவசிகள் வசிக்கும் இக் காட்டிற்கு என்னகாரணமாய் வந்தீர்கள் இவைகளை ஒளியாமற் சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொள்ள மடுவில் குளித்து விளையாடிக்கொண்டிருந்த ஸ்ரீகள்கேட்டு பசுக்கூட்டங்களை நோக்கிச் சொல்லுகின்றார்கள்.

கேளுங்கள் ஆனிரைகளே பூர்வத்தில் நாங்கள் பசுஜென்மங்கள் யக்கியபசுவாகி உயிர்விட்டபடியால் இப்போது உத்தமப்பெண்பிறப்பாக யிருக்கின்றோம் நாங்கள் வசிக்கும் உலகம் ஆனுலகென்றும் பசுலோகமென்றும் சொல்லப்படுமென்ன அம்மொழிகளைக்கேட்ட பசுக்கூட்டம் அனைத்தும் அம்மாதர்களை நோக்கி பெறுவதற்கரிதாகிய புனித பதவியை யடைந்த ஸ்ரீகளே தயவு செய்து யெங்களையும் நீங்களடைந்த ஆனுலகஞ் சேரும்படியான உபாயத்தைச்சொல்லி எங்களையும் உங்களுடன சேர்த்துக்கொள்ளும்படி நாங்கள் உங்கள் திருவடியைத் துதித்து வேண்டுகிறோமென்று நயமாகப்பேசிய பசுக்கூட்டத்தின் சொற்களைக்கேட்ட ஸ்ரீகளுக்குத் தயாளம்பிறந்து நீங்களனைவரும் இக்காட்டிற்கடுத்த நாட்டையடைந்து அந்நகரத்தையாளும் அந்திராஜன்செய்யும் யெக்கியப் பசுக்களாகி உயிரைவிடுவீர்களானால் பசுலோகமடைவீர்களென்று தக்க உபாயத்தை நவின்றுச்சென்றார்கள் இந்த ரகசியத்தைக்கேட்ட ஆவினங்களனைத்தும் பிரம்மானந்தமடைந்து யாகத்தில் பிராணனை விடத்திடங்கொண்டு நாட்டுக்குச்செல்ல உத்தேசித்து மறுபடியும் நாமென்ன நன்றிகெட்டவர்களாக நம்மைக்காப்பாத்திவந்த சுமித்திராமுனிவரைவிட்டு யாகப்பசுவாகி இறந்தபோதிலும் (செய்தவமறந்தால் கைதவமாளு) மென்றபடி நமக்கு ஆகாரந்தந்து ததியறிந்துக்காப்பாத்தினமுனிவரைவிட்டு நாம்மாத்திரம் புனிதபதவியடைவது தருமமல்லவிம் முனிவரையும் நம்முடன் அழைத்துப்போவதே மிகவும் விசேஷமென்று யோசித்து முனிவரிடம் வந்து தங்கள் கருத்தை யறிவிக்க அவர்சம்மதியாமல் கடுகடுத்து பேசியதால் உடனே நாட்டில் வசிக்கும் சில கபிலைப்பசுக்கள் இந்தவிருத்தாந்தங்கள் யாவுமுணர்ந்து காட்டில்வசிக்கும் வைதிகப்பசுக்களை நோக்கி உங்களால்

இம்முனிவரைக் கொல்லத் துணிவுண்டாகமாட்டாது. நாங்கள் கொன்றுவிடுகிறோம் ஆகிலும் இவரைக் கொல்லுவதினால் எங்களுக்குண்டாகும் பலன்யாது விரதங்கெட்டாலும் சுகமுண்டாக வேணும் சுகங்கெட்டாலும் விரதபலனுண்டாக வேணுமென்றபடி யெங்களுக்கேதேனும் ஒரு பலன் கிட்டும்படிச்சொல்வீராகில் இம்முனிவரை ஒரு நிமைப்பொழுதில் கொன்றுவிடுகிறோமென்று நாட்டுக்கபிலைப் பசுக்களை நோக்கி நாட்டுவைதிகப் பசுக்கள் சொல்லுகின்றதுகள்.

ஓ கபிலைப்பசுக்களே? கேளுங்கள் யாரேனும் யெங்களைத் தானங்கொடுத்த பலனைப்பார்க்கிலும் நாலுபங்கு அதிகபலன் உங்களைத் தானம்பண்ணினவர்களுக்கு உண்டாகக்கடவதென்று வரங்கொடுத்ததுகள் இவ்வரத்தைப் பெற்றுக்கொண்ட கபிலைப் பசுக்கள் ஆனந்தத்தையடைந்து களிப்பின்மிகுதியால்முனிவரைப்பாய்ந்து கொன்றுவிட்டதுகள். உடனே முனிவரது பிராணன் ஆவுலகத்தார் எதிர்கொண் டழைத்துப்போய் பசுலோகத்திற் சேர்த்தார்கள் பின்பு மகாரிஷிவளர்த்த ஆவினங்கள் குற்றமற்ற அக்கிராஜன் யாகப்பசுக்களாகி மறித்து ஆவுலகடைந்து மீளமகாரிஷியையும் அவரைச் சார்ந்தவர்களையுங்கண்டு வணங்கிப்புனிதஜென்மம்பெற்றதுகள்.

ஆகையால் ஓ பார்வதி? சகலமானதேவதைகளும் பசுவினிடத்தில் வசித்திருப்பதால் தேவதைகளைப் பார்க்கிலும் பசுக்கள் மேலாகிய புனிதம் பெற்றதுகள் என்று மகாதேவன் புகலக்கேட்ட ஆதிசக்தி ஆனந்தமடைந்து பரமசிவத்துக்கு வந்தனந்தந்து வினவுகிறாள்,

பசுக்களின் அங்கலக்ஷணம்

முற்றிற்று.

ஐந்தாவது

# மகாவிஷ்ணு உற்பவம்.





மகாவிஷ்ணு துதி.

திருவருளா லுலகேழு மளித்துக் காத்துத்
தேவரெலாம் பரவுமருட் கடவுளாகி
அருமறையா றங்கநெறி யருட்கோ லோச்சு
மாதிபனை யுலகுண்ட மாலை யன்று
ளருச்சுனற்குப் பரபோத முபதேசித்த
வண்ணலைப்பூ மாதுவளர் மார்பி னானைத்
திருமாலை யரக்கர்குலத் தேவைத் தேவர்
செல்வத்தை சிந்தித்துப்பிறவி தீர்வாம்.

மகாவிஷ்ணுவென்பவர் சகலலோகாதிகாரராய் மும்மூர்த்தி சொரூபராய் பஞ்சகிருத்திய தாணுவாய் சகலாண்ட கோடிகளையும் தனது கிருபாகடாக்ஷத்தினால் தனுகரண புவனபோகங்களையுங்கொடுத்து ரக்ஷிப்பவராய். வைகுந்த லோகவாசராய் அவ்யாப்த சமஸ்தக்காமனாய்த்திரிவிரமனாய் விளங்குஞ்சாக்ஷாகாரமூர்த்தியாத்

கும். இவரை வேதங்களெல்லாம் காப்புடைக்கடவுளென்று கூறு
கின்றது இவர்சுத்தபிரம்ம சொரூபராதலால்,பிறப்பிறப்பு,துக்க
நாசம்,முதலிய மாயா சம்பந்தங்களில்லை யாயினும் பக்தபாகவத
தாசானுதாசர்களின் உள்ளக்குறிப்பினெறியே எழுந்தரக்ஷித்ததி
ருவுருவங்கள் அனந்தமாம். அவற்றுள்முக்கியமானது பத்து அவ
தாரங்களாம் அவற்றை முன்னஞ் சொல்லுகிறேன்.

அந்தபத்து அதாரங்க ளடைவதற்கு முன்னம் வைகுந்தத்
தில்தேவாதி சகல ஜீவான்மாக்களும்பணியும்படி எழுந்த திருவு
ருவம் ஒன்றுண்டு. அதுதான் ஸ்ரீமகாவிஷ்ணுமூர்த்தியென்றுகூறு
வது. அந்த அவசரமெப்படிப்பட்டவரா யிருந்தாரென்றால்.

இவர் திரிமூர்த்திகளில் ஒருவர் இவர்பிரளயகாலத்தில் சகல
அண்டசராசரங்களையும் தமது குக்ஷியில்வைத்துக் காப்பவர். இ
வருக்கு ஸ்ரீதேவி. பூதேவி நீளாதேவியென மூன்று மனைவிகளு
ண்டு, புதல்வர்கள் இருவருண்டு. இவரெடுத்த அவதாரங்கள் ப
த்து, இவருக்குப்பஞ்சாயுதங்கள், கனகமயமான ஆடையுடுப்பவர்
கண்டத்தினிடத்தில் வனமாலை, வனசமாலை, கௌஸ்துவாபரணந்
தரிப்பவர், இவரது மகிமைகள் பலவுண்டு இவைக ளெல்லாமு
டையமூர்த்தி காரணத்தைச் சுருக்கிச் சொல்லுகிறேன்.

அவையாவை யென்னில்,—

| | |
|---|---|
| மூன்று மனைவி | லக்ஷிமி, லோகநாயகி, நீளாதேவி. |
| புதல்வ ரிருவர் | பிரமன், மன்மதன். |
| வாகனம் | கருடன். |
| குணம் | சத்துவம். |
| ஆயுதம் | சங்கு, சக்கர, கதா, கட்க, தண்டம் |
| ஆடை | பீதாம்பரம். |
| மாலை | துளவம், தாமரை |
| கொடி | கெருடன் |
| ஆபரணம் | கௌத்துவாபரணம். |
| இடம் | வைகுந்தம் |
| சயனம் | சேஷன் |

முதலிய முக்கியாம்சங்களை பாத்துவ பூர்வ பக்ஷாதி பரமாரியவேதாதிகலைக ளெல்லாங்கூறின.

ஆதியில் வடவாலிலைத் தளிரின்மேற் படுத்துயோகநித்திரையிலிருந்த விஷ்ணுவானவர்பூமண்டலத்தைசிருஷ்டி செய்யவெண்ணிப் பாற்கடலில் ஆதிசேஷன்மீது சயனித்திருக்க அக்காலத்தில் அக்கடலினிடத்தி லிருந்த லோகமாதாவாகிய ஸ்ரீமஹா லட்சுமி தோன்றி விஷ்ணுவினுடைய வலதுமார்பில்தங்கினாள். அதற்குக் காரணம் யாதெனில், உலகத்தில் பிள்ளைகள்மீது தாய்க்கிருக்கும் படியான பிரியம் தந்தைக்குமிராது. ஆகையாலும் புருஷாகாரிவடிவாகியும் ஸ்ரீவிஷ்ணுவின் திருமார்பில் அமர்ந்திருந்தாள்.

தசாவதாரங்களாவன:—

1-வது மச்சவதாரம்.
2-வது கூர்மாவதாரம்.
3-வது நாசிங்காவதாரம்.
4-வது வராகவதாரம்.
5வது- வாமனாவதாரம்.
6-வது பரசுராமாவதாரம்
7-வது ஸ்ரீராமாவதாரம்.
8-வது பலராமாவதாரம்.
9-வது பௌத்தாவதாரம்.
10-வது கலிக்காவதாரம்.

முதலாவது.

## மச்சாவதாரம்.



ஸ்துதி.

வாரிதி யினின்மறை கொடுமுகு சோமுக
சூரனை யடுமா தவமச் சாவ
தாரனை மாயனை தாமோ தரனையென்
நாரண நாதனை நாடிப் பணிவோம்,

1-வது. மச்சாவதாரம் பிரம்மதேவ னிடத்திருந்த ருக்கு யஜுர், ஸாம, அதர்வணமென்னும் நான்கு வேதங்களையும்சோமுகாசுரனானவன் திருடிக்கொண்டுபோய்கடலில்ஒளித்துக்கொள்ள பிரம்மன் மிகவுந் துயரமுற்று தேவர்கள் கூட்டத்துடன் பாற்கடலுக்குச்சென்று மகாவிஷ்ணுவைச் சேவித்துவணங்கி சுவாமி அடியோங்கள் கடைத்தேரும் பொருட்டாய் அனுக்கிரகித்தவேதங்களைச்சோமுகாசுரன் கவர்ந்து கொண்டுபோய் கடலில்ஒளித்துக் கொண்டிருக்கிறான். ஆதலால் தயைசெய்து அவ்வேதங்களை வரவழைத்துக் கடாக்ஷிக்கவேண்டுமென்றுவேண்டிப்போற்ற, மாயன்பிரமனைநோக்கிநீசங்கடப்படவேண்டாம், உன்னிஷ்டப்படியே வேதங்களைத் தருவித்துக் கொடுக்கிறேனென்றுசொல்லியனுப்ப பிரமன் விடைபெற்றுசந்தோஷமடைந்து தேவர்கள் கூட்டத்துடன் சத்தியலோகஞ் சேர்ந்தான். பின்பு மகாவிஷ்ணுவானவர்பெருத்தசேற்கண்ட உருவமெடுத்துக் கடலிற்புகுந்துசோமுகாசுரனைவதைத்து வேதங்களைக்கொண்டுவந்துபிரமதேவனுக்குக்கொடுத்தார். இக்காரணத்தால்இவருக்கு மச்சாவதாரரென்றுபெயருண்டாயிற்று.

மச்சாவதாரம் - முற்றிற்று.

## இரண்டாவது
## கூர்மாவதாரம்.



### ஸ் து தி.

மார்பிருந்த மலர்மாது சூடி நீத்த
மாலைதனை யவமதித்த மாதவனுக்கும்
பார்பிரித்துப் பாலாழி யுப்ய னோக்கிப்
பண்ணவர்மந் திரநாட்டி யசுர ரோர்பால்
சேர்ந்திழுப்ப வாமையுரு வாகித் தாங்கித்
தேவருக்கு மமுதளித்துக் காத்து மாளும்
சூர்த்தடிந்த திருமாலை வைகுந் தத்திற்
றுலங்குமகா விஷ்ணுவைத் துதித்து வாழ்வாம்.

இரண்டாவது அவதாரமாவது, கூர்மாவதாரமாம். அஃது

முன்னொருகாலத்தில் தூருவாசமகாரிஷியானவர் வாசுதே வனை சேவிக்கும் நிமித்தியம் வைகுந்தத்திற்குப் போகிறபோது தேவஸ்திரீகள் மகாலட்சுமி சூடிக்களைந்த மலர்மாலைகளை அன்போடு எடுத்துக்கொண்டு எதிர்வரக்கண்ட. தூருவாசகர் அம்மாதர்களை நோக்கி ஓ வனிதையர்களே இந்த மாலைகளில எனக கொன்று தரவேண்டுமென்று கேட்க அவ்வனிதையர்களோ இவருக்கொருமாலை கொடாவிடில் மிகுந்த கோபசொரூபராகியஇம் முனிவர் சபிப்பாரென்று பயந்து அம்மாலையில் ஒரு மாலையைக் கொடுக்க அதனை மிகுந்த பயபக்தி விசுவாசத்துடன் தூருவாச மகாமுனிவர் இரண்டு கரங்களாலும் பெற்று கண்களில் ஒத்திக்

ஷொண்டு அதிகவினயமாய்க் கையில்கொண்டு வைகுந்தத்திற்குச் சென்று லட்சுமி நாராயணனை தெரிசித்து வணங்கிப் போற்றித் திரும்பி தேவலோகத்துக்கு வருகிறபோது தேவேந்திரன் வெள்ளையானையின்மீது ஏறித் தென்னாட்டை வலம்வருகிற ஆடம்பரத்தைக்கண்டு தூருவாசகர் சந்தோஷித்து தவசியாகிய நமக்கேனிந்த பூமாலை இந்த மாலையைத் தரித்துக்கொள்ளத்தக்க பிரபு இவனல்லாது மற்றவர்கட்குத் தகாதென்று உச்சாகத்துடன் மலர்மாலையை இந்திரன்கையில் கொடுத்தார். அதை யவன் ஆனையைச்செலுத்தும் அங்குசத்தில் மாட்டிபெடுத்துயானையின் மஸ்கத்தின்மீது அலட்சியமாய் போட்டான்., அதனால் யானைக்கு அருவருப்புண்டாகி தனது தும்பிக்கையினாலே அம்மாலையை யெடுத்துக் கீழேபோட்டு அத்தவசியின் முன்னிலையிற் காலினற்றுவைத்தது அதைக்கண்டு தூருவாசகர் ரௌத்திராகாரமாய் கண்கள்சிவந்து மிகச்சினந்து உக்கிரங்கொண்டு இந்திரனைப்பார்த்துச் சொல்லுகின்றார்.

அடா இந்திரா புஷ்பமாலைகளின் விஷயத்தில் மிகுந்த பிரியனும் இதனைத்தரிக்கத்தக்கப்பிரபுவும் நீ என்று மதித்து சாக்ஷாத் லோகமாதாவாகிய ஸ்ரீமகாலட்சுமி சூடிக்களைந்த பூமாலையை உனக்கு யான்கொடுத்தேன். அம்மாலையைநீ அசட்டையாய்வாங்கி யானையின் காலில்போட்டு மிதிக்கச்செய்தாய் இப்படிக்கி நீசெய்ததற்குக் காரணம் யாதென்றால் தேவர்களுக்கெல்லாம் இராஜனென்றும் இவ்வுலகத்துக்கு அதிபதியென்றும்காமதேனுகற்பக விருக்ஷம் மேலானசகலசெல்வமும் நமக்கிருக்கிறபோதுஇந்தமாலையெம்மாத்திரம் இது ஒருலட்சியமோயென்றே அலட்சியமாய் உனக்குண்டாகிய செல்வச்செருக்கினால் நம்மைக்கூட லட்சியஞ் செய்யாமற்போனாய் ஆதலால் செல்வத்திற்குக்காரணமாகியலட்சுமிகடாக்ஷமில்லாமற் போகக்கடவாயென்று சபித்துவிட்டுமனதுக்கிசைந்தபடிசென்றார். உடனேசூரியசந்திர கிரகநட்சத்திரங்கள் காமதேனு கற்பகவிருக்ஷம் மகாலட்சுமி முதலானதுகளும் போய் பாற்கடலில் மறைந்துபோயின மூவுலகங்களும் கடாந்தகாரமான இருள் சூழ்ந்துகொண்டது இதுகளையெல்லாங் கண்டு இந்திரன் தனதுகுருவாகிய பிரகஸ்பதிபகவானிடத்தில் முறையிட அவர்பிரமதேவனிடத்திற்கு சென்றுஅறிவிப்பாயாகில்உனக்குற்ற துயரம் நீங்குமென்றான் அவ்வாறே இந்திரன் தேவர்கள்

கூட்டத்துடன் சத்தியலோகஞ்சென்று பிரம்மதேவனைக் கண்டு வணங்கி தனக்குநேரிட்ட குறைகளைச்சொல்லி வேண்டிக்கொண்டான். பிரம்மன் இந்திரனைநோக்கி இக்காரியம் நம்மாலாகத் தக்கதல்ல. சகல உலகங்களுக்கும் நாதனாகியும் ஆதிமத்தியாந்தரகிதனாகியும் விளங்கும் விஷ்ணுவினிடம் போகலாம் வாருமென்று சகலதேவர்களுந்தொழ க்ஷீராப்திக்குவந்து யோகநித்திரையி லிருக்கும் பகவானைநோக்கி இருகரங்களையும் சிரமிசைக் கூப்பி கேசவாதாமோதரா, மாதவா, ரிஷிகேசா, புண்டரீகாக்ஷா புருஷோத்தமா, ஜனார்த்தனா, கருணாநிதி, ஆபத்பாந்தவா, அனுதரக்ஷகா, ஆதிமூலமேயென்று துதி செய்யும்முறைகளைக்கேட்டு விஷ்ணுவானவர் அதியுச்சாகத்துடன் கெருடன் மீதேறிவந்து சாக்ஷிதந்தார். அப்போது பிரம்மன் அஞ்சலிசெய்து தேவேந்திராதி தேவர்களுடைய கோரிக்கைகளை விண்ணப்பஞ்செய்து அதுமுடியு முபாயந் தேடவேண்டுமென்று கோருவதை விஷ்ணுவானவர் கேட்டுயோசித்து தக்கமுயற்சியுடன் அவர்களுடன் கலந்து மந்தரகிரியைத் தருவித்துபாற்கடலில் மத்தாகநாட்டி வாசுகியைத் தாம்பாகபூட்டி தேவர்கள் ஒரு பக்கமும் அசுரர்கள் ஒருபக்கமுமாக யிருந்துத் திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். அப்போது முதலில் ஆலகாலவிஷம்பிறந்தது பின்புசூரியன் சந்திரன் கிரகநட்சத்திராதிகள் ஐராவதம் காமதேனு கற்பகவிருட்சம் நவநிதி ஸ்ரீமகாலட்சுமி அமிர்தமுதலாகிய லட்சுமி கடாக்ஷம்பெற்ற பொருள்களெல்லாம் பிறந்ததுகள். அந்தக்காலத்தில் மந்தரகிரியைக்கடலில் மூழ்காவண்ணம் ஆமை யுருவங்கொண்டுத் திருமால் தமது முதுகிற்றாங்கினர். இதுகூர்மாவதாரங் கொண்டதற்குக் காரணம்.

கூர்மாவதாரம்

முற்றிற்று.

## மூன்றாவது

# வராக அவதாரம்.



ஸ்துதி.

தாயினுங் கருணை கூர்ந்தித் தாலமே மூளந்து பன்பர்
சேயினு மெளிது வந்துஞ் செகமெலா மளித்துக் காத்தும்
நாயினுங் கடையே மெம்மை நல்கியும் நவிலு மெல்லா
மாயிலங் கியவை குந்த வாசனை வணங்கு வாமால்.

3-வது வராக அவதாரம் எடுத்ததற்குக்காரணம் காசிபரு
க்குந் திதிக்கும்பிறந்த இரணியன் இரணியாக்கனென்னும் புதல்
வாயிருவர்களும் மூவுலகங்களையும் தனிச்செங்கோல் செலுத்தி
தேவேந்திராதி தேவர்கள், யக்ஷர், கின்னரர், கிம்புருடர், சித்தர்
வித்தியாதரர், முதலானோர்களையும் ஜெயித்து கெர்வபங்கம்செ
ய்து சந்தோஷத்துட னிருக்கிறபோது இளையவனாகிய இரணி
யாக்ஷதன் தவஞ்செய்து பிரம்மதேவனிடத்தில் கதையும் செயந்
திமாலையும் பலவரங்களும் பெற்றுத் தோள்கள் பூரித்து ஆரவா
ரித்து தேவர்கள்முதல் யாவரும்தியங்க இப்பூமியை அடியோடும்
பேர்த்துப் பாதளத்திற் கொண்டுபோய் வைத்துக்கொண்டு எதி
ரியெவன் வருவானென்று யெதிர்பார்த்திருந்தான். அப்போது
சுவாயம்புமனுவானவர் இரணியாக்ஷதன்பூமியைப் பேர்த்தெடுத்
துக்கொண்டு போனதைப்பற்றி ஜீவராசிகள்மேல் தயையுடையவ
ராய்ப்பிரமதேவரிடஞ்சென்று வணங்கிப் போற்றி எந்தையே,

இரணியாக்கதனானவன் இந்த அவனிமுழுதையும் கொண்டுபோ
ய் பாதாளத்தில் ஒளித்துவைத்துக்கொண்டான் ஆகையால்
நான் அரசுபுரியும் செயலில்லாமல் தேவரீரை வந்தடைந்தேன்
எனத் திசைமுகன் சிந்தித்து அழகுபொருந்திய மேகவண்ணனை
ப்பணிந்து தந்தையே அவனியையருளெனப் போற்றியபடியால்
மாயவன்குருகலாகிய வராகவுருவமாய்த்தோன்றி அண்டமுகட்
டையளாவி அகண்டமந்தாவரையை நிகர்த்த நான்கு கால்களி
லும் நவமணிகளிழைத்த சிங்கங்களிருக்கும் குகைகளையொத்த
செவிகளும் வச்சிராயுதத்துக்கொப்பாகிய மயிர்களைச்சிலிர்த்து
செவிகளைநெரித்துவாலைவா னுலகத்தைப்பார்க்கத் தூக்கிக்கிளம்
பும்போது மந்தரகிரியை இடரித்தள்ளி ஆகாயத்தை யளாவிய
மகமேருபர்வதமானது தூள்தூளாகிப்போக உந்தியானது சகல
உலகங்களிலும் அதிக உக்கிரத்துடன் கடலுக்குள் புகுந்து பா
தாளலோகத்தையடைந்து காசினியைத் தமது கோட்டிடைய
மைத்து அசையாது கொண்டுவருகிறபோது இரணியாக்கதன்
மறுத்து விடு விடுயென்றுகதையைச் சுழற்றியறைந்தான் அதனை
வராகமூர்த்தியானவர் வச்சிராயுதத்துக்கு நிகராகிய தமதுமயிர்
களால் தட்டிவிட்டுத் தீவிரமாக அவ்வனியைக் கொண்டுவந்து
பொருந்த அமைத்துவிட்டு இரணியாக்கதனை எதிர்த்து வடவா
க்கினியைப்போலக் கோபமிகுந்துச் சக்கிராயுதத்தை விடுத்து
அவன் சிரசையறுத்தெறிந்தார். விண்ணவர்கோனாகிய வராகமூ
ர்த்தியானவர் அத்ததியில் பிரமன், இந்திரன் முதலாகிய தேவ
கணங்கள் மலர்மழைபெய்து போற்ற பூமிதேவியானவள் அங்கு
வந்து சக்கரக் கையனைக்கண்டு பணிந்துப் பிரலாபித்துதித்துப்
புகழ்ந்துக் கொண்டாடி நிற்க தந்தையாகிய ஸ்ரீ தரன்கண்டு
அம்மாதை மணந்துப் பழயபடி பாற்கடலில் சென்றுபடுத்து
யோகஞ்செய்திருந்தார்.

இவ்வண்ணமாக இரணியாக்கதன்வராக மூர்த்தியினால்மா
ண்டதைக்கேட்டு அவன் மனைவியாகிய சில்லிகைப்பிரலாபித்துக்
கொண்டேசென்று பூவராகமூர்த்தியைச் சேவித்து அவரருளைப்
பெற்று நற்கதியடைந்தாள். இப்பால்இவன் தமையனாகிய இரணி
யன் தம்பி மாண்டுபோனதைக்கேட்டுச் சினமிகுந்துமாயனை எவ்
விதத்திலேனும் முடித்துப் பழிக்குப்பழி வாங்கவேணுமென்று
முயன்று தவவேடம்புனைந்து வேதத்திற்சொல்லியிருக்கின்ற தவ
ங்களையெல்லாஞ்செய்து தன்மனதில் நினைத்து வரபினைக்கேட்ட

வரங்களெதுவோ அதுகளையெல்லாம் பிர்ம்மதேவனைக் கொடுக்கப்பெற்றுக் கொண்டுவந்தா சிவன், பிர்ம்மா, விஷ்ணுவாகியமும்மூர்த்திகளும் முடிவுகாணப்படாத சகல பூதங்களுக்குள்ளபலத்தையும் ஒருமிக்கப்பெற்று எக்காலத்திலும் அழியாமல் நித்தியமாயிருக்கின்றவனென்று வேதவேதங்களால் சொல்லப்பட்ட ஜெகதீஸ்வரனாகிய ஸ்ரீமகாவிஷ்ணும், பிரம்மனும், ஜடாமகுடத்தையுடைய சிவனும், படைத்துக்காத்து அழிக்கின்ற இந்த ஒரு அண்டத்தின்மட்டுந்தானே இதற்கு இப்புறத்திலுள்ள அளவில்லாத பல அண்டங்களிலுள்ளவர்களும் தன்பெயரையே சொல்லும்படி வாழ்ந்திருந்தான். எட்டுதிக்குகளையுந் தாங்குகின்ற ஐராவதமுதலாகிய அஷ்டகஜங்களில் வலதுகையில் ஒருயானையும் இடதுகையில் ஒருயானையுமாக இரண்டு கையினாலும் இரண்டுயானைகளைச் சுண்டைக்காய்போல அலட்சியமாக எடுத்து ஒன்றோடொன்றை முட்டவிடுவான் அளவுகாண்பதற்கரிதாகிய ஆழத்தையும் அகலத்தையு முடைய ஏழு சமுத்திரங்களையும் தோணி முதலானதுகளில்லாமல் ககனக் காலளவு ஆழமாகயெண்ணித் தன் காலாலேயே நடந்துகடந்து கரையேறுவான் ஆகாசகங்கை முதலான மகாநதிகளில் ஜலங்கொஞ்சமென்று நினைத்து அதுகளின் கிட்டவும் போகான் சப்தமேகங்களின் ஜலத்தைக் குளிர்ச்சி போதாதென்று எட்டியும்பாரான் சமுத்திரசலத்தை உப்பென்றுகருதி அதில்முழ்கவேமாட்டான் பின்னெப்படிஸ்நானஞ் செய்வானென்றால் அண்டமுகட்டை உடைத்து அதற்கு அப்புறத்திலிருக்கும் பெரும்புரக்கடலின் ஜலத்தில் ஸ்நானஞ்செய்வான் இவ்விதமாகப் பெரும்புரக்கடலில் ஸ்நானஞ்செய்து நாகலோகத்திற்குப்போய் நாககன்னிகள் உபசரிக்க அறுசுவை பதார்த்தங்களுடனும் பால்-பழம்-பஞ்ச கச்சாயங்களுடனும் இஷ்டான்னம்புசித்து கர்ப்பூர தாம்பூலங்கொண்டு கந்த புஷ்பாதிகளைத் தரித்து இளைப்பாரி இந்திரலோகத்திற்கு போய் அமிர்தபானம் பண்ணி இந்திராணிமுதலாகிய தேவஸ்ரீகள்சத்திரம்பிடிக்க சாமரம்வீச காளாஞ்சியேந்த ரம்பை, மேனகை, முதலாகிய தேவதாசிகள் பரதநாட்டியஞ்செய்யதேவேந்திரன் முதலான பலதேவர்களும் ஏவல்கேட்க அந்தஇந்திரனுடைய சுதர்மமென்னும்மண்டபத்தில் சுதர்மமணி சிங்காசனத்திலிருந்து வேடிக்கையாகப்பொழுதுபோக்கி சத்தியலோகத்திற்குப்போய்ப்பிர்ம்மாவுடனே சனகசனந்தனசனாதன சனற்குமாரர்களும் மற்று

முள்ள சகலரிஷிகளும் புடைசூழ அந்தப்பிர்ம்மாவின் திரிலோச
த்திலிருந்து சம்பிரமத்நடனிராப்பொழுது போக்குவான் ஒரு
சமயத்தில் விமானத்தின்மேலேறி சந்திரமண்டலத்திற்குப்போ
ய் அந்தச்சந்திரனைப்போலவே சஞ்சரிப்பான் ஒருவேளையில்தே
ரின்மேலேறி அதைச் சூரியமண்டலத்திற்கு நடத்திக்கொண்டு
போய் அந்தச்சூரியனைப்போலவே யுலாவுவான் எட்டுத் திசைக
ளிலும் போய்த்திக்குப்பாலர்கள் செய்யுங்காரியத்தை யுந்தான்
செய்வான் மகமேருவின் சிகரத்தில் பிரசண்டமாருதம்மோதியடி
த்தாலும் யுகாந்தகால இடியிடித்து விழுந்தாலும் மகாபிரளயம்
வந்தாலும் சற்றேனும் கலனமில்லாமல் சொர்னச்சாயையும் சித்
திர விசித்திரமாயுமிருக்கின்ற பெரியகோட்டைக்குள் நவரத்தின
சசிதமாயும் திவ்வியதேஜோமயமாயும் பிரகாசிக்கின்ற அழகிய
மண்டபத்தில் மாணிக்கசிங்காசனத்தில் சக்ரேஸ்வரனாய் வீற்றி
ருந்து அகண்டாதி பத்தியமாக ராஜரீகஞ்செய்வான். பிரிதிவு,
அப்பு, தேயு, வாயு, ஆகாசமாகிய இதுகளுக்கு அதிதேவதையா
யிருக்கின்றவ ரவனைத்தள்ளித்தான் அவர்களுக்குப் பிரதியாயி
ருந்து அவர்கள் செய்கிறகிருத்தியங்களெல்லாந் தான்செய்வான்
கமலக்கண்ணனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவும் அக்கினிக்கண்ணனாகிய
சிவனென்கிற இவ்விரண்டுபேருந்தவிர மற்ற சகல லோகத்தா
ரும் தன்பெயரையேசொல்லித் துதிசெய்ய பிராமணர் முதலான
வர்கள் மூவகை அக்கினிகளையுங்கொண்டு வேதோத்தமாகச் செ
ய்கின்றயாகங்கள், எக்கியங்கள், கிருதுக்களில்தேவர்களைநோக்கி
அவர்களுக்குக்கொடுக்கின்ற அவிர்ப்பாகங்களையெல்லாம் தனக்
குக்கொடுக்கும்படி அந்ததேவர்களனைவருந்தானாயிருந்துவாங்கி
வுன்பான் ஆக்குதல், காக்குதல், அழிக்குதல், என்கிற இந்தமுத்
தொழில்களையும் மும்மூர்த்திகளுங் கைவிட்டு ஒதுங்கிநிற்கும்படி
ச்செய்துத்தானே முத்தொழில்களைச் செய்யத்தலைப்படுவான்
யோகீஸ்வரர்களெல்லாம் அவனாலே தங்கள் பதங்களை இழந்தா
ர்கள். தேவர்களும் தங்களுக்கு அவனே முக்கியமானதெய்வமெ
ன்று எண்ணி அவன்பாதத்தையே அர்ச்சிக்கிறதல்லாமல் மற்
றொருவரையும் பூசிக்கிறதில்லை முற்காலத்திலே அமரர்களும்
அசுரர்களும்கூடி வெகுபிரயாசமாகத் தூக்கி நட்டுத் திருப
பாற்கடலைக்கடைந்த மத்தாகியமந்தரகிரியை அவன்தன்கையில்
ஊன்றிதடியாகச் சிலநாள்பிடித்துக் கொண்டிருந்துபின்பு அது
தன்கைக்குவலுவுபோதாதென் றுஎறிந்துவிட்டான்சூரியன்உதித்

து ஒடுங்குகின்ற ஸ்தானங்களாகிய உதயகிரி அஸ்தமானகிரியென்கிற இரண்டு மலைகளும் அந்த இரணியனுடைய இரண்டு காதுகளுக்குங்குண்டலங்களா யிருக்கின்றதுகளென்றால்மற்றும்அவன் பராக்கிரமத்தைச் சொல்லவேண்டியதென்ன நான்முகப் பிரமன் முதலாகிய தேவர்களும் தேவகுருவாகியபிரகஸ்பதியும்சதாகாலமும் கற்பதுங் கேட்பதும் அவனுடைய கீர்த்திப் பிரதாபமே அநாதியாகி அழியாதிருக்கும் வேதங்களும் அந்தவேதங்களுக்கு அதிதேவதையும் இரணியநமாவென்றே சொல்லுகிறது செபம் தபம் முதலானதுகளையும் சகலரும்அவனை நோக்கியே செய்கிறது அவன் ஓரடிவைத்தால் பூமிதாழ்ந்துபோம் ஆயிரம் பணாமுடிகளையுடைய ஆதிசேஷனும் முடிசோர்ந்து போவான் அவன்எழுந்துநின்றால் அண்டமுகடு சிரசிலேமுட்டி அப்பாலுயர்ந்துபோம் அவன் நடந்தால் பஞ்சமகா பூதங்களும் நடுங்கிச்சலிக்கும்அவன பெற்றவரத்தினாலும் அஷ்டசித்திகளாலும் ஆணிலும் பெண்ணிலும் அலியிலும் உயிருள்ளதுகளாகிய சித்துப்பொருள்களிலும் உயிரில்லாததுகளாகியஜடப்பொருள்களிலும்சகலசரா சரங்களிலும்சர்வந்தரியாமிபோலப்புகுந்துசஞ்சரிப்பான்மண்ணிலும் படியான் வானிலும்அழியான், நீரிலுஞ்சாகான் நெருப்பிலும் வேகான் காற்றிலும் இறவான்தேவர்கள் யக்ஷர்கள்பிரம்மா விஷ்ணு ருத்திரன் முதலானவர்களும் அவனைக்கொல்ல எத்தனப்பட்டாலும் உயிர்மாயான் மற்றமனிதர்கள் மிருகங்கள் பறவைகள்முதலானபலஜீவராசிகளாலும் அவனுக்குமரணமேயில்லைஅவனுக்கு அகத்திலுஞ்சாவில்லை, புறத்திலும் சாவில்லை, இரவிலுஞ்சாவில்லை பகலிலுஞ்சாவில்லை, ஆண்டார்கள் முனிவர்கள் மற்றியாவரும் இடுகின்றசாபங்களும் அவனைச்சேர்கிறதேயில்லை தெய்வீகமாகிய சக்கராயுதம் சத்திவேல் எமதண்டம் எமபாசம் பிரமதண்டம் பிரம்மபாசம் பிரம்மாஸ்திரம் நாராயணாஸ்திரம் பாசுபதாஸ்திரம், இந்திராஸ்திரம், அக்கினியாஸ்திரம், வருணாஸ்திரம், நாகாஸ்திரம், மாயாஸ்திரம் முதலாகிய அனேகவகை ஆயுதங்களும் அவனைக்கொல்ல மாட்டாதுகள். எமன்வந்து பிடித்துக்கொண்டுபோனாலும் சாகமாட்டானென்றால் பின்னையார்தான் அவன் பிராணனைமாய்க்கின்றவர்கள் பஞ்சமகாபூதங்களும் ஒன்லகக்கூடி ஒருருக்கொண்டுவந்தாலும்மாளான்.வேதத்திற்சொல்லப்பட்ட மந்திரங்களினாலும் ஒளஷதங்களினாலும் இறக்கமாட்

ட்டான். பெற்றபிதாவே அவனைக்கொல்ல யேர்ப்பட்டாலும் பிராணலயப்படான். அவனுடைய நிலமையிதுவாகும் எல்லா உலகங்களுக்கும் தானொருவனே தலைவனாகியாரும் தனக்கெதிரில்லாமல் மகத்தாகிய தீர சூர பிரதாபத்துடனே வாழுங்காலத்தில் அந்த இரணியேஸ்வரன் அறிவுடையவர்களுக் கெல்லாம் மேலாகிய அறிவினையுடையவன். நல்லோர்கள்யாரினும் மிகவும் நல்லவன் வேதத்தைக்காட்டிலும் மகாபரிசுத்தமுள்ளவன் தாயைப்பார்க்கிலும் அதிக அன்புள்ளவன் அளவிறந்த தவத்தினையுடையவன் இப்படிப்பட்ட அருமையாகிய நற்குணங்கள்யாவும் பொருந்திய மகானுபாவன் ஒருவன் அருமைத் திருமகனாக உற்பவித்து பிரகலாதனனென்ற பெயரினையுடையவனாய் வளர்ந்து ஐந்துவயதுள்ள சிறுபிள்ளையாயிருக்குங்காலத்தில் அனேகயுகங்களைக்கடந்தும் அபிவிர்த்தியாகிக் கொண்டிருக்கின்ற ஆயுசையுடையவனையும் பதினான்குலோகத்தாரும் தன்பாதத்தை வணங்கும்படி ஏகசக்ரேஸ்வரனையுமிருக்கின்ற இரணியாசுரன்மனமகிட்சிகொண்டு உருகிமகனைப்பார்த்து அடா என் புத்திரசிகாமணியாகியபிரகலாதனா நீ சகலசாஸ்திரங்களையுங்கற்றுக்கொள்ளென்று சொல்லி அபரிமிதமாகிய கல்வியும் விவேகமுடைய அசுர குருவான சுக்கிராசாரியார்புத்திரன் சண்டாமார்க்க னென்பவனையழைப்பித்துநீர் என்கண்மணியாகிய பிரகலாதனனுக்கு வேத சாஸ்திராப்பியாசம் செய்துவையு மென்று திட்டப்படுத்தி அனுப்பினான்.

அவ்வண்ணமே அந்த உபாத்தியாயர் பிரகலாதனனைக்கூட்டிக்கொண்டுபோய் கல்விச்சாலையிற்சேர்த்து வேதத்தையோதுவிக்கத்தொடங்கி அசுரேந்திரனுடைய தவகுமாரனைப்பார்த்து ஐயா இரணியநமாவென்று உன்பிதாவினுடைய நாமத்தைமுன்னே துதி செய்யென்றுசொன்னார். அதுகேட்டு அந்தப்பாலன் தன்னிரண்டுசெவிகளையும் கைகளால் மூடிக்கொண்டு பேரறிவினையுடைய உபாத்தியாயரே நீர் இப்படி சொல்லுகிறது நன்மையல்லவென்று வேதத்தின்முடிவிலே சொல்லப்பட்ட தத்துவார்த்தமாய் விளங்கிநிற்கும் பிரம்மசாட்சாத்காரத்தின் திருநாமத்தைப் பிரசித்தமாகஹரிஓம் நமோநாராயணா என்று நாவினாற்சொல்லிமனதுருகிஸ் தம்பாக்கிருதியாயமைவுற்று நின்று தன்னுடைய இரண்டுகைகளையும் தலையின்மேல் அஞ்சலிபண்ணிக்கொண்டு நமஸ்கரித்துத்தாமரைகளுக்கிணையாகியகண்களில் ஆனந்தக்கண்ணீர் ஒழுக தேகம்புளகிக்க மயிர்க்குச்செறிய இந்தப் பிரகாரஞ்ஞானத்திற் சிறந்தவனாகிய பிரகலாதாழ்வான்பக்தி

பாவசனாய் பகவத்தியானத்திலிருந்தான். அப்போது சண்டாமார்க்கன் உடல் நடுங்கிஎன்னடாபாவி சண்டாளா ஐயையோ என்னையுங்கெடுத்தாய் இதல்லாமல் உன்னையுங்கெடுத்தாய் நீகெட்டதுமல்லாமல் சகலத்தையுங்கெடுத்துவிட்டாயே அடாகெடுவாய் குலநாசகா அந்தப்பிரம்மாதி தேவர்களும் சொல்லுகிறதற்கு அடாததாய் அயோக்கியமானதாயுமிருக்கின்றவதோ ஒன்றைச் சொல்லும்படி உனக்கு புத்திபிறந்து நாவெழுந்ததே அதுவென்னகாரணம் ஒகோ என்ன அக்கிரமத்தைச்செய்ய நினைத்தாயென்றான். அதற்குப் பிரகலாதனன் ஐயா வித்தியாகுருவே நான் செய்ததென்னவென்றால் முதல் என்னை உய்யும்படிசெய்துகொண்டேன்பின்பு என்தந்தையை உச்சிவிக்கும்படிசெய்தேன் அப்பால் உம்மையும் உச்சிவிக்கும்படிசெய்து இந்தவுலகத்தையும் உச்சீவிக்கும்படிசெய்ய உத்தேசித்து வேதாத்தியாயனம் பண்ணுகின்றவர்கள் ஆதியிலும் அந்தத்திலும் அந்தவேதத்தின்முதற்பொருளாகிய ஸ்ரீ ஹரியை யல்லவோ துதிசெய்கிறது சம்பிரதாயமாயிருக்கிறது நானும் அந்தப்படியே சொன்னேன் அப்படிநான்சொல்லியதில் என்ன குற்றமென்று கேட்டபிரகலாதனனைநோக்கிச் சண்டாமார்க்கன் அடா பிரகலாதனா தேவர்களுக்கெல்லாந் தலைவர்களாயிருப்பவன் இந்திரன் அந்த இந்திராதிதேவர்களுக்குந் தலைவர்களாயிருப்பவர்கள் திரிமூர்த்திகள் அந்தத் திரிமூர்த்திகளுக்குந் தலைவனாயிருக்கின்றவன் உன்னைப்பெற்ற தந்தையாகிய இரணியேஸ்வரன் அப்படிப்பட்ட முதல்வனுடைய பெயரைச்சொல்லுகிறதற்கு யோக்கியனா யிருக்கிற பிராமணோத்தமனான என்னைப்பார்க்கிலும் நீ என்னவிசேஷமாகத் தெரிந்தவன்? இந்தக்கர்னகடூரமாகிய பெயரைச்சொல்லி என்குடியைக் கெடுக்காதே அப்பாஉனக்குப் புண்ணியமாய்ப் போகிறதென்று சண்டாமார்க்கன்சொன்னான்.

அப்போதுநிர்மலசித்தத்தையுடையபிரகலாதனன்நான் அந்தஆதிநாயகனுடைய திருநாமத்தையல்லாமல் வேறொன்றையும் அறியேன் என்னறிவுக்குஞ்சொல்லவேண்டியதுபிரிதொன்றுமில்லை அவனுடைய கடாக்ஷத்தினாலே எனக்குபோதிக்கப்படாதபரமார்த்தமும்வேறில்லை அன்றிபுராதனமாகிய வேதங்கள் கிரமமாகநிச்சயித்துச் சொல்லப்பட்டபொருளுக்கெல்லாம் முடிவாகி யபரம்பொருளா யிருக்கின்றஸ்ரீமந்நாராயணன்எனக்குள்ளே வந்

துபுருஷ் என்னுடைய இருதயகமலத்தைத் தனக்கு உறையிட மாகக்கொண்டு எழுந்தருளியிருக்கிருன் ஆகையால் அவனைவிட பெருதற்குறியபயன் உனக்கு வேறென்றுமில்லை யானாலும்நான் அறியாதது ஏதாவதிருந்தால் அதைநீதிதவராமல் ஓதுவியும் ஐயாஉபாத்தியாயரே பிர்ம்மசிரேஷ்டர்களெல்லாம் யாரைப்பணிகின்றூர் நான்குவேதங்களும் எந்தபுருஷோத்தமன் கல்யாணகுணங்களைக் கூறுகின்றது ஞானிகள் எந்தவஸ்துவைப் போற்றுகின்றூர்கள். உபநிடதங்கள் எதைச் சொல்லுகின்றது அமரர்களும் முனிவர்களும் துதிசெய்கின்ற அந்தசர்வேஸ்வரன் திருநாமத்தைச்சொல்லவேணு மேயல்லாமல் வேறே சொல்லத்தக்க பொருளும் ஒன்றுண்டோ மகானுக்களானவர்கள் இருக்காதியிலேதங்களினாலும் அக்கினிஷ்டோமாதி யாகங்களினாலும் தத்துவக்கியானத்தினாலும் மற்றுமுள்ள எவ்வகைப்பட்ட சாதனப் பொருள்களாலாகிலும் சாதித்தும் பெருவதற்குரிய பொருளையேநான் முக்கியமாய்ப் பெற்றிருக்கிறேனுகையால் இனியொருவர் ஓதுவிக்கும்படியும் ஓதிக்கேட்பிக்கும்படியும் கேட்கத்தக்க பொருள் ஒன்றுமில்லை. மேலும் ஆரணியவாசஞ்செய்தும் மலைகுகைகளிற் சேர்ந்தும்கிருஷ்ண ஜனாந்தரித்தும் சிரமுண்டிதஞ்செய்தும்ஜடைவளர்த்தும் அக்கினிமத்தியிலிருந்தும் தவஞ்செய்தும் அஷ்டாங்கயோகஞ்செய்தும் ஞானநிஷ்டைசாதித்தும் இத்தக்கிரமத்தினால் மோக்ஷத்தை யடைந்த முக்தாத்துமாக்கள் பெற்ற பாக்கியத்திலும் மிகவும்வுத்கிருஷ்டமாகச் சொல்லப்பட்ட பகவத்கடாக்ஷமாகிய பரமபாக்கியத்தைப் பெற்றேன். இதற்காகிலும் அதிகவருத்தப்பட்டு சம்பாதிக்கவேண்டிய பொருள் என்ன இருக்கின்றது. ஸ்ரீபுருஷோத்தமனுடைய அடியார்க்கடியார்களாயிருக்கின்றவர்கள் செவியினாற் பலகேள்விகளைக்கேளாதவர்களானாலும் வாயினாற் பலநூல்களைப் படியாதவர்களானாலும் தேவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுக்கின்ற மந்திரங்களைச் சொல்லுகின்ற சதுர்வேதங்களின் பூர்வார்த்த உத்தரார்த்தங்களும் அறிவார்கள்வித்துவஜனங்களும் ஆவார்கள்உண்மைப்பொருளையுங்காண்பார்கள்அவர்களுடைய பிரபாவத்தையாரறிவார்கள் எனக்கும் சதுர்முகப்பிரம்மாவுக்கும் சகலமானவர்களிலுமுயர்ந்ததனக்கும் தன்னிலைமை அறியக்கூடாதிருக்கின்ற அந்த எம்பெருமான் என்மனதிலெழுந்தருளி யிருக்கின்றமையால் எனக்குச்சகலமும் எளிதிற்கிடைத் திருக்கின்றன. ஐயா உபாத்தியாயரே உமக்குமிந்தவிடயுக்தமானது மற்றென்றுமில்லை இந்த

படியே எம்பெருமான் திருநாமத்தை நீரும்சொல்லி இந்த அனு ஷ்டானத்தையே கைக்கொண்டு உம்முடைய ஆத்துமா உஜ்ஜீ விக்கின்ற விதத்தைநாடிக்கொள்ளுமென்று சொன்னான்.

இவ்வாறுபிரகலாதனன் சொல்கைக்கேட்டு அந்தசண்டாமா ர்க்கனென்கிற உபாத்தியாயர் அதுகளுக்குப்பதிலாக யாதொரு மொழியுஞ் சொல்லாமல் மனது திடுக்கிட்டு இனியெனக்கென்ன பெருமை யிருக்கின்றது என் பிராணனுக்கே முடிவுவந்து விட் டதே இதற்கு வகையொன்றும் குறியேனே இரணியனிடத்திற் குப்போய் அவனைக்கண்டு நல்ல விசேஷத்தைச் சொல்லித் தப் பிவருகிறதேமகாப்பிரயாசம் அப்படியிருக்க இக்கொடுமை தங் கிய கொள்ளையையெப்படி மனந்துணிந்து நாவுகூசாமற் சொல்லு வேன் அப்படியல்லவென்று துணிந்துச்சொன்னால் அவனென்ன சொல்லுவானோநான் வேதங்கற்பிக்கச்சொன்னால் ஏதேதோ துர் ப்போதனைகளைப்பண்ணி யென் பிள்ளையின் புத்தியைக் கெடுத்து விட்டாயென்பானோ கோபங்கொண்டு கொலைசெய்வானோஐயோ நான் இதுவரையிலுஞ் சுகமாகஜீவித்திருந்தேன் இப்பொழுதெ னக்குக்கிரகசாரந்தான் போதாதோ ஐயையோ இதேது தர்ம சங்கடமாக யிருக்கிறதென்று எண்ணாததுமெண்ணி முகம்வாடி க்லேசமடைந்து பயந்து நடுநடுங்கிக்கொண்டேபோய் இரணி யனைக்கண்டு அதிகபயபக்திவிசுவாசத்துடனே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி எழுந்துகைகட்டி வாய்பொத்தி வஸ்திரத்தை யொதுக்கிக்கொண்டு நின்று ஓ சுவாமி அடியேனொரு கனவு கண்டேன் அதைதேவரீரிடத்திற் சொல்லும்படி வந்தேனென்று சொன்னான். அதுஎன்னஐயாவென்று இரணியன்கேட்க எங்க ளுக்கெல்லாந் தந்தையாயும் குலதெய்வமாயுமிருக்கின்ற இரணி யேஸ்வரனே உம்முடைய குமாரன் இம்மையினாலும் மறுமையி னாலும் வாயினாற்சொல்லத்தகாததாயும் மனதினால் நினைக்கக் கூடாததுமாயு மிருக்கின்றசொற்களை ஒருவர்சொல்லிக் கொடுக் காமல் தானே சொல்லிக்கொண்டிருக்கிறான் வேதமோதென்று சொன்னால் ஓதாமல் நான் முன்னமேதானே சகலார்த்தங்களை யும் அறிந்திருக்கிறேனென்று சொல்லுகிறானென்று சொன் னான். உபாத்தியாயன் சொல்லைக்கேட்டு இரணியன் ஐயர் சண் டாமார்க்கரே பிராமணர்களுக்கு யோக்கியமல்லாதது களாயு ம்முன்புயாவருஞ்சொல்லி யக்கிரமத்திலே சம்பந்தப்படாததுக ளாயும்நீர்வெறுக்கும்படி அவன்தன்னறிவினாலே புதுமையாகயெ

டுத்துச்சொன்னதுதானென்ன சொல்லுமென்றான் அதற்குப் பி ராமணன் பயந்து சிரசின்மேற் கைகூப்பி நமஸ்கரித்துச் சொல் லுகிறான் காதுக்குள்ளே விஷசர்ப்பம் நுழைவதுபோல மகா கொ ரமாயிருக்கிற சொல்லை அடியேன் தேவரீரிடத்திற் சொல்லு வேனாகில் ரௌரவாதி நரகத்திலேபோய்விழுவான் என்றும் இப்பொழுதே வெந்து பிற்றுவிழுமென்று சொல்ல அதுகேட் டுக்கொடியவனாகிய இரணியாசுரன் ஆச்சரிய சித்தனாய் என் குமாரனை அழைத்துவாருங்களென்று ஆக்கியாபித்தான். அந்த க்ஷணமே தூதர்களோடிப்போ யழைத்துவந்தார்கள். தனக்கு ஒரு துணையும்வேண்டாமலிருக்கின்ற ஏகமூர்த்தியைத் துணையா கப்படைத்த பிரகலாதனன்வந்து தன் பிதாவைக்கண்டு சேவித் தான். அப்படி சேவித்தபுத்திரனை மணியாரம் பிரகாசிக்கின்ற தன்மார்பினிடத்திலணிந்த பொற்சுண்ணமுதலானதுகள் அவன் மார்பிற் படியும்படி அன்பினாலிருக்கத்தழுவிப் பக்கத்தில்வை த்துக்கொண்டு அவனுடைய திருமேனி முழுமையும் பார்த்து அப்பா பிரகலாதனா உங்களுபாத்தியாயர் கோபிக்கும்படி பழு தாகநீ என்னவார்த்தை சொன்னாய் அதைச்சொல்லென்று இர ணியன்கேட்க ஐயாவேதமோதும்போது முதலில் சொல்லவே ண்டியதை நான் உச்சரித்தேன் அறிந்தாலும் நினைத்தாலும் கே ட்டாலும் சொன்னாலும் துன்பக்கடலைக்கடப்பதற்கு உரியது இதுவேயாம். இதைவிடமேலாகியது வேறொன்றுமில்லையென்று பிரகலாதனன் சொன்னான். தேவர்களும் மற்றயாவர்களும் தக்கவொழுக்கத்தையுடைய அந்தப் பிரகலாதனன் சொல்லவே துஷ்டனாகிய இரணியன் குற்றமில்லாத உபாத்தியாயர் சொல்லி யபடி இவன் ஏதோ விரோதமானமொழியைச்சொல்லியே யிரு ப்பான்போலத் தோன்றுகின்றது ஆகிலும் இவனுடைய அபிப் பிப்பிராயத்தை யறிவோமென்று தனக்குள்தானே யோசித்துக் கொண்டு அடா குழந்தாய் நீசொல்லிய சொல்லென்ன அதைச் சீக்கிரமாகச்சொல்லென்றுகேட்கபிரகலாதனன்சொல்லுகிறான்.

கேளும் எனது தந்தையே மனதில் எண்ணினதுகளையெல் லாங்கொடுப்பதும் அதுகளையனுபவித்துக் கடந்தால் மோக்ஷத் தையடையும்படிச்செய்வதும் ஓமங்கள் யாகங்கள் செய்தவர்களை அவைகளுக்குரிய பதவிகளிற் சேர்ப்பதும் ஏகவஸ்துவாகி யிரு க்கின்றபகவானுடைய திருநாமமேயாம் பூமண்டலத்தில் பிரம்ம லோகபரியந்தம் வாழ்கின்ற எண்ணிக்கையில்லாத பூதபௌதிக

சாசசரங்கள் யாவற்றினுள்ளும் கலந்து நிறைந்து அந்தக்கரணங்களிலும்பொருந்தி அங்கிருந்து உதிக்கின்ற உணர்வினால் உணரப்படுவது இந்த திருவஷ்டாக்ஷரமே யல்லது வேறில்லைதிரிநேத்திரங்களையுடைய மகாதேவனும் சதுர்முகப் பிரம்மாதிகள் தொடங்கி மனிதர்கள் வரையிலும் இதைத்திருமந்திரத்தை மறந்தவர்கள் இறந்தவர்களே இதை யொருவர் காண்பிக்க ஒருவரறிகிறது மகாபிரயாசம் அப்படியானால் எப்படிதான் அறிகிறதென்றால் சொல்லுதற்குரிய அதிகாரியாகியசதாசாரியனும் கேட்பதற்குரிய பக்குவனாகிய சிஷனும் கூடி ஒருமித்திருந்து காட்டக்கண்டறிந்தால் அறியலாம் மற்றப்படி அனதிகாரியனாகிய ஆசாரியனும்பக்குவ மில்லாதவனாகிய சிஷனும் அதன் நிலையைக் காட்டவும் அதன் குணங்களை யறியவுமாட்டார்கள் சன்னமாகிய சமுத்திரத்திற் பழவினையாகிய சுழலில்நின்றும் கரையேற்றுகின்ற நல்ல மரக்கலமாக யிருப்பதும் யாவருக்குங்கிடைப்பதற்கு அருமையாகியபூஷணமாயிருப்பதும் சொல்லவும் பேசவும் மங்களகரமாயிருப்பதும் ரிஷிகள் வேதத்தின் முடிவில் சிலாக்கியமாகத் தெளிந்தெடுத்த மெய்ப்பொருளு மிதுவேஇதற்குச் சமானமும் அதிகமும் இதுவேயல்லாமல் மற்றொன்றுமில்லை உம்முடைய ஆத்துமாவுக்கும் என்னுடைய ஆத்துமாவுக்கும் இவ்வுலகத்திலுள்ள சகல ஆத்துமாக்களும் இதுவே உறுதியானபொருளென்று நான் மதித்துச்சொன்னேன், என்று தத்துவக்கியானிகளிற் சிறந்தவனாகிய பிரகலாதாழ்வான் விசிதமாகச் சொல்லவே இரணியன் ஜோதி மின்னலைப்போலப் பிரகாசிக்கின்ற தன்கையிலேந்திய வீரவேலாயுதத்தைச் சுழற்றிக் கண்களை நெருப்பு ஜொலிக்க விழித்து அடாதுஷ்டப்பயலே நான் பிறந்தநாள் முதல் இந்நாள்வரைக்கும் இந்தப்பெயரைச் சொன்னவாயையும் இதைநினைத்தமனதையும் என்னுடைய ஒப்பற்ற சக்ராக்கினியானது தகித்துவிடும் அப்படியிருக்கப் பின்னையாருனக்கிந்த பெயரைச்சொல்லிக் கொடுத்தவர்கள் நீ எவரிடத்திற் கற்றுக்கொண்டாய்சிக்கிரத்தில் உண்மையைச்சொல்லடா வென்றுகாலாக்கினி சொரூபமாய்க்கோபித்து ரிஷிகள் தேவர்கள்முதலாகத் திரிலோகங்களிலுமுள்ளமற்றச்சகலமானவர்களும்என்னுடையஉபயபாதத்தையே தியானஞ்செய்கிறதும் என்பெயரையே துதிசெய்கிறதும் அவர்களுக்குவிதியாகையால் அவர்களெல்லாம் உனக்கு இதைச்சொல்லுகிறதற்குப் பயப்படுவார்கள். எப்படிதான் நீ அறிந்தாய் அந்த விஷ்ணுவானவன் என்னிடத்தில் யுத்தஞ்செய்யும்படி அநேகா

வர்த்திவந்து எதிர்த்து தானேறியகருடவாகனத்தின் வேகத்
தால் தப்பியோடிப்போய்க்கடலிலேவிழுந்து அமிழ்ந்து இன்ன
மும் எழுந்திராமல்கிடந்து உறங்குகின்றான் அவ்வாறு உறங்கு
கின்றவனுடைய பெயரையுனக்கு உறுதியென்று சொன்னவர்
களைக்காட்டடா சமுத்திரத்தின் சிறுமணலையெண்ணி அளவிட்
டாலும் நம்முடைய குலத்திலேகூறிய பெரியோர்களை அளவிட
க்கூடாது அத்தனைபேர்களும் அவனொருவனே கொன்று தீர்க்
கும்படிமாண்டுபோனார்கள். எலியானது தனக்குக் கூற்றுவனா
கிய கொடியபாம்பின் பெயரைச்சொன்னதனால் அதற்கு யென்ன
நன்மையுண்டோ அந்தப்படித்தா னிருக்கிறது நீ அந்த சத்துரு
வின் பெயரைச்சொல்லுகிறது உனக்கிந்த துர்ப்பத்தி வந்ததற்கு
க்காரணம் என்னவென்று சொல்லலாம்மேலேழுலோகங்களையுங்
கீழேழுலோகங்களையும் தன் வயிற்றிற்குள்ளே அடக்கிவைத்துக்
கொள்ளத்தக்க சந்தேகமற்ற பலத்தையுடைய என்தம்பியாகிய
இரணியாக்ஷனென்பவனை ஒரு பன்றியாகவடிவெடுத்துக் கொம்
பினாற்குத்தி யெறிந்தவனுடைய பெயரைச்சொல்லுகிற தற்கோ
உன்னைநான்பிள்ளையாகப்பெற்றது பெற்றதந்தையின் பெயரை
ச்சொல்லுகிறதற்கல்லவா உலகத்திற்கும் அதிலுள்ள யாவருக்
கும் எல்லாவற்றிற்கும் நானொருவனே தலைவனாக யிருக்கிறேன்
சகல உயிர்களையும் உண்டாக்கல், காத்தல், அழித்தலென்கிற
இம்மூன்று தொழில்களும் என்னாலே செய்யப்படுகின்றதுகள்.
இந்தப் பிரத்தியக்ஷமாகிய காரியத்தைப்பாராமல் வேறேகாரண
முண்டென்று நீ சொல்லுகிறதுஎந்தவேதத்தின் சம்மதமென்று
தேறினாய் ஆதியந்தமில்லாத அளவிறந்த உலகங்களிலும்வேதம்
எந்தமார்க்கமோ அந்தமார்க்கத்தையேசார்ந்து அதுசொன்ன
விதிப்படியே குற்றமற்ற நல்வினையைச்செய்தவர்கள்மேன்மைப்ப
டுவார்கள்தீவினையைச்செய்தவர்கள்தாழ்ந்தவராவார்கள்ஆராயுமி
டத்தில் இது எதார்த்தமாம் பூர்வத்தில் மகத்தாகித் தவத்தைச்
செய்ததினா ஹரியரபிரம்மாக்கள் திரிமூர்த்திகளென்று யாவருஞ்
சொல்லத்தக்கபதத்தைப்பெற்றார்கள் பின்புநான் அவர்களைப்பா
ர்க்கிலும் விசேஷமாகிய தவத்தைச்செய்து உண்மையாகிய நாயக
த்துவத்தை வகித்ததனால்அந்தப்பதத்தை யவர்களிழந்து இனியி
ச்சித்தாலும் அதுகிடைப்பது துர்பலமென்று நினைத்துப் பூரண
மாகிய யென்னதிகாரத்துக்குள்ளடங்கி நடக்கிறார்கள். புத்தியில்
லாத இளம்பிள்ளையாகிய நீ இப்பொழுது செய்தபிழையைநான்
பொறுத்துக்கொண்டேன் இனிமேலிப்படிப்பட்டவிரோதமாகிய

வார்த்தைகளைச்சொல்லாதே உபாத்தியாயர் என்னசொன்னாலு ம்அதுகளை இதமாகவேகொள்ளக்கடவாய் இனிவாசித்துக்கொ ள்ளபோடாவென்று இரணியாசுரன் சொல்ல அதற்குஐயா உம க்குநான் அறிவிக்கவேண்டிய சிலவார்த்தைகளுண்டு அதை நீர் அசட்டைபண்ணாமல் கேட்டறியவேண்டும் அதென்னவென்றால் வேதமாகிய கடலுக்குக் கரையாகியும்யாவரும்கற்கின்றகல்விக்கு ப்பிரையாகியு மிருக்கின்றதென்றும் வித்தில்லாதவிளைவு ஒன்று மில்லைஆதலால் உம்முடைய பயித்தியத்தை விட்டுவிடுவீராகில் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காண்பீர் தனக்குள்ளே யிருந்துஉலகங்களை யெல்லாம் உற்பவிக்கச்செய்தும் தானும் அதுகளுக்குள்ளே கலந்திருந்து தனக்குப்பின்னுமில்லாமல் முன் னுமில்லாமல் ஜகவஸ்துவாகி அழியாதிருக்கிறவனுடைய மகிமை ப்பிரபாவமானது ஒருவரால்நிச்சயித்துச் சொல்லத்தக்கதோவிரி ந்துஸ்தூலித்திருக்கின்ற பிருதிவிமுதலாகிய தத்துவங்களையெல் லாம்வெவ்வேறாகம் பகுத்துக்காண்கின்ற சாங்கியநெறியும்யோக நெறியும்யென்று யிரண்டுவழிகளுண்டு, அதுகளையறிந்தவர்களுக்க ல்லது மற்றவர்களுக்குஅவனுடையமேலாகியஉயர்ந்தநிலைஇன்ன தென்றுஅறியக்கூடுமாவேதமுடிவில்சித்தென்றுதெளிந்து சொல் லப்பட்டமெய்ப்பொருளாகிய அவனுடையதன்மையைத்தம்மை த்தாமறிந்தஞானசிலர்கள் அறிவார்கள் அப்படியல்லாமல் விஷய ங்களையேபொருளென்று மதித்துக்கொண்டிருக்கின்ற பித்தர்க ளுமுண்டு அவர்கள்தம்மையறியாமல் அவனுடையதன்மைகளை யும் அறியார்கள்அவர்கள்மோக்ஷமும்பெறமாட்டார்கள்பிரத்திய க்ஷமாகியபிரமாணங்களால் அளவிடப்படாததாயும்மனதுக்கு அ கோசரமானதாயும் உபநிடதங்களிற்சொல்லப்பட்ட வாக்கியங்க ளாலும் அந்தவாக்கியார்த்தங்களாலும் அறிவிப்பதற்குளட்டாத தாகியுமிருக்கின்ற அந்தப்பரமபுருஷனுடையரகசியத்தின் உண் மையைக்காணாதபாமரர்களில் ஆரறிவார்கள்கீழ்மேல் நடுவாகிய மூன்றுலகங்களாகியும் முக்குணங்களாகியும்யாவரும் யாவுமாகியு ம்இதுகளுக்குவேறுபட்டும்நீக்கமில்லாமலிருக்கின்றஒப்பற்றநிலை மையையுடையபரம்பொருளாகியஒருவனுடையகிருத்தியங்கள்பி ரம்மாதிதேவர்களாலும்முனீஸ்வரர்களாலும் அறியப்போமோக ர்மமும்அந்தக்கர்மத்தாலாகியபயனும்அப்பயனைத்தருகின்ற கர் த்தாவும்தானாயிருக்கின்றான் அவனுடைய அருமையையும் பெரு மையையும்ஆரேனும்அறிவார்களாகில் அவர்கள் இகபர மென்கிற

கடலைக்கடந்துகரையேறுவார்கள்மந்திரமும்மாதவமும் அதுகளா ல்வரும்பிரயோசனமும் அதுகளைக்குறித்து கிரமமாகச்சொல்லப் பட்ட தெய்வமும் வேதமும் வேள்வியும் ஆகுதியும் அவனேமு றைதவராமல் முன்னே கொடுக்கவேண்டிய பலனைமுன்னேகொ டுக்கிறதும் பின்னேகொடுக்கவேண்டிய பலனை பின்னே கொடுக் கிறதும் அந்தநாராயணன் செய்கையே அதை அவனுடையஅற் புதமாகிய மாயையினாலே அநேகரறியாதிருக்கிறார்கள் நல்வினை யானது நன்மையும் தீவினையானது தீமையுமாகிய ஒவ்வொருபல னைக்கொடுக்குமல்லாமல் விசேஷமாகக் கொடுக்கமாட்டாதுகள் அந்த பகவானுடைய கருணையின் பிரபாவம் அப்படியல்ல ஜெ னனமரணத்துக்கு ஏதுவாகிய இருவினைகளும் பற்றற்றுப்போம் படிச்செய்து ஆசிரதர்கள் நினைவிலென்னென்ன வுண்டோ அது களையெல்லாம் அவர்களுக்குக் கொடுக்கின்றது. இதையறிந்தும் வேறு திருஷ்டாந்தரமும் வேணுமோ, யாககிருத்தியங்களைச்செ ய்கின்ற சோமயாஜிகள் யாகமுடிவிலே அந்தச் சேஷசாயிக்கு ஒரு ஆகுதி கொடுப்பார்களானால் அது சராசரங்களுக்கெல்லாம் பிரீதியாகும் வேதமும் இப்படியே சொல்லுகின்றது. மூலப்பிர கிருதி யென்னும் மாயையினிடத்திலிருந்துதோன்றிய பஞ்சபூத பௌதிகங்களைத்தந்த முதற்பொருளானது அந்தப் பூதபௌதி கங்களாலாகிய மிருகாதிகளும் அதுகளுக்கு மேலாகிய மனுஷக திகளும் அதுகளுக்கு மேலாகிய தேவகதிகளும் ஆகிய இவ்வகை யாயுள்ள ஏழுவகைத்தோற்றத்திலும் போக்குவரவற்ற நிலமை யை அடையாதவர்களுடைய அறிவுக்கு எட்டுமோ பிரம்மாமுத லான சராசரங்களெல்லாம் அந்தஜோதி சொரூபியின் திருநாபிக் கமலத்தின் பொகுட்டில் ஒருபுரைக்குள்ளே அடங்கிருக்கின்றன காண்கின்றவர்கள் கண்களுக்குள்ளும் காட்டுகின்றவர்களுடைய கண்களுக்குள்ளும் அவனொளித்திருக்கிறான். பஞ்சபூதங்களுக் குள்ளும் நிறைந்திருக்கிறான் சகலருடைய நினைவிலுஞ் செய்கை யிலும் சொல்லிலும் வாழ்ந்திருக்கின்றான் இந்திரியங்கள்தோறும் சேர்ந்திருக்கின்றான் இப்படிக்கெல்லா மிருக்கின்றதைத் தானெ வ்வளவும் நினைக்கிறதுமில்லை முன்பு ஏகாக்ஷரமாகியபிரணவமும் பின்பு துவயாக்ஷரமாகிய நமசப்தமும் அப்பால் பஞ்சாக்ஷரமாகி ய நாராயணாயவென்பதுமாகிய எட்டெழுத்தும் மூன்றுபதமும் இரண்டுசந்தியுமாய் தழைத்திருக்கின்றான். காமவெகுளி மயக்கங் களினாலுண்டாகிய தீமைகளை யெல்லாம் நிவர்த்திசெய்கின்ற

அந்தஷட்குண பரிபூரணனன எம்பெருமானுடைய திருநாமத்தையும் அதன் மகிமையையும் குறித்துப் பேசாதவர்கள் அவனது இருப்பை எப்படியறிந்து பேசமாட்டுவார்கள் காலமுங்கருவியும் இடமும் பயனும் அந்தப்பயனை யனுபவிக்கின்றவனும் சீலமும் அதுகொடுக்கின்ற சம்பத்தாயும் விகாசமாயுமிருக்கின்றான் சங்கீதவித்துவான்கள் சப்தசுரங்களையும் தங்களுக்குள்ளே உதிக்கின்ற உணர்வினால் முன்பு சிந்தித்துக் கண்டறிந்து பின்பு வீணையினிடத்தில் வாசிப்பதினால் செவிக்கு விஷயமாகும்படி அறிகிறதுபோல பெரியோர்கள் யோகத்தில் தியானத்தின் வழியாகத் தரிசித்து அந்த யோக நிஷ்டையிலே புறத்திற்காண்கின்றதனால் அகத்திலுள்ளவனாகியும் புறத்திலுள்ளவனாகியும் ஆகாசமானது மற்ற பூதங்களுடன் சேர்ந்திருந்தும் அதினுடனே கலவாமலிருப்பதுபோலே இவன் பிருதிவி முதலான தத்துவங்களுடனே கலவாமலிருப்பதுபோலே . இவன்பிருதிவிமுதலான தத்துவங்களுடனே கூடியிருந்தும் அதுகளிலெல்லாம் தாககற்று நிற்பவனாகியும் வேதங்களும் பிரமிக்கின்றதன்மையை யுடையவனாகியுமிருக்கின்றான் ஓங்காரமாகியஓரெழுத்துக்குள் அதனுயிராயுமிருக்கின்றான். அறிவுக்கறிவாயுமிருக்கிறான், மூவுலகங்களையும் தழுவியிருப்பதனால் புகையும்அக்கினியும்போலவு மிருக்கின்றான் பலபேதமாகிய சமயங்களைப்பற்றிவாதிக்கின்றசமயவாதிகளுடையமாறுபாடுகளையொழித்து ஏகபாவனையாய் பேசுகின்றவர்களுக்கெல்லாம் பலமலர்களைக்கொண்டுதொடுக்கப்பட்டமாலையினிடத்துள்ள மலர்களைப்போலவும் கடலும் அதனலையும் போலவும் வேறுபாடில்லாமலுமிருக்கிறான் இப்படிப்பட்ட பரமாத்துமனை நீரிகழ்ந்துபேசி உம்மைச்சார்ந்திருக்கின்றசெல்வமுறுஉம்முடையதிர்க்காயுளும் பெயரற்றுப் போம்படி நீரும் பிராணனையிழந்துவிடுகிறீரேயென்று நினைத்து நானந்தஜெகதீசனுக்கு தெண்டன் சமர்ப்பித்து மங்களாசனமாக அவனுடைய திருநாமத்தைச்சொன்னேனென்று பிதாவுக்குத் தெரியும்படிச் சொன்னான்.

இதுகளை யெதிரேநின்று பிரகலாதனன்சொல்லவே அந்தஇரணியனுக்கு எவ்வகையுலங்களும் அஞ்சும்படிச் சமுத்திரத்திற்றோன்றிய ஆலகால விஷத்தைப்போல பிரபலமாகிய கோபமுண்டது. சூரியனும் சந்திரனும், ஆகாசமுஞ் சுழன்றதுகள்பூகம்பமுண்டாயிற்று அவனுடைய கண்கள் உதிரத்தைக் கக்கினகொடிபோலப் புகையெழும்பி யுகாந்த காலாக்கினியைப் போல உக்கிரமாகிய அக்கினி ஜொலித்தது. இவ்விதமாகப்பொங்கி அந்தஇர

ணிபேஸ்வரன் என்னுடனே பகைக்கின்றவர்கள் இனிவேறில்லை குடலுக்குள்ளே தினவுபோல என்னிடத்தில்தானே யிருந்துஎன் சத்துருவுங்கே நானடிமையென்றுசொல்லுகின்றான். ஆகையால் இவனைக் கொண்டுபோய் கொலைசெய்யுங்களென்று ஆக்கியாபித்தான். அந்த நிமிஷத்திலேதானே காலனைப்பார்க்கிலும் அதிகமான கொடுமைகளைச்செய்கின்றவர்களாகிய அசுரர்களனேகர்வந்து ஒருயானைக்குட்டியைச்சிங்கத்திரள்பிடித்திழுத்துக்கொண்டுபோவதுபோலப்பற்றி இழுத்துக்கொண்டுபோய் மலைபோல்உயர்ந்தாத்தினகசிநமாகிய வாசலுக்குவெளியிலேநிறுத்திமழுவாள் சூலம் வேல், குந்தம், கெதை முதலாகிய ஆயுதங்கள்அனேகமாயிரங்களைக்கொண்டு பிரகலாதனன்மேல் பிரயோகஞ்செய்து இவனை உயிருடனேதின்றுதீர்ப்போமென்று இடியைப்போலகொக்கரித்துக்கண்களால் நெருப்பைச்சொரிந்தார்கள். அப்போது ஜீவகோடிகளினிடத்தில்பெற்றதாயைப்போல அன்பைச்செலுத்துகின்ற அந்தப் பிரகலாதனன்மேல் தவத்தைச்செய்யாத பாவிகளாகிய அசுரர்கள்பிரயோகித்த ஆயுதங்களெல்லாம் நல்லொழுக்கத்ததையடைந்த மெஞ்ஞானியின் சகாயத்தைப்பெற்ற ஒருவனை அவன் பகையாளிகள் வைத வசைச்சொல்லைப்போலாய்விட்டதுகள்.

அவன் ஒருதன்மையாகிய வைராக்கிய சித்தத்தை யுடையவனாய்த் தான் அகக்கண் புறக்கண்களால் தெரிசிக்கப்பட்ட தற்பரனாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடியைமறவாமலும்அவன்திருநாமத்தைவிடாமலும் தியானம்பண்ணிக் கொண்டிருந்ததனால் அவன்மேலெரிந்ததுகளும், எய்ததுகளும் அவனையெத்தியதுகளும்குத்தியதுகளும், அறிந்ததுகளுமான சகலபடைகளும்முறிந்து ஒடிந்து உதிர்ந்துசிறுபொடிகளாய்போனதுகளேயல்லாமல் அவனுடைய திருமேனியிலுண்டாகிய தினவைக்குறித்துச் சொரிந்த அம்மாத்திரம் உபத்திரவமுஞ் செய்யவேயில்லைஅதையந்த அசுரர்கள் பார்த்து ஆச்சரியங்கொண்டுஇரணியனிடத்தில்வந்து சுவாமி எங்களிடத்திலுள்ள ஆயுதங்களையெல்லாம் பிரயோகஞ் செய்தோம் அதுகளெல்லாந் தவிடுபொடியாய்விட்டதுகள் உம்முடைய குமாரன் சரீரத்துக்கு யாதொரு துன்பமுமில்லை இனிமேல் நாங்கள்செய்யவேண்டியதென்னவென்றார்கள். அதைக்கேட்டுஅசுரேந்திரன் மிகுந்த கோபமுண்டானவனாய்ப் பிரகலாதன்ன் கபடமான நெஞ்சையுடையவனாகையால் ஏதோ மந்திரக்கட்டினால்

அந்த ஆயுதங்களெல்லாம் தன்னுடம்பில் தாக்காமல்முறிந்துபோ ம்படி செய்தான் நல்லது இப்பொழுது நீங்கள் கடூரமான அக்கினி யை மூட்டி அதிலே அவனைக்கட்டித் தள்ளிவிடுங்களென்று ஆக்கியா பித்தான் அப்படியே அந்த துஷ்டர்கள் அதிகநிகளமும் அகலமு ம் ஆழமுள்ளதாக ஒருபெரிய குழிவெட்டி அந்தக்குழியிலே பர் வதம்போலப்பருத்தபுளியங்கட்டைகளை மேலும்மேலும் நிறைய அடுக்கி ஆயிரங்குடம்எண்ணெயும் ஆயிரங்குடம்நெய்யும் கொண் டுவந்துசொரிந்துத் தணல் மூட்டினவுடன் ஜ்வாலையானது தெய் வலோகமட்டும்போய் கொழுந்துவிட்டு நெருப்புபற்றிக்கொண்டு பிரளயகாலாக்கினிபோல யெரியும்பொழுது அங்கிருந்தவர்களெ ல்லாம் உயிர்சோரும்படி என்னையனுகிய பிரகலாதாழ்வானைக் கையுங்காலுங்கட்டி நிர்த்தாக்ஷிணியமாய்த் தள்ளிவிட்டார்கள். அவன்லோகாபிராட்டியனுடைய திருவடியை நமஸ்கரித்துக்கொ ண்டே நாராயணா நாரத பாராயணாவென்று துதிசெய்து நிர்மல சித்தத்துடன் அதிலேவிழுந்தான். அதியுஷ்ணமாகிய அந்த அன லானது அவனுக்குக்குளிர்ந்து சீதளசந்தனக் குழம்புபோலாய் விட்டது அப்பொழுது அசுரர்கள் இரணியனிடத்திற்குப்போய் ஐயா தேவரீர் உத்திரவின்படி நெருப்புக்குழியில் தள்ளியும் உம் முடைய புத்திரனை ஜ்வாலையையுடைய அந்தநெருப்பு எவ்வளவுந் தகிக்கவேயில்லை இனியென்ன செய்கிறதென்று கேட்டார்கள் இரணியாசுரன் விழிகள் கொதிக்கும்படி மகத்தாகிய குரோதத் தைக்கொண்டு அப்படியா அந்தஅக்கினியைகட்டிச் சிறையிடுங் கள் இந்தத்திருட்டுப்பயலை அஷ்டமாநாகங்களைவிட்டு கடித்து உயிர் குடிக்கும்படி செய்யுங்கள் அவன் சாகாமலிருப்பதைப்பா ர்ப்போமென்று ஆக்கியாபித்தான். அனந்தன், வாசுகி, சங்கன், குளிகன், பதுமன், மகாபதுமன், தக்ஷகன், கார்க்கோடகன் என் கிறதெய்வீகமாகியசர்ப்பங்களெட்டும் இரணியேஸ்வரன் நினைத் தமாத்திரத்தில் அதிசீக்கிரமாக வந்து எங்களுக்கென்ன கட்ட ளையென்று கேட்டுணர்ந்து அவன்சொற்படியே கொடிய விஷாக் கினியைச்சிந்துகின்ற வாயினாலிரைச்சலிட்டுச் சிறிப் பிரகலாதன னுடைய அழகிய திருமேனியில் வாளைப்போல நீண்டு வளைந்து கூர்மையாயிருக்கின்ற பற்களானென்னும்படி மரணமடைவதற்கேது வாகிய திக்ஷ்ணத்திரங்களில் அதிககோபமாககடித்ததுகள் கடித் தவுடனே படம்விரித்துக்கொண்டாடியதுகள். தரையிலும் புர ண்டதுகள் அப்போது பிரகலாதனவன் தன்சரீரம் துடிக்காமல் எம்பிரானுடைய திருநாமத்தையே உச்சாரம் பண்ணிக்கொண்டி

ருந்தான். பக்கத்தில் நின்றவர்கள்பயத்தினால் வாயின்வழியாக இரத்தத்தைக்கக்கவும் பாம்புக்குவைரியாகியகருடனும் நடுக்கத்தையடையவும் சிவந்த மேகத்திற்குள்ளே பாலசந்திரன் நுழைகிறதுபோலக் கடிமீளாதஉருப்புகளில் காளி, காளாஸ்திரி, யமன், யமதூதனென்கிற நான்குபற்களுமத்தைத்து உருவமெழும்பிக் கடித்ததனால் அந்தப்பாம்புகளின்பற்களெல்லாம் வலியற்று ஒடிந்து உதிர்ந்ததுகள்பிரகலாதனனைக்கடித்த இடங்களெல்லாம் விஷம்பாயாமல் அமிர்தம்ஊறி ஒழுகத் தலைப்பட்டது.

அதுகண்டு தூதர்களோடி ஐயா அஷ்டநாகங்களுஞ்சூழ்ந்து கடித்தும் அதுகளின்பற்கள் அழுந்தவும்இல்லை உம்முடையமைந்தனுக்கு விஷமேறவுமில்லை என்று இரணியனுடனே சொன்னார்கள். அவன்கேட்டு கோபச்சிரிப்பு சிரித்து திக்குயானைகள்முன்னே இவனைக்கொண்டுபோய்ப் போட்டு அதன்காலாலிடரர்செய்து விடுங்களென்றான். அந்தப்படியே தூதர்கள் தெய்வீகமாகிய பாசங்களைக்கொண்டு பிரகலாதனன் கை, கால், மார்பு, கழுத்துகளிலும் இருக்கி ஒடுக்கிக்கட்டி எடுத்துக்கொண்டுபோய் வெள்ளையானைமுன்னே போட்டார்கள் மின்னலைப்பழிக்கின்ற தன்கொம்புகளினாலேபிரகலாதனனுடைய வயிரமாகியமார்பில்குத்தியழுத்தியது அவ்விதமாக அழுத்தவே அந்ததந்தங்கள் நான்கும் இளவாழைத்தண்டைப்போல முறிந்து போய்விட்டதுகள். அதுகண்டு உண்மையில்லாத அசுரர்கள்கண்ணிமைப் பதற்குள்ளாகப்போய் ஐராவதம்உம்முடைய குமாரனைப்பாய்ந்து குத்தி கொம்புகளற்று விழுந்ததென்றுசொல்ல அசுரேந்திரன்கோடைகாலத்துச்சூரியனைப்போலச்சுடுகின்ற கண்களையுடையவனாய் கோபித்துஅவனை ஏழுநிலைகளையுடைய நமது பெரியஉப்பரிகையின் வாசற்கோபுர சிகரத்தின்மேல் ஏற்றி பூமியிலேதள்ளி விடுங்களென்று உத்திரவு செய்தான் பிரசண்டவாயுவைப்பார்க்கிலும்அதிகபலத்தையுடைய கொலையாளர்கள் அப்படியேகட்டித்தூக்கிக்கொண்டுபோய் மகாமேருவைப்போல அண்டபரியந்தமுயர்ந்த இரணியனுடையவாயிலிருக்கின்ற கோபுர சிகரத்தின்மேலேற்றி அங்கிருந்துதலைகிழாகஉருட்டித் தள்ளிவிட்டார்கள். அந்தச்சமயத்தில்பூமாதேவியானவள்இரணியனுடையதம்பியாகிய இரணியாக்ஷதன் தன்னைப்பாயாகச்சுருட்டிக்கொண்டு போனபோது அவனைவராகமாயவதரித்துக்கொண்டு தன் ஆபத்தை நீக்கியபகவானுடைய பக்தன் இவனை

கையால் இவனுக்கு வந்த ஆபத்தைத்தான் நீக்கவேணுமென்றெ
ண்ணிப் பிரகலாதனிடத்தி லிரக்கத்தை யுடையவளாய் அவனு
க்குயாதொரு உபத்திரவமுமில்லாமல் மாந்தருளிக்கொப்பாகிய
தன்கைகளினால் அவனை எதிரே ஏந்திக்கொண்டாள். அதை இர
ணியனறிந்து உடல்வெதும்பி புத்திராவாஞ்சல்யமென்பது கடுகள
வுமில்லாமல் அடாதூதர்களே அந்தக் கள்ளப்பயலைப்பிடித்துயா
வராலும் அசைக்கப்படாத பெரியமலையுடனே நெருக்கிக்கட்டி
கரைகாணக்கூடாத சமுத்திர வெள்ளத்திலே விட்டுவிடுங்களெ
ன்று ஆக்கியாபித்தான். அவர்கள் அந்தப்படியே பிரகலாதனை
பர்வதத்துடனே சேர்த்துக் கட்டிக்கொண்டுபோய் கடலின்நடுவி
லேவிட்டார்கள் நடுநிலைமையையுடைய ஏகநாயகன் திருநாமத்
தைச்சோரவிடாதவனாகையால் பிரகலாதனுக்குப்பாதாள பரி
யந்தம் ஆழ்ந்தபெரிய சமுத்திரமானது சிறியமடுவைப்போலிரு
ந்தது அந்தநெடியமலையும்சுரைக் குடுக்கையைப்போல மிதந்தது
அலைமோதுகின்றகடலிலே மூழ்காமல் மேலேமிதக்கின்ற பர்வத
த்துடனே அந்தப்பாலன் இருப்பது எப்படியிருந்த தென்றால்
மகாபிரளயத்தின்மத்தியிலே ஆலிலையின்மேல் குழந்தை வடிவு
கொண்டு சயனித்திருந்த ஜெகத்ரக்ஷகனைப்போலே விளங்கின
தன்றியிலும் தீர்க்கவைராக்கியத்தையுடையவனாய் ஜெகதீசனு
டைய சகஸ்திர நாமங்களையுஞ்சொல்லித் தலையின்மேல் கைகூப்
பிக்கொண்டு பிரம்மத்துடன் கலந்திருந்தான்.

அதை யசுரர்களாலறிந்த மகாபராக்கிரமசாலியாகிய இரணி
யன் அவனைக்கொண்டுவந்து என்முன்னே விடுங்களென்றான் அவ்
வாறே பர்வதத்துடன் சேர்த்துக்கட்டிய கட்டுகளையவிழ்த்துப்பி
ரகலாதனை விடுவித்துக்கொண்டு வந்துவிட்டார்கள். அவனைக்க
ண்ட இரணியனுக்குச் சரீரமெரிந்து புழுங்கி இவனுக்கு விஷம்
கலந்த அன்னம், பதார்த்தம், பால், பழம், பஞ்சகச்சாயம்முதலா
கிய பக்ஷணங்களை யூட்டி இவனைக்கொல்லுங்களென்றான். அந்தப்
படியே அனேகவகைப்பட்ட விஷான்னத்தையும் ஊட்டினார்கள்
அதுகளையும் அவன் உண்டு பகவத்கடாக்ஷத்தினாலேஜீரணஞ்செ
ய்துக்கொண்டு சாகாமலிருந்தான் அதுகண்டு இரணியன் இவனை
யிருப்புப்பலையின்மேல் வைத்து கை கால் தலை உடல் முதலான
அங்கங்களும் சிதைந்து பொடி பொடியாய்ப் போகும்படி சம்மட்டிக
ளைக்கொண்டு அடியுங்களென்று ஆக்கியாபித்தான் அவ்வண்ணமே

கொலையாளர்கள் பிரகலாதனைக்கட்டி இருப்புப் பனையின்மேல்
வைத்து பெரிய இருப்பு சம்மட்டிகளைக்கொண்டு பலமாகஓங்கிய
டித்தார்கள் கணக்கில்லாத அசுரர்கள்கூடி மூர்ச்சுவிடாதுஓயாமல
டிக்கவே இனிபேசாது இவன்பிழைக்கிறதுகனவிலு மில்லையென்று
சகலமானவர்களும் எண்ணும்படியாயிருக்கின்றசமயத்தில் அந்த
ப்பிரகலாதாழ்வான் தனக்குள்ளே அந்தரியாமியா யிருக்கின்ற
எம்பெருமானுக்கு கைகளோ அனேகமாயிரம் திருவடிகளோ அ
ளவிறந்ததுகள் திருக்கண்களோ எண்ணத்தொலையாததுகளென்று
அவனுடைய அவயவமுதலாகிய ரூபநாமகுணங்களை ஒழியாதுதி
யானித்து மனமுருகிக்கொண்டிருந்தானே யல்லாமல் தன்னைய
டிக்கிறார்களென்கிற நினைவு சிறிதாவது கொள்ளவில்லை என்னசெ
ய்தும் பிராணன் நீங்காததுகண்டு இரணியன் இவன்மாயையினால்
தன்னுடலுஞ்சிதையாமல் உயிரும்பிரியாமலிருக்கத்தக்க உபாய
த்தையுடையவனாகி யிருக்கின்றானாகையால் இனிநானே இவனைக்
கொல்லுகிறேனென்று கோபித்து உலகங்களெல்லாம்நடுங்கும்ப
டிச்சமீபத்தில் வந்தான் அப்படித்தன்னைக் கொல்லவந்த பிதா
வை பிரகலாதனன் வணங்கி ஐயா என்னுயிரை வாங்கும்படி நீர்
வருத்தப்படவேண்டாம் இது உம்மாலே சாத்தியமாகத்தக்கதல்
ல சகலபுவனங்களையும் உண்டாக்கிய ஸ்ரீமந்நாராயணனே கொல்
லும்படியிருக்கின்றதென்று சொன்னான் அதைக்கேட்டு இரணியா
சுரன் அடா உலகங்களையுண்டாக்கினவரார் என்பெயரைத் துதி
பண்ணிக்கொண்டிருக்கின்ற திரிமூர்த்திகளா அல்லது முனிவர்
களா மற்றயாவர்கள் அதைத்தெரியச்சொல்லடா என்றான் அப்ப
டிப்பட்டவனொருவன் உண்டாயிருந்து அவனைக்காட்டுவானாகில்
அவனைக்காணலாமென்று நினைத்து தனக்குங்கோப மூண்டெழு
ந்தும் இரணியன் பிள்ளையைக் கொல்லவில்லை அப்போதுபிரகலா
தனன் ஐயா உலகத்தை யுண்டாக்கினவனாரென்று கேட்டீரல்ல
வோ முன்கூறியபடியே உலகங்களைப் படைத்தவனும் அதுகளு
க்குள் நானாபேதமாகிய உயிர்களைப்படைத்தவனும் அந்த அழியா
த உயிர்கள்தோறும் அந்தர்யாமியாயிருந்து அங்கங்கே வாசஞ்செ
ய்கின்றவனும் மலரினிடத்தில் மணமும் எள்ளினிடத்தில் எண்
ணெயும்போல அளவில்லாத பலபொருள்களிலும் கலந்திருக்கின்
றவனுமாகிய ஸ்ரீமகாவிஷ்ணு வென்பவன்தான் அவன் என்கண்க
ளாலே நோக்கிக் காண்பதற்கு யெங்கும் நிறைந்திருக்கின்றானெ
ன்று சொல்லவே இரணியாசுரன் தன்னுடைய தூதர்கள் பிரகா

சிக்கும்படி கலகலவென்று சிரித்து அடா உலகத்திலுள்ள பல பொருள்களிலும் அந்த மகாவிஷ்ணுவென்கிற ஒருவன் புகுந்து நிறைந்திருக்கிறானென்று சொன்னையே அதைநான் கண்டு பின்பு அதற்குத்தக்கபடி செய்கிறேன் அப்படியே அந்தத்திருடனிருப் பானாகில்அவனுடைய நிலைமை திருஷ்டாந்தப்படுத்து பார்ப்போ மென்று சொன்னான். அதற்குப்பிரகலாதனன் ஐயா அந்த புரு ஷோத்தமன் தூணிலுமிருக்கின்றான் அணுவிலுமிருக்கின்றான் அந் தஅணுவை அனேகங்கூறாகச் செய்யப்பட்ட பரமாணுவிலும்இரு க்கிறான் மகமேருவிலு மிருக்கின்றான் இவ்விடத்தில் நிற்கின்ற தூ ணிலுமிருக்கின்றான் நீர் சொன்ன சொல்லிலுமிருக்கின்றான் அவ னில்லாத பொருளொன்றுமில்லை இந்த அதிசயத்தைப்பார்க்கவே ணுமானால் சீக்கிரத்தில் சந்தேகமின்றிச் சோதித்தறிந்துகொள் ளும் யென்றான்.

இவ்விதமாகச்சொல்லவே இராணியன் நல்லதென்று சம்மதி த்துப் பின்னுஞ்சொல்லுகின்றான் தேவர்களுக்கும் உனக்கும் ஒத் தவனாகிய இந்த உலகமெங்கும் நிறைந்திருக்கின்ற அந்தமகாவி ஷ்ணுவை இங்கேநிற்கின்ற தூணினிடத்தி லிருக்கக்காட்டு காட் டாமற் போவாயானால் மஸ்தகத்தையுடைய மதயானையைச் சிங் கமானது அறைந்து கொல்வதுபோல் உன்னை நான் கொன்றுஉ ன்னுதிரத்தைக்குடித்து உடலையையுந் தின்றுவிடுவேனென்றான்.

அதுகேட்டு அறிவிற்சிறந்தவனாகிய பிரகலாதனன் கேளு மையா பிதாவே என்னைக்கொல்லுகிறேனென்று அடிக்கடிச்சொ ல்லுகின்றீர் என்னுயிரை உம்மாலே கொல்லப்படுகிறதற்கு அத் தனை எளிதாகியதல்லவே நான் உமக்கு முன்னமே சொன்ன சர் வேஸ்வரன் நீர் குறித்த இடங்களிலெல்லாம் அவசியம் காணப்ப டுகிறான் காணாமற்போவானேயாகில் என்னுயிரை நானே மாய்த் துக்கொள்ளுகிறேன் அப்படிச்செய்யாமல் பின்னும் பிராணனுட னிருப்பேனானால் அவனுக்கு நான் அடிமையல்ல எனக்கவனுண்ட வனுமல்லவென்று பிரதிக்கினைப்பண்ணினான் இரணியாசுரன்தன் னுடைய வச்சிரதந்தங்கள் பிரகாசிக்கும்படி சிரித்து காலாக்கினி போல மனங்கொதித்து நல்லதுநல்லதென்றுசொல்லி இடிவிழுந் ததுபோலஅதிக ஆரவாரத்துடன் எதிரேயிருந்த சொர்னமாகிய நெடியதூணை உருமிப்பார்த்து வீரகண்டாமணியணிந்த தன்னு டைய வலதுகாலைத் தூக்கி உக்கிரத்துடனே ஓங்கியுதைத்து இதி லே எவனிருக்கின்றான் காட்டடாவென்றான் இரணியன்.

## நான்காவது
# நரசிங்காவதாரம்.



ஸ்துதி.

அரக்கரணிக் குலமாயைச் செயலனைத்து
மாவிகொடு வானவர்பால் மருவிற்றென்ன
மரக்கொடிய விரணியனை மார்புகீண்டு
வழுதியா மழிபுரக்குந் திருமார்பானை
வரக்குரிசிற் பிரகலா தனனைக்காத்த
மாதவனை நரசிங்கவடிவு கொண்ட
அறக்கருணைத் திருமாலை யமரரேற்றை
யனவரத முந்துதியாத் துதித்துமன்றே.

அப்படி உதைத்தமாத்திரத்தில் அந்தத்தூணிருலிந்து ஒரு
பேரோசையானது எழுந்துதிசைகளைக்கிழித்து அண்டமுகட்
டையும் பீறிக்கொண்டுஊடுருவும்படிச்சிவந்தகண்களையுடையசி
ங்கமானது லோகா லோகங்களெல்லா கிடுகிடாயமானமாக மிக
வும் உக்கிரமாய்ச் சிறித்தது சர்வக்கியனும்சர்வபரிபூரணனுமாகி
யஎம்பெருமான் அந்தத்தூணில் குறித்தஉடனே பிரகலாதாழ்
வான் எழுந்துதன்னைமறந்துக் கூத்தாடினான், ஆனந்தக்கண்ணீர்
விட்டழுதான் அவர்விஷயமாயிருக்கின்ற திவ்வியசுருதிகளைப்பா
டினான் சிரசின்மேற் கைகளை அஞ்சலிபண்ணிக்கொண்டுசாஷ்டா
ங்கமாகவிழுந்து சேவித்தான். அந்தச் சமயத்தில் சாக்ஷாத் திரு
மார்பன் நரசிங்கவடிவுகொண்டு அத்தூணினின்று பலருமறியும்
படியாய் நகைத்தனர். அதைக் கேட்ட இரணியாசுரன் கொக்கரி
த்து அடடா தூணிலிருந்து நகைத்தாயோ நீயாரடா இந்தப்பை
யற் சொன்னவிஷ்ணுதானோ, எனக்குப்பயந்து ஓடிப்போய் இது

வரையிலும் நீயொளித்துக்கொண்டிருக்க சமுத்திரத்தில் இடம் போதாதென்றோ இப்போழுது இந்தத்தூணைத்தேடி இதிலேவந்து ஒளித்துக்கொண்டாய் ஆகட்டும் என்னுடனே யுத்தம் பண்ணத் தக்க வல்லமையை யுடையவனால் தூணைவிட்டுசீக்கிரமாகப்புறப்படுஎன்காலதாமசஞ் செய்கிறாயென்று சொல்லிப்பின்னும் அதட்டியார்ப்பரித்தான் அப்பொழுது அண்டம் வெடித்ததுபோலப் படீரென்று அந்தத்தூணும் பிளந்து அதிலிருந்து உக்கிர நரசிங்கமானது பிறந்தது. பிறந்த உடனே அது வளர்ந்தது அப்படி வளர்ந்தது அஷ்டதிக்குகளையும் பகிரண்ட முதலானதுகளையும் அளந்துக்கொண்டேபோய் நிறைந்தது ஆயினும் பகிரண்டத்திற்கு அப்பால்நடந்தசெய்தி என்னமோ அதையாரறிந்துச் சொல்லுகின்றவர்கள். ஆகாசம் கிழமேலும் கிழிந்தது பரிமளம்பொருந்தியதுளபமாலையையணிந்த நரசிங்கமூர்த்தியின் திருவுரு வானத்தையூடுருவிப்போனதை நாமறியமாட்டோம் திருவடித்தாரைகள் பூமியிலே தோயும்படி நின்றபொழுது நெடிதாகிய அண்டமுகட்டில் சத்தியலோகத்திலிருந்த பிரம்மதேவன் அன்றுதான் அந்தநரசிங்க மூர்த்தியினுடைய திருவுந்திக் கமலத்தில் உற்பத்தியானவன்போல விளங்கியிருந்தான். அப்போது நரசிங்கமூர்த்தியானவர்சேனைகளையெல்லாம் அதாகத நாசஞ்செய்து இரணியனைப் பிடித்து அந்திநேரத்தில் அவனுடைய கோபுரவாசற் படியில் தமது திருத்தொடைகளின்பேரில் இரணியாசுரனை வைத்து வச்சிராயுதம்போன்ற தமதுநகங்களினால் அவன் மணி மார்பை இரண்டாகப்பிளந்து அவனுடைய உதிரங்களையெல்லாம் கொப்புளித்துக்கொண்டு அவனைச்சம்மாரஞ்செய்து அவனால் தேவர்களுக்குண்டாயிருந்த துன்பங்களைப் போக்கினார்சகலநற்குணங்களைப்பொருந்திய பரமபாகவதசிகாமணியாகிய பிரகலாதனைச்செய்ததண்டனைகளைச்சகிக்காமல் காப்பாற்றும்பொருட்டும்சகலசராசரங்களிலும் வியாபித்துக்கொண்டிருப்பானென்று யாவருக்கும் நன்றாய்ப் புலப்படும்படிக் காட்டும்படியாய்விஷ்ணுவானவர் நரசிங்காவதாரஞ்செய்து தேவர்களுக்கும் மற்றியாவர்களுக்கும்உண்டாகிய கஷ்டங்களைப் போக்கி ரக்ஷித்துப் பழையபடி திருப்பாற்கடலில் ஆதிசேஷன்மேல் சயனித்து யோகநித்திரை செய்திருந்தார்

நரசிங்காவதாரம்

முற்றிற்று.

## ஐந்தாவது

# வாமனாவதாரம்.



### ஸ்துதி.

வானவரை வருத்தவுணக் கழுதென் னாளும்
வதைந்தகல மாயையருந் தொழில்களோட
ஞானநெறி சிறக்கமறை யோங்கக் கூறும்
நானிலமு மோனியரு மகிழ வஞ்சத்
தானவர்பால் மூவடியேற் றகில வண்டந்
தனையளந்தோ ரடியான்மா வலிச்சிர் சென்னி
மேனழுத்திச் சீரளித்த வாமனேசன்
வித்தகத்தாண் மலர்முடித்து மகிழு வாமால்.

பின்பொருசமயம் மகாவிஷ்ணுவானவர்மோகினி வேடம்புனைந்து அமிர்தத்தை அசுரர்களுக்குக் கொடாமல் அமரர்களுக்குப் பகுந்து கொடுக்க அப்போது அசுரர்களுக்கும் அமரர்களுக்கும் அமோகமான யுத்தம் நடக்கிறகாலத்தில் பிரகலாதனன்பேரனாகிய மாவலியானவன்வெகுண்டு தேவர்களை அதாகதம் செய்கிறததியில்மகாவிஷ்ணு மிகுந்த கோபங்கொண்டு வச்சிராயுதத்தைப் பிரயோகித்து மாவலியைத் தரையில்வீழ்த்திவிட அதையறிந்து அசுரகுருவாகிய சுக்கிராசாரியன் ஓடிவந்து அவனுக்குச்சஞ்சீவி மந்திரத்தை யோதினான். அம்மந்திரபலத்தினால்மாவலியுயிர் பெற்றெழுந்து எவ்விதத்திலாகிலும் தேவர்களைஜெயித்து இந்திரன் வாழ்வைத்தான் பெறவேண்டுமென்ற வெண்ணங் கொண்டவனா

சுக்கிராசாரி முதலானோரை வணங்கிப் பூசித்து உன்னத ஆசனத்தி லிருக்கச்செய்து கோதானமுதல்சோடசதானங்களையும் அவாரியாகக்கொடுக்க அதுகளையெல்லாம் பெற்றுக்கொண்டு சுக்கிராச்சாரி முதலானோரும் பெருமகிழ்ச்சியடைந்து மாவலியைக்கொண்டு விச்சுவசித்தெனும்வேள்வியைப் பிரம்மதேவன் முதலானதேவர்களும்நடுங்கும்படி முடிக்கஅவ்வேள்விக் குண்டத்திலிருந்து சொர்னமயமாகிய குடை கொடி முதலாகியதோடு நான்கு அசுவங்களுடன் அழியாதரதம் ஒன்றும் பிலுகத்திற்குச் சமமாகியஒருவில்லும் அம்புறாத்தூணியுடன்தோன்ற அதுகளைக்கண்டமாவலி இனி தேவர்களைவென்று ஜெயம்பெறுவேனென்று சந்தோஷமடையஅப்போது பிரகலாதனன் தன்பேரனுக்குண்டாகிய சந்தோஷத்தை யுணர்ந்து அழியாதகவசமும் நவமணிமாலையுங் கொடுத்தான் அதையணிந்துக்கொண்டு ரதரோகணஞ்செய்து மேல்நாட்டையடைந்து வில்லைவளைத்து நானேறிட்டு லோகாலோகங்களும் அஷ்டதிக்குப்பாலகர்களும் திக்குயானைகளும் ஆதிசேடனும் குலகிரிகளும் நடுங்கும்படி தனுசினது டங்கார ஓசையைக்காட்டினன். அவ்வொலியைக்கேட்ட தேவர்கள் முனிவர்கள் யாவரும் தேவகுருவாகியபிரகஸ்பதியினிடஞ் சென்று வணங்கி மாவலியினல் செய்யப்பட்டதனுடங்கார வோசையினல் தங்களுக்குநேரிட்ட பயத்தைத் தெரிவிக்கக்கேட்டு பிரகஸ்பதியானவர் அனைவோரையும் நோக்கிச்சொல்லலுற்ருன்.

கேளுங்கள் தேவர்கள் முனிவர்களேசுக்கிராச்சாரிஅந்தணர்கள் சமுகத்துடன் வேதவிதிப்படி விச்சுவசித்தென்னும் வேள்வியைமுடித்து அந்த ஓமகுண்டத்திலிருந்து வந்த அழியாரதமும், அழியாதவில்லும் அழியாதகவசமும் முதலானதுகளையும் மாவலிக்குக்கொடுக்க அவனதையணிந்து ரதத்திலேறி தேவர்களையும் மற்றியாவர்களையும் வென்று ஜெயம்பெறவெண்ணியிருக்கிருப்பதால்இப்போதவனை வெல்லஉங்களாலாகாதுபிரமன், விஷ்ணு, சிவன், மூவரும் ஒன்றாகூடிவந்து மாவலியையெதிர்த்து சமர்செய்யமுயன்றபோதிலும் அந்தமாவலியை வெல்லுவதற்குத்தக்கயுக்தியை யானென்னசொல்லப்போகிறேன் ஆகிலும் யுத்தஞ்செய்வதைவிட்டு மாவலியைச் சினேகித்துக்கொண்டு வாழக்கடவீரெனக்கேட்டு தேவேந்திரன்முதல் தேவர்கள் யாவரும்மனக்கலக்கங் கொண்டு தேவலோகத்தைவிட்டு ஓடி ஒளித்திருந்தார்கள்.

இதைக்கண்ட மாவலிமகிழ்ந்து அப்பொன்னகரத்தில் அசுரர்கள் களிக்க நிருதர்கள்வியப்புற. தேவேந்திரன் ஏறும்சிங்காசனத்தின்மீதேறி ரம்பை, ஊர்வசி, திலோர்த்தமை, மேனகை இவர்கள் ஆடவும்பாடவும் வெண்சாமரம்போடவும் மற்றுமுள்ளவர்கள் தன்னைச்சூழ்ந்து நாடவும் தேன்பொருந்திய பாரிஜாதமாலையையணிந்து சகலருங்கொண்டாட தேவசிங்காதனத்தின்மீது பொருந்தி திசைகளையெல்லாம் தன் கைவசப்படுத்திக்கொண்டு அரசாண்டிருந்தான். அனேகயாகங்களைச்செய்தும் அளவிறந்த தானங்களையளித்தும் யாசகர் முதலாகிய ஏழைகளெங்குமில்லாதபடிக்குத்தானஞ்செய்து ஜெயசாலியாகி சிறந்துஉலகத்தையாளுவதைக்கண்ட அதிதியானவள் சோர்ந்து கண்களில் நீர் பெருகவிட்டுக் கொண்டுதன்கொழுனனாகிய காசிபனைக்கிட்டி என் பிராணநாதரே தேவேந்திராதிதேவர்கள் இடரைப்போக்கவும் அசுரர்குலத்தைநாசமாக்கவும் தக்க ஒருபுதல்வனை பாலிக்கவேணுமென்று வினயத்துடன் வேண்டிக்கொள்ளக் காசிபர் சொல்லுகின்றார்.

கேளும்பெண்ணே அதிதி மிகுந்த சங்கடத்தை யடையவும் தேவேந்திரன் முதலான தேவர்களும் முனிவர்களும் மகிழ்ச்சியடைந்து சுகத்தைப் பொருந்தும்படியும் உனக்கொரு சுதன்றான் சூரியனைப்போல பிரகாசத்தைப்பெற்று உதிக்கக்கடவன் அதற்கு ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருமந்திரத்தைத் தியானித்து விரதமிருப்பாயாகில் உன்மனதுக்கினிய பாலன்உதிப்பானென்று சொல்லக்கேட்டு அதிதியும் சந்தோஷமடைந்துபங்குனிமாசத்தில் சூரியனிருக்கும் திதிமுதலாகு துவாதசிவரையில் விரதத்தை அனுஷ்டித்துப் பனிரெண்டு அக்ஷரத்தோடுமணம் பொருந்தியமலர்களால் மாதவனையர்ச்சித்து விரதத்தை முடிக்கப் பகவான் கருடன்மீதூர்ந்துவந்து அதிதிக்குச் சேவைதந்து நிற்க யதிதிபலவாறுகப்புருஷோத்தமனைக்கொண்டாடித் தன்னைமறந்து ஆனந்தக்கண்ணீ ருகிர்த்துஉருகிவாடிக் கதறுவதைக்கண்டு பகவான் அவள் பக்திக்கிரங்கி உத்தமகுணத்திற்சிறந்த பெண்மணியே உனக்கென்னவாம்வேணும் கேளுமென அதற்கு அதிதி ஓசுவாமி தேவர்களுக்குண்டாகிய சிரமத்தைப் போக்கும்படியான நீருமுடைய ஒருபுத்திரனையளிக்கவேணுமென்று வினவியபோது முராரி ஓ அம்மணீ யானுனக்குத்தனையனாய் பிறக்கிறேனென்று சொல்லி மறைந்தருளினர். பகவான்தோன்றி வரமளித்த விவரத்தைத் தன்னாயகனுக்கு அறிவிக்கக்கேட்டுக் காசிபர் ஆனந்த

மடைந்து பரிவோடு தன்மனைவியைக் கூடினமாத்திரத்தில் கருப்பம் உண்டாகி கன்னியாமாதம், சுக்கிலபக்ஷம், துவாதசி திதி, திருவோணநட்சத்திரத்தும் கூடிய சுபதினத்தில் மகாவிஷ்ணுவானவர் வாமனமாகப்பிறந்தார் வாமனமென்றால் அதிகக்குள்ளம் இவ்வுருவத்துடன்பிறந்தபிள்ளையைமிகுந்த ஆதரவுடன் யெடுத்தணைத்துப் பிரியமாகவளர்த்துச் சாதகம், சவுளம், உபநயனம். வித்தையைகற்பித்து வேதசாஸ்திரத்திற் றேர்ச்சிபெறச்செய்து பிரகஸ்பதிபகவான் முப்புரிநூலளிக்கக், காசிபர்தண்டையளிக்க, அதிதி கௌபீனங்கொடுக்க, வியாசர் கமண்டலந்தர, குடைமரவடியிதனை சப்தரிஷிகளீய மான்றோலை அவனிப்பாவையளிடந்திட, சூரிய சந்திரர்கள் குண்டலங்கொடுக்க, சரஸ்வதிசெபவடம் அளிக்க, பிரம்மதேவன் காயத்திரி மந்திரத்தை போத இத்தியாதி பிரயோசனங்களைப்பெற்று பிரம்மாசாரிவை தீக்ஷத்தையடைந்து வாமனமூர்த்தியானவர் அவ்விடத்தைவிட்டு நடந்துநருமதைநதிக்கு வடதிக்கில் பிருகுமகாமுனிவர் ஆசிரமத்தில்யாகஞ் செய்துக் கொண்டிருக்கும்மாவலியின் பாற்செல்ல பிரம்மசாரியைக்கண்டு மாவலியெதிர்கொண்டுவந்து அழைத்துப் போய்தெர்ப்பாசனந்தந்து பலவிதங்களாய்ப் பூசித்து அவர்திருவடிதீர்த்தத்தை சிரசின்மேற்கொண்டு பணிந்து ஓ சுவாமி தங்கள் தெரிசனத்தினால் பாவனமாய்விட்டேன். இந்தயாகமும் பவித்திரமடைந்தது இனி தங்களுக்குவேண்டிய வஸ்துவெதுவோ அதையறிவித்தால் தடையின்றி அவசியந்தருகிறேன் என்கிற மொழியைக்கேட்டுவாமனமூர்த்தி களிப்படைந்து அவிகொடுப்பதில் எனக்குச்சமானமாகியபுருடர்களும் உலகத்தில்உண்டோ மெத்த புண்ணியவான் நீ யென்றுகேள்விப்பட்டல்லோ உன்னிடத்திற்குள்வந்தேன் ஆகிலும்யான்பொருந்தியிருந்து பகவானை யிடைவிடாமல் தியானிக்கவும்யாகம்செய்யவும் உன்னுடையபூமியில் என்னுடைய அடிகளால் மூன்றடிநிலம் மனப்பூர்த்தியாய் தானஞ்செய்வையாகில் உனக்குமெத்த புண்ணிய முண்டாமென்று சொல்லியபிரம்மசாரியின் மொழியைக்கேட்டமாவலி சந்தோஷமடைந்து அப்படியே தருகிறேனென்று தன்மனைவியின் கைகளால் என்னுடன் ஜலங்கொட்டி மூன்றடி தத்தஞ் செய்யப்போகிற சமயத்தில் சுக்கிராசாரி அவ்விடத்திற்குவந்து மாவலியைக்கண்டு சொல்லுகிறார்.

கேளும் சக்கிரவர்த்தியாகிய அரசனே மூன்றடிநிலம்யாசிப்பவன் சாமானியனென்று நினைத்து அலக்ஷியமாக யிதென்ன அற்பம்மூன்றடி நிலந்தானேயென்று எள்ளுந்தண்ணீரும் விட்டு தானங்கொடாதே இவன் சாக்ஷாத்து ஸ்ரீமகாவிஷ்ணுவென்று நின்மனதில் கெட்டியாக நம்பும் இவன்யேதோ கபடஞ்செய்ய உத்தேசித்து இத்தன்மையாகிய வடிவங்கொண்டு வந்திருக்கிறான் ஆதலால்மூன்றடிநிலம் இவனுக்கு தானம் கொடுப்பாயேயாகில் குடிமுழிகிப்போம் ஜாக்கிரதையாயிருமென்று தடுக்கமாவலிசொல்லுகிறன் குருநாதரே சகல அண்டபிண்ட சராசரங்களையும் தன்வயிற்றில்வைத்துக் காப்பாற்றும் ஆதிமத்தியாந்த ரகிதனே இருகரங்களையும் ஏந்தியாசகஞ் செய்கிறபோதநானெப்படியில்லையென்று சொல்லுவேன்மேலும் சர்வநியந்தாவாகிய பகவான்கைகள்கீழும் யென்கைமேலுமாக நான்அவருக்கு தானங்கொடுக்கவும் அவர்பெற்றுக்கொள்ளவும் நான்என்ன பாக்கியம் பண்ணேனே அதின் புலன் பிராப்தமாக அதனைவேண்டாமென்று யானெப்படி தடுத்துச்சொல்லுவேன் அன்னியிலும் பரமபதமும் கைலாசமும் இவ்விரண்டு பதவிகள் தவிரமற்றதுகளெதுவாகிலும்வேண்டுமென்றுயாசிப்பவர்களுக்குத் தடையின்றிக் கொடுக்கிறேனென்றுயான் சங்ககற்பம் செய்துக்கொண்டிருப்பதால் அற்பமாகிய மூன்றடிநிலத்தைக்கொடுக்கமாட்டேனென்று நாஸ்திசப்தங்கூறயென்மனஞ் சம்மதிக்கவில்லை ஆகையால் எனக்கு எவ்விதகஷ்டம் வந்து சம்பவித்தபோதிலும் அனுபவித்துத் தீர்ப்பேனே யல்லாமல்தியாகியென்று வருமவருக்கு நாஸ்தியென்று கனவிலுஞ் சொல்லமாட்டே னென்றுசொல்லி திடசித்தமுடையவனுகித் தான் எள்ளை பகவான் கையில்போட்டுத் தன் பத்தினியைத் தண்ணீர்விடும்படி சொல்லியபோது அவ்வுத்தமி சொம்பிலிருக்கும் ஜலத்தை விடும்பொருட்டு சாய்த்தாள் அச்சொம்பின் மூக்குத்துவாரத்தில் சுக்கிராசாரிவந்து புகுந்து ஒரு துளி ஜலம்கூட விழவொட்டாமல் அடைத்துக்கொள்ள அதையுணர்ந்து வாமனமூர்த்தியானவர்தன்கையிலிருந்த தற்பைப்புல்லினல் அச்சொம்பின் மூக்கில் குத்தினர்உடனே தண்ணீர் வெளிப்பட்டும் தன்கைமேல்விழ மாவலிச்சக்கிரவர்த்தி மூன்றடி நிலம் மனப்பூர்வமாய் தத்தம் பண்ணினன், இந்தகாரணத்தினல் சுக்கிராசாரியருக்கு ஒருகண் பொட்டையாகியது பின்புவாமனமூர்த்தியானவர் திரிவிக்கிரமனுகிபூமியையெல்லாம்ஓரடியாக அளந்துமற்றோரடியால் ஆகாயத்தை அளந்துமூன்றுவது அடிக்

குநிலம் எங்கேயிதற்கு வழியென்னசொல்லுமென்று திரிவிக்கிரம மூர்த்தி மாவலியைக்கேட்க அதற்கு மாவலி யோசித்துப்பலவித மாய் பகவானைக்கொண்டாடி அண்டத்துக்கும் பிண்டத்துக்கும் ஏகரூபமாக நிற்க இதனைமாபலியுணர்ந்து என்னையனே அடியேன் சிரசு அன்னியில்வேறுநிலம் ஊசிநாட்டுவதற்குக் கூடகிடையாதே அசத்தியனாய்விட்டேன் இதற்கு யானென்ன செய்வேனென்று கலங்கிவாடும் மாவலியைக் கிருபைக்கண்ணால் பார்த்து மூன்றாவதடியை அவன்சிரசின்மேல்வைத்து அழுத்திப் பாதாளலோகத்திற்சேர்த்து தேவேந்திரனுக்கு தேவலோகத்தைத் தந்ததுபோல் மாவலிக்குப் பாதாளலோகத்தைத் தந்து அவனுக்குத்தானும் குபேந்திரனாகயிருந்து கடாக்ஷம்செய்தார் வாமனாவதாரஞ்செய்ததற்கு மாவலிகாரணமாகும்.

வாமனாவதாரம்

முற்றிற்று.

## ஆறாவது

## பரசுராமாவதாரம்.



### ஸ்துதி.

பாராச ருபிர்குடித் தமா ரன்னாள்
படுவரக்க ரோடமர் செய்தாற்று நிற்ப
கீரணிசேஞ் சடைக்கடவு ளருளால் வான
நிலந்திருத் திரிசிகா வென்பவர்க்கு மூன்று

யேரியிரத் தந்தந்த பெரியா னன்று
ஈன்றளை மாய்த்து சுமை தக்கினித்தன்
சிரணிந்த பராசுரா மப்பே ரண்ணற்
திருவடியைக் குருவடிவா யிறைஞ்சு வாமால்.

சந்திரகுலத்தோன்றலாகிய காதிமகாராஜன் புதல்வியாகிய சத்தியவதியெனுங் கன்னிகையை வேதசாஸ்திர புராணேதிகாசங்களிற்றேர்ந்த இருசிகமாமுனிவருக்குக்கொடுத்து மணம்புரிவித்து மகிழ்ச்சியடைந்திருந்தான் அதுகாலையில் காதிமனைவியும் தன் புதல்வியாகிய சத்தியவதியும் தவசிரேஷ்டராகிய இருசிகமாமுனிவரைநோக்கி எங்களிருவருக்கும் மகப்பேரளிக்கவேண்டுமெனவேண்டிக்கொண்டவர்களாகி யுறைஞ்சிநிற்கமுனிவன் இரண்டுமந்திரத்தினல் உபயருக்கும் புத்திரப்பேருண்டாகும்படியருளி அதில் சாந்தகுணத்தினையுடைய ஒருபிள்ளையும் ராஜசகுணமுடையஒரு பிள்ளையும் உதிக்குமென்றுசொல்லி தீர்த்தயாத்திரைசெய்யச்சென்றூர் அந்தப்படியே காதியின் மனைவியின் அவள்புதல்வியும் மந்திரவிதியின்னபடிஅநுட்டித்துவர அப்போதுகாதியின்மனையாள் சாத்திககுணத்தினைப் பொருந்திய கருவையடைந்தாள் இருசிக மாமுனியின் மனைவி சத்தியவதி ராஜஸகுணத்தினையுடைய கருவைத்தரித்தாள் இப்படிக்கிருக்க தீர்த்தயாத்திரைச்செய்து அம்முனிவர்வந்து இதனையறிந்துமனைவியைநோக்கி அடிபெண்ணே நினது அன்னை வேதத்திற்சொல்லிய நெறியைபடையும்படியான புதல்வனைப் பெறுவாள் நீயோ கொடூரமாகியகுணத்தினையுடைய பிள்ளையைப் பெறுவாயெனச் சொல்லக்கேட்டு சத்தியவதிமனோவியாகூலமடைந்துச் சொல்லுகிறுள். தவத்திற்சிறந்த முனிவராகிய உமக்கு பிறக்கும் புதல்வன் சாந்தகுணத்தைப்பெறுமல் கொடூரமாகிய கெட்டகுணத்தை யடைவது நீதியோவென்று வாட்டமடைந்திருக்கும் மங்கையைநோக்கி அம்முனிவர் சொல்லுகிறுர்,

கேளும்பெண்ணே உனக்கேன்மனோவியாகூலமும் முகவாட்டமும் நேரிட்டது இதற்குகாரணம் கொடூரகுணமுடைய பிள்ளையுதிப்பானென்று யான்சொல்லியபடியினலல்லவோ உனக்குஇக்கவலையுண்டாகியது இந்தசிந்தனையை விட்டுவிடுஉனக்கு சாந்தம் தயைமுதலாகிய நற்குணங்கள் வாய்ந்த சத்புத்திரனுதிக்கக்கடவன் அன்றியும் அவனுக்குதிக்கும்புதல்வன் உலகம் யாவும் நடுங்க

காத்திரதேகத்தைப் பொருந்திக்கீர்த்தியை யடைவானென்று இரு சிகமாமுனிவன் இயம்பக்கேட்டு சத்தியவதி மிகவும் சந்தோஷம டைந்திருந்தாள் அத்தகதியில் காதியின்மனைவி அழகிற்சிறந்தபு தல்வனைப்பெற்றாள் அச்சிறுவனுக்கு கௌசிகனெனும்பெயரிட்டு வளர்த்து சகலகலைகளையும் ஓதுவிக்க அதனால்தெளிவடைந்து த வஞ்செய்யமுயன்று தனக்குநிகர் ஒருவருமில்லையென்றுசொல்லு ம்படி பஞ்சாக்கினி நடுவிலிருந்து தவமியற்றி மகாமகிமைபொரு ந்திய விசுவாமித்திரரென்று இரண்டாவது பெயர் வகித்துநற்கீர் த்தியடைந்திருந்தார்.

அதன்பின்பு இராசிமகாமுனிவர் மனையாளாகிய சத்தியவ தியோர்மகனைப்பெற்றாள் அச்சிறுவனுக்கு ஜமதக்கினியெனப் பெயரிட்டுத் தகுந்தகாலத்தில் கௌளம் உபநயன முதலாகிய நற்கருமங்கள்யாவு முடித்துக் கல்வியிற் பயிற்சியடையச்செய்து ரேணுகையென்னும் கன்னிகையை மனம்புரிவித்தார்கள் ஜமதக் கினியும்ரேணுகையைக்கூடி தருமமார்பனென்றும்சுமதன்யென் றும் இரண்டு பிள்ளைகளைப்பெற்று தவசிலர்கள் யாவரும் சந் தோஷிக்க வேதவிதிப்படி அச்சிறுவர்களுக்குநல்லநாள் பார்த்து சாதகம், சௌளம், உபநயனம் முதலானநற்கருமங்களை நடத்தி கல்வியிற்றேர்ச்சியடையச் செய்துக்கொண்டு ஜெமதக்கினிமுனி வர் சந்தோஷத்துட னிருக்கிறநாளில் பூவுலகத்தினில் அரசருங் கொடியவசுரரும் அதருமமார்க்கங்களை நடத்திவருவதால் புண் ணியங்குறைந்து பாவமேலிட்டபடியால் பூமாதுபரதவித்துப்பூமி பாரஞ்சுமக்கமாட்டாது பகவானைக்குறித்துமுறையிட்டுக் கதறிய ழுது புலம்புகிறதைக்கேட்டு சாக்ஷாத்து பகவான் ரேணுகைவயி ற்றி லுதித்தும் பரசுராமரெனப் பேர்வகித்துசாதகஞ், சௌளம் உபநயனமுதலானதுகளுஜமதக்கினி முனிவர் நடாத்தி கல்வியி ற்றேர்ச்சியடையச்செய்துவருகிறகாலத்தில்பதிவிரதையாகியரே ணுகைவழக்கப்படியோர்நாள் நதிக்குச்சென்றுஸ்நானஞ் செய்து க்கொண்டிருக்கிறபோதுஆகாயமார்க்கமாய்கந்தர்வனொருவன்த ன்பத்தினியோடுசெல்ல அவனிழலானது ஜலத்திற்றோன்ற அ தைகண்டு ரேணுகாதேவிபிரமித்துஇப்படிப்பட்டபுருடன்கூடஉ லகத்திலிருக்கிறானவென்றுதனக்குத்தானேஆச்சரியமடைந்துக் கரையேறிமணலைச்சேர்த்துபாண்டமாகாதால் மனக்கவலையடை ந்து இதற்குநானென்னசெய்வேன் இதுவென்னமாயமோதெரிய

வில்லையே முனிவர் பூசைவேளையுந் தப்பிப்போகிறதே நாயசன் என்ன கோபிப்பாரோவென்று பலவாறுசிந்தித்துக்கொண்டேவந்து ஜெமதக்கினிமாமுனிவர் திருவடியில்விழுந்து சரணுகதியடைந்து நடந்த வுண்மையைச் சொன்னுள் இதைக்கேட்டஜெமதக்கினிமாமுனிவரும் தன்னுடையயோகதிருஷ்டியினுல் நடந்தவிதங்களையறிந்து அடிபெண்ணே கற்புடைய மாதரசிபோல அபிநயித்துஇங்கு வந்துசேர்ந்தாய் என்னுடைய பூசையைக்கெடுத்ததுமன்றி நீயும் ஆகாயமார்க்கமாய்சென்ற கெந்திருவனை ஜலத்தில்பிரதி பிம்பத்திற்கண்டு ஆசைப்பட்டு பதிவிரதாதருமங்கெட்டுவிபசாரியாகினுயென்று விஷங்கக்கிய சர்ப்பத்தைப்போலச்சீறிவெகுண்டு கோபங்கொண்டு மூத்தகுமாரர்கள் இருவரையும் நோக்கி நீங்கள் இவளைக்கொண்டுபோய் இரண்டுதுண்டாய் வெட்டியெரியுங்களென்று கட்டளையிட்டார். அவர்கள் தந்தையின்சொல்லைக்கேளாமல் மறுத்தார்கள் உடனே ஜமதக்கினி முனிவர்பரசுராமரை நோக்கி இம்மூவர்களையும் வெட்டியெரிந்துவரக்கடவாயென்று ஆக்கியாபிக்கபரசுராமர் தந்தையின் சொற்படி தமையன்களிருவர்களையுந் தாயையும்வெட்டி யெரிந்துத்தந்தையினிடம் வந்துசேர்ந்தார் அப்போதுஜெமதக்கினி மாமுனிவர் பரசுராமர்விஷயத்தில் மெத்தசந்தோஷமடைந்து அடாபுத்திரசிகாமணியே உனக்கென்ன வரம்வேண்டும் கேளும் தருகிறேனெனப் பரசுராமர் தந்தையைநோக்கி ஐயாயான் வெட்டியெரிந்த தமையன்களிருவரும் பென்அன்னையும்உயிர்பெற்று வரும்படியான வரந்தரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அப்படியே யாகுகவென்று ஜெமதக்கினிசொல்லிய மாத்திரத்தில் சிரங்கள்பொருந்தி மெய்துலங்க நித்திரையினின்றும் விழித்தவர் போல் மூவருமெழுந்து வந்து ஜெமதக்கினிமா முனிவரைப்பணிந்து அவரனுமதியின்படி நடந்து வந்தார்கள்.

அக்காலத்தில் அரசர்களில்மேன்மைப்பட்டவனுகியும்தருமங்குன்றுமல் மநுநீதிப்படி அரசாண்டுவருபவனுகியும்தவத்தினுல் மிகுந்த வரங்களைப்பெற்றவனுகியும் ஆயிரங்கரங்களாற் சிறந்தவனுகியும் விளங்கும் கார்த்தவீரியார்ச்சுனனென்னும்வேந்தன்மிருகவேட்டையாடும்பொருட்டுரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகள் புடைசூழநாட்டைவிட்டுப் புறப்பட்டுக் காட்டையடைந்து முனிவரைக்கண்டு வணங்கி விநயமாகத்துதிசெய்ய ஜெ

மதக்கினிமுனிவர் கார்த்தவீரியார்ச்சுனனை ஆசரித்து ஆசிகள் கூறி இருக்கச்செய்து பலவேதமொழிகளைக் கூறிப் புசிப்புவே ளையாச்சுதென்று கருதிகாமதேனுவையழைத்து வேந்தன்முதல் அனைவரும் அருந்தும்படி அன்னம்பரிமாறுமென்று கட்டளை யிட அந்தப்படியே காமதேனுவானது கார்த்த வீரியனுக்கும் அவ னுடையசேனைகளுக்கும் பொற்கலங்களில் அறுசுவையன்ன முடன் பலகாரவகைகளையும் அளித்துப் புசிக்கச்செய்து சந்தன புஷ்ப தாம்பூலாதிகளை யுதவக்கண்டகார்த்தவீரியார்ச்சுனன் ஜெ மதக்கினிமாமுனிவரை நோக்கிச் சொல்லலுற்றான்.

மும்மலங்களகற்றி ஐம்பொறியடக்கிமுதல்வனைத் துதிக்கும் தவசிரேஷ்டரே எங்களனைவருக்கும் அமுதுபடைத்தகாமதேனு வையெனக்களித்தால் மெத்தநன்மையாக யிருக்குமென்று சொ ல்ல ஜெமதக்கினிமுனிவர்மகாடேனென்று மறுக்கக்கார்த்தவீரி யார்ச்சுனன் அக்காமதேனுவைப் பிடித்துக்கொண்டு நால்வகை ச்சேனைகளுடன் நாட்டுக்குப்போவதைப் பரசுராமர்கண்டு கோ பங்கொண்டு பரசுயென்னும் ஆயுதத்தினால் அவன்சேனைகளையெ ல்லாம் வெட்டியபோது அதிலிருந்துபெருகிய இரத்தமானது கடலைப்போலபரவ நிமைப்பொழுதில் பதினேழக்குரோணிசே னைகளும்மடிந்து குறைத்தலையெழுந்து கூத்தாடுவதையுங்கண்ட கார்த்தவீரியன் கண்களிரண்டிலும் நெருப்புப்பொரிகள் பறக்க கனன்றெழுந்தபோது ஏழுகடல்களுங்கலங்க மேருகிரிபோற் பா ய்ந்து பரசுராமரைஎதிர்த்து பிரம்மாஸ்திரம், பாசுபதாஸ்திரம், நாராயணாஸ்திரம், முதலாகிய அதிகதீக்ஷண்ணியமான அனேக பாணங்களைப் பிரயோகஞ்செய்தான், அதுகளையெல்லாம் பரசு ராமர் தமதுமழுவாயுதத்தினாலறுணித்து வாழைவனத்தைக்க ழிப்பதுபோல அவன்கரங்களா யிரத்தையுங்களைந்து சிரத்தை யும்வெட்டி யெறிந்தான் அப்போதுகார்த்தவீரியன் சுதர்கள் பயந்துப்பரசுராமரை வணங்கிசொல்லுதற்கரிய காமதேனுவை க்கொடுக்கப் பெற்றுக்கொண்டு தனக்குண்டாகிய கோபந்தணி ந்து தந்தையின் ஆசிரமஞ்சேர்ந்தான் இங்கேகார்த்த வீரியன் சுதர்கள் ஆயிரம்பேர்களுந் தங்கள்நகரஞ்சேர்ந்திருந்தார்கள்.

இங்கே பரசுராமன் தன்தந்தையைவணங்கிக் கார்த்த வீரிய னுடன் சேனைகளை யெல்லாம் மடித்தவிபரத்தை அறிவிக்கஜெமத

க்கினி முனிவர் மனங்கரைந்து அடாகதனே ஒருஅரசனை வதை செய்தபடியால் எனக்குப்பாவம் நேர்ந்திருக்கிறது அப்பாவத்தைப்போக்கும் நிமித்தியம் ஒருவருடகாலம் தீர்த்தயாத்திரை செய்துவரக் கடவாயென்று நேமிக்க அந்தப்படியேசென்று திரிபதை யமுனைகவுதமி சரஸ்வதிபம்பை காவேரி கன்னியாகுமரி முதலாகிய திவ்வியநதிகளில் மூழ்கிக்கொண்டு வருஷமுடிவுவயறிந்துவனத்தில் வசித்திருக்கிறகாலத்தில் கார்த்தவீரியன் சுதர்கள் ஆயிரம்பேர்களும் பரசுராமன் தீர்த்தயாத்திரை செய்யப்போயிருப்பதையறிந்து இது நல்ல சமயமென்றுணர்ந்து வந்து ஜமதக்கினி முனி சிரத்தைக்கொய்து அவர்கள்போக விதையறிந்த ரேணுகைவியாகூலமடைந்து ராமா சீக்கிரம் வரவேண்டுமென்று அழுதாள் அப்போது பரசுராமர் சுப்பிரமணியக் கடவுளைப்போல அங்குவந்து சிரமறுபட்டு உயிர்நீங்கிய தந்தையைக்கண்டு விசனப்பட்டு அழுதுமுடிவில் ஒருவாறுய்ந்தேறி அன்னைக்குப் பலநீதிகளையோதி தேற்றிச் சொல்லுகிறான்.

ஓ அம்மணீ இப்பூமியாளும்வேந்தர்கள்குலத்தைமூவேழுதலைமுறை வரைக்குங்கொன்று யென் தந்தைக்குப்பிரேதசமஸ்காரம்முடிப்பேனென்று சபதஞ்செய்து அங்கேநின்றும் வைராக்கியசீலனாகிப் புறப்பட்டுக் கார்த்தவீரியன்நாட்டையடைந்து அவன் புதல்வர்கள் ஆயிரம்பேர்களையும் மழுவாயுதத்தினால்வெட்டியெரிந்து அதைவிட்டு நடந்து அவனியைபாளும் அரசர்கள்குலம்இதோ இருபத்தொரு தலைமுறையையுங் கொன்று அவர்கள் உதிரத்தைச் சிமந்தபஞ்சக மடுவிற்சேர்த்துத்தந்தையின் தேகத்தைச்சுமந்து வந்து அக்கினியிற்கிடத்திச் சடங்குகள்நடத்தி உதிரமடுவில்மூழ்கி அந்தஉதிரத்தில் எள்ளைக்கூட்டி தற்பணங்கொடுத்து முடித்தபின்பு சிரார்த்தங் கொடுக்கவேண்டிக் காசிபமுனிவரை நோக்கிமாமுனிவரே இச்சிரார்த்தம் பொருள்களனைத்தையுங் கைக்கொள்ளுமென்று வேண்டக் காசிபர்யான் பெற்றுக்கொள்ளமாட்டேனென்று அவமதிப்புசெய்தபடியால் பரசுராமர்கோபங்கொண்டு காசிபரைப்பார்த்து நீர் ஒரு நிமைப் பொழுதும் நான் ஆளும்படியான இப்பூமியிலிருக்கக்கூடாது இதைவிட்டெங்காகிலும் போமென்றனன். அதைகேட்டுக் காசிபர்அதிவிரைவினிற் பூமியிலுள்ள நகரங்கடோறுங் கடந்துமனிதசஞ்சாரமில்லாத பருவதத்தில் வசித்திருந்தார் அவ்விடத்திற்குப் பரசுராமர்

சென்று காசிபரைக்கண்டு ஓமகாத்துமாவே யெனது பூமியில்
வசிப்பதில்லையென்று முன்னம் நீர்சொல்லிவந்து இப்புவிமீது
உயர்ந்த இம்மலையின்மீது வசிப்பதோஞாயமோ வெனக்கேட்க
தருமத்திற் சிறந்தகாசிபர் அம்மலையைவிட்டு மேருபருவதத்திற்
குப்போய்வந்திருந்தார். பின்னும் பரசுராமன் அங்கேசென்று
காசிபரைக்கண்டு பணிந்துசொல்லுகிறான்.

கேளும் நிகரில்லாத முனிவரேஎன்னைப்பெற்ற பிதாவுக்குச்
செய்த சிரார்த்த வஸ்துக்களைக் கைக்கொள்ளாமல்யென்னை யவ
மதித்து வந்துயிப்பருவதத்தின் மீதிருப்பது தருமமேயானாலும்
புவியின் மீதிருப்பதில்லையென்று நவின்றுவந்து யென்னாணைக்
குட்படாதஞாலமெதுவோ அங்குபோய் அமர்ந்திரும் மேலுமெ
னது காவலிற்பொருந்தாத அவனிதானுளதோ கிடையாது ஆ
கையால் சிரார்த்த வஸ்துக்களைப் பெற்றுக்கொண்டு உமக்கிஷ்ட
மானயிடத்தில் சுகித்திரும் அதைக்கைக்கொள்ளாவிடில் என்னு
டையநாட்டினி லிருக்கத்தகாதென்று சொல்லக்காசிபர் அதைக்
கேட்டு அப்பருவதத்தையும்விட்டு அப்புறம் உத்தரதிசையை நாடி
சென்று அங்கோர்காட்டில் அமர்ந்திருக்கிறநாளில் படிகநிறமு
டைய ஆண்கபோதம் ஓர்பேடையை யடைந்திட ஆசையுற்று
கிட்டியபோதுபெண்கபோதம் ஐயாயென்னுடைய நாயகன் சுக
த்துடனிருக்கும்போது நீதிதப்பியென்னைப்புணரவருவது தரும
மோவென்று சொல்லக்கேட்டு ஆண்கபோதம் எனதுபராக்கிர
மத்தினால் உன்னையான்பிடித்துப் புணர்ச்சிசெய்தால் உன்னுடை
யநாயகன்வந்து யென்னை யென்னசெய்யக்கூடுமென்று சொல்லப்
பெண்கபோதம் இப்புவின்மீது அரசர்குலத்தை கருவறுத்தபரசு
ராமர்கையாழிவந்திடுமெனப்பகரஉடனே ஆண்கபோதம்பெண்க
போதத்தைப் பற்றியமாத்திரத்தில்சக்கரம்வந்து ஆண்கபோதத்
தின்சிரத்தை யறுத்துவிட்டது இதனையங்குவசித்திருந்தக் காசி
பமுனிவர்கண்டு பரசுராமன்ஆக்கினைக் குட்படாத பூமியில்லையெ
ன்றுணர்ந்துபரசுராமன் முன்சென்று நின்னாக்கினைக்குட்படாத
அவனியெங்குமில்லை ஆகையால், நின்பிதாவின் சிரார்த்தத்திற்கு
ற்றவஸ்துக்களைத்தாருமென்றுசொன்னகாசிபர்வசனத்தைக்கே
ட்டுப்பரசுராமன் களிப்படைந்துபலவிதங்களாய்க்காசிபரைத் துதி
த்துபிதாவின்சிரார்த்தவஸ்துக்களையெல்லாந் தருவித்துகாசிபர்
முன்னம்வைத்துபக்திபூர்வமாய்வணங்கிசுவாமி இவ்வஸ்துக்களை
க்கைக்கொண்டுஇன்னமும்யேதாகிலும்வேண்டியிருந்தால்கேளும்

தருகிறேனென்றுசொன்ன பரசுராமனை நோக்கிக்காசிபர் சொல்லுகின்றார். ஓ ஐயா சுபார்த்தத்திற்கு தக்ஷிணையாகதினதுகாவலுக்குட்பட்டகாசினிமுழுமையுங் கொடுமெனப் பரசுராமன் அந்தப்படியே கொடுக்கப்பெற்றார்,

அப்போது ஆகாயத்தில் வசிஷ்டர் கவுதமர் முதலியர் சப்தரிஷிகள் கூட்டத்தி லமர்ந்திருக்கும் தந்தையைக்கண்டு சந்தோஷத்தையடைந்திருக்கும் பரசுராமனை நோக்கிக் காசிபர் ஐயா பூதானங்கொடுத்த புண்ணியவானே நீ இந்தப் பூமியிலெங்கும் சஞ்சரிக்கக்கூடாது வேறெங்கேயாகிலுஞ் சென்று வாசஞ்செய்யென்று சொல்லியவுடனே பரசுராமன் தனக்குநிற்க நிழலில்லாததால் மிகவுஞ் சங்கடமடைந்துக் கடல்சூழ்ந்த நாடுகள்காடுகள் கணக்கில்லாத பருவதங்களிலெல்லாம் அமர்ந்திருக்கக் காசிபர் அவ்விடங்கள்தோறுஞ்சென்று தடுக்கப் பரசுராமன் தளர்ந்து உளம்வாடி வருணன் முன்சென்று என்மழுவாயுதத்தை எறிகிறேன் அது எத்தனைதூரம்போய் விழுகிறதோ அத்தனைதூரம் பூமியை யெனக்குக்கொடுவென அதற்கு வருணன் அப்படியே கொடுக்கிறேனென் றிசைந்தவுடன் பரசுராமன்மழுவாயுதத்தை விட்டெறிந்த மாத்திரத்தில் அதுபோய் விழுந்த இடத்தைப்பார்க்க வக்குலத்தோன்வந்து பார்க்குமுன்னமே விபுர்கள் எறிந்தார்கள் உடனே வருணன் அம்மழுவாயுதம் விழுந்த நாற்பதுபோசனை நீளமாகிய பூமியைப் பரசுராமருக்குக்கொடுக்க அதுமலையாளப் பெயரிணையுடைய சகியமற் பருவதத்தில் பரசுராமர் அமர்ந்திருந்தார்.

பரசுராமாவதாரம்

முற்றிற்று.

## ஏழாவது
# ஸ்ரீராமாவதாரம்.



### ஸ்துதி.

பொன்னாடும்புகழுமயோத் தியின் மூவைப்பும்
புரக்கவரு தசரதமன் னவனற் பேரா
யென்னாளுங் காந்திரா வணனா ராவிக்
கினியமருந் தாயெம்மைப் புரக்கு மன்பாய்
மன்னிரா மேச்சுரத்தி லருச் சித்தேத்தி
வாழ்வுற்ற மாதவனை முகுந்தன் றன்னை
பன்னிரா மப்பேரெம் பரனை மாலைப்
பண்ணவனைக் கண்ணனையாம் பரவுவாமால்

அசனெனுமரசன் அழகியவிந்து மதியினைக்கூடி தசரதனை
ப்பெற்றான் அத்வசரதச் சக்கரவர்த்தி சுமந்திரனை மந்திரியாகப்
பெற்று கோசலை, கைகேசி, சுமித்திரை யிம்மூன்று மனைவிகளு
டன் கூடி சத்தியம், பொறுமை, தயை சாந்தமுதலிய நற்குணங்
களையுடையவனாய் மநுநீதிக்கிணங்கி தானதருமங்களை இடைவி
டாமற் செய்து சாமபேத தானதண்டமெனும் சதுர்வித உபாய
ங்களால் அயோத்திமாநகரை அறுபதினாயிரம் வருடம் ஆண்டுவ
ருங்காலத்தில் மகப்பேரில்லாமல் வியாகூலமடைந்து குலகுருவா
கிய வசிஷ்டரைப்பணிந்து தன்மனத்திருக்கும் புத்திரப்பேரில்
லாக்குறையை விண்ணப்பஞ்செய்யவசிஷ்டர்அரசனுக்குஆசிகூறி

விசனப்படவேண்டாம்உமக்குப்புத்திரப்ரபேருண்டாகும்படி ஒரு
தந்திரஞ்சொல்லுகிறேன் அந்தப்படி நீ செய்வாயாகில் அவசிய
முனக்குப்புத்திரவியாகூலம் நிவர்த்தியாகுமென்றார். அதென்ன
வெனில் விபண்டகமாமுனிவர் புதல்வராகிய கலைக்கோட்டுமகா
முனிவரைவரவழைத்து அவரைக்கொண்டு புத்திரகாமேஷ்டியா
கஞ் செய்விப்பையாகில் நின்மனத்துதித்தபுத்திரகவலைநீங்கு மெ
ன்பதைக்கேட்டு சந்தோஷவசத்தராகி கலைக்கோட்டு மாமுனிவ
ரை வரவழைக்கும்பொருட்டு சுமந்திரருடன் சிலசைனியங்களை
அனுப்பிவிட்டு யாகத்துக்குவேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரி
த்துச் சித்தப்படுத்திவைத்து முனிவர் வரவுக் கெதிர்பார்த்
திருந்தார்.

அங்கே சுமந்திரர் சென்றுரோமபாத மகாராஜன் கொலுக்
கூடத்தில் எழுந்தருளியிருக்குங் கலைக்கோட்டு மகாமுனிவரைக்
கண்டு வினயத்துடன்வணங்கி தெண்டனிட்டு தசரதசக்கிரவர்த்தி
யின் வேண்டுகோளையறிவித்து சுவாமிஅவசியம் தேவரீர் அயோ
த்திமாநகரத்திற் கெழுந்தருள வேண்டுமென்றுபிரார்த்திக்க அத
ற்கு கலைக்கோட்டுமாமுனிவர் சம்மதிக்கநவரத்தினங்களிழைத்த
சிவிகையின்மேல் அவரையேத்திக்கொண்டு சுமந்திரரானவர் அ
யோத்திமாநகரத்தின் அருகிலிருக்கும் சோலையில் முனிவருடன்
தங்கி சில வேவுகாரர்களால் முனிவர்வரவை அரசனுக்குத்தெரி
விக்க சக்கிரவர்த்தி யதனையறிந்து உடனே சகல சேனைகளும் பு
டைசூழ சோலையினிடத்திற்கு வந்து முனிவரைக்கண்டுவணங்கி
ப்பலவிதமாய் துதிக்க, முனிவர் சக்கிரவர்த்திக்குஆசிகள் கூறிப்
பிரியமாகச் சிலதருமங்கள் வசனித்துப்பின்புசோலையை விட்டுச்
சக்கிரவர்த்தியுடன் அயோத்திமா நகரத்தையடைந்துயாகத்தை
த்தொடங்கி மந்த்ராலோபம், கிரியாலோபமின்றியாகத்தை நட
த்துகிறபோது தேவேந்திராதிதேவர்களுடன் பிரமதேவன்பாற்
கடலுக்குச்சென்று அரவணைமேற்றுயில்கின்ற எம்பெருமானைப்
பலவிதமாகத்துதிசெய்ய, அன்பர்க்கெளியனாகியவிஷ்ணுதேவன்
தேவர்களுடன் துதிசெய்யும் பிரமதேவன் முறையைக்கேட்டு
அவரையன்புடனழைத்து உங்களுக்குற்ற குறையென்னஅதைச்
சொல்லுமெனப் பிரமதேவன் சொல்லுகின்றான்.

கேளும் எனையீன்ற தந்தையே அடியேன் வயிற்றிலுதித்த
புலத்தியன்றன் புதல்வனாகிய விச்சிரவனுக்கும் சுமாலிபுதல்வியா

கிய கைகேசிக்கும் பிறந்த ராவணனனவன் முனிவர்கள் தேவர்கள் முதலானோரையும் மிகவும் இம்சைசெய்கிறான். இதனால் அவர்கள் மெலிந்து நலிந்து மேனிகுலைந்து பயந்துவாட்டமடைந்து சிங்க சொற்பனங்கண்ட யானைகளைப்போல நடுநடுங்கி ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள், மேலும் இந்திரனைச் சிறைபடுத்தினான் சூரியன தாரதத்தை இலங்கையின்வழிபோகவொட்டாமற் சாய்வாய்போகும்படி கட்டளையிட்டிருக்கிறான். சந்திரன் வருணன் முதலானோரைவேலைக்கமர்த்திக்கொண்டான். தேவஸ்திரீகளை அடிமைவேலை செய்ப நேமித்துக்கொண்டான். ஆகையால், அவனைத் துரிதமாக சங்கரித்து யாகம், யோகம், தவம், தானம், தருமம் முதலான துகளும்தவறுதலின்று நடக்கும்படிச்செய்து தருமத்தைநிலைநாட்டியெங்களை ரக்ஷிக்கவேண்டுமென்று மிகவும்வினயமாய் நயந்து வேண்டிக்கொள்ள அதற்குப் பகவான் பிரமதேவனை நோக்கிச் சொல்லுகின்றான்.

கேளும்பிரமனே நிசிசரர்க்கிறைவனாகிஅதருமவழி நடக்கும் அந்த ராவணன் தன்புத்திரமித்திர களத்திராதிகளாகிய ராக்கத குலத்தைவேருடன் களையும்பொருட்டு ஆதிசேடனும் சங்கு சக்கிரமும் யானும்மனித அவதாரமெடுக்கும் நிமித்தியம் அயோத்தி மாநகரத்தையாளும் தசரதச்சக்கிர வர்த்திக்குத்தனையர்களாய்பிறக்கப்போகிறோமென்று சொல்லி பகவான்மறைந்து போயினர். உடனே பிரமதேவன்தேவர்களைநோக்கிச்சிவன் முதல்நீங்களனைவரும் விரைவாகக் காட்டிற்குச்சென்று கவிக்கூட்டங்களாய் அவதாரஞ்செய்யுங்களென்று சொல்லிப் பிரமதேவன் போயினான். அந்தப்படியே தேவர்களும் சிவபெருமானும் பிரமதேவனும்ஆரணியத்திற்சென்று கவிகளாய் அவதரித்து விருத்தியடைந்துக் கொண்டிருந்தார்கள். இங்கே பகவான் அயோத்திமாநகரத்திற்குச்சென்றுயாககுண்டத்தில் பாயசரூபமாகியிருந்தார். யாகமுடிந்தவுடன்அந்தயாககுண்டத்திலிருந்து ஒரு திவ்வியபுருஷன் பாயாசம்நிரப்பியபாத்திரத்துடன் வெளியில்வந்து அப்பாயசத்தை தசரதமகாராஜன் கரத்திற்கொடுத்தார்.

அதைப் பெற்றுக்கொண்ட சக்கிரவர்த்தி கோசலைகைகைசுமித்திரை யிம்மூவருக்கும்பகுந்துகொடுத்தார். அதைபுசித்தமூவரும் கர்ப்பிணிகளாகிபத்துமாதமும்பூர்ணமாகிக்கோசலைப்பெற்ற

பிள்ளைக்கு ஸ்ரீராமனென்றும், கைகேசிபெற்ற பிள்ளைக்கு பரத
னென்றும், சுமித்திரை பெற்ற பிள்ளைகளிரண்டில் ஒருவனுக்கு
இலக்ஷ்மணனென்றும், மற்றொருவனுக்கு சத்துருக்கனென்றும்,
திருநாமங்களிட்டு மிகவுஞ் செல்வமாக நாளுக்குநாள் வளர்த்து
வந்தார்கள். ஐந்து வயதாகவே அன்னப்பிராசனம் சௌளம்உபந
யன முதலியவைகளை முடித்து வேதசாஸ்திர புராணயிதிகாசங்
களிற் றேர்ச்சிபெறச்செய்து இன்பமிகுந்து அன்புடன் போஷி
த்து வருங்காலத்தில் ஓர்நாள் காவிகாம்பர தண்டுகமண்டலதாரி
யாகிய விசுவாமித்திரமாமுனிவர் தசரதன் சபைக்கெழுந்தருளி
இராமனைத்தாருமென்று கேட்க அதற்குத்தசரதன் யான்வந்து
தங்கள் யாகத்துக் கிடையூறுசெய்யும் அரக்கர்களை வதைசெய்கி
றேன்பதினாறுவயதுடைய பாலனான ஸ்ரீராமனுக்குவில்லைப் பிடிக்
குந்திறம்நன்றாய்த் தெரியமாட்டாது. ஆதலால் அவனையனுப்ப
மாட்டேனென்று மறுத்திடக் கவுசிகர்வெகுண்டுச்சீறி இராம
னுடையவீரப்பிரதாபத்தை நீயறியமாட்டாய் எனக்குவிரோதி
யும் நின்குலத்திற்குக் குருவாகியும்விளங்கும் வசிஷ்டமாமுனிவ
ரைக்கேட்டால் தெரியும் ஆகையால் அவரைக்கேட்டாகிலும்அறி
ந்துக்கொள்ளும் என்றகவுசிகர் மொழியைக் கேளாமல் ஸ்ரீராமன்
பேரிலிருக்கும் அன்பினால் அனுப்பமாட்டேனென்று மொழிந்த
தசரதன்மீது அதிகசினங்கொண்டவராகி தூஷணை வார்த்தை
களைவிண்டு சபையைவிட்டு நீங்கிப்போயினர். அதைக்கண்ட தசர
தன் தன்குருவாகிய வசிஷ்டருக்குத்தெரிவிக்க அவர்யோசித்துச்
சொல்லிய நியமனப்படிவிசுவாமித்திரரை வரவழைத்து அவரிட
த்திற்றான் அபசாரத்திற்காக ஸ்ரீராமருடன் லக்ஷ்மணரையுங்கூட்
டி விசுவாமித்திரருடன் அனுப்பினான். அவர்களை யழைத்துக்
கொண்டுஅதிகமகிழ்ச்சியுடன்கவுசிகர்முன்னும் ஸ்ரீராமர்பின்னும்
ஸ்ரீராமருக்குப்பின்லக்ஷ்மணரும் வருவதைப்பார்த்து சுகுமாரா
னதிரேகத்தைப் பெற்றவர்களானதால் சூரியனால் வெப்பமும்
கால்கள்நோயும் பசிதாகமும் நேரிடாதிருக்கும்படி பலா அதி
பலாவென்ற இரண்டு மந்திரத்தையிருவர்களுக்கும் ஓதி அழைத்
துக்கொண்டு போகிறபோதுமார்க்கத்தில் இருண்டவன மொன்
றைக்கண்டு ஸ்ரீராமர் கவுசிகரைநோக்கி ஓசுவாமி இவ்வனமா
னது யாருடையது இதுயிருக்க வேண்டிய காரணமென்ன விதங்
களைச் சொல்லவேண்டுமென்றுவினவ ஸ்ரீராமரைநோக்கிக்கவுசிகர்
சொல்லுகிறார்.

சூரியகுலத்தை விளக்கவந்து தோன்றிய ஸ்ரீராமா கேளும்இவ்வனமானது தாடகையென்னும் அரக்கியும் அவள்புதல்வர்களாகிய மாரீசன் சுபாகுயென்னும் இம்மூவர்களும்வசிக்கும்வனம் அந்த அரக்கியின் திரேகமானது மைநிறமாயிருப்பதால் அச்சாயையினால் இவ்வன முழுதும் இருள் சூழ்ந்துக்கொண் டிருக்கிறது என்றுசொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் ஒருவர் முகம் ஒருவருக்குக்காணப்படாமற் போயிற்று அப்போது ஸ்ரீராமர் கவுசிகரைப்பார்த்து ஓசுவாமி யிருக்காப்போலிருந்து இங்குஅதிசயிருள் கம்மிக்கொண்டதை யோசிக்கில் யிதுமெத்த ஆச்சரியமாக விருக்கிறதேயென அதற்குக் கவுசிகர் ஸ்ரீராமரைப்பார்த்து ஓராமா அதோபாரும்பர்வதாகாரமாய் தாடகையானவள் ஆகாயமார்க்கமாய்வருகிறாள். அவள் வாராமுன்னமே நினது கோதண்டத்தை வளைத்துதீக்ஷண்ணியமான பாணத்தை வில்லிற்பூட்டிப் பிரயோகஞ் செய்துக்கொல்லு மென்றார். அதைக்கேட்ட ஸ்ரீராமர் முதல் முதல் பெண்ணின்பேரில் அஸ்திரப்பிரயோகஞ் செய்வது தருமமல்லவேயென்று யோசித்துக் கொண்டிருக்க இதைக் கவுசிகர் குறிப்பினாலறிந்து ஓ ராமாயிவளைப் பெண்ணென்று யெள்ளளவும்யோசிக்கவேண்டாம். இவ்வுருவங் கொண்டயெமனென்று பாவிக்கக்கடவாய் இவ்வுலகின்கண் அனேகமாயிரம் உயிர்களைக்கொன்றமகா பாதகியாகுமிவள் விஷயத்தில் நீ பரிதாபங்கொள்ள வேண்டாம் சமீபித்து யிவள்வரு முன்னே அஸ்திரத்தைப் பிரயோகித்துக் கொன்றுவிடுமென்ற கவுசிகர் வார்த்தையைக் குருமொழியாகக்கொண்டு பாணப் பிரயோகஞ் செய்து சிரசைக்கண்டித்துவிட்டார். அதைக்கண்டு கவுசிகர் திரேகம்புளகித்து ஸ்ரீராமரை ஆலிங்கனஞ்செய்து கொண்டாடி அவ்விடத்தைவிட்டு நடந்துதன்ஆசிரமத்தையடைந்து யாகத்தைத்தொடங்கியகாலத்தில் மாரீசன் சுபாகுயென்னும் அரக்கர்களிருவரும் ஆகாயவீதியில் நின்றும் அப்பாசனம் செய்தும் மாம்சங்கள் எலும்புகள் முதலானதுகளை யெறிந்தும் இப்படிப்பல விதங்களாகிய அக்கிரமங்களைச்செய்தும் யாகத்தை அழிக்க முயன்றிருப்பதை விசுவாமித்திரரால் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர்சிலபாணங்களைவிட்டு சுபாகுவைக்கொன்று மாரீசனை வெகுதூரத்திற்கொண்டுபோய் தள்ளும்படிச்செய்து அந்த யாககுண்டத்தில் கொசுக்கூடப் பறவாமலிருக்கும்படி வெகுசாக்கிரதையாய்க்காத்திருந்தார்.

அப்போது யாகத்தைமுடித்துக் கவுசிகர் மனக்களிப்படைந்து ஸ்ரீராமலட்சுமணு ளிருவருக்கும் அநேக சஸ்திர அஸ்திரங்களையும் அதற்கனுகூலமாகிய மந்திரங்களையும் போதிக்கப்பெற்று அவ்வாசிர்மத்தில்தானே ஸ்ரீராமலட்சுமணர்களிருவரும் இருக்கிறபோது மிதிலாநகரத்திலிருந்து சிலதூதர்கள் சுயம்வரஓலையொன்று கொண்டுவந்து விசுவாமித்திருக்குக்கொடுக்க அவர் அவ்வோலைச்சுருளைக் கைப்பற்றிப் பிரித்து வாசித்து சங்கதியையுணர்ந்து ஸ்ரீராமரைப்பார்த்து என்கண்மணியாகிய ராமா நான் மிதிலையென்னும்நகரத்துக்குப் போகவேண்டியதாக விருக்கிறது ஆதலால் நீயும் நின்தம்பியாகிய லட்சுமணனும் அயோத்திமாநகரத்திற்குப் போயிருங்கள் திரும்பி வருங்காலத்தில் அப்படியேநான் அயோத்திக்கு வந்து உங்களைப்பார்க்கிறேன் என்று சொல்ல அதற்கு ஸ்ரீராமர் ஓ சுவாமி அந்த சுயம்வரத்திற்குத் தங்களைமட்டிலுமா வரும்படி ஓலையில் வரைந்திருக்கிறது தங்கள் சிஷியர்கள் சமேதராய் விஜயஞ்செய்ய வேண்டுமென்றுஎழுதியிருக்கிறதே அதைத்தாங்கள் கவனித்துப் பார்க்காமல் சிஷியர்களாகிய யெங்களையுங்கூட அழைத்துப்போகாமல் அடியேங்கள்மீது கிருபையில்லாமல் அயோத்திக்குப்போகும்படி நேமிப்பதுதருமமோ தங்களைவிட்டுப்பிரியமனமில்லாத எங்களையிப்படி அனுதரனை செய்துவிட்டுப்போகத் தங்களுக்கு எப்படி மனத்திடமுண்டாகியதோ என்றிவ்வண்ணம்பலவாறு தாபங்கிரியப்படுகின்ற ஸ்ரீராமரைப் பார்த்துக் கவுசிகருக்குக் கிருபையுண்டாகி ஸ்ரீராமா நீதுயரப்படவேண்டாம் உன்னிஷ்டப்படியே மிதிலைக்கு அழைத்துப்போகிறேன் சிந்தனைப்படாதே யென்று சொல்லி தேற்றி விசுவாமித்திரர் இராமலட்சுமணர்களைப் பின்னழைத்துக்கொண்டு மிதிலைமாநகரத்தை நோக்கிப்போகிறபோது ஸ்ரீராமருடைய திருவடிகள் பட்டு கல்லாயிருந்த அகலிகைசுயரூபம் பெற்றெழுந்திடக்கண்டு கவுசிகரை நோக்கிஓசுவாமி இம்மாது யாருடைய மனைவிகல்லாயிருந்திடக் காரணமென்ன இதுகளைச் சொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்ட ஸ்ரீராமனை நோக்கி நடந்த சவிஸ்தாரங்கள்யாவற்றையும் அறிவிக்கக்கேட்டு ஸ்ரீராமர் கௌதமரைவரவழைத்து அகலிகையையொப்பித்து அவரால்சில ஆசிகளைப்பெற்றுகௌதமர் ஆசிர்மத்தைக்கடந்து சவுந்தியைத் தாண்டி மிதிலாநகரத்தை யடைந்து ஜனகமகாராஜனல் பூசிக்கும்படியானசிவன் வில்லையொடித்துஜானகியைத்திருமணம்புரிக்

தார். ஊர்மிளையை லட்சுமணர் வதுவைசெய்தார் குசத்துவசன் புதல்விகளாகிய மாண்டவி சுருதகீர்த்தியென்னும் இரண்டுகன்னிகைகளைப் பரதரும் சத்துருக்கரும் மணம்புரிந்து ஜனகமகாராஜனால் விடைதரப்பெற்று அயோத்திமாநகரத்தை நாடிவருகிறமார்க்கத்தில் பரசுராமன் எதிர்ப்பட அவனோடு யுத்தஞ்செய்து வென்று அவனால் கொடுக்கப்பட்ட வில்லையும் தவபலனையும் பெற்றுக்கொண்டு அயோத்திமா நகரத்தைச் சேர்ந்து சீதையுடன் கூடிச் சுகித்திருக்கும்நாளில் ஓர்நாள் தசரதமகாராசன் தன் குலகுருவாகிய வசிஷ்டரைப்பார்த்துச் சொல்லுகின்றான்.

கேளும் எங்கள் குலதெய்வமே யான் கானகமேவித் தவஞ்செய்து பரகதியடையும் மார்க்கத்தை விருப்பங்கொண்டபடியால் தருமம் நீதி பலம்பராக்கிரமத்திற்சிறந்து நிகரில்லாத வெனது சிரேஷ்டப்புதல்வனாகிய ஸ்ரீராமனுக்குத் திருமுடி சூட்டவேணுமென்ற தசரதன் இஷ்டப்படியே திருமுடி சூட்டும்படிவசிஷ்டமாமுனிவர் நேமிக்கக்கேட்டு அரசன் சந்தோஷவாரியிற்படிந்துஅதற்குவேண்டிய வஸ்துக்களை யெல்லாம் சேகரித்துத் திருமுடிசூடும்பொருட்டு அந்தப்புரத்திலிருக்கும் ராமனைச்சுமந்திரரால் வரவழைத்து அபிஷேகஞ் செய்விக்கத் தொடங்கியபோது இந்தவிருத்தாந்தம் யாவுங்கேட்டுக் கூனியானவள் கைகேசியினிடஞ்சென்று சொல்லக்கேட்டுக் கைகேசி அரசனிடஞ்சென்று மன்னவரே முன்னமெனக்கு நீர் தருகிறேனென்று சொல்லிய வரங்களைத் தாருமென்று பின்னுஞ்சொல்லுகிறாள் அதென்னவெனில் பரதன் நாடாளவும் ஸ்ரீராமன் பதினான்குவருடங்காடாளவும் இவ்விரண்டு வரத்தையுந் தாருமெனக்கேட்ட தசரதன் உயிர்நீங்கிய தென்றறியும்படி மெய்சோர்ந்து நிலத்தில் வீழ்ந்திருக்கும் விதத்தைச் சுமந்திரரால் ஸ்ரீராமனறிந்து மரவுரிதரித்துச் சீதையும் லட்சுமணரும்பின்வர நாட்டைவிட்டுக் காட்டையடைந்து குகப்பெருமானால் ஓடத்தின்மீதேறிவர நதியைக்கடந்து யானைகள்வாசஞ்செய்யும் வனத்திற்குச்சென்று பரத்துவாசர் ஆசிர்மம் அடைந்துஅவர் மகிழவணங்கி விடைபெற்று சித்திரக்கூட பர்வதத்தை நாடிப்போயினார்கள்.

சுமந்திரன்அயோத்திமாநகரைச்சேர்ந்துதசரதமகாராஜனைக் கண்டுஜானகி லட்சுமணருடன் ஸ்ரீராமர்சித்திரகூடபர்வதத்திலிருக்கிறார்களென்று சொல்லிய மொழியைக்கேட்டவுடன்தசரதன்

உயிர்துறந்தான். இதைக்கண்டு வசிஷ்டமாமுனிவர்நடந்தவர்த்த மானங்களைக் கேகயநாட்டிலிருக்கும் பரதனுக்குச்சொல்லி உட னழைத்து வரும்படிச் சில தூதர்களையேவினர் அத்தூதர்கள் சென்று பரதனைக்கண்டு நின்தமையனாகிய ஸ்ரீராமருக்குமகுடஞ் சூடுகிறதால் வாருமையாவென்று சொல்ல மிகவுமகிழ்ந்துப் பர தன் சத்துருக்கருடன் அயோத்திக்கு வந்து தன் அன்னையால் தந்தைமாண்டதும் தமையன்வனத்திற் சேர்ந்ததுவுங் கேட்டுக் கொடியவளாகிய தாயைவைத்து அவ்விடம் விட்டுச்சென்றுமம றுத்துகிடக்குந் தந்தைக்குச் செய்யவேண்டிய உத்தருமைக ளனைத்தையும் செய்துமுடித்துக் கலங்கிவாடுகின்றபரதன்தன்னை வசிஷ்டர் தேற்றிமுடிசூடிக்கொண்டு நகரத்தை யாளுமென்று சொல்லக்கேட்டு பரதன் மெய்நடுங்கி என்தமையனை யழைத்து வந்து அவருக்கு முடிசூடி யவர்சொல்லும் யேவலைக்கேட்டுநடப் பதேநீதியென்றுரைத்துதானுஞ் சடைமுடிதரித்து மாவுரியணி ந்து நரகத்திலுள்ள சிலரும் வசிஷ்டரும் தன்பின்வரச்சென்று குகன்விடும் ஓடத்திலேறிகங்கையைக்கடந்து மலைகளுக்கு அரசா கத்தோன்றுஞ் சித்திரகூட பருவதத்தை நண்ணி ஸ்ரீராமரது நிகரில்லாத திருவடியில் விழுந்து அழுதுவாடிக் கொடியபாவியா கிய அடியேனைப் பெற்றஅன்னைசெய்த கொடுமையினால் உம்மை ப்பிரிந்த விசனத்தினாலே நமது தந்தைமேலுலகை யடைந்தா ரென்றமாத்திரத்தில் ராமர் கோவென்று கதறிபழுது புலம்பக் கேட்டு வதிஷ்டர்தேற்றி ஸ்ரீராமர் கைகளால் பிண்டமும் எள்ளு ந்தண்ணீரும்விடச்செய்து கருமகாரியங்களை முடித்தார். பின்பு பரதன் தந்தை நற்கதியடையச் செய்பவித்த ஸ்ரீராமரை நோக்கி அண்ணாதாங்கள் அயோத்திக்கெழுந்தருளிபட்டாபிஷேகஞ்செய் துக்கொள்ளுமென்று வெகுவாய் வேண்டிக்கொள்ளும் தம்பியா கிய பரதனைநோக்கித்தம்பிபரதா பதினான்குவருடம் கானகத்தி ற்போக்கியபின்புயான் அயோத்திக்கு வருகிறேனென்று சொல் லக்கேட்டு பரதன் ஸ்ரீராமரதுபாதுகையைச் சிரசின்மேற்றாக்கி க்கொண்டு அயோத்திமாநகரத்திற்கிடையிலிருக்கும் நந்திக்கிரா மம்சேர்ந்துபாதுகைக்குமகுடஞ்சூட்டி வருடங்களைக்கணக்கிட்டு க்கொண்டிருந்தான்.

இங்கே ஸ்ரீராமர் சித்திரக்கூட பருவதத்தைவிட்டுதம்பிலக்ஷ மணர் முன்னும்ஜானகிபின்னும்அவளுக்குப்பின்ஸ்ரீராமருமாகப் போகிறபோது மலைப்பாம்பினுருவங்கொண்டுலாவும் விராதனைக்

கொன்று மேன்மையாகியகதியைச்சேர வருள்புரிந்துசரபங்கர் ஆ சிரமம்சேர்ந்து அவரையிணங்கி வணங்கி விடைபெற்றுச்சென்று குருமுனிவரைக் கண்டுபணிந்துநிற்க அவர் ஆசிகள்கூறிய பல கணைகளும் தூணீரமு மளிக்கைக்கொண்டு விடைதரப்பெற்றுப் பஞ்சவடி தீர்த்தையணுகி சடாயுவைக்கண்டு க்ஷேமம்வினவி அந் தப்பஞ்சவடியிற் பர்னசாலைதம்பியினுலொன்றியற்றி அங்குதங்கி யிருக்கும்போது இந்திரன் புதல்வனாகிய ஜயந்தனென்பவன் சீதையின்வடிவத்தைக்கண்டு மயல்கொண்டு காகரூபமாகியோர் மரத்தின்கிளையினில் நின்று சமயம்பார்த்து கிளையைவிட்டுக்கிளம் பிசீதையின் தனத்தைக் கீறிடதசரதராமன் முனிந்து அங்கிருந்த ஓர்புல்லைக்கிள்ளி மந்திரத்தை யோதிவிட அந்தபாணமானதுகா காசுரனைவிடாமற் பின்றொடர்ந்து உலகங்கள் யாவத்தையுந் திரி ந்துஅலைந்து முடிவில் சரணுகதியடைந்தமையால் சுத்தப்பிரம்ம சொரூபியாகிய ஸ்ரீராமர்கிருபாநோக்கம்வைத்து அக்காக்கையின் ஒருவிழியைப்பிடுங்கி ஒருமணியிருபக்கமும் ஓடும்படி கடாக்ஷஞ் செய்திருந்தார். அதுகாலையில் சூர்ப்பநகையானவள் நிகரில்லா மோகினிவடிவங் கொண்டுவந்து யென்னையணைந்திடுமென் றுரை செய்யக்கேட்டு இராமன்மறுத்திட அவள் லக்ஷமணரைக் கிட்டி யென்னைக்கூடியின்பநல்குமென லக்ஷமணர் சினந்து அவள் நாசி செவி யிவைகளையறுத்தெரிய ரத்தம் பீரிட்டு ஒழுகக்கரனிடஞ் சென்று அழுதுபுலம்பி நடந்தவைகளெல்லாம் சொல்ல அறிந்து வெகுண்டு கரன்றூடணன் திரசிரன் முதலாகிய பதினுலாயிரம் வெங்கலரதக்காரர்கள் புடைசூழயானை குதிரைரதங்களுடன் புற ப்பட்டுச்சென்று ஸ்ரீராமருடன்எதிர்த்துயுத்தஞ்செய்துரத்த வெ ள்ளம்பெருகியோட அதில் குறைத்தலைப்பிணங்களாட அரசர்கள் முனிவர்கள் தழைக்கச் சக்கிரவர்த்திப் புதல்வர்விட்ட அஸ்திர சஸ்திரங்களாக லறுபட்டுப்பூமியின்மேல் விழுந்து மடியும்படிச் செய்துஜெயம்பெற்று இராமர் பர்னசாலையைச் சேர்ந்து சீதை யுடன்மகிழ்வாயிருந்தார்.

இதைக்கண்டசூர்ப்பநகை மிகவும் பிரலாபித்துக்கொண்டே இலங்கையைச்சேர்ந்து இராவணன் அடிகளிற்பணிந்து அண்ணுநி னக்குப் பழுதில்லாத ஸ்ரீமகாலட்சுமிக்கு நிகரானபெண்ணைக்கொ ண்டுவரும் பொருட்டு அவளையணுகிப்பிடிக்கச் சென்றபோது இ ராமனுக்கிளைய லக்ஷமணன் எனது செவிமூக்கினையுங்கொய்தான்.

இச்சேதியை கரனிடஞ்சொல்லியான்முறையிடஅவர்கள் அனைவரும் வெகுண்டு மனிதருடன் யுத்தஞ்செய்து மடிந்துபோனார்கள் என்றுவயிறெரிந்து அழுது புலம்பிச் சொல்லிய சூர்ப்பநகையின் மொழியெனும் மன்மதன் கண்கள் ராவணன் செவிவழிபுகுந்து மார்பைத்துளைக்கச் சீதையின்மேல் மாருதமயல்கொண்டவனாகிய மாரீசனையடைந்து விரைவாக நீர்பஞ்சவடிதீரத்திற்குச்சென்று சீதையை இங்குவந்து சேரும்படியான முயற்சியைத்தேடும் என்றான். அந்தப்படியேமாரீசனும் பஞ்சவடியையணுகிசொர்னமான் வடிவெடுத்துச் சானகியின் முன்திரிந்து தன்மாயையால் நிமிஷத்திற்கு நிமிஷம் வெவ்வேறுவானங்களாகத்தோன்றிடும் மானைக்கண்டு சீதை பிரமித்து ஸ்ரீராமரைநோக்கி ஓ நாதா இம்மானைப் பிடித்துத்தாரும்சுவாமியென்று செப்பியசீதையின்மொழிக்கிசைந்து ஸ்ரீராமர்மானைத்தொடர்ந்து பிடிக்கச்சென்றபோது மானானது கைக்ககப்படாமல்ஓடி வெகுதூரம்காட்டினிற்புகுந்து ஸ்ரீராமர் கைபாணத்தினாலடிப்பட்டு மானுருவாகயிருந்த மாரீசன் பிராணனை விடுகிறபோது ஜானகி லட்சுமணாவென்று கூக்குரலிட்டு அழைந்துக்கொண்டேஉயிர்துறந்தான் அக்கூக்குரலோசையைக்கேட்டு ஜானகி லட்சுமணரை நோக்கி நமது அண்ணலுக்குயேதோ ஆபத்து நேர்ந்ததுபோலயிருக்கிறது ஆதலால் விரைவாகச்சென்று பாரும்யென அதற்கு லட்சுமணர் எனதன்னையே ஸ்ரீராமருக்கும் ஆபத்து நேர்வதுண்டோ ஒருக்காலும் தாங்கள் அப்படிநினைக்கவேண்டாம் மானுருவமெடுத்துவந்தமாரீசனே ஏதோவஞ்சகமோசஞ்செய்யும்பொருட்டு கூக்குரலிட்டானே அன்றியில் எனதண்ணனுக்கு யாதொருசங்கடமும் நேரிடவில்லை அப்படியேதாகிலும் விபத்துநேரிடும்பட்சத்தில் உலகமேதுஉயிர்களேது அண்டமேது பிண்டமேது சகலமும் அழிந்துபோகுமென்று எமதுமனதில்உண்மையாகக் கருதுமென்று செப்பியலட்சுமணருடைய மொழிகளைக்கேட்டஜானகி பதைபதைத்துத்துடிதுடித்து எனதுநாயகருக்குத்தீங்குநேரிட்டதென்று யான்சொல்லியுங்கேளாமல் இவ்விடத்தில் தாமேகாலம் போக்கிக்கொண்டிருக்கிறீ யல்லவாவென்று கடுஞ்சினங்கொண்டுதுக்கப்படும் சானகியைலட்சுமணர்கண்டு இதற்கென்னசெய்வேன் அண்ணனோ அன்னையைக்காத்துக்கொண்டிருக்கும்படி நேமித்துப்போயினார் அன்னையோ அண்ணனைப்போய்ப் பார்க்கும்படிகட்டளையிடுகிறாள். தருமசங்கடமாயல்லவோநேர்ந்தது. அன்றியிலும் அன்

ணன்மனைவியைத் தனியேவிட்டுப்போவேனேயாகில் அந்த சம யத்தில் அரக்கர்கள் யாரேனும் வந்து அன்னையைக் கொண்டுபோ வார்களோ என்றுசந்தேகங்கொண்டு அப்பர்னசாலை நான்குபுற மும் கொடுகிழித்து அன்னையே யார்வந்து அழைத்த போதிலும் இக்கோட்டை தாண்டிபோகவேண்டாமென்று சொல்லிவிட்டு ல ட்சுமணர்தமையனை தேடிக்கொண்டுபோயினர்.

அப்போது இராவணன் சன்னியாசிவேடம் புனைந்துவந்து பிச்சைகேட்டுச் சீதையைவஞ்சித்து யெடுத்து ரதத்தில்வைத்துக் கொண்டு போகிறதை ஜடாயுகண்டு அவனுடன்போதர்புரிந்திரா வணன்செய்த வஞ்சனையால் அடிப்பட்டுக்கீழேவிழுந்தஜடாயுவை க்கண்டு சீதைபுலம்பி யழுது தன்கணவனுக்கு தன்னை ராவணன் யெடுத்துப்போயின சங்கதியைச் சொல்லும்பரிந்தம்உயிருடனி ருக்கக்கடவீரென்று சொல்லிப்போயினுள் ராவணனேசீதையை க்கொண்டுபோய் லங்கையிர்சேர்த்து அசோகவனத்தில்சிறைப்ப டுத்தி அனேகராக்கதர்களைக் காவல்வைத்திருந்தான் அவர்கள்ந டுவிலே ஜானகி மெத்தவும் துக்கப்பட்டுக்கொண்டிருந்தாள்.

அவ்விடத்தில் லட்சுமணர் கானகத்திற்புகுந்து ஸ்ரீராமரை க்கண்டு நடந்தவற்றைச்சொல்லி ஸ்ரீராமரையழைத்துக்கொண்டு வந்து பர்னசாலையில் சீதையைக்காணமல் மனந்தடுமாறிஜடாயு வினல் சங்கதியைத்தெரிந்து அவர்உயிர்பிரிந்திட தகனகாரியங் களை முடித்து விரல் அயமுகி என்னு மரக்கியைக்கண்டு அவள் நாசியையும் லட்சுமணர் கொய்ததுமன்றி அக்காட்டிலுள்ளஉயி ர்களையெல்லாம் வாரிவாரிப்புசிக்கும் கவந்தங்களைக்கொன்று நற் கதியடையும்படியருள் புரிந்துமதுரமாகிய கனிகளையளித்துத் தொழுதிடுஞ்சவரிக்குப் பரமபதமளித்துப்பம்பாநதிக் கெய்திகபி சிரேஷ்டனுகிய அநுமானைக்கண்டுபேசிசுக்கிரவன்சுதனுகியசுக்கிரீ வனைநேசித்து துந்துபியெலும்பை மிதித்து வெகுதூரம்போ கச்செய்து மராமரமுருவக் கணைதொடுத்து வாலியைவதைத்து அநுமானல் ஜானகியிருப்பிடமறிந்துஎண்பதுவெள்ளம் வானர சேனைகளுடன் சென்று தெனகடலைச்சேர்ந்திருந்தார்கள். இங்கே லங்கையில் விபீஷ்ணர் ராவணனைப்பணிந்து அண்ணுசிலகாலம் உயிருடனிருந்து லங்கையை ஆளும்பட்சத்தில் ஆதிதேவனுகிய ஸ்ரீராமர்தேவியான சீதையை விட்டுவிடு இல்லாவிடில் வந்ததைப் படுமென்றுசொல்லக்கேட்டு இராவணன்வெகுண்டுகோபித்தெழு

யைவிட்டுப் போடாவென்று முடுக்க விபீஷணர் நான்கு மந்திரிகளுடன் லங்கையைவிட்டு வெளிப்பட்டு கடற்கரையிற் றங்கியிருக்கும் ஸ்ரீராமர் திருவடியில் சரணம்புகுந்து வேண்டிக்கொள்ள ஸ்ரீராமர் கிருபைக்கண்பார்த்து சிரஞ்சீவியாக யிருக்கக்கடவாயென்று வாழ்த்தி இலட்சுமணரைக்கொண்டு இலங்கையைப் பாதுகையால் மகுடஞ்சூட்டி எனதுபேருள்ளமட்டும் அரசுசெய்திருப்பாயென்று சொல்லி இராவணனுக்குண்டாகிய மூலபலம் லங்கையின் வரலாறு முதலானதுகளையும் விபீஷணராலறிந்து வருணன்மேல் அக்கினியாஸ்திரப் பிரயோகஞ்செய்ய வருணன் நடு நடுங்கி ஸ்ரீராமர் முன் வந்து சரணமடைந்துத் தன் முதுகின்மேல் திருவணைக் கட்டிக் கொள்ளும்படிச் சொல்லிப்போக ஸ்ரீராமர் வானரக் கூட்டங்களைக் கொண்டு மலைகளைத் தருவித்துச் சேது பந்தனஞ்செய்து வானர சேனைகளுடன் திருவணையின் மேற்சென்று சுவேலமலையிற் சேர்ந்திருக்க அத்ததியில் ராவணன் ஏவலினால் சுகசாரணர்களிருவர்கள் வந்து வானர சேனைகளுடன் கலந்திருப்பதை விபீஷணரறிந்து சோரர்களென்றவர்க ளிருவர்களைப் பிடித்து ஸ்ரீ ராமரிடஞ்சேர்க்க ராமர் சுகசாரணர்களைபார்த்து இலங்கையை விபீஷருக்குப் பட்டங்கட்டியதும் தசரதராமனென யான்வந்திருப்பதையும் உங்கள் ராஜனென ராவணனுக்குச் சொல்லுங்களென்று கட்டுகளை யவிழ்த்துவிடும்படிக் கட்டளையிட்டார். அந்தப்படியே கட்டுகளை யவிழ்த்துவிட சுக சாரணர்க ளிருவர்களும் இலங்கையை யடைந்து ராவணனைக் கண்டு பணிந்து நடந்த வர்த்தமானங்கள் யாவுஞ் சொல்லக்கேட்டு இராவணன் இருபது கண்களில் நின்றும் அக்கினிப் பொறிகள் சிதறப் பற்களைக்கடித்து மீசைதுடிக்கச் சினங்கொண்டு தெற்கு கோபுரத்தின்மீதேறிச் சுக சாரணர்கள் காட்டப் பார்த்துக்கொண்டிருக்கும் ராவணனைச் சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன் சுவேல மலையின்மேலிருந்து கண்டு கோபங்கொண்டு அங்கேநின்றுங் கிளம்பி ராவணன்மேற் பாய்ந்து மல் யுத்தம்புரிந்து முடிவில் ராவணன் சிரத்திற்பூண்டிருந்த நவமணிகளிழைத்த கிரீடத்தைக் கொண்டுவந்து ஸ்ரீராமர் திருவடியில்வைத்து வணங்கிநின்றான்.

இப்படி வணங்கிநின்ற சுக்கிரீவனை நோக்கி ஸ்ரீராமர் சில நீதிகளையுரைத்து வாலியின் குமாரனாகிய அங்கதனையழைத்து ராவணனிடத்திற்குச் சென்று சீதையைவிட்டுப் பிழையென்று சொல்லி அவனுரைக்கும் மறுமொழியைக் கேட்டுக்கொண்டு வாவென்று

தூதனுப்ப அவன்சென்று சில நீதிகளை யுரைத்துங் கேளாமல் மறு த்து யுத்தஞ் செய்வதற்கே யிசைந்திருக்கும் வகையை யறிந்து வந்து சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் சேனைகளுடன் யுத்தகளத்திற்குச் சென்று லட்சுமணரை ராவணனோடு யுத்தஞ்செய்யும்படி யனுப்ப விடைபெற்றும் வானரசேனைகள் சூழ லட்சுமணர் ராவணனுடன் போர்புரிகிறபோது ராவணன் வெகுண்டு லட்சுமணர் அசந்து நிற் கும்படி ஓர் கணையேவினன். அக்கணையானது வருகிறவேகத்தினைக் கண்டு வாயுகுமாரனான அனுமான் ஒருநிமைப்பொழுதில் அக்கணை யைத்தடுத்து லட்சுமணரைத் தன் கையாலணைத்துப்போக இதை க்கண்ட தேவர்கள் பாரிஜாத மலரைப்பொழிய முனிவர்கள் துதித் திட தேவதுந்துமி முழக்கினார்கள். அப்போது பிரகாசம் பொருந் திய தேரின்மீதிருந்து இராவணன் அனேக பாணங்களைச் சோனை மாரி பொழிவதுபோல பொழிந்தான். அந்த பாணங்களையெல்லாம் ஸ்ரீராமர் தன் கோதண்டத்தினிடமாக சில பாணங்களைப் பூட்டி விடுத்து நடுப்பாதியில் கண்டித்தெரிந்து சில பாணங்களினால் ரத கஜ துரகபதாதிகளை யெல்லாம் பெருங்காற்றி லடிப்பட்ட பஞ்செ னப்பறக்கச்செய்து மேலும் சிலகணைகளினால் ராவணனேறிய ரத மும் சாரதிகுதிரை அவன்கையிற்பிடித்த வில்மகுடமுதலியவைகள் நிலத்தில்விழ அறுத்தெறிந்து பின்னும் அவனை நோக்கி அடா ரா வணா உனது சம்மதி யென்னசொல்லு நிராயுதனாகி நிலத்தைக் கீறி க்கொண்டு நிற்கிறாய் இன்றும்போய் நாளை வாடாவென்று சொல் லியமாத்திரத்தில் இராவணன் நாணமடைந்து இலங்கையைச் சேர்ந்தான்.

இவ்வண்ணம் நிராயுதனாகிவந்த ராவணனைக்கண்டு மாலிய வான் மிகவும்பதைத்து அடாராவணா நான்சொல்லும் புத்தியைக் கேள் சுகப்படுவாய் அதென்னவெனில் அன்னியன் மனைவியைக் கைப்பற்றுவதே தோஷம். அதிலும் ஸ்ரீமந்நாராயணன் மனைவியைக் கொண்டுவந்து சிறைவைத்திருக்கிறாய் அந்த லட்சுமியின் மனம் நொந்தால் நீவெந்து சாம்பலாகி விடுவாய். ஆகையால் அத்திருமக ளைக் கொண்டுபோய் ஸ்ரீராமரிடத்தில் விட்டு திருவடியில் விழுந்து சரணாகதி யடைவையேயாகில் நின் புத்திர மித்திர களத்திரங்க ளுடன்செழித்து வாழ்ந்திருப்பாய் அப்படி நீசெய்யாவிடில் உனக் குண்டாகிய பராக்ரமத்துடன் மூலபலம்யாவும் இராமபாணத்துக் கிரையாவது திண்ணம் உனக்கு சுயபுத்தியில்லாவிடினும் என்சொ ல்புத்தியாகிலுங்கேட்டு நடந்துக்கொள்ளுமப்பாவென்று பலபல

விதங்களாய்ப் படித்துச்சொல்ல இதைக்கேட்டு மகோதரன் சினங்கொண்டு ராவணனைநோக்கி ஓசுவாமி தாங்களிந்த பித்தம்பிடித்தக்கிழவன் வார்த்தையைக் கேட்கவேண்டாம், மிகுபலமுடைய தங்கள் தம்பியாகிய கும்பகருணனை விடுத்து கொடும்பகைவராகிய ஸ்ரீராமலட்சுமணருடன் வானரசேனைகளையும் நாசப்படுத்தும்படி உத்திரவளிப்பீராகில் அவனுல்யாவரும் மடிந்துபோவார்கள். பின்பு உமதிஷ்டப்படி சீதையைக் கூடியிருக்கலாமென்ற மந்திரியின் சொல்லைக்கேட்டு ராவணன் சந்தோஷமடைந்து தூதர்களை யனுப்பிக் கும்பகருணனை துயில்நீக்கி எழுப்ப அவன் அண்ணனிடம்வந்து பணிந்துநிற்கக்கண்ட ராவணன் சொல்லுகின்றான்.

அடாதம்பி கும்பகருண நீசென்று சண்டைசெய்து வானரசேனைகளுடன் மனிதர்களையுங்கொன்று ஜெயம்பெற்று வாவென்று சொல்லக்கேட்டு கும்பகருணன் அண்ணனாகிய ராவணன்சொற்படி யுத்தகளத்திற்குச்சென்று வானர சேனைகளைக்கொன்று ரத்த வெள்ளம் பெருகியோடும்படிச்செய்து சுக்கிரீபனைப்பிடித்துப் பிணித்துக் கட்டிக்கொண்டு விரைவாகத்திரும்பி இலங்கையைநோக்கிப போகுமளவில் ஸ்ரீராமர் கும்பகருணன்மீது சிலபாணங்களைத் தொடுத்து சுக்கிரீபனை விடுவித்துப் பின்னுஞ் சிலகணைகளால் கும்பகருணன் கைகால்களைத் துண்டித்துச் சிரத்தையும் அறுத்துக் கடலில் விழும்படித்தள்ளினர். அதுசமயத்தில் ராவணன் மருத்தனென்னும் அரக்கனை ஜனகமகாராஜனைப்போல உருவங்கொள்ளச்செய்து அவனை யழைத்துக்கொண்டுபோய் ராவணன் சீதையின் முன்னம் விடக்கண்டு வைதேகி தந்தையென்றே நிச்சயித்து இடர்க்கடலில் மூழ்கிவாடி யழுதுபுலம்புகிறபோது தூதர்களவ்விடத்துக் கோடிவந்து ராவணனைக்கண்டு வணங்கி ஓசுவாமி தங்கள் சகோதராகிய கும்பகருணன் ஸ்ரீராமபாணத்தா லறுப்பட்டுமாண்டானென்று சொல்லக்கேட்டு ராவணன் இடியோசையைக்கேட்ட நாகத்தைப் போலயேங்கி யழுதுபுலம்பிஒருவாறுகத்தேறி அதிகசினங்கொண்டு அதிகாயனையழைத்து யுத்தத்திற்கனுப்ப அவன் அனேகயானைக் கூட்டங்களுடன் சமர்பூமியையடுத்து அனேக கணைகளைவிடுத்து வானரசேனைகளை வாட்டுகிறபோது லட்சுமணர் சோனைமாரியைப் போலபாணங்களைச்சொரிந்து முடிவில் பிரம்மாஸ்திரத்தினல் அதிகாயன் சிரத்தைக்கொய்து பின்னும் ராவணன்மைந்தர்களை ஒன்றுய்க்கட்டி யெதிர்த்து அவர்களை இருளைப் போக்கும்படியான இர

லியின் சுதனாகிய சுக்கிரீபன் முதலானோரும் கைகளால் சின்னா பின்னமாகும்படி யடித்துக்கொன்றதைத் தூதுவர்சென்று சொல்ல இராவணன்கேட்டு பலவாறு துக்கப்பட்டு தேவேந்திரனைச் செயித்த இந்திரசித்தையழைத்து நீபோய் யுத்தஞ்செய்து மனிதரையும் வானரச் சேனைகளையும் வதைத்துச் சிதைத்து வரக்கடவாயென்று சொல்லி யனுப்ப இந்திரசித்தன் சிவனும் பிரமதேவனும் பயமடையும்படியாகச் சேனைத்திரள்களைக் கூட்டிக்கொண்டு ரணக்களம் வந்துச் சினமிகுந்துத் தன்வில்லைவளைத்து அனேகமாயிரங் கணைகளைத்தொடுத்து வானரசேனைகளைக்கொன்று வானுலகேற்றி நாகாஸ்திரத்தைப் பிரயோகித்து லட்சுமணருடன் மற்ற வானரங்களையுங்கட்டி யுருட்டிவிட்டு இலங்கையை யடைந்தான்.

இந்திரசித்து போனபின்பு தசரதனுக்குப் புதல்வனாகவந்து தோன்றிய நமதிறைவனும் ராமனுமாகிய ஜெகதீசன் விசனமுற்றழ சொர்ன்னமலையைப்போல கெருடபகவான் ஆகாயத்தில்வந்து வட்டமிட்ட மாத்திரத்தில் நாகாஸ்திரக்கட்டுகள் படபடென் றறுந்துவிட லட்சுமணர்முதல் வானரசேனைக ளுயிர்பெற்றெழுந்து ஆரவாரஞ்செய்ய இதனைக்கண்டு தூதுவர்களோடி ராவணனிடத்திற் சொல்லக்கேட்டு ராவணன்சினங்கொண்டு அணுவளவேனுங்கருணையென்பதில்லாதக் கொடியவர்களாகிய கரன்புதல்வர் முதலாகிய சில அரக்கரையேவினான். அவர்கள் கடலைப்போலத் திரண்டுவந்து யெதிர்க்க அவர்களைச் சூரியகுமாரனாகிய சுக்கிரீபன் முதலான வானரவீரர்கள் சூழ்ந்துக்கொண்டு இமைக்குள்ளாக கணக்கில்லாத அரக்கர்களை யடித்துக்கொன்று வீழ்த்தியதைக்கண்ட கரன்புதல்வன் முப்புரமெரித்தச் சிவனைப்போல கோபங்கொண்டு வருணாஸ்திரம் வாயுவாஸ்திரங்களை விடுத்தான். இதைக்கண்ட ஸ்ரீராமர் சிலகணைகளால் வருங்கணைகளை நடுபாதியில் கண்டித்து வேறொரு கணையைவிடுத்துக் கரன்சுதன் சிரத்தை யறுத்திடக்கண்டு தூதுவர்களோடி ராவணனுக்குச்சொல்லக்கேட்டு அரக்கர்கள்கோனாகிய ராவணன் இந்திரசித்தினையேவச் சேனைகள் புடைசூழவந்து ரணக்களம் புகுந்து யெதிர்க்க லட்சுமணர் சோனைமாரியைப்போல அனேக பாணங்களைச்சொரிந்து அறுபதுவெள்ளம் ராக்கதரை மடித்திடக்கண்டு இந்திரசித்தன் பிரம்மாஸ்திரப் பிரயோகஞ்செய்யவெண்ணி ஆகாயத்தில்மறைந்தான். அச்சமயத்தில் மகோதரனானவன் தேவேந்திராதி தேவர்கள் முனிவர்கள் மனிதர்கள் உருவாய்த்தோ

ன்றிடும்படி மாயையினு லியறறியதை லட்சுமனர்முதல் வானரசே ஊைகளுங்கண்டு திகைத்துக்கொண்டிருக்கும் சமயம்பார்த்து ஆகா யத்தில்மறைந்திருக்கும் இந்திரசித்தன் பிரம்மாஸ்திரத்தைப் பிர யோகிக்கக்கண்டு தேவேந்திராதிதேவர்கள் பயங்கொண்டு கவலையுற லட்சுமனருடன் வானரசேனைக ளடங்களும் பிரமாஸ்திரத்தினுற் கட்டுப்பட்டு பூமியின்மீது சாய்ந்தார்கள்.

இதனைக்கண்ட ஸ்ரீராமர்மயங்கித்தியங்கி இவ்விதமாய் துக்கப் பட்டாரென்று சொல்லமுடியாத துக்கசாகரத்தில் முழுகித் துய ரப்படுவதைக்கண்டு சாம்புவந்தர் நேமனப்படி அனுமான் சென்று சொர்ணமலைக் கடந்து அப்பால் வெகுதூரஞ்சென்று சஞ்சிவி பரு வதத்தை யெடுத்துக்கொண்டுவந்திட அக்காற்றுபட்ட மாத்திரத் தில் பிரமாஸ்திரம் விடுபட்டு உயிர்பெற்றுத் தெளிவடைந்தார்கள். இப்பால் இவ் வாச்சரியத்தைக்கண்ட தூதுவர்களோடி இராவண னுக் கறிவிக்கக்கேட்டு கோபாக்கினி அதிகரித்துத் தன் சுதன்றனை நோக்கி இனி யென்னசெய்கிறதென அதற்கு இந்திரசித்தன் சொ ல்லுகிருன்.

கேளுந்தந்தையே யான் ரணக்களத்திற்குச்சென்று சிலமாயை யினுல் அவர்களைமயக்கி நிகும்பலைபாக முடித்து வானரசேனைகளு டன் நரர்களையுங்கொன்று வருகிறேனென்றுசொல்லி இந்திரசித் தன் ரணக்களமேவி மாயையினுல் சீதையைப்போல் ஒருமாதுதனை இயற்றி அனுமான்முத லனைவருங்காண வெட்டி யெறிந்து இதோ யான் அயோத்திமா நகரத்துக்குச்சென்று அங்குள்ள அனைவரை யும் வதைத்துவருகிறேன் என்று யாவருங்கேட்கச்சொல்லி நிகும் பலையை நோக்கிப் போயினுன், கொடியோனுகிய இந்திரசித்தன் வெட்டினதைக்கண்ட அனுமான் சானகி மாண்டனளேயென்று ரா மர்முன் மாருதிசொல்ல ஸ்ரீராமர்கேட்டு விசனமுற்றிடுமளவில் பிரிய நாயகி விபீஷணர் அசோகவனத்திற்குச்சென்று சானகியைக்கண்டு வந்து அதுகளையெல்லாம் விவரித்து ஸ்ரீராமரிடம் விபீஷணர் செப்ப மகிழ்ந்து மாயைசெய்து நிகும்பலைக்குச் சென்று யாகஞ் செய்யும் இந்திரசித்துடன் லட்சுமனர் அனுமானுடன் சென்று யாகத்தையழித்து அவனை சின்னுபின்னப் படுத்துகிறபோது இந் திரசித்தன் சினங்கொண்டு பிர்மாஸ்திரம், பாசுபதாஸ்திரம், நாரா யணுஸ்திரங்களைத்தொடுத்து லட்சுமனர்பேரில் பிரயோகிக்க அது களையெல்லாம் லட்சுமனர் தக்ககணைகளையேவி நடுபாதியிற் கண்

டித்து வேறொருகணையால் அவன் தூக்கையிற்பிடித்த வில்லொடுகரத்தையுந்துண்டித்து மற்றொருகணையால் அவன் சிரத்தையறுத்து பூமியில்விழத் தள்ளினர். இதைப்பார்த்திருந்த தூதர்கள்ஓடி ராவணனுக்குத் தெரிவிக்கக்கேட்ட ராவணன் வாடைக்காற்றினல் அடியற்றுவிழும் மரத்தைப்போல பூமியில்விழுந்து மகனே மகனேயென்று பத்துவாயினாலுங் கத்தியழுது அமர்க்களத்திற்குவந்து புதல்வன் தேகத்தை யெடுத்துக்கொண்டு லங்கையைச்சேர்ந்து திலதைலத்தில் அத்தேகத்தைவிட்டு கெடாமலிருக்கவைத்து மூலபலத்துடன் அமர்க்களத்திற் கேவினன்.

இராவணனால் அனுப்பப்பட்ட மூலபலசேனைகள் ஆயிரம்வெள்ளமும் கடற்புரண்டு வருவதையொத்து ரணக்களம் வந்துசேர அச்சேனைத்திரளைக்கண்ட வானரசேனைகள் பயந்து மனக்கலக்கங்கொண்டோட அதுகளை அங்கதன் ஓடாமலிருக்கும்படி தடுத்து தைரியங்கூறுகிறபோது அக்குறிப்பையறிந்து ஸ்ரீராமர் சேனைத்திரளின்பேரில் மோகனாஸ்திரத்தை பிரயோகிக்க அக்கணையானது சென்று இங்கும் ராமன் அங்கும் ராமன் எங்கும் ராமனாகத் தங்கி தோன்றியதைக்கண்டு அச்சேனைகள் ஒருவருக்கொருவர் அடித்தும், கடித்தும், இடித்தும், பிடித்தும், யெத்தியும் குத்தியும், யிழுத்தும், கிழித்தும் பலவாராக மடிந்துபோயினர்கள். இச்சங்கதியைத் தூதுவர்களாலறிந்தும் ராவணன் மணித்தேரின் மீதேறி அமர்க்களம்வந்து வானரசேனைகளை பலகணைகளால் வாட்டிக்கொண்டேவந்து லட்சுமணர்மீது அமோகமான அஸ்திரங்களை யேவ அதனை விபீஷணர்மொழியினல் லட்சுமணர் நாராயணாஸ்திரப் பிரயோகஞ்செய்து அவ்வஸ்திரங்களை அறுத்தெறிந்தார். அதைக்கண்டு ராவணன் விபீஷணன்மேல் கோபித்து வேலாயுதத்தைப் பிரயோகித்தான். அந்த வேலாயுதம்வருகிற வேகத்தைக்கண்ட லட்சுமணர் விரைவாகச்சென்று விபீஷணர்மேல் படவொட்டாமல் தன்மார்பில் படும்படியேற்று பூமியிற்சாய்ந்தார் இதைக்கண்டராவணன் மகிழ்ச்சியுடன் தன்னகர்சேர்ந்தான்.

அப்போது சாம்புவந்தர் அனுமானல் மறுபடியும் சஞ்சீவி தருவித்து லட்சுமணர் உயிர்பெறச்செய்து மனங் களித்திருந்தார். அந்தவேளையில் பிரமதேவன் மொழியால் மாதலி ரதத்தைக் கொண்டுவந்து நிறுத்த கருடன்மீதுவரும் ஸ்ரீராமர் கருடாழ்வானைவிட்டுக்கீழிறங்கி வைகுண்டத்தின்மீதேறி அரக்கர் குலபதியைப்போல

வந்துநிற்கும் மகோதரனைக்கண்டு ஸ்ரீராமர் சில அஸ்திரங்களைத் தூண்டி நமனுலகஞ்சேர வாட்டியபோது ராவணன்கண்டு மந்திரி யென்று வெந்துருகிக் கோபாவேசங்கொண்டு ரதத்தின்மேலேறி அங்குவந்து அனேக அஸ்திரங்களை வானரசேனையின்மீது பொழி யக்கண்டு ஸ்ரீராமர் தமது கோதண்டத்தினிடமாக அமோகமாக அஸ்திரங்களைப்பிரயோகித்து அவன்விட்ட அஸ்திரங்களை யெல் லாம் கண்டிக்கக்கண்ட ராவணன் ஒரு சூலாயுதத்தை விட்டெறிய அதனை ஸ்ரீராமர் காலாஸ்திரத்தைப் பிரயோகித்துத் தூள்படச் செய்தபின்னும் ஆயிரம்கணைகளைவிடுத்து ராவணனுடையசிரங்களை யும் கைகளையும் அறுத்திட நிமைப்பொழுதில் சிரங்கரமனைத்துங் கிளைத்திடக்கண்டு வியந்து இணையிலாத கணைகளைவிடுத்து அறுத் தறுத்துத்தள்ள மறுபடியும் கிளைக்க முடிவில் சதுர்முகாஸ்திரத் தால் பிரம்மதேவன் கொடுத்தவரமும் உரமும் அழிந்து பூமியின் மீதுவிழுந்து ராவணன் மடிந்தான். உடனே தேவர்கள் பாரிஜாத மலர்களைப்பொழிய துந்துமிமுழங்கமேலோர்களாகிய முனிவர்கள் நடிக்க மயன்மகளாகிய மண்டோதரியழுது புலம்பித் தானும்மடிந் திட ஸ்ரீராமர்யேவலினல் விபீஷணர்சென்று ராவணனுக்கும்அவன் பத்தினிக்கும் பிரேதசடங்குகளைநடத்தி அக்கினியினற் சமஸ்கா ரஞ்செய்து வேதவிதிப்படி திலஜலம் விடுத்து விபீஷணர் ஸ்ரீராம ரிடமேவியிருக்க, அந்தவேளையில் அனுமான் ஸ்ரீராமர் ஏவலால் சென்று சீதையைக்கண்டுவணங்கி ராவணன் மடிந்த நலங்கள்யாவ ற்றையுஞ் சாற்றிடக்கேட்டு சீதைமகிழ்ந்து நீராடி அணிபணி தரி த்துத் திரிசடையுடன்வந்து ஸ்ரீர.மரை வணங்கிநிற்க அவர் சந்தே கிக்கக்கண்டு உடனே சீதை அக்கினியில்மூழ்க அக்கினிதேவன் பயந்து நடுங்கிச் சீதையைச்சிரத்தின்மேற் சுமந்துக்கொண்டுவந்து ஸ்ரீராமரைப் பலவிதமாக துதித்து வணங்கக் கருணையுடன் ஸ்ரீரா மர் சீதையைக் கைபற்ருவிதமறிந்து சிவன் பிரமன் இந்திரன் துதி த்துப் போற்றிவேண்ட ஸ்ரீராமர் மகிழ்வுடன் சீதையை அங்கிகரி க்க அமரர்கள் மலர்மழைபொழிய துந்துமிமுழங்கத் தசரதன்அங் குவர ஸ்ரீராமர் தந்தையைவணங்க வணங்கின மைந்தனை மார்புறத் தழுவினன் பின்னும்சீதைவந்து வணங்கப் பெரிய அரசன் மருகிக் குப் பலவாசிகள்கூறிட லட்சுமணர் வந்துபணிய அவரை மார்போ டணைத்திடும் தந்தையை நோக்கி அண்ணு துயரமடைந்திருக்கும் பரதனும் அவன் அன்னை இவ்விருவர்மீது தங்களுக்கிருக்குங் கோ

பத்தை மாற்றும்படி வேண்டுகிறேன் கிருபைசெய்யுமென அதற்கு தசாதன் ஐயா குமாரனே உன்னை வனத்திலோட்டும்படி விளைத்த கைகேசியையும் அவள்பிள்ளையாகிய பாதனையும் இகழ்ந்தேன் மேலோனாகிய நீ இவ்வண்ணம் சொல்லும்படியான உன்மொழியினாலே இவர்கள் மீதிருந்த கோபத்தை நீக்கினேன் மேலாகிய சேல்கெண்டையையொத்த நேத்திரங்களையுடைய சானகியைக் கூடிவாழ்ந்திருமெனச்சொல்லிப் போயினான்.

பின்பு அமர்க்களத்தில் மடிந்துகிடக்கும் வசந்தனுயிரை அனுமான் சொர்க்கலோகத்திற்குச் சென்று கொண்டுவந்து வசந்தனை எழுப்பிவிட ஸ்ரீராமர் சீதை லட்சுமணர் சுக்கிரீபன் விபிஷணர்முதலாகிய எழுபத்திரண்டுவெள்ளம் வானரசேனைகளுடன் புஷ்பக விமானமீதேறிச் சேதுசேர்ந்து சிதையைநோக்கி ஸ்ரீராமர்சொல்லுகின்றார்.

கேளும் பெண்ணே சானகி இத் திருவணையைச் சேவித்தால் பாவங்களையும் போக்கி புனிதராகும்படிச் செய்யுமென்று சொல்லித் தன்னுடைய கோதண்டத்தின் ஓர் முனையினால் ஜலத்தைக்கீறி இத்தீர்த்தத்தில் மூழ்கினாலும் சகலபாவங்களும் நீங்குமென்றுசாற்றிப் பாத்துவாசர் ஆசிரமஞ்சேர்ந்து அவரடியிற் பணிந்து அவரளித்திடும் விருந்தைப் புசித்துக்கொண்டிருந்த ஸ்ரீராமர் அநுமானையழைத்து நீவிரைவாக அயோத்திக்குச்சென்று பரதன் சந்தோஷிக்கும்படி என்வரவை யறிவித்துவாவென்றனுப்ப அனுமான்அயோத்திக்குச்சென்று அக்கினியில் விழுந்திறக்கத்துணிந்த பரதனைத் தடுத்து ஸ்ரீராமர் வரவைப்புகன்று அநுமான் மறுபடியுந் திரும்பி வந்து பாத்துவாசர் ஆசிரமஞ்சேர்ந்து ஸ்ரீராமரை வணங்கித் தான் போய்வந்த காரியத்தைச்சொல்லிக் களிப்புடனிருந்தார்.

அங்கேபரதர் மிகுசந்தோஷத்துடன் ஸ்ரீராமர்வரவை யெதிர்பார்த்திருந்தார். இங்கே ஸ்ரீராமர் புசித்து பாத்துவாசரிடத்தில் இனியமொழிகள்புகன்று விடைபெற்று யாவருடனும் புஷ்பகவிமானமீதேறி அயோத்திமாநகரத்திற் கருகிலிருக்கும் நந்திக் கிராமத்திற்குச் சமீபமாகவந்து விமானத்தை விட்டிறங்கிய ஸ்ரீராமரையும் சீதையையும் பரதனும் சத்துருக்கனும் பணிந்துநிற்க லக்ஷ்மணர் பரதரைப் பணிந்துபோற்ற சத்துருக்கன் லக்ஷ்மணரை வணங்கிப் போற்ற அவனையெடுத்து அணைத்துப் பல ஆசிகள் கூறினபின்பு

ஸ்ரீராமர், சீதை, லக்ஷ்மணர், பரதர், சத்துருக்கர், விபீஷணர், சுக்கிரீபர், அனுமார்முதல் வானர சேனைகளுடன் புஷ்பக விமான மீதேறி அயோத்திமா நகரத்தையடைந்து சரயுநதியிற் படிந்து வேதியர் வேதமோதிட வசிஷ்டர் ஸ்ரீராமன் சிரசினில் மகுடஞ்சூட்டச் சீதையருகேநிற்க பரதர்குடைபிடிக்க லக்ஷ்மணர் சத்துருக்கர் கவரிவீச அனுமான் திருவடியைத்தாங்க மன்னர் மண்டலீகர்கள் முதல் யாவரும்வணங்கிப்போற்ற ஸ்ரீராமர் அயோத்திமாநகரத்தை தருமமும் நீதியும் மென்மேலும் விசேஷிக்க ஆண்டுவருங்காலத்தில் வழக்கப்படி ஒருநாள் நகர்சோதனை செய்துக்கொண்டு வருகிற போது வண்ணனொருவன் தன்மனைவி தனிவழியேசென்று ஓரிரவு தங்கி மறுநாள்வந்து வீட்டிற்சேர அவன் அவளைப்பார்த்து அடி விபசாரி இந்நகரத்தையாளும் இராமன்மனைவி சீதையை இராவணனெடுத்துக்கொண்டுபோய் ஆறுமாதம் வைத்திருக்கும் உளவை ஸ்ரீராமன் அறிந்தும் வானர சேனையுடன்சென்று ராவணனை மடித்து மறுபடியும் சீதையை யழைத்துவந்து மகுடாபிஷேகஞ்செய்துக்கொண்டு வாழ்ந்துவருகிறார். அதைப்போல யானு முன்னைச்சேர்ந்து உன்னுடன்கூடி வாழ்ந்திருப்பேனோ மெத்த நன்றாகயிருக்கின்றது நினது செய்கையென்றுசொல்லிய வண்ணன்மொழியைக் கேட்ட ஸ்ரீராமர் இவ்வாறே ஜெனங்களனைவரும் சொல்லுவார்களெனத் தன்மனதிற்கருதி யதிகவிரைவாகத் தன்னரண்மனையைச்சேர்ந்து லக்குமணரை யழைத்து ஜானகியை ரதத்தின் மீதேற்றிக் கொண்டுபோய் கானகத்தில்விட்டு வரக்கடவாயென்றுசொல்ல அந்தப்படியே லக்குமணர் சீதையை ரதத்தின்மீது ஏற்றிக்கொண்டு போய் மேன்மைபாகிய வால்மீகர் வனத்தில்விட்டுத் திரும்பிவந்து நகரம்சேர்ந்தார்.

அங்கேஜானகி ஒண்டியாகத்தவித்து அழுது புலம்பிக்கொண்டிருக்கும் அழுகுரலைக்கேட்டு வால்மீகமுனிவர்வந்து ஜானகியைக் கண்டு நீ ஆரம்மா உன்னூரெது பேரென்ன நினது தாய் தந்தையர்கள் யாவர் இந்த யிருண்டகாட்டிற்குவந்து தனித்து ஒண்டியா யழவேண்டிய காரணம் யாது இதுகளெல்லாம் ஒன்றேனும் ஒளிக்காமல் சொல்லுமம்மாவென்று வினவி ஜானகி வாய் மொழியினல் சகல விபகாரங்களையும் அறிந்து அம்முனிவர் ஜானகியைத் தேற்றிப் பர்ன்னசாலைக்குள் அழைத்துச்சென்று அம்மணி நீ இங்கு தானே யாதொரு கவலையுமின்றிச் சுகமாக யிரு. உனக்கொரு

குறையும் வரமாட்டாது யாவற்றிற்கும் யானிருக்கிறேனென்று தை ரியஞ்சொல்லித் தன்னிடத்தில் வெகு பரிவோடும் வைத்துப் பாது காத்துவருகிற காலத்தில் ஜானகி பூரணகெற்பம் நிறைந்து இர ண்டுகுமாரரைப்பெற்றிட வால்மீகர்தெரிந்து அப்பாலர்களில் மூத் தோனுக்குக் குசலனென்றும் இளையவனுக்கு லவனென்றும் நாம கரணஞ்சாற்றி உத்தமர்களாகிய பிராமணர்களுக்குக் கணக்கு மித மில்லாத தானதருமங்களை வழங்கிச் சாதகம் வரைந்து மிகவும் பிரியமாகவளர்த்துவந்தார் அச்சிறுவர்களிருவரும் வால்மீகமாமுனி வர் அனுக்கிரகத்தினால் அதிகபாலியத்திலேதானே வில்வித்தையிற் றேர்ச்சியடைந்து காட்டிலிருக்கும் பலவித மிருக வேட்டைகளாடி வருகிறபோது சத்துருக்கனும் அக்காட்டிற்குவந்து வேட்டையா டிக்கொண்டிருக்க லவன்கண்டு எங்கள்காட்டினுள்வந்து வேட்டை யாடுகிற நீ யாரென்றுதடுத்து அமோக யுத்தஞ்செய்கிற பாலனைக் கண்டு சத்துருக்கராஜன் ஆச்சரியமடைந்து அப்பாலனைநோக்கி வெகுவாகநயந்து கேட்டுக்கொண்டும் அப்பாலன்மீறித் தன் சேனை களையெல்லாஞ் சின்னாபின்னப் படுத்துவதைக்கண்டு சத்துருக்க மகாராஜன் வெகுண்டு கோபமீறிச் சுறுக்காகிய சிலபாணங்களைத் தொடுத்து லவனைக்கொன்று தன்னகரஞ்சேர்ந்தார்.

இதுசங்கதியை யறிந்து வால்மீகர் வேகமாக அங்குசென்றுத் தன் தவவலுவினால் லவனையெழுப்பி அழைத்துவந்து பர்ன்னசாலை யிற்சேர்த்துத் தவத்திலிருந்தார். அயோத்தியில் ஸ்ரீராமர் கொ லுக்கூடத்தில் மேவி சிங்காதனத்தில் வீற்றிருக்கிறபோது பிரா மணனொருவன் தன்புதல்வன் மரித்துக் கிடப்பதையறிந்து மிகவுந் துக்காக்கிராந்தனாகிமரித்த மகனையெடுத்துத் தோளின்மீது சாத் திக்கொண்டுவந்து ஸ்ரீராமர் முன்னங்கிடத்தி ஓ ராமா நினது அர சாக்ஷியில் ஏதோ அக்கிரமம்நடந்திருக்கிறது ஆகையால் என்புதல் வன் மரண மடைந்தானென்றுக் கூக்குரலிட்டுக் கதறியழுகிற பிராமணனைநோக்கி ஸ்ரீராமர் சொல்லுகின்றார் ஓ பிராமணோத்தமரே நீர் விசனப்படவேண்டாம் இன்னுஞ் சற்றுநேரத்தில் உன் புத்தி ரன் உயிர்பெற்றெழுவான் என்றுசொல்லி பிராமணனைத்தேற்றிச் சத்துருக்கராஜனை யனுப்பிப் பார்த்துவரும்படி நேமிக்க அந்தப் படியே சத்துருக்கராஜன்சென்று தேடிப்பார்த்துக்கொண்டு வரு கிறபோது பஞ்சமனொருவன் தன் குலதருமத்தைவிட்டு மேல்குல த்தாரனுட்டிக்கும் தவஞ்செய்வதைக் கண்டு அவனைக்கொன்ற மா

த்திரத்தில் பிராமணன்புதல்வன் உயிர்பெற்றெழுந்தான் அதைக் கண்டபிராமணன் ஸ்ரீராமரை வாழ்த்திப் புதல்வனை யழைத்துச் சென்றான்.

சூரியனைப்போல இப்பூமண்டலமெங்கும் வியாபித்து தருமங் குன்றாமல் நீதிவழுவாமல் அரசுபுரிந்திடும் ஸ்ரீராமர் வேதவேதியரும் முனிவர்களும்மகிழ முறைநெறிப்படி அசுவமேதயாகத்தை குற்ற மின்றி நடத்துகிறநாளில் சானகியின் சிறுவராகிய குசலவர்களுக்கு வால்மீகமாமுனிவர் சவுளம் உபநயனஞ்செய்வித்து நான்மறைகளை யும் ஓதுவித்துத் தான்செய்த ராமாயண சுலோகங்களனைத்தையும் விரித்துரைத்து கற்பித்துவைக்க அவர்களிருவரும் அயோத்திமா நகரத்தையாளும் ஸ்ரீராமரிடத்திற்குச் சென்று ராமகதையைச் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் மிகவுமகிழ்ந்து நீங்களாரப்பாவென்று வினவுகிறபோது வால்மீகமாமுனிவர் அங்குவந்து ஸ்ரீராமரால் பூசிக்கப்பட்டு ஆசிகள்கூறிச் சொல்லுகின்றார் சத்தியசந்தனாகிய ஸ்ரீராமா இவ்விரண்டு சிறுவர்களும் நினது புதல்வர்களென்று சொல்லக்கேட்டு தசரதராமன் முன்னங்கொண்ட மகிழ்ச்சியைவிட எண்மடங்கு அதிக சந்தோஷமடைந்து பூரித்துத் தனையர்களை இரு கைகளினாலும்வாரிச்சேர்த்தணைத்து சானகியையழைப்பித்து அக்கினியில் மூழ்குவாயென்ற மாத்திரத்தில் அவ்வுத்தமி அதற் கிசைந்த பொழுதினில் பிரம்மாவின் யேவலினால் பூமாது அங்கு வந்து ஸ்ரீராமர் யெதிரில்சீதையைத் தன்கைகளா லெடுத்தணைத்து புவியைக் கிழித்துக்கொண்டு போயினள்.

இந்தப்படி பூமாது சீதையை யெடுத்துக்கொண்டு போயி னதைக்கண்ட ஸ்ரீராமர் சினங்கொண்டுத் தவசிகள்முதல் யாவரும் நடுக்கங்கொள்ளக் கோதண்டத்தை வளைத்து கணைகளைத் தொடுத் திடுஞ்சமயத்தில் சிவன், பிரமன், தேவேந்திரன்முதல் முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர ரிஷிகளுங்கூடி ஸ்ரீரா மர் முன்வந்து அதருமத்தைப் போக்கி தருமத்தை நிலைநாட்டி எங் களை ரட்சிக்கும்பொருட்டு அல்லவோ நீர் நர உருவம்பெற்றது அதைத்தாங்கள் நன்றாயோசித்துத் தங்களுக்குண்டாகிய கோபத் தைமாற்றிக் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளும் தேவர்கட் கிரங்கி கிருபாநோக்கம்வைத்து சினத்தையடக்கிப் பூமண்டலத்தை பதினோராயிரவருடம் அரசாண்டிருக்கிறகாலத்தில் அன்னையாகிய கோசலைமரிக்க அக்கினி சமஸ்காரஞ்செய்து திலோதகம் விடுத்

நுச் சுகித்திருக்கிற காலத்தில் எமன் பிராமண உருவங்கொண்டு தன்முன்வந்து ஆசிகள்கூறி நற்குணத்திற்கு சிறந்த விற்பனவிவேகி யாகிய உத்தமனே நானுனக்குச் சொல்லப்போகிற சங்கதிகள் முடியும்பரியந்தம் இங்கு ஒருவரும் வராதிருக்கும்படி நீ செய்யுமென்ற மாத்திரத்தில் ஸ்ரீராமர் லக்குமணனையழைத்து தம்பி லக்குமணா இங்கு ஒருவரும் வராதபடிக்கி நீசென்று துவாரத்தில் காத்திருவென்று சொல்லியனுப்ப நிகரொருவருமில்லாத ஸ்ரீராமர் சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கிறபோது பிராமண உருவமர்ந்த எமன் சொல்லத்தொடங்கினன்.

அகிலபுவன கர்த்தாவாகிய ஸ்ரீராமா சிருஷ்டி திதிசங்கார மூலமாகிய ஐயனே தேவரீர் பிரமதேவன் வேண்டலால் ராக்கத குலத்தைச் சங்கரிக்கும்பொருட்டு நராவதாரஞ் செய்தீரென்று சொல்லிக்கொண்டிருக்குமளவில் கோபமேசொரூபமாகக்கொண்ட துருவாசமாமுனிவர் விரைவாகவந்து துவாரத்தில்நுழையக்கண்ட லக்குமணர் முனிவரே இப்போது உள்ளேபோக சமய மல்லவென்றுதடுக்கத் துருவாசர்கோபித்து உன் குலமற்றுப் போகும்படி சபிப்பேனெனக்கேட்ட லக்குமணர்பயந்து அம்முனிவரை உள்ளே விட முனிவனைக்கண்ட மாத்திரத்தில் பிராமண உருதரித்துவந்த எமன் மறைந்து போயினன் துருவாச மாமுனிவரைக் கண்டு ஸ்ரீராமர் சகல உபசாரங்களுஞ்செய்து மகிழ்ந்து வணங்கி நிற்க நோக்கி துருவாசமாமுனிவன் சொல்லுகின்றான் ஸ்ரீராமா நீபராபர வஸ்துவாகிய ஸ்ரீமந் நாராயணனென்று சொல்லிப்போயினன் உடனே ஸ்ரீராமர் பிராமணனைக்காணமல் தியங்கி மயங்கி துருவாச மாமுனிவரை உள்ளே விட்டவர்கள் யாவரென்று வினவிய சொல்லைக்கேட்ட லக்குமணர் விசனமடைந்து அண்ணன்சொல்லை மறுத்து துருவாசமுனிவரை உள்ளேவிட்ட மாபாவியான யான் இனி இப்பூமியி லுயிருடனிருக்க மாட்டேனென்றுகருதி இளையவர் சரயு நதியில் விழுந்து ஆதிசேஷ னுருக்கொண்டு பரமபதத்தை யடைந்தார். இது சங்கதியைக்கேட்ட ஸ்ரீராமர் மிகவுங் கவலையுற்று லக்குமணனில்லாத இப்பூமண்டலத்தில் இனி நானிருக்க மாட்டேனென்று திடங்கொண்டு தமதுகுமாரர்களாகிய குசலவர்களுக்கு விரைவாகமுடிசூடி அரசுசெய்யவிதித்து அநுமானைநோக்கி பிரம்மபதவி பின்பு பெருவாய் இன்னுஞ் சிலகாலமிருமென்று விடைகொடுத்து விபீஷணருக்கு இலங்கைமாநகரத்தை யாண்டிருமென்று விடை

தந்து பரதசத்துருக்கருடன் சரயுநதியில்படிந்து பரதசத்துருக்கள் சங்கு சக்கரங்களாகித் தன் கரங்களில் வந்திலங்கத் தானும் ஸ்ரீமந்நாராயணனுகி கெருடன்மேல் துலங்கி சுக்கிரீபன்முதல் வானரசேனைகளுடன் அயோத்திமாநகரத்திலுள்ள யானைகள் குதிரைகள் சிற்றெரும்புமுதல் சகலஉயிர்களும் பிர்ம்மலோகத்தை யடையும்படி கிருபைசெய்து தேவர்கள் மலர்மழைபொழிய அந்தர துந்துமிமுழங்க விரசையைக் கடந்துபோகையில் சானகிவந்து அடிபணிந்து மருவ வைகுண்டமா நகரத்தையடைந்தார்.

ஸ்ரீராமாவதாரம்

முற்றிற்று.

—:*:—

## எட்டாவது,

# பலராமாவதாரம்.



ஸ்துதி.

அலகிலாமறை யாதியகலையெலாம் பரவும்
மலமிலாதபேர் வானநாட்டையனை யரனை
யிலகிலாமன விண்டுவைவெம்பகை முடித்த
மலமிதாலுறும் புத்திரன்மலரடி பணிவாம்.

மாசிலாத அம்புவியையாளுகின்ற மன்னர்களில் மிகவுங்கீர்த்தி பெற்றசந்திரகுலத்தரசனுகிய போசனென்பவன்வடமதுராபுரியை நீதிவழுவாது அரசுபுரிந்துவந்தார்கள் அவ்வரசனுக்கு உக்கிரசேன

னென்றும் தேவகனென்றும் இரண்டுபுதல்வர் பிறந்தார்கள் இவர்களுக்கு தகுந்தகாலத்தில் சௌளஉபநயனம் கல்விப் பயிற்சி வில்வித்தை யானையேற்றங் குதிரையேற்ற முதலான சகலவித்தைகளிலும் தேர்ச்சியடையச்செய்து விவாகம்முடித்து உக்கிரசேனனுக்கு மகுடஞ்சூட்டி போசமகாராஜன் திருநாட்டையடைந்தான். இவ்வுக்கிரசேன மகாராஜன் சத்தியம் பொருமை தயைமுதலாகிய நற்குணங்கள் நிறைந்து மநுநீதி தவறாமல் வட மதுராபுரியை ஆண்டு வருகிற காலத்தில் ஓர்புத்திரன் பிறந்தான் அவனுக்கு கஞ்சனென்று திருநாமமிட்டு வளர்த்து வந்தார்கள். இச்சிறுவன் நாளுக்குநாள் செல்வமாக வளர்ந்து கொலைகட்களவு காமம்பொய் முதலாகிய துர்க்குணங்களெல்லாந் திரண்டு ஒருருவமாகிவந்த கொடியன் அதருமம் நாளுக்குநாள் மேலிட்டுப்பெருகவும் தருமம் தினத்துக்குதினந் தேய்ந்துவருகவும் மாய வஞ்சகம் பெருகவே வளர்ந்தனன். தருமன் நீதிகுன்றவே தவழ்ந்தனன் எங்குந் திரண்ட நோய்கள் உயர்ந்திட நடந்தனன் மேலாகிய நன்மார்க்கங்கள் பழுதுறச் சினமுண்டயவனாகி யிருந்தனன் மேலும் இவன் தந்தவக்கிரன், சாலுவன், சிசுபாலன், சராசந்தன் முதலான துஷ்டர்களை நேசித்து மகததேசவரசன் புதல்விக ளிருவரை மணந்து மனம்போனபோக்காய் நடந்துவருகையில் இவனுக்குபின் எட்டுப்பிள்ளைகளைப் பெற்றுவளர்த்துப் பெண்பிள்ளை யொன்றேனு மில்லையே என்று ஏக்கங்கொண்டிருந்த உக்கிரசேனமகாராஜன் தன் தம்பியாகிய தேவனுக்குதித்த பெண்பிள்ளையைத் தன் புதல்வியெனப் பாவித்து மிகவும் பிரியமாய் தேவகியெனத் திருநாமமிட்டு வளர்த்துவந்தான் அச்சிறுவர்களும் மூன்றாம்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்குநாள் விருத்தியடைந்து சாமுத்திரிகா சாஸ்திர விதிப்படி சகல லட்சணங்களும் பொருந்தி செந்தாமரை மலரிற்றோன்றிய மகாலட்சுமிக்கு நிகரென தேவகி விளங்கிடும்நாளில் உக்கிரசேன மகாராஜன்கண்டு பரிவினால் இவளுக்குத்தக்க நாயகனைத்தேடி மணமுடிக்கவேண்டுமென்றுகருதி சபைக்குவந்து சிங்காதனத்தின்மீது விற்றிருந்துமந்திரிகளுடன் யோசனைசெய்கிறபோதுமதியிற்சிறந்த மந்திரியொருவன் அரசனைநோக்கிச் சொல்லுகின்றான்

கேளும்எங்களையாண்டுரட்சிக்கும் சந்திரகுலத்தோன்றலே!சாருகதேசத்தலைவனாகிய சூரசேனமகாராசன் புதல்வன் வசுதேவனெனும்வீர னச்சரியப் படும்படியான வடிவமர்ந்தவன் விண்ணிலும்

மண்ணிலுமவனுக்கு நிகரானவர்களில்லை ஆதலாலவன் தங்கள்புதல்விக்குத்தக்க நாயகனென்று சொல்லியமுதல் மந்திரியின் மொழியைக்கேட்டு தேகம்புளகித்து வசுதேவரையழைப்பித்து சுபலக்கினத்தில் தேவகியைக்கொடுத்து மணமுடித்து ஆயிரத்தெண்ணூறு ரதங்கள் நானூறு யானைகள் பதினாயிரம் குதிரைகள் இருநூறு தோழிப்பெண்கள் இன்னும் பலவித சீதனங்களைத்தந்து வதூவரர்களை ரதத்தின் மீதேற்றிக் கஞ்சன் ரத சாரத்தியஞ்செய்ய அனேக மேளவாத்தியங்கள் முழங்க வடமதுராபுரியை வலமாக வருகிற போது ஆகாயத்தில் நின்றும் அசரீரி கஞ்சனைநோக்கி அடாகஞ்சா இத் தேவகியின்மக்களி லெட்டாம்பிள்ளை உன்னுயிரை வாங்குவன் என்ற மாத்திரத்தில் கஞ்சன்திடுக்கிட்டுக் கண்களில் அக்கினிப் பொறிபரக்கக்கோபங்கொண்டு இவளைநமக்கு பகையாளியாயினளென்றுகருதி இடையிலிருந்த வாளையுருவிக் கையில்பிடித்துக்கொண்டு ரதத்தின்மேல் தட்டுக்குச்சென்று தேவகியின் நீண்டகுழலைப் பற்றி யக்கொடியபாவி வெட்டிடத் துணிந்த காலத்தில் வசுதேவர் கஞ்சனைநோக்கி மைத்துனரே தீவரப்படாமல் கொஞ்சம் பொருமையை வகித்திரும் உலகத்தில் அற்பர்செய்யுந்தொழிலை உம்மைப் போலொத்த மேலோர்கள் செய்யத்துணிவது நீதியல்ல அந்தணர்களைக் கொன்றவர்கள் பெண்களை மடித்தவர்கள் தீராநரகத்தில் வீழ்வார்களென்று பலநூல்கள் முறையிடுவதைமறந்து யிக்கொடிய காரியஞ்செய்ய நீமுயல்வதுதகாது அசரீரிசொல்லிய மொழியினாலன்றோ உமக்கித்தனை கோபமுண்டாயிற்று நினதுயிர் மாயாவண்ணம் யான் ஒருயுத்திசொல்லுகிறேன் அதென்னவெனில் இந்த தேவகிவயிற்றில்பிறக்கும் எட்டுபிள்ளைகளையுங் கொண்டுவந்து உமக்குக்கொடுக்கிறேன் அவர்களைவேண்டுமானால் கொன்றுமதுயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் இப்பெண்ணைக் கொல்லாமல் விட்டுவிடுமென்றும் அரசனே உன்னுடைய அருளைக்கத்தினால் நாங்கள் வாழ்ந்திருப்பதைவிட்டுஉன்னுயிரைப்போக்கநாங்கள்நினைப்போமா ஒருக்காலும் நினைக்கமாட்டோம் அப்படியல்லவென்று உன்னைக் கொன்று மடிக்கும்பொருட்டு இம் மங்கையின்வயிற்றிற் பிறக்கும் மைந்தர்கள் விளங்கி யெங்களுக்கென்ன பலனைத் தருவார்கள் உயிருடன் நீயிருந்தால் நாங்கள் பலவிதத்திலும் தங்களால் பயனைப் பெருவோம் இதுவுண்மையாக நம்புமென்றுவசுதேவர்கூறிய மொழியைக்கேட்டு கஞ்சன் இனியில்லாத மகிட்சியடைந்து தேவகியைக் கொல்லாமல் சந்தோஷத்துடன்சென்று அரண்மனை சேர்ந்தான்.

இங்கே தேவகியும் வசுதேவரும் தங்கள் நாட்டை யடைந்து இரதியும் மதனும்போலக் கூடிவாழ்ந்து ஓர் புதல்வனைப்பெற்ருள் அம்மகனை யெடுத்துக்கொண்டுபோய் வசுதேவர் கஞ்சனிடங்கொடுக்க அக்குழந்தையின் வடிவழகையும் வசுதேவருடைய சத்தியவாக்கையும் மிகவாக மதித்து வசுதேவரே மறுபடியும் உம்முடைய புதல்வனை யெடுத்துக்கொண்டுபோம் இவனுலெனக் கொருதீங்குமில்லை இவனுக்குயெட்டாவது புத்திரனல்லவோ யெனக்குமிகுந்த பகைவன் அவனைப்பிடித்து நான் மடியச்செய்கிறேன் என்றுசொல்லிப் பாலகனை வசுதேவர் கையில்கொடுக்கப் பெற்றுக்கொண்டு வசுதேவர் கஞ்சனிடத்தில் விடைபெற்று அவ்விடம்விட்டுப் புறப்பட்டு நடந்து தன்னரண்மனைபுகுந்து அந்தப்புறஞ்சேர்ந்து மனைவியின்கையில் பாலனைக்கொடுத்து நடந்தவிருத்தாந்தத்தைத் தெரியச்சொல்லி அப்பாலகனுக்கு சாதகருமமுடித்து சுருதகீர்த்தியென்னும் நாமகரணஞ்செய்து போஷித்து தேவகி வசுதேவருடன்கூடி கலவிசெய்து ஒன்றின்பின்னென்ருக பலவருடங்கழியஐந்துபிள்ளைகளைப்பெற்று தேரினமனத்துடனிருக்க வசுதேவர் மிகமகிழ்வுடன் ரோகணிமாதைமணந்து அவளுடன் இன்பசுகமடைந்து கலாசாஸ்திர விதிப்படி கலவி செய்திருந்தான் அத்ததியில் திரிலோக சஞ்சாரியாகிய நாரதர் கஞ்சனுடைய சமுகத்தில்வரக்கண்டு கஞ்சன் எதிர்சென்று அழைத்துவந்து தகுந்த ஆசனமளித்து அவர் திருவடிக்கு விதிப்படி பூசித்து தூபதீபமளித்து தீர்க்க தெண்டனிட்டெழுந்து போற்றும் சிந்தையையுடைய கொடியோனுக்கு நாரதர் சொல்லுகின்ருர்.

கேளும் கஞ்சமகாராஜனே உனக்கனுகூலமாகிய ஒரு காரியத்தைச் சொல்லுகிறேன் இதுஉண்மை இதனை யுன்மனதில்வைத்திடும் அது யாதென்ருல் முன்னெருநாள் உக்கிரசேன மகாராஜன் வேட்டையாடுவதற்குக் கானகமேவி யிருந்தபோது அவன்மனைவி ரஜஸ்வலையாகி மூன்றுநாள் ஸ்நானஞ்செய்து அன்றுகடந்து நான்காவதுநாள் நவரத்தினங்களிழைத்த பொன் மாளிகைக்குள் புகுந்து பஞ்சணையின் மீதிருந்து கலவிசெய்ய விரும்பித் தன் கணவனுகிய உக்கிரசேன மகாராஜனைநினைந்து யெதிர்பார்த்து வருந்தியிருக்குங்காலத்தில் கெந்திருவர்களில் ஒருவன் தருமனென்பவன் அம்மாதின் மனதையறிந்து உக்கிரசேன மகாராஜனைப்போல உருவங்கொண்டு நடந்துவரக்கண்டு அம்மாதுமகிழ்ந்து யெதிர்சென்று

மைத்துவந்து உபசரித்து நயவசனங்கள்மொழிந்து இன்பமடையும்பொருட்டு நாயகனையனுகிக் கலவிசெய்யும்போது தன் கணவன் செய்யும்படியான கலவிக்குறிகளில்லாததால் அவ்வணங்குதிடுக்கிட்டுபயந்து யிவன்யாவனோவென்று தியங்கிமயங்குகிறபோது அக்கந்தருவன் ஆகாயத்தில்தோன்றினன் அவனைக்கண்டு வஞ்சித்துவந்து யென்னைக்கூடி கற்பழித்தாயாதலால் அடாநீசனே நீ யெந்தவுருக் கொண்டுவந்தனையோ அவ்வுருவத்திற்குடைய பிள்ளையினால் நீமடிவாயென்று சாபமிடப்பெற்று கந்தருவன் விசனத்துடன் போயினன். அக்கந்தருவன் கன்னியென்று நினது அன்னை சொல்ல உக்கிரசேன மகாராசன்கேட்டு மனத்துயரடைந்து சோதிடர்களால் சாதகருமம்வழங்கியபோது அவர்களால் சொல்லப்பட்ட நினதுகெட்ட குணங்களைக் கேட்டு உக்கிரசேனன் பின்னுங் கவலையுற்றான். அன்றியும் உக்கிரசேனன் தேவன் வசுதேவன் தேவர்கள் விஷ்ணுமுதலானோருடன் போர்செய்து மடிந்தகாலநேமியென்னும் அசுரனாகிய நீகஞ்சனாகப்பிறந்தாய் ஆகையால் அனாதியாக அமரருக்கும் அசுரருக்கும்நீடித்தபகையால் இவர்கள் அவர்களைக் கொல்வதும் அவர்கள் இவர்களைக் கொல்லுவதுமாகயிருக்கிற விருத்தாந்த மனைத்தையும் நானறிந்தமட்டும் கெடுதிகளைவிரித்துக் சொன்னேன் இதுவுமன்றி நினது தங்கை தேவகிபிள்ளைகளுக்குள் ஒருவன்வந்து உன்னை மடித்துக் கொன்றுவிடுவானென்று சொல்லி நாரதமாமுனிவர் போயினர்.

பின்பு கஞ்சன்தனக்குத்தானே இந்தப்படி யோசிக்கிறான் நமக்குத் தாயும்பகை தந்தையும்பகை மற்றுமுள்ள பந்துக்களும்பகை தங்கையும்பகை அவள்வயிற்றிலுதிக்கும் பிள்ளையும்பகை யாவரும் பகைவராயிருக்கிறார்கள் இதுவென்ன ஆச்சரியம் என்றுதிகைத்து அகம்வாடி முகம்வியர்த்து விரைவாகவெழுந்து திடுதிடென்றோடி தேவகியின் நீண்ட மனைக்குள்புகுந்து கண்களில் நெருப்புப்பொறிகள்பறக்க வெகுண்டு அவள்பெற்றபிள்ளைகள் ஆறுபேர்களையும்பிடித்துப் பற்களைக்கடித்து ஆவியைப்போக்கி வசுதேவருக்குக் கால்கரங்களில் விலங்குபூட்டிட அவர் துயரப்படக்கண்டு தேவகி மனவருத்தங்கொள்ள அவளுக்கும் விலங்குபூட்டி உக்கிரசேனையையும்பிடித்து விலங்குபூட்டி கடுங்காவலிலமைத்து இன்னமும்யாரிருக்கிறார்களென்று யோசித்துக்கொண்டிருந்தான் அச்சமயத்தில் ரோகணி

க்கு வசுதேவர் கைகாட்ட அம்மாது கிடுகிடென்றோடி ஆயர்பாடியிற்புகுந்து நந்தகோபன்மனையிற் சென்றிருந்தாள்.

பின்புகஞ்சன் உக்கிரசேனன் உருக்கொண்டுவந்து தன்னைச் சேர்ந்த கெந்தருவருடன் யுத்தஞ்செய்து அவனைமடித்து எண்டிசையும் செயங்கொண்டு மகுடம்புனைந்து சிங்காதனத்தில் வீற்றிருந்து வஞ்சனை சூது கொலைமுதலாகிய துஷ்டசெய்கைகளை மலைபோலத் தினந்தினஞ் செய்துக்கொண்டியிருக்கிறகாலத்தில் ராக்கதர்கள் நீதிநெறியைக்கடந்து அரசர்களை நோகப்பண்ணி உலகத்துக்கெல்லாம் வேதனை யுண்டாகும்படி அக்கிரமம்செய்ய அதருமமே மிட்டு தருமங்குறைந்தமையால் பூமிபாரத்தைச்சுமக்கமாட்டாமல் பூமாது திரேகமெல்லாம் மெலிந்து மனஞ்சோர்வடைய துக்கப்பட்டு துஷ்டர்களாகிய ராக்கதர்களை வேறறச் செய்யவேண்டியதற்குத் தக்கயோசனை யென்னசெய்கிறதென்றுகருதி முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் புடைசூழ்ந்துபோற்றும்பிரமதேவன் சபைக்குச்சென்று சொரூபந்தரித்து நின்றனள் அவனிமாது ஆவின்வடிவமாய் வரக்கண்ட தேவர் தேவேந்திரன்முனிவர்கள் பிரமன்முதல் யாவருந்திரண் டெதிர்சென்று ஏத்திப் போற்றிப்பணிந்து முலைப்பாலைத்தந்து காப்பாற்றும்பசுவைக்கண்டு மகிழும் கன்றைப்போல மனதுருகிச் சொல்லுகின்றார்கள். அன்னையே நீவந்தகருத்தைபறிந்தோம் அதுயாதெனில் வல்லமையில் மிகுந்த அரக்கர்கள் மானிடரிடத்தில் அக்கிரமங்கள்செய்ய அதினால் மெலிந்து இவ்விடம்வந்தாய் உனக்கு நேரிட்டிருக்கும் இடர்களை போக்குவதற்கு யெங்களாலாகாது ஆதலால் மனக்குறைகளைத் தீர்ப்பவனும் செகமுழுவதையுங் காப்பவனும் மாபலியினிடஞ்சென்று மூன்றடிபூமி தாவென்றுக் கையேந்தி யிறப்பவனும் அண்டரண்ட சராசரங்கள் யாவற்றையும் உண்டு உமிழ்ந்து பாலிக்கும் எம்பெருமான் நினதுபாரத்தைநீக்கி ரட்சிக்கும் பெருமையைப் படைத்தவனுகையால் அம்மாயவன் அமர்ந்திருக்கும் பாற்கடலினிடத்திற்கு நாமனைவோரும்போதல் நலமென்றுசொல்லி பூமாதுடன் யாவரும் பாற்கடலைச்சேர்ந்து பகவானைப் பலவிதங்களாகப்புகழ்ந்துகொண்டாடியபோது செகதீசன் துயிலொழிந்து கெருடன்மீது வமர்ந்து வலமார்பினில் கமலைவிளங்கப் புறப்பட்டார். அப்போது ஆகாயத்தில் துந்துமிமுழங்க சூரியனும்சந்திரனும் தியங்கிமயங்க சூல்கொண்ட மேகநிறத்தையொத்த திருமேனி பிரகாசிக்க சங்குசக்கரம் த

ண்டுவாள் சாரங்கம் கரத்திலிலங்க அனைவருங்காணத் தோன்றினான். அச்சேவையைத் தெரிசித்து யாவரும் தங்களைமறந்து ஆனந்தக்கண்ணீர்விட்டுப் பாடியாடினார்கள். அதுசமயத்தில் பசுவின்வடிவங்கொண்டிருந்த பார்மகள் எம்பெருமான் திருவடியில்விழுந்து யிறைஞ்சியெழுந்துநின்று கைகூப்பி என்மனதிற்கினிய மணாளரே துஷ்டராக்கதர்கள் இப்பூமியெங்கும்நிறைந்து உண்மையைப்பேசமாட்டார்கள் பொய்வசனங்களையே பிதற்றுவார்கள் வஞ்சகம் மாயம் கொலைமுதலாகிய அக்கிரமங்களைச் செய்வதற்குக் கிஞ்சிற்றேனு மனங்கூசமாட்டார்கள். இப்படிப்பட்ட கொடிய துஷ்டர்களைச் சுமக்கவும் அவர்கள் செய்யும்படியான அக்கிரமங்களை நினைக்க நினைக்க யென்திரேகம் நடுங்குகிறதே முன்னம் சானகியை யெடுத்துக்கொண்டுபோய் அசோகவனத்திலிருத்திக் கடுஞ்சிறைவைத்த பாவியாகிய ராவணனை வதைத்து மீண்டும் சானகியை கைப்பிடித்தாண்ட ஸ்ரீராமர் அடியானைக் கைசோர விட்டால் யானெவ்வண்ணம் உய்வேன் தேவரீரைவிட யிவ்வேழைக்கு கெதிவேறில்லையே யென்று கண்ணீர்விட்டுக் கதறியழுவதை நோக்கி விஷ்ணுவானவர் சொல்லுகின்றார்.

கேளும் ஆரணங்கே வசுதேவருக்கும் தேவகிமாதுக்கும் யான் மைந்தனாகப் பிறந்து பாவிகளனைவரையும் பற்றறுத்து நினக்குற்ற பூபாரத்தைப் போக்குகிறேன் என்று பகவான் திருவாய்மலர்ந்தருளக்கேட்டு புவிமாதுவாசவன் கமலாசனன் முதலானயாவரும் அப்போது பரமானந்தமடைந்து ஒருவருக்கொருவர் மலர்களை வாரியிறைத்துக்கொண்டு வெறிகொண்டவர்கள்போல ஆடினார்கள். இந்தப்படியாக தேவர்கள்முனிவர்கள் மற்றியாவர்களும்வணங்கி இணங்கிப்போற்றித் தன்னைமறந்தாடுகின்ற அனைவரையுங் கடாக்ஷித்துப் புவிமாதைத்தேற்றி உங்கள்லோகத்திற்குப் போங்களென்று விடைதந்து மாதவன் பாற்கடல்நடுவிற்சென்று தனக்குச்சயனமாகிவிளங்கும் அனந்தனைநோக்கி ஒருவார்த்தை சொல்லுகிறான்.

கேளும்சர்ப்பராசனே கற்பினிற் சிறந்த தேவகியின் வயிற்றில் ஏழுமாதந்தங்கி கெற்பமாகியிருந்துப் பின்புரோகணிவயிற்றில் மூன்றுமாதம்பொருந்திப் பிறந்துவளரக்கடவாயென்று முன்சொல்லி அனுப்பி மாயையை வரவழைத்து ஆயர்குலக் கொடியாகிய யசோதையின்வயிற்றில் நீபோய்தங்கிப் பிற்பாடு தேவகியின்வயிற்றி லிருக்கும் ஏழுமாதத்திய பிண்டத்திற்கு யாதொரு அபாயமும் நேரி

டாமல் உபாயமாய் வெளிப்படுத்தி ரோகணியின் வயிற்றினிற் சேர்ந்திடுவென்று சொல்லிய லட்சுமிநாயகன் |சொற்படியே மாயையானவள்சென்று தேவகியின்வயிற்றில் ஏழுமாதத்திய கருவதாய்விளங்கும் சிசுவை ஒருவருக்கும் புலப்படாமல் தந்திரமாய்வெளிக்கிவாங்கி எடுத்துக்கொண்டுபோய் அந்த மாயையானவள் ரோகணியின் வயிற்றிற் பொருந்தச்செய்து தான்சென்று யசோதையின் கருப்பையிற் றங்கினள். மற்ற மூன்றுமாதமுங் கடந்தபின்பு ரோகணி தேவி பிள்ளையைப்பெற்ருள் அப்பிள்ளை பூமியில் எந்தபாகத்தில்விழுந்ததோ அந்தபாகத்தி லிருக்கும்பூமி தாழ்ந்து மற்ருெருபாகம் உயர்ந்து கொண்டது இதனல் அப்பிள்ளை மிகுந்த பலமுடையவனென்றுகருதி பலராமனென்று ஒருநாமும் தேவகியின் வயிற்றில் ஏழுமாதமும் ரோகணியின்வயிற்றில் மூன்றுமாதமும் தங்கிப்பிறந்த இக்காரணத்தால் அச்சிசுவுக்கு சங்கர்ஷணனென்று இரண்டாவதுநாமமும் கலப்பையை ஆயுதமாகப் பெற்றவனுதலால் ஹலாயுதனென்றும்மூன்றுதிருநாமமுண்டாகியது இதற்குபின் நந்தகோபன் தனக்குமெத்த நேசனுகிய வசுதேவன்மனைவி ரோகணிபெற்றபிள்ளைக்கு சாதகருமம்செய்து முடித்து அனேகதான தருமங்களைச்செய்து மிகவும்பிரியமாக இச்சிறுவனை வளர்த்து தக்கவயதில் க்ஷௌளம் உபநயனம்முதலான சத்கருமங்களைச் செய்துமுடித்து அப்பாலனையன்பாக பாதுகாத்து வந்தார்கள். பலராமருஞ் சிலநாள்போக்கி சாந்திபரிடத்திற் சென்று வணங்கி மூன்றுமாதத்தில் நான்குவேதம் பஞ்சகாவியம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணம் இதுகளையெல்லாம் ஓதி தேர்ச்சியடைந்து மிகவுந்துஷ்டனுகிய பிரலம்பாசுரனைவதைத்து எவ்வனபருவ மடைந்திருக்கிறபோது ஆவிர்த்தக தேசத்திற் கிறைவனுகிய ரேவகமகாராசன் சாக்ஷாத்து மகாலட்சுமிக்கு நிகராகிய சுபலக்ஷணங்கள்வாய்ந்த கன்னிகையைப் பெற்று வளர்த்து வேதநெறியினை யுடைய மறையோர்கள் ஆசிகூற மகிழ்ந்திருக்கிறநாளில்ரேவதி கன்னிகை மங்கைப்பருவ மடைந்தகாலத்தில்ரேவகன் இம்மங்கைக்குத் தக்க நாயகனை உலகமெங்குந்தேடிக் காணுமல் இம்மங்கையுடன் ரதத்தின்மே|லேறிக்கொண்டு போய் பிரமதேவன் சபைக்குச் சென்ருன் அங்கே நவரத்தினங்க ளிழைத்த சுவர்னமண்டபத்தில் இந்திரன், அக்கினி, ஏமன், நிருதி, வாயு, வருணன், குபேரன், ஈசானன், என்னும் அஷ்டதிக்குப் பாலகர்களுந்தொழ மங்கைபாகன், நாகர், சித்தர், வித்தியாதரர், தேவர், சாரணர், இயக்கர், சூரியன், சந்திரன், கெ

ருடர், கெந்தருவர், கின்னரர், கிம்புருடர், தும்புரு, நாரதர்முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரமுனிவர்களுஞ் சூழ்ந்து நான்குவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண்புராணாதி இதிகாசங்களினால் பலவாறு புகழ்ந்து வாழ்த்த ஆரகிரீடகேயூரம் முப்புரிநூலுந் துலங்கபிரகாசம்பொருந்திதிரேகச்சாயைவிளங்க பங்கயவாசனத்தின்மீது சதுர்முகன் வீற்றிருந்து தேவர்கள் முதலானோருக்கும் விடைதந்து தனது தொழிலாகிய சிருஷ்டியில் முயன்றிருக்கும்போது ரேவகமகாராஜன் ரேவதியுடன் சென்று பிரமதேவன் திருவடியில் விழுந்துவணங்கித் துதிசெய்துபோற்றக்கண்ட பிரமன் அவ்வரசனை நோக்கி நீர் இங்குவந்த காரணம் யாதென்றுவினவ ரேவகன் பிரமனைநோக்கி எங்களைச் சிருஷ்டிசெய்தயெந்தையே எந்தனுக்குப் பிரிய புதல்வியாகிய இம்மங்கைக்கு தக்கநாயகனை மண்ணுலகிற் காணாமல் இவளுக்கு நாயகனாக எந்த ராஜனை சிருஷ்டிசெய்திருக்கிறீரோ அதைத்தெரிந்துக் கொள்ளும் பொருட்டு தங்களிடத்திற்கு அடியேன் வந்தேன் என்று சொல்லக்கேட்ட நான்முகன் சிரித்துச் சொல்லுகிறான்.

கேளும் ரேவக மகாராஜனே நீ பூலோகத்தைவிட்டு என்னிடம் வந்துசேர்ந்த இப்போது திரேதாயுகங் கடந்து துவாபரயுகம்பிறந்துவிட்டது இதைவிட்டு நீ பூலோகத்திற்குப் போவதற்குள் துவாபரயுக அந்தியமாகும் அங்கு தனக்கு நிகரில்லாத புஜபலபராக்கிரமத்தைப்பெற்ற பலராமருக்கு நின் கன்னியைக்கொடுத்துமணம் செய்வித்தும் சுகமுடனிரு மென்று சொல்லி விடைதரப் பெற்றுக் கொண்டு ரேவகமகாராஜன் தன்புதல்வியுடன் ரதமேறிப் பூலோகத்திற்குவந்து இரங்கி மூன்று லோகங்களிலும் இல்லாதபோகபாக்கியங்கள் நிறைந்த துவாரகாபுரத்தைபடைந்து ரோகணியின் சுதனாகிய பலராமனை நோக்கி சக்கிரவர்த்தியாகிய பலராமரே பிரமதேவன் என்னுடன் சொன்ன மொழி பிசகாமல் இம்மண்ணுலகத்தின்கண் நிகரில்லாத அழகுவாய்ந்த பொற்கொடியையொத்த என் புதல்வியை நினக்குத்தந்தேன் என்ற ரேவகமகாராஜன் மொழியினைக்கேட்ட பலராம சக்கிரவர்த்தி ஆகாயத்தை யளாவிய உயரமாய் நீண்டு நிற்கும் அம்மங்கையைப் பார்த்து தன்கையில் விளங்கும் ஹலாயுதத்தை ஆகாயத்தில்தூக்கி அவள் தோளில்மாட்டி வலிக்க அம்மங்கை உயரம் நீங்கி குள்ளமாயினள் இவ்விந்தையைக் கண்டு ஆச்சரியமடைந்துமலர்மாரிபொழிந்தனர் தேவர்கள் துந்து

மிமுழக்கி வசுதேவர் மகளை வாரித்தழுவி மகிழ்ந்தான் தேவகியும் ரோகணியும் யசோதையும் சந்தோஷித்தார்கள் அங்குவந்திருந்த பிராமணர்களும் முனிவர்கள் பலவாசிகள் கூறினர்கள் பணவம், முரசு, பேரிகை, காகளஞ், சின்னம் முதலான வாத்தியங்கள் முழங்க கின்னரிதாளஙகள் ஆர்ப்பவேலையொத்தக் கண்களையுடைய மாதர்கள் வீதிகள்தோறும் நவரத்தினங்களினல் ஏராளமாகிய கோலங்களெழுதி தங்கள் தங்கள் மாடங்களையலங்கரித்து அடங்கா மகிழ்கொண்டிருந்தார்கள். பூர்ண கும்பங்கள் நிறைத்து வாழைகமுகு முதலாகிய மலர்களினல் அலங்கரித்து தீபங்களேத்திப் பலமாதர்கள் சோபனம் பாடினர்கள் மாப்பிளையாகிய பலராமருக்கு மங்களஸ்னனஞ் செய்வித்து ஆடை யாபரணங்க ளிலங்க அமைத்து ரேவதிமங்கைக்குத் திருமஞ்சனஞ்செய்வித்து அணிபணிகளைப் பூட்டி மைதீட்டி இருவரையும் மணவரையின் மீதிருத்தி முனிவர்களும அந்தணர்களுங்கூடி ஓமம்வளர்த்தி ஆகுதிநிரைத்தார்கள் அப்போது ரேவதியின்கழுத்தில் சங்கை யொத்த திருமேனியையுடைய பலராமர் மங்கலநாண்சாற்றி மங்கைமார்கள் அனைவரும் மகிழ அம்மி மிதித்துத் திவலம்வந்து ஆகாயத்திற்ருேன்றும் அருந்ததியைத் தெரிசித்து அந்தணர்கள் ஆசிகூற தவமுனிவர்கள் பல்லாண்டிசைக்க மங்களவாழ்த்துபெற்றுப் பலராமர் தாய்தந்தையர்களை வணங்கினர் ரேவதியும் மாமன் மாமிகளைப் பணிந்தும் பலராமருடன் மணமிகுந்தமலர்களை யணிந்துக் கலவை யின்பமடைந்து பிரியமாகச் செல்வம் நிறைந்துச்சுகமுட னினிதுவாழ்ந்திருந்தாள் பலராமரும் தருமம்நீதி குன்ருமல் துவாரகையில் ரேவதி மங்கையுடன்கூடச் சுகயின்பங்களையடைந்து மிகுந்த களிப்புட னிருந்தார்கள்.

## பலராமாவதாரம்.

முற்றிற்று.

ஒன்பதாவது,

## கிருஷ்ணாவதாரம்.



ஸ்துதி.

வானுலகு மண்ணுலகு மறையுமோரேழ்
 வைப்புமரு னெறியும்வைதிகமு மோங்கத்
தானவர்தங் குலமழியப் பாரதப்போர்
 தமைநடத்த வாயர்பா லவதரித்த
வானவனைப் பார்த்தனுக் குபதேசித்த
 வள்ளலைமா தவனைமறை நாதன்றன்னைக்
கானுருந் துளவணியு மொப்பிலானைக்
 கன்னனைக்கூர் கிருட்டினனைக் கருதுவாமால்.

ஸ்ரீமகாலட்சுமியை மார்பினிற்றரித்த விஷ்ணு வானவர் அரவரசனை தேவகிவயற்றி லுதிக்கும்படி யனுப்பிப் பின்பு பாற்கடலை நோக்கி நீ ஆயர்பாடியிற்சென்று எண்ணிலாத பசுக்கூட்டங்களாக அவதரிக்கக் கடவாயென்று கிருபைகூர்ந்து அனுப்பி அண்டர்களை நோக்கி நீங்கள் அவனிக்குப்போய் முனிவர்கள் மரபினில் யாதவ குலத்திலவதரிப்பீரென்று அனுப்பின காலத்தில் பிரமதேவன் அஷ்டவசுக்களில் முதல்வனாகிய துரோணனென்பவனையும் அவன் மனைவியாகிய தரையென்பவளையும்பார்த்து மாதவன் தேவகிவசுதேவனுக்குப் புதல்வராய்ப் பூதலத்தினி லுதிக்கப் போகிறபடியால் நீங்களிருவரும் யாதவகுலத்தில் நந்தகோபன் யசோதையாக அவனியிற்சென்று அவதாரஞ் செய்யுங்க ளென்று சொல்லிய வேதன்

மொழிப்படி யவ்விருவர்களும் மிகுந்த சந்தோஷத்துடன் அவதரித்தார்கள் அந்த யாதவகுலத்தில் அண்டர்களும் அவர்கள் மாதர்களும் கோபாலரும் கோபிகளுமாய் வந்தவதரித்து பகவானிஷ்டப்படி பாற்கடலானது கணக்கில்லாத கோகுலங்களாக அவதரிக்க அவற்றைப் பாதுகாத்துக்கொண்டு ஜீவிப்பதனால் அண்டர்களுக்கு கோபாலர்களென்று நாமமுண்டாயிற்று ஸ்ரீகளெல்லாம் பசுக்களின் பாலைக்காச்சித் தயிர்வெண்ணெய் மோர்படுத்தி விற்பனை செய்வதால் அவர்களுக்கு கோபிகளென்ற திருநாமமுண்டாயிற்று இவர்கள் வசிக்கும் ஊருக்கு ஆயர்பாடியென்றுபேர்வழங்கியது.

இந்தப்படியாய் யாவரும்வந்து அவதரித்துப் பசுக்களும் விர்த்தியடைந்து செழித்துவர அந்த ஆயர்பாடிக்குச் சிற்றரசன் நந்தகோபன் தருமம் நீதிகுன்றாமல் ஆயர்பாடியைப் பாதுகாத்துக்கொண்டுகஞ்சனுக்குப் பகுதிசெலுத்தி வந்தான், இப்படிக்கிருக்கிறபோதுசாக்ஷாத்விஷ்ணுவானவர் தேவகியின்வயிற்றில் தங்கி பத்துமாதமும் பூர்ணமாகி யக்ஷகின்னர கிம்புருட கெருடகந்தருவசித்த வித்தியாதராதி முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் வேத சுருதிகளினால் கொண்டாட துஷ்டர்கள் உயிர்துறக்க இஷ்டர்கள் மேனு மேலும் செழிக்க மாசங்களில் அதிசிரேஷ்டமாகிய ஆவணிமாதத்தில்புதவாரத்தில் கிருஷ்ணபக்ஷத்தில் அஷ்டமியும் ரோகணி நக்ஷத்திரமுங் கூடிய நான்காம்பாதத்தில் அமிர்தயோகத்தில் கௌலவாகரணத்தில் ரிஷபலக்கினத்தில் நடுராத்திரியில் வசுதேவரும் தேவகியுங்கண்டு திருவடிகளுக்கு அர்ச்சனைபுரியவும் ஆகாயத்தில்நின்றும் தேவர்கள் பாரிஸாதமலர்களைவருஷிக்கவும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி அவதாரம்பண்ணினார்.

மேலும் பகவான் அவதாரஞ் செய்த காலத்தில் கிரகங்கள் ஒன்பதும் எந்தெந்தராசியில் நின்றிருந்ததென்றால் லக்கினத்தில் குருவும் சந்திரனும் கடகத்தில் ராகும் சனி துலாத்திலும் கேதுவும் அங்காரகனும் மகரத்திலும் ஆதித்தன் சிங்கத்திலும் சுக்கிரனும் புதனும் கன்னியிலும் தங்கிய சுபமாச சுபவார சுபதிதி சுப நக்ஷத்திர சுபயோக சுபகரண சுபக்கோள்கள் அமைந்த சுபவேளையில் நீலமேக நிறத்துடன் அவதாரஞ் செய்தார் எந்த வூரில் என்றால் அதாவது மிகவுஞ் சிரேஷ்டமாகிய ராஜதானியாகும் வடமதுராபுரத்தில் கணக்குக்கடங்காத மகிமைகளையுடைய திருமாதுமணாளன் சிறுபிள்ளை வடிவமாகியும் சகலவுலகங்களையும் தன்வயிற்

திற்குள்வைத்து ரட்சித்துக்கொண்டும் ராஜஸ தாமஸ சாத்வீகமெ ன்னும் முக்குணங்களுக்கும்மேற்பட்ட சுத்த சத்துவகுணநிதியாகி யபகவான் கிருஷ்ணமூர்த்தியாகி அவதாரஞ்செய்து தேவகிவசுதே வருக்கு சேவைதந்தார். அச்சேவையில் யீடுபட்ட தம்பதிகளிருவ ரும் ஆனந்தம் பிரம்மானந்தம் பரமானந்தத்தை யடைந்து விராட் சொரூபத்தைசேவிக்க அவர்களால்முடியாமல் கண்களைமூடிக்கொ ண்டு பலவிதங்களால் துதித்து முன்போலக் குழந்தைவடிவமாகியி ருக்கும்படிவேண்ட அவ்வாறே பகவானும் சிறுகுழந்தைவடிவமாகி பழயபடி சேவைதந்தார். குழந்தையுருவமாகிய பகவானை நோக்கி தேவகிமொழிகின்றாள். கனவான்களாகிய யோகீசுரர்களுக்கும் தவ முனிவர்களுக்கும் ஞானக்கண்களினால் தேவரீருடைய விராட்சுரு பத்தை சேவிக்கமுடியாதென்று பலநூல்களும் முறையிட்டுக்கொ ண்டிருக்க ஊனக்கண்களைப் பெற்ற யெங்களால் அபாரமான வடி வத்தை தெரிசிக்கக்கூடுமோ கர்த்தனே தாங்கள் அவதாரஞ் செய் யப்போகிற உண்மையை அசரீரியினால்கேட்டு கஞ்சன் எங்களை இச் சிறைச்சாலையி லடைத்ததுமன்றி விலங்குகளும் பூட்டினான் அன்னி யிலும் நினக்குமூத்தவர்களாகிய ஆறுபிள்ளைகளையுங் கொன்ற அந் ததுஷ்டனால் பயமடைந்திருக்கும்யெங்களை ரக்ஷிக்கவேண்டும் யானி ழைத்த நோன்பின்பலன் கிஞ்சித்தும் வீண்போகாமல் பலித்தது யென் றிவ்வண்ணம்சொல்லிக் கண்ணீருங் கையுமாக அழுதுபுலம் புகிறதேவகி அன்னையைத்தேற்றி பயத்தைமாத்தி வசுதேவரைநோ க்கி அண்ணாயென்னை விரைவினி லெடுத்துக் கொண்டுபோய் ஆயர் பாடியிலிருக்கும் யசோதையின் பக்கலில் கிடத்தி அவ்வசோதை யின் பக்கலிலிருக்கும் யோகமாயாசக்தியைக் கொண்டுவந்து யென் னன்னையின் பக்கலில்கிடத்துமென்றுசொல்லிய உலகநாதனைநோக் கி வசுதேவர் சொல்லுகின்றார். அண்டரண்ட சராசரங்களில்வசிக் கும் சகல ஆத்துமகோடிகளின் உள்ளும் புரம்புமாக யிருந்து வசிக் கும் ஐயனே தங்களுக்குத் தெரியாத தொன்றுண்டோ யான் எவ் வாறு நின்னை யெடுத்துக்கொண்டு ஆயர்பாடிக்குச் செல்லுவேன் என்ற வசுதேவரைநோக்கி ஜெகதீசன் அண்ணா தாங்கள் யேதுக் கும் யோசிக்கவேண்டாம் யாவத்துக்கும் நானிருக்கிறேன் உமதுக ரத்தினால் யென்னைத் தொடுவீரேயாகில் உடனே உமது கால்கள்க ரங்களில் பூட்டியிருக்கும் விலங்குகள் தன்கடையே கழண்டுவிடும் என்றுசொல்லக்கேட்டு வசுதேவர் விரைவிலெழுந்து குழந்தையைக் கையினால் தொட்ட தட்சணம் விலங்குகள் கழண்டு விழுந்தது

இதைக்கண்டு வசுதேவர் மிகவும் சந்துஷ்டியடைந்து அக்குழந்தையை இருகரங்களினுலு மெடுத்துக்கொடுக்கும்படியாகயேந்திக்கொண்டு சத்தப்படாமல் நடந்துபோகிறபோது அங்கு சீலிட்டிருக்கும் கதவுகளெல்லாம் குழந்தையின் ஸ்பரிசத்திஞல் தங்கடையே திறந்துக்கொண்டது மன்னியில் காவலிருந்த சூரர்கள் அனைவரும் கையில் உருவினவாளாயுதத்துடன் தங்களைமறந்திருந்தார்கள் அந்தசமயத்தில் வசுதேவர் குழந்தையை எடுத்துக்கொண்டு நடந்து யமுனையாற்றைக்கடந்து ஆயர்ப்பாடிக்குள்புகுந்து நந்தகோபருடைய வீட்டிற்குட்சென்று குழந்தையை யசோதையின் பக்கலில் கிடத்தி அவள்பெற்ற பெண்குழந்தையை யெடுத்துக்கொண்டு மதுரா நகரத்தைநோக்கிப் புரப்பட்டார்.

அப்போது இவ்விடத்தில் வினவொன்றுளது அவையாதெனில் இவ்வசுதேவர் தன்பிள்ளையைக் கொண்டுவந்து யசோதைபக்கலில்கிடத்தி யசோதையின் பிள்ளையையெடுத்துக்கொண்டுபோகிறபோது அவ்விடத்தில் காவற்காரர்கள் முதல்யாவரும் நித்திரைசெய்துக்கொண்டே யிருந்தார்களென்றுல் யசோதைபெற்றபிள்ளை மிகுமாயாசத்தி யாதலால் அவளுடைய மாயையானது காவலர்முதல் யாவரையும் கப்பிக்கொண்டது இந்தமாயையால் கட்டுப்பட்டவர்களாகிய அனைவரும் தங்களைமரந்து சொக்கி யிருந்தார்கள். யசோதையும் மாயையினுல் கட்டுபட்டு மெய்மரந்திருந்தாள் ஆதலா லித்தனைசுலபமாய் வசுதேவர் மாயையை யெடுத்துக்கொண்டு மதுராநகரத்திற்குச்சென்று காராக்கிரகத்துக்குள் புகுந்துபோகிறபோது கதவுகளெல்லாம் தங்கடையேமூடிக்சொண்டு பழயபடி சீலிட்டது போலத்தோன்றியது இதனைப் பார்த்துக் கொண்டே வசுதேவர் சென்று தேவகியின்பக்கலில் மாயையைக் கிடத்தின மாத்திரத்தில் முன்போல விலங்குகள் தங்கடையேவந்து கால்கரங்களில் விலங்கு மாட்டிக்கொண்டது.

உடனே மாயையாகிய குழந்தை காவுகாவென்று அழுதது அவ்வழுகுரலைக்கேட்டுக் காவலர்களோடி அந்தப்புரத்தில்நித்திரை செய்திருக்கும் கஞ்சனையெழுப்பி தங்கள் தங்கை தேவகி பிரசவித்தாள் பிள்ளை அழுகுரலைக்கேட்டு தங்களுக்குத்தெரிவிக்கும்பொருட்டு இந்தராத்திரியில் வந்தோமென்றுசொல்லிய காவலர்கள்மொழி

யைக்கேட்டு கஞ்சன்வீராவேசங்கொண்டு இடையில்தரித்திருக்கும் வஸ்திரம் அவிழ்ந்துபூமியில்விழவும் சிகைமுடியவிழ்ந்து அலையவும் ரௌத்திராகாரமாக அந்தப்புரத்தைவிட்டு விரைவாக ஓடிவந்து காராகிரகத்தின் கதவுகளுக்கு போட்டிருந்த சீல்கள் சரியாகயிருக்கக்கண்டு சீல்களை உடைத்து கதவுகளைத் திறந்துக்கொண்டு உள்ளேபிரவேசித்து தந்தையாகிய தேவகியைக்கூவி நீபெற்றகுழந்தையை யெடுத்துக்கொண்டுவாவென்று சொல்லக்கேட்டு தேவகி நடுநடுங்கிப் பிள்ளையையெடுத்துக்கொண்டு கண்களில் நீர் கால்வாயைப் போலபெருகியொழுக கஞ்சனைக்கண்டு அண்ணா இப்பிள்ளை யாணல்ல பெண்குழந்தை ஆண்பிள்ளைப்பிறந்தாலல்லோ உனக்குப் பகையாளி இதுபேதையாகையால் இப் பெண்குழந்தையினால் உனக்கெதுவுங் கெடுதிநேரிடமாட்டாது முன்னம் எனதுபிள்ளைகள் ஆறுபேர்களைப்பிடித்துப் பதைக்கக் கொன்றுவிட்டையே அதுவிஷயத்திலுனக்குண்டாகிய பிரதாபத்தையும் இம்மதுராநகர வாசிகளாகிய ஜனங்கள் தூஷிக்கும் கெட்டபேரையும் பிள்ளைகளைப் பரிகொடுத்து வயிரெறிந்திருக்கும் என்மனமுங் குளிரும்படி இப்பெண்பிள்ளையை தயைசெய்து எனக்குக்கொடுத்து உலகத்தில் நற்கீர்த்தியையடையும் என்றதேவகியின் துக்கவசனங்களைக் கேட்டும் கிஞ்சித்தும் தயாளமில்லாத கடினமனதையுடைய பாவியாகிய கஞ்சன் பெண்குழந்தையானாலும் ஆண்குழந்தையானாலும்பிடித்து அதைக் கொல்லாமல் விடுவேனோவென்று சொல்லிக்கொண்டே தேவகியைக் கிட்டிநெருங்கி அவள்கையிலிருந்த குழந்தையின் கால்களைப் பிடித்து யிழுத்து சமீபத்திலிருந்த பாராங்கல்லின்பேரில் அறைந்து கொன்றுவிட எண்ணங்கொண்டு விடடெரிந்தான். அக்குழந்தை மாயாசத்தியானதால் தன்னுடைய மாயையால் கல்லின்பேரில்விழுகாமல் நின்று ஆகாயமார்க்கத்தில்கிளம்பி ஆடையாபரண அலங்கிருதளாகி பதினாறுகரங்களும் அதுகளில் பலவித ரம்பை, ஊர்வசி, திலோர்த்தமை, மேனகைமுதலாகிய தேவஸ்ரீகள் ஆடல்பாடல் பலவிதங்களாகிய வாத்தியங்கள்முழங்க சகல ஆடம்பரத்துடன்யோகமாயாசத்தி தோன்றினாள். அவளைக்கண்டு கஞ்சன் திப்பிரமையடைந்து யாதொன்றும் மனதுக்குத்தோன்றாமல் தியங்கிமயங்கினின்றான் அவனைப்பார்த்து யோகமாயாசத்தி சொல்லுகிறாள்.

அடாகஞ்சனே வஞ்சநெஞ்சினைக் கொண்டு என்னைக் கொல்ல நினைந்து கல்லின்பேரில் விட்டெரிந்தாய் அத்தனைலேசாய் யென்

னைக்கொல்ல நின்னாலாகுமோ இவ்வெண்ணங் கொண்டு நின்னைக் கொல்லும்பொருட்டு யெங்கும் வியாபித்து உள்ளும்புறம்புமாய்வசிக்கும் ஜெகதீஸ்வரன் அவதாரஞ்செய்து ஓர்கிரகத்தில் வளர்ந்துக் கொண்டிருக்கிறார். இதையறியாமல் உலகத்திலுள்ள ஜனங்களைப் போல என்னைக் கேவலமாகநினைந்து பதம்பார்த்தாய் அன்னியிலும் நின் தங்கையின் பிள்ளைகளென்று கிஞ்சித்தும் யோசிக்காமல் ஆறு பேர்களையும் பிடித்துமடித்த மாபாவியாகிய நினது ஊழ்வினையின் பலன் உனதுபிராணனை வாங்கச் சேரும்சமயம் சமீபித்துவிட்டது ஆகையால் ஜாக்கிரதையாய் நினதுபிராணனைக் காப்பாத்திக்கொள் ளடாவென்றுசொல்லி மறைந்துபோயினாள்.

இந்தப்படியாக யோகமாயாசத்தியானவள் சொல்லக்கேட்ட கஞ்சன் பயந்து மெய்நடுங்கி அங்கே நாரதமாமுனிவர் சொல்லக் கேட்டு உத்தமர்களாகிய தேவகி வசுதேவர்களைப் பிடித்து விலங்கிட்டுக் காவலில்வைத்ததுமன்றி அவர்கள்பெற்ற அருமைப்பிள்ளைகள் ஆறுபேர்களையுங் கொன்ற மாபாவியாகினே னென்று சொல்லி அவர்கள் திருவடிகளில் விழுந்து தெண்டனிட்டு உங்கள்வாக்கினால் என்னையொன்றுஞ்சொல்லாமல் யான் செய்தபிழைகளை மன்னித்து ரக்ஷிக்கவேண்டு மென்று வேண்டிய பலவித நயவார்த்தைகளைப் பேசி அவர்கள் கால்களிற் பூட்டியிருந்த விலங்கை தறித்துக் காவலில்நின்றும் விடுவித்து உக்கிரசேன மகாராசனையும் சிரச்சாலையை விட்டு நீக்கித் தன்னுடைய அந்தப்புரஞ் சேர்ந்து படுத்துக் கொண்டு நித்திரைபிடிக்காமல் அன்றிரவெல்லாம் மிகவும் மனக்க வலை கொண்டிருந்தான்.

அங்கே ஆயர்பாடியில் யோகமாயாசத்தியை வசுதேவர் எடுத்துப்போனவுடனே மாயைவிலகி அனைவருக்கும் சோகம்நீங்கி சுய புத்தி யுண்டாச்சுது அப்போது யசோதை தன்பக்கலி லிருக்கும் ஆண்குழந்தையின் வடிவழகைக்கண்டு மிகுந்தகளிப்பினால் பூரித்திருந்தாள். அன்றிரவுபோக்கி மறுநாட்காலையில் ஆயர்பாடியெல்லாம் யசோதைக்குப் பிள்ளைபிறநத சேதிதெரிந்து புருஷர்களும் ஸ்திரீகளும் அடங்கா மகிழ்ச்சியடைந்து தங்கள்தங்கள் சத்தியானுசாரம் பால் தயிர் வெண்ணெய் நெய் இதுகளை பானைகளில்ரொப்பி காவடிகளில் கொண்டுவந்துகொடுத்து குழந்தையைப் பார்த்து ஆனந்தபரவசமடைந்து தங்களைமறந்து ஆடுவதும்பாடுவதும் பலவாத்தியங்கள் கோஷிப்பதுமாக ஆயர்பாடியிலுள்ள ஜனங்கள் யாவரும் அறி

வழிந்துஇருந்தார்கள். பின்புநந்தகோபர் தனக்குப்பிள்ளை பிறந்த ஆனந்தத்தினால் பதினாயிரம் கன்றுகளுடன் பசுக்களை உத்தமர்களாகியபிராமணர்களுக்கு தானஞ்செய்து ஜாதககர்மம்முடித்துப் பனிரெண்டாநாள் தங்கள் பந்துக்கள் முதலானோரையும்வரவழைத்து கர்க்காசாரியரால் கிருஷ்ணனென்று நாமகரணமிட்டு பூதானம், கோதானம், இரணியதானம், வஸ்திரதானம், கன்னிகாதானமென்னும்சோடசதானங்களும் அவாரியாகச்செய்து பந்துவர்க்கங்களுடன் அனைவருக்கும் அன்னமளித்து சந்தனபுஷ்ப தாம்பூலாதிகளைத்தந்து அனைவருக்கும்விடையீந்து அனுப்பிவிட்டுக் கிருஷ்ணனை நாளுக்குநாள் செல்வமாகவளர்த்து அதிகபரிவோடும் பாதுகாத்து வந்தார்கள்.

—*—

## பூதகி வதை.

—*—

இங்கே மதுராநகரத்தில் கஞ்சன் ஓர் மண்டபத்திலிருக்கும் ஆசனத்தின் மீது வீற்றிருந்து மந்திரிகளை வரவழைத்து யோகமாயாசத்தி சொல்லி மறைந்துபோயின விவரங்களனைத்தையும் விரித்துரைத்து என்னுயிர்பிழைக்கும் வகைக்கு வேண்டியஉபாயங்களை யோசித்துச் சொல்லுங்களென்று வினவிய கஞ்சனைநோக்கிதேனுகன், பெலம்பன், கேசிசாணூரன், முஷ்டிகன், சகடன்பகன் முதலாகிய துன்மந்திரிகள் அனைவரும் சொல்லுகின்றார்கள்.

கேளும்அரசே இதற்கோ தாங்கள்பயப்படுவது அந்தஹரி குழந்தைவடிவா யிருக்கிறானென்றல்லோ சொன்னீர் எங்களையனுப்பினால் நாங்கள்சென்று மூவுலகங்களிலுந்தேடிப் பார்த்துக்கொன்றுவருகிறோம் விடைதாருமெனக் கஞ்சன்கேட்டு நீங்களிப்போது போகவேண்டாம் இன்னுஞ்சிலநாள் பொருத்து அனுப்புகிறேன் அப்போது சென்று அவனைக்கண்டு பிடித்துக்கொன்று வாருங்கள் முதலில்பூதகியை அனுப்புகிறேனென்றுசொல்லிப் பூதகியையழைத்து நீசென்று ஒருவருடத்திற்குள்ளாக அவனியிலிருக்கும் மனைகள்தோறும்புகுந்து அங்கங்குள்ள சிசுக்களையெல்லாம் மடித்துவரக்கடவாயென்று கட்டளையிடபூதகியுங்கஞ்சன் சொல்லியவண்ணம் நூதனமாகிய அப்சரஸ்திரீயோவென்று ஒவ்வொருவரும் கண்டுமயங்கி தியங்கும்படி மேலாகியவடிவழகுபொருந்தி இரண்டுஸ்தனங்களிலும் ஏராளமாகநஞ்சைப் பொருந்திக்கொண்டு வெகுதேசங்

களிற்சென்று ஒவ்வொரு மனையிலுமுள்ளபிள்ளைகளுக்கும் தன்ஸ்தனத்தின்பாலை யுண்பிப்பவள்போல விஷத்தினல் கணக்கடங்காச் சிசுக்களை மடித்துக்கொண்டு ஆயர்பாடிக்குவந்து நந்தகோபன்மனையிற்புகுந்து யசோதையை யணிகி இத்தனையழகு வாய்ந்த பிள்ளையைப்பெற்ற உனக்கு நிகரானமங்கைகளுலகத்திலுளரே. யென்று பலவிதங்களாகப்புகழ்ந்து அவளருகிலிருக்கும் பிள்ளையை யெடுத்து தன்கைகளால்தழுவி உச்சிமோந்து முகத்தோடுமுகம் வைத்து முத்தமிட்டு எடுத்துக்கொண்டு ஓர் மனைக்குள்புகுந்து தன்மடியின் மீது சிறுவனைக்கிடத்தி வஞ்சகிவதைசெய்யக்கருதி விஷ முலைப்பாலையீந்தனள் மாதவன் அவள்முகத்தைநோக்கி இருகைகளாலும்குவிமுலையைப் பிடித்து வாயில்வைத்துப் பாலையுண்பவன்போல உயிரையும் வுண்டார் அம்மாத்திரத்தில் பூதகிதன் சுயரூபமாகிய ராக்ஷதவடிவுடன் ஆறுயோசனை நிகளத்திற்கு விழுந்தாள் அவள் விழுந்தயிடத்திலிருந்த மனைகள் செடிகொடிகள் அனைத்தும் பொடிப்பொடியாய்ப்போக இவ்வோசையினல் ஆயர்களும் ரோகணியும் ஆகாயிதுவென்ன விந்தையென்று அலரினர்கள் யசோதையோ அக்கினியில்விழுந்தபங்கயத்தைப்போல உளம்வெதும்பி அனலிடுமெழுகுபோல உடலுஞ்சிதையுமுருகிவாடைக்காற்றினல் சல்லிவேறற்றுவிழும் மரம்போலப் பூமியில் வீழ்ந்தாள் அப்போது யசோதையைச்சூழ்ந்திருந்த ஆயர்மாதர்கள் பூதகியின்மார்பில் துலங்கிய சிறுவனையெடுத்துமிகுந்த அன்புடன் யசோதையின்கையில் கொடுக்கப் பிள்ளையைக்கையில்வாங்கி அணைத்து உச்சிமோந்து அழுதுபுலம்பினள். அதைக்கண்டு கண்ணனும் அழுதுதேம்பிய காலத்தில் ரோகணியும் மற்றுமுள்ள மங்கையர்களெல்லாஞ்சமீபித்து பாலக்கிரகதோஷம் பற்றியபடியால் குழந்தைதேம்பித் தேம்பி அழுகிறனென்று கருதி பசுவின்பாலைக்கொண்டு அயினிகழித்து மறையவர்க்கீய்ந்து ஆவின்கோமயஞ்சேர்த்துக் கண்ணனுக்கு திருமஞ்சனமாட்டி பனிரண்டு நாமமுஞ்சாத்தி வேதியர்கள் வேதமந்திர நீர்தெளித்துகோதானம் பெற்றுச்செல்ல சிலமாதர்கள்பலதரம் கற்பூரம் சுத்திப்போட்டு ஆயிரநாமங்களுடைய பகவான் காப்பாத்தவேணுமென்று காப்பிட்டார்கள்.

அப்போது கஞ்சனுக்கு வருடத்திய பகுதிபணங்கட்ட மதுராநகரத்திற்குப்போயிருந்த நந்தகோபாலன் பணத்தைச்செலுத்திவிட்டு அதிவேகமாகவந்து ஆயர்பாடியிற்சேர்ந்து நடந்தவிபரீ

தங்களை அங்குள்ளவர்களாலறிந்து பர்வதாகாரமாய் விழுந்துகிட க்கும் பூதத்தைக்கண்டு மயங்கித்தியங்கி பயந்து யேங்கி மகனையெ டுத்தணைத்து முத்தமிட்டு உச்சிமோந்து யாதவகுலத்தரசனுகிய வசுதேவர் யிங்கு நடக்கப்போகிற விபரீதத்தை எவ்வாரோ தெரிந் துசொன்னர் இதுமெத்த ஆச்சரியம் ஆச்சரியமென்று சொல்லி என்மகனைக்காத்துப்பேயினுயிரையுண்ட எம்பெருமானுக்கு நமஸ் கரிக்கிறேன் என்றுகைகூப்பித்தெண்டமிட்டு பெருமகிழ்ச்சியுடன் தெரித்து ஓராதனங்கள் முதலாகியதுஞ்செய்து பிராமணாகளுக்கு அனேககோதானங்கொடுத்து மேருபருவத சிகரத்தையொத்து ம டிந்தவளுடைய உடலைக் கண்டகோடாலியினல் துண்டுதுண்டாக த்தரித்து சுடலையிற்சேர்த்து தீகொண்டுகொளுத்தச் சுடுநாற்றமின் றி பரிமணம்வீச அவள் பரகதியடைந்தாள் விஷப்பாலைக்கொடுத் து உயிரைவாங்கக் கருதியவஞ்சிக்கு நல்வீடு அளித்தபகவான் இ ரவும்பகலும் முலைப்பாலைக்கொடுத்து அன்பாகவளர்த்துப் பெற்ற தாய்க்குப் பரமபதம் கொடுப்பதற்குத் தடையேயில்லை என்பதற் கையமில்லை அதின்பின்பு நந்தகோபாலன் வெகுபதமாய்க் கண்ண ணைப்பாதுகார்க்கும்படி சட்டதிட்டஞ்செய்ய யசோதையும் மகனை க்கைவிடாது வெகு ஜாக்கிரதையாய் வளர்த்துவந்தாள்.

## சகடாசுரன்வதை.

அவ்வருட அந்தியத்தில் நந்தகோபாலன் ஊராரனைவருக்கும் தெரிவித்து வரவழைத்து பத்தரைமாத்துத் தங்கத்தில் நவரத்தி னங்கள் பதித்த தொட்டிலை பலவிதமலர்களினு லலங்கரித்து வா சனை திரவியங்களைத்தெளித்த அத்தொட்டிலில் தன்பிள்ளையாகிய கண்ணனைபோட்டு அனேகமேளவாத்தியங்கள் முழங்க வெகு ஆ டம்பரத்துடன் பலஸ்ரீகளினுல் இனிமையாகியபாட்டுகளுடன் தா லாட்டிக் கொண்டிருக்கும்வேளையில் அங்கே மதுராநகரத்தில் பூ தகிமடிந்த சமாச்சாரங்கேட்ட கஞ்சன் சகடாசுரனையழைத்து நந் தகோபன் மனைக்குச்சென்று அங்குமிகவும் வடிவழகமர்ந்த பிள்ளை யைக்கொன்றுவாவென் றிசைத்தனுப்ப அவ்வசுரன் அவ்வாறேசெ ன்று அக்குழந்தையைப்போட்டிருக்கும் தொட்டிலினிடம் மறைந் துச்சமயம்பார்த்துக்கொண்டிருந்தான் அந்தததியில் நந்தகோபன் யசோதை ரோகணியிவர்கள் அடங்கா மகிட்சியடையும் படியாகப்

பல இசைகளாகிய பாட்டுகளைப்பாடிமங்களவாழ்த்துகளானவுடன் கண்ணனுக்கு திருஷ்டிகழித்துபற்பலதானங்களை பூசுரருக்கும் மாதர்களுக்குமீந்து அனுப்பி தம்மவர்களுடன் பரிவாக அன்னபானுதி அறுசுவையுண்டு களித்துச் சந்தனபுஷ்ப தாம்பூலாதிபரிமள திரவியங்களை உதவி விடைதரப்பெற்று வந்திருந்த யாவரும் தங்கடங்கள்யில்லஞ்சேர்ந்தார்கள் பின்பு நந்தகோபன் முதலானேரும் புசித்து ஆயாசந்தீர்த்துக்கொண்டிருக்கும்வகையையுணர்ந்து சகடாசுரன் நல்லசமயம் வாய்த்ததென்றும் அதிகமகிழ்வுடன் கமலக்கண்ணனை வதைசெய்யக்கருதி சமீபமாகச்சென்றான் அப்படித்தனது சமீபமாக வந்த அசுரனது திடத்தையறிந்துக் கண்ணன்தன்னுடைய மெல்லிய செந்தாமரையையொற்ற திருவடிகளினல் அவனை உதைமேலுதையும் யிடைவிடாமலுதைக்க அவ்வுதையினலரக்கன் எலும்புகள்முறிந்து நரம்புகளறுந்து மெய்யொடிந்து பூமியில் விழுந்துமடிந்தான் அவனதுமார்பின்மேலிருந்து கண்ணன் மிகவும் விம்மிவிம்மிச்சிறியழ அவ்வழுகுரலோசையைக்கேட்டு யசோதைரோகணி முதலிய பலவனிதைகளும்மனமெலிந்து திடுதிடென்றேடிவந்து கண்ணனைப்பார்த்து விசனமுற்றிருக்கிறபோது ஆயர்கள்பலருடன்நந்தகோபனும் அங்குவந்து பர்வதாகாரமாயுருண்டுகிடக்கும் அசுரன்மார்பின் மேற்றுலங்கி வீறுவீறென்றழுகிறகுழந்தையைப்பற்றியெடுத்து யசோதையின் கையில் கொடுக்க அவள் வாங்கிப்பிள்ளையைப்பார்த்து யேங்கியணைத்து பலவிதபாட்டுகளும் பலவிதபராக்குகளைக் காட்டியும் விடாது தேம்பித்தேம்பி யழுகிறதைக்கண்டு யசோதை அடியம்மா நானென் செய்வேண்டி குழந்தையழுதழுதுக் குரலுங்கட்டிக்கொண்டதே வியர்வைஜலம் வழிகின்றதே கையிலுங் காலிலும் நிற்கவில்லையே அடாமகனே யென்று கூவிமெய்சோர்ந்தாள் அதைக்கண்டு சிலமாதர்கள் யசோதையைக்கிட்டி பலவித உபசாரஞ்செய்யச் சோர்வுநீங்கியெழுந்துபிள்ளைக்குப் பால்கொடுக்கச் சிறுவன் உண்ணுவதைக்கண்டு மனேதுக்கம் நீங்கி மகிழ்ந்திருக்க நந்தகோபாலன்கண்டு சந்தோஷத்தினல் சிறுவனையெடுத்து மெய்யைத்தடவி உச்சிமோந்துக் கொஞ்சிவிளையாடிச் சற்றுநேரம்வைத்திருந்து மறுபடியும் யசோதையின் கையில்கொடுத்து வேதமந்திரங்களினல் வேதியர்களால் ஹோமம்வளர்த்தி மஞ்சள்நீர்சுழற்றி எறிந்து பூதம்பசாசுகள் சேராவண்ணம் அஷ்டவக்கிரத்தை யோதிக் குளிசமெழுதிக் கட்டினபின்பு யசோதைகுழந்தையையெடுத்தணைத்தாள் உடனே நந்தகோபன் அரக்கப்

பிணத்தையெடுத் தப்புறத்தெறிந்து குழந்தையை வெகுபரிவுடன் பாதுகாத்து வந்தார்கள்.

—※—

## துருணாவர்த்தன் வதை.

—:※:—

இப்படிச் சிலநாள்சென்றபின்பு யசோதை கண்ணனுக்கு ஒரு நாள் நீராட்டி மடியின்மேரில் வைத்துக்கொண்டு நவரத்தினபரண ங்களைப் பூட்டிக்கொண்டிருக்கச் சிறுவன் சுமக்கக்கூடாத பாரமா கியதை யுணர்ந்து திட்டெனப் பூமியின்மேல்விட்டு இவனென்ன சாட்சாத்பரந்தாமனோ, ஆயிரநாமனோ, ஜெகன்னாதனோ, வேதனைப் பெற்ற மாதவனோயென்று தனக்குத்தானே யோசித்துக்கொண்டி ருக்கிறபோது கஞ்சனுடைய ஏவலால் துருணாவர்த்தனென்னும் கொடிய அரக்கன் ஆயர்பாடியையணுகி உக்கிரமாகிய கோபத்து டன் சுழல்காற்றின் வடிவெடுத்து பூமியெங்கும்நடுங்க பர்வதங்கள் அதிர பறவைக்கூட்டங்க ளனைத்தும்மடிய மேகங்களெல்லாம் பரந் தோட மரங்களெல்லாம் வேருடன் பஞ்சுபோலக்கிளம்பி ஆகாயத் திற் பறந்துபோய் ஒன்றின்மேலொன்றுவிழுந்து அடிபட்டு ஒடிந்து தூளாகிக் கருந்தூள் செந்தூள்கிளம்பி ஆகாயத்தை மறைக்க வா னுலகத்தோர்கள் இதுவென்ன யுகாந்தகாலமுடிவோ சண்டமாரு தமோ யாதொன்றுந் தெரியவில்லையே யென்று அஞ்சி நடுக்கமுற்றி ருந்தார்கள். இங்கே ஆயர்பாடியிலிருந்த கோபிகைகள் ஆயர்கள் புதல்வர்கள் பசுக்கள் கன்றுகள்முதல் யாவற்றும் புழுதிமழையெ னக்கருதி திசைகளெல்லா மாயைக்கண்டு அழுதுவாடி மெய்குலைய ஆயரோடு அவர்கள்மாதர்கள் ஓடினார்கள். இதைக்கண்ட கொடிய னாகிய அரக்கன் இது நல்லதருணமெனக்கருதி சிறுகுழந்தை வடி வாயிருக்கும் ஜெகதீசனைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பி தன்னைமடிக்க எத்தனிப்பதை யறிந்து குழந்தைவடிவா யிருக்கும் பகவான் அரக்கனுக்குச் சுமக்கப்படாத பாரமாகவிளங்கினார் அர க்கன் சுமக்கமாட்டாமல் பூமியில் விழும்படி விட்டுவிடவே பகவான் விடாமல் தன்கைகளிரண்டையும் அவன்கழுத்தில்மாட்டிக்கொண்டு நெரிக்கித்தொங்கினார் இதனால் அவ்வரக்கன் முழிகள்பிதுங்கி நாக் குவெளிப்பட பற்கடித்துக் கொண்டு பூமியில்விழுந்து உயிரைவிட அவன்மார்மீது விளங்கினார்.

அந்தவேளையில் யசோதையானவள் சுழல்காற்றிலகப்பட்டு விறுவிறென்று எழும்பும்மணலினுல் கண்ணைத்திறக்காமல் மூடிக்கொண்டிருந்து காற்றுநின்றவுடன் கண்களைத் திறந்துபார்த்து குழந்தையைக்காணுமல் தேடிவாடிமெய்சோரி முகத்தி லறைந்துக்கொண்டு கன்றையிழந்த பசுவைப்போல பூமிமேல்விழுந்துபுரண்டு அழுதுபுலம்புகிறபோது அருகிலிருந்த ரோகணிமுதலான மடந்தையர்கள் தேற்றத்தேறியெழுந்து முன்னம்பூதகியின் விஷமுலையுண்டு பிழைத்தாய் இரண்டாவது சகடாசூரனுல் மெலிந்துநொந்து திரேகமெலிந்து தேறிவருகிறகாலத்தில் பாழாகிய சுழல்காற்றினு லகப்பட்டு எங்குபோனுய் அடாமகனே அழகானமகனே உன்னைக்கண்ணுறற்பாராமல் இனியென்னுயிரை உலகில்வாழவைப்பேனேயென்று புலம்புகிறவேளையில் நந்தகோபனும் ஆயர்களும் அவர்கள் மாதர்களும்வந்து அடித்துமோதி விழுந்தழுது எழுந்து இப்படிப்பட்ட மாயஞ்செய்து சிறுவனையெடுத்துக்கொண்டுபோன வல்லமைப்புருஷன்யாவனென்று எங்கியெங்குமோடி வாடித்தேடித் திரிந்துக்கொண்டு வருகிறபோது அங்கோரிடத்தில்மடிந்துகிடக்கின்ற அசுரன்மார்பின்மீது இருக்கும் மைந்தனைக்கண்டு சிலர் ஊருக்குட் சென்று சொல்லக்கேட்டு யசோதை ரோகணி நந்தகோபன்முதல் ஆயர்களும் மாதர்களும் பெருந்திரளாகக் கூடியோடிச் சிறுவனைக்கண்டு யாவருந் துயரமுற்றுச் சிறுநகையுடன் பல்லாபரணங்க ளிலங்க நீலமணியைப்போலப் பிரகாசிக்குந் திருமேனியையுடைய புதல்வனை ஆயர்களெடுத்துவந்து யசோதையின் கையில்கொடுக்க அம்மாது புதல்வனைக்கண்டு அழுது அணைத்து உச்சிமோந்து களித்து அன்புடன் முலைப்பாலூட்ட உண்டபுதல்வனை சொல்லுதற்கரிதாகிய மகிழ்ச்சியோடு ரோகணியெடுத்து மார்புடனணைத்து நந்தகோபனிடங்கொடுக்க அவரும் மைந்தனை யெடுத்துத் தழுவி முத்தமிட்டு யாவரும் அகம்சேர்ந்து உத்தமபிராமணர்களை அழைப்பித்து புதல்வனுக்கு ஒந்ததோஷமும் அணுகாவண்ணம் செய்யவேண்டிய சிகிச்சையாதோ அதைச் செய்யுங்களென்று பிரார்த்திக்க அம்மறையவர்கள் வேதமந்திரங்களை யுச்சரித்து தோஷங்கள் சேராவண்ணம் மங்களவாசிகூறி ஐயா நந்தகோபரே நீர்செய்யும் அரிதிருவாராதனையின்பலத்தால் நினதுபுதல்வனுக்கு யாதொருவிபத்தும்நேரிடாமல் உயிர்பெற்றிருக்கிறுனென்றுசொல்லி நடந்தார்கள் பின்புயசோதை தன்புதல்வனுக்கு நீராட்டிச் சிராட்டி மைதீட்டி பல பணிகளைப் பூட்டி மலர்சூட்டிவடிவழகைக்கண்டுகளித்து கொஞ்சிக்கொண்டிருந்தாள்.

அப்போது கிருஷ்ணன் கோட்டாவிவிட அவ்வாயி னிடத்தில் சத்தசமுத்திரங்களும் அஷ்டகுலபர்வதங்களும் அஷ்டதிக்குப்பால கர்களும்,யானைகளும், சூரியசந்திரநவக்கோள்களும் முப்பத்துமுக் கோடிதேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம்ரிஷிகளும் பல ஜீவராசிக ளும் நிறைந்திருக்கின்ற அண்டபிண்ட பிரமாண்டங்கள் யாவற்றை யுங்கண்டு யசோதைநடுங்கி நிர்மலனைய் நித்தியனைய் ஆதிமத்தியாந் தரகிதனைய் ஆதிமூர்த்தியாய்விளங்கும் சாட்சாத் விஷ்ணுவேவந்து நமதுவயிற்றிற்பிறந்தானென்று நெஞ்சமுருகி ஆனந்தமடைய உட னே பகவான் இவள்நம்மை இன்னவனென்றுத் திடஞ்செய்து விட் டால்மோசமெனக்கருதி தன்மாயையையேவி மகனென்று கருதும் படிச்செய்தார் மாயையினல் யசோதைகட்டுப்பட்டு பேதைமதியா ல்மோகமதிகரித்து புத்திரவாஞ்சைமேலிட்டுத் தன்மகனென்றேபா ராட்டி அதிககளிப்புடன் போஷித்து வந்தாள்.

—*—

## குக்குடாசுரன்வதை.

இவ்வண்ணமாகக் கண்ணன் நாளுக்குநாள்வளர்ந்து தவழும்ப ருவமடைந்து இங்குமங்குமாக ஊர்ந்துவருகிறபோது ஓர்நாள் கஞ் சனல் ஏவப்பட்ட அசுரனைவன் குக்குடவடிவமெடுத்துத் தன்மு ன்னம்வந்து நின்று கொல்லுதற்குச் சமயம்பார்த்துக்கொண் டிருக் கும் குக்குடாசுரனைப்பார்த்து சக்கரத்தையேந்தும் வலதுகையின ல் அவன்சிரத்தின்பேரில் ஓங்கியறையவே அவ்வறையின்பாதை சகி க்கமாட்டாமல் பதரிப்பதரிக்கூவி அவ்வசுரன் பூமியின்மேல் விழுந் துமாண்டான். அவ்வசுரன் மெய்பதரிக்கூவிய ஓசையைக்கேட்டுநந் தகோபன் யசோதைமுதலானவர்களும் மெய்குலைந்து நடுங்கி வேக மாயோடிக் குழந்தையை யெடுத்துத்தழுவி உச்சிமோந்து ஆதரித் து எமனைப்போன்ற அவுணனுக்கைத் துண்டுசெய்து நறுக்கிக்கொ ண்டுபோய் ககனத்தில்விட்டெரிந்து உத்தமபிராமணரைக்கொண்டு வேதமந்திரங்களால் ஓமம்வளர்த்தி பலவித தீபதிருஷ்டிகள் சுற்றி யெறிந்து மங்கள ஆசிகள்கூறினபின்பு யசோதைகண்ணனுக்கு சுத் தநீராட்டி நெற்றிக்குச் சுட்டிமுதல் பல ஆபரணங்களைச்சூட்டி இ னியில்லாத மகிழ்ச்சியுடன் பாலுண்ணக்கொடுத்து ஆனந்தமடை ந்திருந்தாள்.

## வெண்ணெயுண்ணல்.

பிறகு கண்ணன் தத்தித்தத்தி நடக்கும்பருவமுண்டாகி நடந்துக்கொண்டு வீட்டிலிருந்த வண்ணமே ஆயர்கள் வீடுகள்தோறுஞ் சென்று பால்தயிர் வெண்ணெய்களையுண்டு வெரும்பாண்டங்களாக்கிவிடுவான் இந்தப்படியாக ஆயர்கள் சிறுவர்களைக் கூட்டிக்கொண்டு தினமுஞ்சென்று எட்டாமல் உரிமேல்வைத்திருக்கும் வெண்ணெய்ச்சட்டிகளைக் கொம்பினாற்குத்தி வெண்ணெய்களைக் கையில்தாங்கிச் சிறுவர்களுக்கும் குரங்கிற்குங்கொடுத்துத் தானும்புசித்து வெரும்பாண்டங்களாகச் செய்துவருவதைக்கண்டு ஆயர்மாதர்கள்யெல்லாங்கூடி எவ்விதத்திலாகிலுங் கண்ணனைப் பிடித்துக்கொண்டுபோய் யசோதைக்கு ருசுப்படுத்தி அவனை தண்டனைசெய்விக்கவேண்டுமென்றுக் கூட்டத்தில்பேசி முடிவுசெய்துக்கொண்டு ஆயமாதர்களனைவர்களும் தங்கள்தங்கள் வீடுகளைமூடிக் குச்சிட்டு மனைக்கு வெளியில் நாற்புரமும் கண்ணனைக்கைப்பிடியாகப் பிடிக்கும்பொருட்டு காத்திருந்தார்கள் கண்ணன் எப்படியோ உள்ளேபுகுந்து பால்தயிர் வெண்ணெய்களைப் புரைகுத்துவதற்கு ஒருதுளியேனும் வைக்காமல் புசித்துவிட்டு ஒருவீட்டிற் பாடுவான் ஆடுவான் ஒருவீட்டில் கக்கடக்கக்கடச்சிறிப்பான் ஒருவீட்டில் திட்டுவான் ஒருவீட்டில் நங்குகாட்டுவான் ஒருவீட்டில் கிளிமொழிவதுபோலப் பேசுவான் இன்னொருவீட்டில் குயிலைப்போல மொழிவான் இன்னொருவீட்டில் மயிலைப்போலக்கத்துவான் மற்றொருவீட்டில் பிராமணத்தியைப்போலும்மொழிவான் இந்தப்படியாகக் கண்ணன் பலவிதபறவைகளைப்போல ஓசையிட்டுப் பின்பு எப்படியோ மாயமாய் அவர்கள்கண்களுக்கு அகப்படாமல் போயிருந்தான் உடனே ஆயமாதர்கள் கதவுகளைத்திறந்து உள்ளேபோய்பார்த்து ஒருவள் வெண்ணெயைக் காணோமென்று வேறொருவள் பாண்டத்தில் நிரப்பிவைத்த பாலில் ஒருதுளிதயிர்கூட யில்லையேயென்றும் இந்தப்படியாக ஆயமாதர்களெல்லாம் கூக்குரலிட்டு சந்து சந்துகளில் மந்தை மந்தையாகக்கூடிப் பேசிக்கொண்டுவந்து யசோதையைக்கண்டு நின்மகன்செய்யும் அக்கிரமங்களை நாங்க ளென்னவென்று சொல்லுவோம் இந்த அனியாயம் எங்காகிலும் உண்டா எங்களைப்பிழைக்க ஒப்பவில்லையே எட்டாமல் உரியின்மேல் வைத்திருக்கும் வெண்ணெய்ப் பால்தயிர்நெய் இதுகளை எல்லாம்புசித்து வெரும்பாண்டங்களாகச்

செய்வதுமன்றிக் கன்றுகளையெல்லாம் அவிழ்த்துவிட்டுப்பாலூட்டிவிடுகிறதென்று எங்கள் புருஷர்களை எழுப்பச்சொல்லி அங்கவர்களையனுப்பி எங்களைக் கட்டியணைத்து முத்தமிடுகிறான் இந்தப்படி இவன்செய்யும்துன்மார்க்கங்கள் மெத்தவுண்டு அதுகள் முழுமையுஞ் சொல்லவேண்டுமென்றால் கணக்கு மிதமில்லை ஆகையால் நாங்கள் எவ்வாறு ஜீவனஞ்செய்வது நின்மகனுக்குத்தக்கநீதிகளைச் சொல்லி தண்டனைசெய்யுமென்று ஆயமாதர்கள் சொல்லக்கேட்டு யசோதைசிரித்து கோபிகா ஸ்ரீகளைபார்த்துச் சொல்லுகின்றாள்.

கேளுங்கள் ஆயர்மாதர்களே யென்மகனுக்கு அக்கம்பக்கத்திலிருக்கும் வீடுகளுக்குப்போக வழிதெரியமாட்டாது எப்போதும் இடைவிடாமல் ஸ்தன்னியத்தைவிட்டு எங்கும் போகவுமாட்டான் இவனையென்வேலையி னிமித்தியம் கிழேவிட்டால் சேர்த்துக்கட்டிக்கொண்டு எப்பொழுதும் என்னைவிட்டகன்றுபோகான் இதுவுமின்றி இன்னம் கண்களைத்திறந்து நன்றாய்ப்பார்க்க வறியாச்சிறுவன்மீது இத்தனைபேர்களும் கோள்சொல்ல வந்தீர்களே இதுமெத்தநன்றாயிருக்கிறது அநேகநாளாய் மதலைப்பேறில்லாமல் இப்போதுதான் பகவான் கிருபையினால் ஒருபிள்ளையைப்பெற்று என் ஆவல்தீரப் போஷித்துவருகிறேன் இந்த ஒருபிள்ளை எனக்கிருப்பது உங்களுக்கு மனந்தாளவில்லையோ ஒவ்வொருநாட்டிலுமுள்ள குடிகள் அரசனுக்கு க்ஷேமத்தைக்கருதி எங்களரசனுக்கு ஒரு புதல்வனையளிக்கவேணும் பகவானே என்று தியானஞ்செய்வார்கள் இந்த நாட்டிலிருக்கும் குடிகளாகிய நீங்கள் அரசனுக்கிருக்கும் ஒருபிள்ளையைக்கண்டு பொறாமைபடுகிற நீங்கள் இந்நாட்டின் அநியாயத்தைப்போல எந்நாட்டிலும் நடவாதுஎன்று நிஷ்டூரவார்த்தைகள் பகர்ந்து மேலுஞ்சொல்லுகிறாள் அடிமாதர்களே என்மகன் உங்கள் வீட்டிற்குவந்து பால் தயிர் வெண்ணெய் நெய் இதுகளைத்திருடித்தின்றானென்றல்லவோ சொன்னீர்கள் மருபடியும் அவன் அங்குவந்து திருட்டுவேலை செய்ததாகக்கண்ட ஒவ்வொருவரும் அவனைகாலுங்கையுமாகப் பிடித்து என்முன்கொண்டுவந்து விடுங்கள் நான் தக்கபடியுங்கள் முன்னிலையிலே தண்டிக்கிறேன்என்று சொல்லக்கேட்ட ஆயர்மாதர்களனைவர்களும் பதில்மொழி சொல்லாமல் தங்கள் தங்கள் அகம்புகுந்து கிருஷ்ணன் வரவுக்கெதிர்பார்த்திருக்கிறபோது வழக்கப்படி ஒருநாள் கோபால சிறுவர்களுடன் கிரு

ஷ்ணன் ஆயர்பாடிக்குவந்து வெண்ணெய்த் தயிர்பால்நெய் இதுக ளைக் களவுசெய்து புசித்துக்கொண்டிருக்கிறபோது சிலமாதர்கள் கூடிக் கிருஷ்ணனைப்பிடித்து ஒரு அரைவீட்டிற்குள்போட்டு கத வைபூட்டிவைத்து மாதர்கள் அனைவருங்கூடி யசோதையிடஞ்சொ ல்வதற்க்காகவந்து யசோதைமடியில் பாலுண்டுக்கொண்டிருக்கும் கிருஷ்ணனைக்கண்டு ஆச்சரியப்பட்டு நாணமடைந்து இதுவென்ன மாயமோவென்று நினைந்துஉண்மையை யசோதையினிடத்திற்சொ ல்லிவிட்டுப் போயினார்கள் பின்புயசோதை தன்மைந்தனை வெகுபி ரியமாகக் காப்பாற்றிவருகிறபோது.

## ததிபாண்ட விகலனம்.

ஒருநாள்யசோதை தன்குழலிலைய மலர்கள்வீழ காதில்தரித்த தோடுகளிரண்டும் அசைந்தாட ஸ்தனங்களிரண்டும் கச்சையைவி ட்டும் நழுவி ஊசலாட கழுத்தில் விளங்கும் நவரத்தினமணிமாலைக ள்பிரகாசிக்க முகத்தினில் வேர்வையானது முத்துகளைப்போல் வி ளங்க இருகாங்களினுங் தரித்தவளையல் கலகலென்று ஒலிக்க சிரம த்தினல் பெருஞ்சுவாசம்வீச மத்தினல் தாழியில் இருக்கும்தயிர்க டைந்துக் கொண்டிருக்கும்போது மிகுந்தபசி கொண்டவனைப்போ ல கிருஷணன் அம்மா பாச்சிகொடென்று மத்தைப்பிடித்துக்கொ ண்டு அழுதுமத்தைவிடுத்து இருகையாலும் துயிலைப்பற்றியிழுக்க பசுவானது கன்றுக்கிரங்கி பால்கொடுப்பதைபோல யசோதை கிரு ஷ்ணனை யெடுத்து அணைத்து மனமுருகி உச்சிமோர்ந்து முலைப் பால் கொடுத்துக்கொண் டிருக்கும்போது தீ அதிகமாகையால் அ டுப்பில்பொங்கி விழுவதைக்கண்டு சிறுவனை நிலத்தில்விட்டுப் பா லையிரக்கிவைக்கும்பொருட்டு யசோதைப் போயினள் இதைக்கண் ட கிருஷ்ணன் மிகுந்தகோபத்தோடு அங்கிருந்த ஓர் கல்லையெடுத் துத் தயிர்பாண்டத்தையுடைத்து அதிலிருந்தவெண்ணெயைத்தி ன்றுவிட்டுக் காலிலணிந்திருக்கும் சிலம்பின் ஒலிகேளாவண்ணம் மெல்லெனச்சென்று ஓர் தனிவீட்டிற்குள்நுழைந்து உரலையுருட்டி யதைத்திருப்பி யதன்மேலேறி நின்று உரியின் சிக்கத்தையறுத்து பாண்டத்திலுள்ள வெண்ணெயை அள்ளி குரங்கிற்குக் கொடுத்து பயந்தவனைப்போல அன்னையின் வரவுக் கெதிர் நோக்கிக்கொண்டி ருக்கும்போது அங்கே யசோதை தீயை அவித்துப் பாலையிரக்கி

வைத்துவிட்டு புதல்வன் என்னசெய்கின்முன் என்றுவந்துத்தயிரா னது நதிபெரிகியதைப்போல பூமியில்நிறைந்து ஓடுவதையும்பாண் டம் பலவோடுகளாய் நுருங்கியிருப்பதையும்கண்டு வயிறு நிறம்பப் பால்கொடுக்க வில்லே என்றகோபத்தினுலே தயிர்பாண்டத்தை யு டைத்தான்போலக் காண்கிறதென்று யோசித்துத்தானும் மெத்தக் கோபங் கொண்டவளாகிக் கையில் ஓர்பிரம்பை எடுத்துக்கொண்டு கண்ணனே எங்குந்தேடிக்காணுமல் மனேமுழுதும் ஆராய்ந்து வரு கிறபோது ஓர்அரைவிட்டினுள்ளே வெண்ணெயை அள்ளி அள்ளி நெடுநேரம் குரங்கிற்குக் கொடுத்துக்கொண்டிருக்கும் மைந்தனேக் கண்டு அடிப்பதற்கு நெருங்கிவருகிற அன்னேயைப் பார்த்துப் பய ந்து ஓடுகிறபாவனேயாய் அவ்விடம்நீங்கி கிருஷ்ணன் பின்தொடர்ந் து இடையிற்றரித்த ஆடை அசைய குழலவிழ்ந்து மலர்மாலே வீழ முத்துமாலேப் பவழமாலே ரத்தினமாலேகள் அசைந்தாடிமின்ன யா னேயின் கொம்புகளேப்போல இரண்டுஸ்தனங்கள் ஊசலாட கைக ளிலணிந்த வளேயல் ஒலிக்க பாதங்களில் பூண்டசிலம்பரற்ற அன் னநடையையொத்த யசோதை பிடிக்க ஓடியகாலத்தில் கிருஷ்ணன் ததிபாண்டரங்கன் மனேயிற் புகுந்தபோது அத்ததிபாண்டரங்கன் கிருஷ்ணன் திருவடியில் விழுந்து வணங்கி எழுந்துச் சொல்லுகி ன்ருன்.

அருந்தவர்களுக்கும் யோகிகளுக்கும் நான்முகனுக்கும்இந்தி ரனுக்கும் மறைகளுக்கும் அகப்படாத ஆதிமூர்த்தியாகிய நின்னே சேவித்தேன் எனதுபாவங்களே பொழித்தேன் இனியானடைய வேண்டிய சுகம்வேறென்றுமில்லே என்மனதில் குடிகொண்டிருப் பது நின்படைவீடொன்றன்றி வேருருகவலேயுமில்லே என்றுவே ண்டும் ததிபாண்டரங்கனேக் கிருஷ்ணன்பார்த்து தாதா தங்கள் க ருத்தின் படியே செய்கிறேன் இப்போது எனதன்னே என்னேப்பிடி த்து அடிக்கும்படியாய் பின்றெடர்ந்து ஓடிவருகிருள் அவள்வரா முன்னம் என்னேத்தாங்களிந்த காலின்உள்ளே ஒளித்து வைத்துக் காப்பாற்றும் என்றுசொன்ன கிருஷ்ணமூர்த்தியின் கருத்தின்படி ததிபாண்டரங்கர்தான் உட்கார்ந்துக்கொண்டிருக்கும் சாலே எடுத் து அதினுள் கிருஷ்ணனேயிருத்தி சாலேக்கவிழ்த்து முன்போலத்தா ன்அதின்பேரில் உட்கார்ந்துக் கொண்டான் அந்தசமையத்தில் ய சோதை ஓடிவந்து ஐயாததிபாண்டரங்கனே என்மகன்கிருஷ்ணன் இங்குவந்தானே அவனெங்கேயென்ருள் அதற்குபொய்சொல்லா

வாசகனுகிய ததிபாண்டாரங்கன் இதோயென்புட்டத்தின் கீழிருக்கி ருனென அம்மொழியையசோதைகிருதுக்குச் சொல்லுகிருரெனக் கருதிச் சுத்துமத்தும் பார்த்தும் எங்குங்காணுததால் இவனெப்ப டிப்போனுன் நமதுகண்முன் இந்தவீட்டில் தானே நுழைந்தான் இவனென்ன மாயனே விரலத்தனை சிறுவன் இவன்செய்த இந்திர ஜாலத்தையோசிக்கையில் மிகவும் ஆச்சரியமாகத்தோன்றுகின்றது இப்போதோ நமக்குமெத்த களையாகவும் மெய்சலித்துக் காலோ ய்ந்து விட்டதே நாம் இவனைப்பிடிப்பது மெத்தவும் அசாத்தியமே என்று தனக்குத்தானே யோசித்துக் கொண்டிருக்கிறபோது ததி பாண்டரங்கன் இது நமக்கு நல்லகாலமெனக்கருதி யினியில்லாத ஆனந்தமடைந்திருந்தான் அந்தவேளையில் கிருஷ்ணபரமாத்துமா ததிபாண்டாரங்கனையழைத்து தாதா யினியென்னை விட்டுவிடுமென ததிபாண்டரங்கன் ஏகபடநாடக சூத்திராவதாரா குருடாகி இரு க்கும் எனக்கு இரண்டு கண்களுந்தெரியும்படி கிருபைசெய்வையா கில் உன்னைவிட்டுவிடுகிறேன் இல்லாவிடில் நினதுதாயிடஞ்சொல் லி உன்னைப்பிடித்துக் கொள்ளச்செய்வேனென்று பயமுறுத்தினுன் சிங்கம் பள்ளையாட்டுக்குப் பயந்து ஓடியதுபோலசாக்ஷாத் ஜெகதீச ன்பயந்து ததிபாண்டனுக்கு இரண்டுநேத்திரங்களும் தெரியும்படி கடாக்ஷிக்கத் ததிபாண்டன் தனக்குப்பகவான் கிருபையால் குருடு நீங்கிக் கண்கள் தெரிய மிகுந்தசந்தோஷத்துடன் இரண்டு நேத்தி ரங்களினுலும் உலகத்தைப் பார்த்து வெருப்புண்டாகி சிருஷ்டி திதிசங்கார மெத்தொழிலுக்கும் காரணமாகிமுச்சுடராகி ஆதிமு தல்வனுகி விளங்கும் ஸ்ரீகிருஷ்ண வாசுதேவா தேவரீர் கிருபைசெ ய்த இவ்விரண்டு நேத்திரங்கள் மேலுமேலும் பாவத்துக்கேதுவாக இருக்கிறதேயல்லாமல் புண்ணியம் கிஞ்சித்துஞ் சம்பாதிப்பது அ ரிதாகக் காணப்படுகிறது ஆகையால் இந்த நரஹேதுவாகிய இந்த வுலகத்தில் ஒருநிமைப்பொழுதும் இருக்கமனமில்லாத அடியேனு க்குத் தேவரீரது நித்தியவிபூதியை யளித்து ரக்ஷிக்கவேண்டு மென் றுதுதித்து ததிபாண்டன் கருத்தின்படி உண்டாகக்கடவது யென் று பகவான்மனதில் நினைத்தமாத்திரத்தில் ஆகாயத்திலிருந்து நவ ரத்தினவிமானமானது ததிபாண்டன் முன்வந்துதோன்ற ததிபா ண்டன் அவ் விமானத்தின்மீதேறி அவ்விமானம் ஆகாயமார்க்கமா ய்ப்போகிறபோதுயாதவர்களும் மாதர்களும் யசோதையுங்கண்டு ஆச்சரியமடைந்து ததிபாண்டனது உத்தமகுணங்களைப் புகழ்ந் துக்கொண்டிருக்கிறபோது சாலிற்குள்ளிருந்த கண்ணன் வெளிப்

தன் அன்னையாகிய யசோதையின் முன்வந்து யாதொன்றும் அறியாதவனைப்போல தேம்பித்தேம்பியழுதுக்கொண்டு தன்சமீபத்தில் நெருங்கிய மகனைப்பார்த்து யசோதை லகுவாய்ப்பிடித்துக்கொண்டு வீட்டிற்கழைத்துபோய் உரலிற்கட்டிவிட்டாள்.

—*—

## மருதமரச் சாபநிவர்த்தி.

அவ்வுரலை இழுத்துக்கொண்டு பிழைக்கடையிற்சென் றிரண்டுபிரிவோடுங்கூடிய மருதமரத்தின்சந்தில்நுழைந்துபோகிறபோது திருவடிபட்டு முன்னமராமாவதாரத்தில் பாதத்தூள்பட்டுக் கல்லுருவம் பெண்ணுருவ மானதுபோல மருதமரமானது சல்லிவேருடன் அறுந்துப் பூமியிற் சாய்ந்து அதிலிருந்தும் இரண்டுபுருஷர்கள் தோன்றினார்கள் அவர்கள் யாரெனில் குபேரன்பிள்ளைகளாகிய நளகூபரன் மணிக்கிரீவனென்று சொல்லப்பட்டவர்கள். இவர்கள் இருவரும் என்னகாரணத்தினால் இச்சாபத்தைப் பெற்றார்களென்றால், முன்னமொருநாள் இவ்விருவரும் அனேகமாதர்களுடன் கானகமேவி மதுபான மாந்தர்களாகி மனிதசஞ்சாரமில்லாத ஓர்தடாகத்தில் ஆடையில்லாமல் திகம்பரர்களாகி ஜலக்கிரீடை செய்துக்கொண்டிருக்கிறபோது அம்மார்க்கமாக திரிலோக சஞ்சாரியாகிய நாரதமாமுனிவர் வரக்கண்டு மாதர்களெல்லாஞ் சீக்கிரங்கரையேறித் தங்கள்தங்கள் ஆடைகளைத் தரித்துக்கொண்டார்கள். புருஷர்களிருவரும் அவரைக்கண்டும் மதிக்காமல் ஆடையில்லாமல் திகம்பரிகளாய் நின்றிருக்க, நாரதர் கண்டு அவர்களைநோக்கி நீங்கள் செல்வச்செருக்கினாலும் நாம் குபேரனுடையபிள்ளைகள் நமக்குநிகர் இவ்வுலகத்தில் யாருங்கிடையாதென்ற கெருவத்தினாலும் மதுபானத்தினாலும் அகங்கரித்து திகம்பரர்களாய் நின்றபடியால் நீங்களிருவரும் பூலோகத்திற்குசென்று நூறுதேவவருடம் மருதமரமாகயிருந்து பகவான்திருவடி ஸ்பரிசத்தினால் பழயசன்மம்பெறக் கடவீர்களென்று சபித்துப்போயினர். இக்காரணத்தினால் இவர்களிருவரும் பூலோகத்துக்கு வந்து மருதமரமாகி பகவான்பாதம்பட்டு பழயவுருவம்பெற்று ஜகதீசனுடைய சேவைசெய்து தங்களிருப்பிடஞ் சேர்ந்தார்கள்.

பின்புமருதமரம் முறிந்த ஓசையைக்கேட்டு யசோதை ரோகணி நந்தகோபன்முதலானோரும் ஓடிவந்து கிருஷ்ணனை வெளிப்ப

டுத்தி யசோதையின் கையிற்கொடுத்து இத்தனை பருத்தமரம் ஒடிந்துவிழுவதற்குப் பெருத்தகாற்றும் அடிக்கவில்லை எவர்களும் வெட்டவுங்காணோம் இதையோசிக்குமிடத்து இப்பிள்ளையால் மரம் முறியதள்ளுவதற்குச் சக்தியுண்டோ இதுமெத்த ஆச்சரியத்திற்கு ஹேதுவாக விருக்கிறதென்று யோசித்துக்கொண்டிருக்கையில் உபநந்தன் நந்தகோபாலனைப்பார்த்து ஐயா உமதுபுதல்வன் பிறந்தநாள்முதல் நாளதுபரியந்தம் அவனுக்கு மேலும்மேலும் விபத்துகள் சம்பவித்துக்கொண்டே யிருக்கிறது. இதையோசிக்கையில் உமதுபுதல்வனுக்கு பூதகிசகடன் சுழல்காற்று குக்குடன் முதலான துஷ்டர்கள் உபத்திரங்களை நின்பங்கு தெய்வமாகிய ஹரியேயிருந்துக் காப்பாத்தினுனென்பதற்குச் சந்தேகமில்லை இத்தனைவிபத்துக்கள் நடந்திருப்பதை நாம் கண்ணாரக்கண்டும் இவ்விடத்திலேயே இருப்போமாகில் இன்னமும் பல துர்நிமித்தங்க ளுண்டாகும்போலக்காண்கின்றது ஆகையால் நாம் வாசமாயிருக்கும் பதியைவிட்டு அனைவர்களும் யமுனாநதிக்கரையிலிருக்கின்ற பிருந்தவனத்திற்குச் சென்று மாடகூட மண்டபங்கள் ஆலயங்கள் முதலானதுகளையும் அழகாகக்கட்டிக்கொண்டு அதில் குடியேறியிருப்போமாகில் மெத்தவும் நலமுண்டாகுமென்று அன்னியிலும அங்கு பசுக்கள்மேய்வதற்கு புல்லுவிசேஷமாக விருக்கிறது புனலுமுண்டு கனிகாய்கள் யாவும் யதேஷ்டமாக யிருக்கின்றமையால் தேவலோகத்தைப்போல நன்றாக குளிர்ச்சியும் சுகமும் சவுக்கியத்தையுந் தரும்படியான அந்தயிடத்திற்கேபோவது பலவிஷயங்களுக்கும் அனுகூலமாமென்றுசொல்லிய உபநந்தன் மொழிகளைக்கேட்ட நந்தகோபன் இஷ்டப்படிக்கு மாடங்கள் கூடங்கள் மண்டபங்கள் ஆலயங்கள் தடாகங்கள் முதலியவைகளையெல்லாங்கட்டி பெருநாள் கொண்டாடிப் பிருந்தாவனத்தில்குடியேறி லட்சுமிகடாக்ஷம் பெருகிசெழிக்க நந்தகோபன் இனிதமர்ந்திருக்கிறபோது.

—❋—

## பெகாசுரன்வதை.

—:❋:—

ஒருநாள் நந்தகோபன் பலராமரையும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியையும் அழைத்து நீங்களிருவர்களும் ஆயர்கள் சிறுவர்களுடன் கூடச்சென்று இளங்கன்றுகளை மேய்த்துக்கொண்டு வாருங்களென்று உரைசெய்ய அந்தப்படியே பலராமர் கிருஷ்ணர் இருவரும்

ஆயர் சிறுவர்களுடன் கன்றுகளை யோட்டிச்சென்று கிருஷ்ணபர மாத்துமா தன்சொற்படியாவரும்நடக்கும்படிகன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது பூதகி சகடன் திரிணாவர்த்தன் குக்குடன் முதலாகியவர்கள் மடிந்துபோன சமாசாரத்தைக்கேட்டு கஞ்சன் மிகவுங்கொதித்து உள்ளம்பதைத்து ஆலகாலவிஷத்தைப் போன்ற பெகாசுரன் அகாசுரன் இவ்விருவர்களையும்நோக்கி நீங்கள்சென்று நந்தகோபன் மைந்தனைக்கொன்றுவாருங்களென்றுசொல்லியனுப்ப அக்கொடிய துஷ்டர்களிருவரும் பிருந்தாவனத்தையடைந்து ஒருவன் கொக்காகவும்மற்றொருவன் பசுவின்கன்றாகவும் உருவமெடுத்துக்கன்றுகளுடனே கன்றுருவங்கொண்டவனும் கொக்கின்வடிவங் கொண்டவனும் ஓர்மலையின்பேரில் பெருத்தவெண்மையான மலையிருப்பதை யொத்திருந்தார்கள் அதில்கன்றுருவங்கொண்டவன் துள்ளியோடுவதும் திரும்பிவந்தகன்றுக்கூட்டங்களுடன் சேர்ந்துப்புல்லைத்தின்னுவதும் தண்ணீர்புசிக்கும் விந்தையையுங் கிருஷ்ணபரமாத்துமாகண்டு நகைத்து மெல்லெனயவுணக்கன்றினைபிடித்து அங்கிருக்கும் விளாமரத்தின் கனியுதிரும்படி விட்டெறிந்தமாத்திரத்தில் அவ்வடியினால் கனிவீழ்ந்தது மன்னியில் அரக்கனும் மடிந்து பூமியில்விழுந்தான் இதைக்கண்டுகைலையங்கிரிக்கொப்பாகிய பெகாசுரன்கொதித்து விரைவாகவந்து மூக்கினாற்கொத்தி அன்றுலகளந்தவனை விழுங்கின மாத்திரத்தில் அதன்வயிற்றிற்குட்சென்ற ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி காலாக்கினியைப்போல எறிகிறபோது அவ்வக்கினியினால் நேரிட்ட வருத்தத்தைச் சகிக்கமுடியாமல் அவ்வரக்கன் உமிழ்ந்தவுடனே மிகுமணம்பொருந்திய துளபமாலையைத்தரித்த ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமா ஆத்திநார்கிழிப்பதைப்போல மாயாகொக்கைப்பிடித்து இரண்டாய் கிழித்தெறிந்தார்.

---

## அகாசுரன்வதை.

---

அப்போது பெகாசுரன் மடிந்தவகையையறிந்து அகாசுரன் சினமிகுந்துப் பற்களைக்கடித்து மீசைதுடிக்க கஞ்சனைநோக்கி நான்சென்றுநந்தகோபன் மகனைக்கொன்று வருகிறேனென்று சொல்லி வெளிப்பட்டு பிருந்தாவனத்தையணுகிக் கன்றுகளைமேய்க்கும் பொருட்டு ஆயர்சிறுவர்களும் பலராம கிருஷ்ண மூர்த்திகளுக்கும் வருகிறபாதையில் பெருத்த பருவதத்தைப்போல பாம்பின்வடிவங்

கொண்டான் பலராமகிருஷ்ணர்களுடன் செல்லும் ஆயர் சிறுவர்கள் யாவரும் வழியிலிருக்கும் மலையைக்கண்டு நேற்றியதினம் இவ்வழியாகத்தானே வந்தோம் அப்போதுயில்லாதமலை இன்றெங்கிருந்து வளர்ந்து விட்டது என்றுஆச்சரியப்பட்டு ஆகிலும் இதுமலையேயன்றி வேறொன்று மல்லவென்று கன்றுகளுடன் யாவரும் அம்மலையின் மீதேறிப்போகும்போது அகாசுரனுடைய சுவாசமானது நெருப்புக்காத்தடிப்பதுபோலவீசி சுவாசத்தால் கன்றுக்கூட்டங்களுடன் யாவரையுமிழுத்து விழுங்கினான். அவருடன் கிருஷ்ணபகவான் அதின்வாயினிடத்தில்புகுந்து நீண்டமாத்திரத்தில் அகாசுரன் தேகம் இரண்டாய்ப் பிளந்து சிரம்வெடித்து ஜீவன்பிரிந்துச்சிதறி மாண்டான்.



## காளிய நிர்த்தனம்.

சாக்ஷாத்து பலராமகிருஷ்ணர்கள் ஆயர்சிறுவர்களுடன் கன்றுகளை யோட்டிக்கொண்டு யமுனாநதியின் சார்பில்விளங்கும் காளியமடுவின் சமீபத்திற்சென்று கன்றுகளைவிட்டு மேய்த்துக்கொண்டிருக்கிறபோது ஆயர் சிறுவர்களிற் சிலர் மடுவின்சமீபத்திற்குப் போய் மெய்சோர்ந்து விழுந்துவிட்டதைக்கண்ட கிருஷணபரமாத்துமா இக்காளியன் இங்கிருப்பதால் புல்பூண்டு மரங்களுந்தீய்ந்

து காய்ந்துபோவதுடன் ஆகாயத்திலும் பறவைகளும் பறக்கக்கூடாமல் இவன் விஷஜ்வாலையினால் மடிந்து போகிறது மன்னியிலும் இந்தஜலம் மனிதர்களுக்கும் பசுக்களுக்கும் உபயோகமில்லாமல் இவனொருவனே இம்மடுவின் ஜலத்தினால் சுகித்திருப்பது தருமமல்லவென்று கருதி அங்கு பட்டுப்போயிருந்த ஓர்கடப்பைமாத்தின்மீதேறி அம்மடுவின் நடுவில் குதித்தமாத்திரத்தில் ஜலம் தத்தளித்துதளும்பி கரைக்குமேல் ஓடிப்பரவியது. இவ்வோசையைக் கேட்டுகாளியன்திடுக்கிட்டு இதுவென்னஆச்சரியமாகவிருக்கிறது நாம்வசிக்கும் இம்மடுவின் நாற்புரமும் இரண்டுகாத தூரத்திற்கும் எந்தபிராணியும்வந்து தலைகாட்டமாட்டாது அப்படிக்கிருக்கும் நமது விஷாக்கினியையும் மீறிவந்தவன் யாவனோவென்று சீக்கிரமாக எழுந்து ஆயிரம் சிரங்களின் பாரீசத்தில் விளங்கும் செவிகளாகிய இரண் டாயிரம் கண்களிலும் அக்கினிப்பொறிகள் பறக்க வாக்கில் நின்றும் விஷங்களைக் கக்கிக்கொண்டுசீறியோடிவந்து கிருஷ்ணமூர்த்தியாக அவதாரஞ்செய்திருக்கும் ஆதிதேவனென் றுணராமல் சாமானிய மனிதனெனப்பாவித்து மேல்விழுந்து கடித்து உடலைசுற்றிக்கொண்டு எலும்பு நொறுங்கும்படி இருக்குகிறபோது கரைமீதிருந்த ஆயர்பாலர்களும் பலராமரும்கன்றுகளும் விசனப்பட்டு கண்களில் நீர் பெருகிவிட்டு அழுதுவாடி யுருகும்போது சில சிறுவர்கள் ஓடி இந்த விர்த்தாந்தத்தை நந்தகோபனுடன்சொல்லுகின்றார்.

அதைக்கேட்டு நந்தகோபன் முதல் கோபாலர்களும் யசோதைமுதல் ஆயர்மாதர்களும் ஓடிவந்து மடுவின் கரைசேர்ந்து பாம்பினால் பிணைக்கப்பட்டிருக்கும் கிருஷ்ண மூர்த்தியைக்கண்டு இடிவிழுந்தமாத்திரத்தில் மராமரங்கள் வேரற்று வீழ்வதைப் போல நந்தகோபன் மெய்மறந்தும் பூமியில்விழ யாவரும்வீழ்ந்து முகத்திலறைந்துக்கொண்டு அழுது கலங்குகிறபோது யசோதை நானினியென்மகனை எப்போது காணப்போகிறேன் மகனைப்பிரிந்து ஒரு க்ஷணமேனும் உயிர்பெற்றிருக்கமாட்டேன். இந்தமடுவில் விழுந்து என்னுயிரைமாய்த்துக் கொள்ளுகிறேனென் றெழுந்தோடுகிறபோதுமற்றவரிதைக்கண்டு ரோகணிமாது சிரித்து அனைவர்களையுந் தடுத்துத் தேற்றி சற்றுபொருத்திருங்கள் இவ்விடத்தில் நடக்கும் வேடிக்கையைப் பார்த்து நீங்களே சந்தோஷிக்கப் போகிறீர்களென்றுசொல்ல அனைவர்களும் அந்தப்படியே கண்ணிமைக் கொட்டாமல் கண்ணனைப் பார்த்திருந்தார்கள்.

அப்போது காளியனால் பிணைத்து நெருக்குண்ட கிருஷ்ணபகவான் தேகத்தை வளர்த்திகாளியன் காயத்துள்ள எலும்புகளொடியச்செய்து கட்டுகளை விடுவித்து அவனது சிரத்தின்மீது தன் திருவடிகளால் நடனஞ்செய்கிற காலத்தில் காளியன் படங்களும் ஆயிரம் சிரங்களும் நொறுங்கிக் கதறுகிறபோது நாகஸ்ரீகள்வந்து கிருஷ்ணமூர்த்தியின் பாதங்களில் விழுந்து தங்கள் நாயகனைக்காப்பாற்றி மங்கலப்பிச்சைத் தரவேணுமென்று வேண்டிய அம்மாதர்கள் முறைகளுக்கு இரங்கி அவனைக்காத்து அவ்விடத்தைவிட்டுயோட்டினார். இதுகளையெல்லாங்கண்ட நந்தகோபன் யசோதை முதலிய யாவருமென்றுமில்லாத சந்தோஷத்தையடைந்து மகனை வாரித்தழுவி முத்தமிட்டு உச்சிமோர்ந்து யசோதை ஆனந்தித்தாள். நந்தகோபனும் இப்படியே ஆனந்தித்தான் மற்றவர்களெல்லாங் கொண்டாடிச் சென்று இல்லஞ்சேர்ந்துக் களிப்புடனிருந்தார்கள்.

பின்னொருநாள் ஆயமாதர்கள்கூடி யமுனை நதிக்கிவந்து தங்களாடைகளைக்களைந்து கரையின்மீதுவைத்து நதியிலிரங்கி நீராடிக்கொண்டிருக்கிறபோது கிருஷ்ணன் அங்கொருவர் கண்களுக்கும் புலப்படாமற்சென்று கரையின்மீதிருந்த ஆடைகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு ஓர் புன்னைமரத்தின் மீதேறி அதின் கிளைகள் தோறும் ஆடைகளைக்கட்டித் தானும் அதின்மீது இருந்தான், மாதர்கள் நீராடிவந்து கரைசேர்ந்து ஆடைகளைத் தேடிக்காணமல் நான்குதிக்குகளிலும்பார்த்தும் அகப்படாமல் துயரமடைந்து அங்கோர் புன்னைமரத்தின் மீதிருக்குங் கண்ணனைக்கண்டு ஆடையைக்கொடுமப்பாவென்று வெகுவாய் வேண்டிக் கொண்டும் கூறையைக்கொடாதபடியால் அம்மாதர்கள் பின்னும் துயரப்படுவதைக் கண்டு நீங்கள்யாவரும் கரையேறி இங்குவந்து இரண்டுகைகளையும் சிறமேற்கூப்பித் தொழுவீர்களாகில் உங்களுக்கு ஆடையைத் தருவேனென்று சொல்ல மாதர்கள் அந்தப்படியே இரண்டு கைகளையுங்கூப்பி தெண்டனிடக் கண்ணன் சேலைகளை அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்.

மறுநாள் நந்தகோபன் ஆயர்களை வரவழைத்து இந்திரனுக்கு பூசைபுரியும்நாள் இன்றுனதால் வேண்டிய பதார்த்தங்களுடன் கொண்டு வாருங்களென்று சொல்லிய மொழியை அருகிலிருந்து கேட்ட கண்ணன் தந்தையாகிய நந்தகோபனை நோக்கி இந்திரனுக்குப்பூசை பொங்கலிடுவதுஞாயமல்ல, நமக்குவேண்டிய சகலவஸ்

துக்கனையுந்தருகின்ற கோவர்த்தனகிரியே நமது குலதெய்வமாகை யால் இந்திரனுக்கிடும் பொங்கல் பூசையைநிறுத்தி கோவர்த்தனகி ரிக்குப் பொங்கல்பூசைசெய்தல் உத்தமமென்று சொல்லிய கண்ண ன்மொழியைக் கேட்டுச் சகலருஞ்சரியென் றேற்று சகலவஸ்துக்க ளுடன் கோவர்த்தனகிரிக்குச் சென்று அம்மலையை உத்தேசித்து பொங்கல்பூசைமுடித்து நைவேத்தியம்படைக்க சாக்ஷாத் கண்ண ன் மலையுருவத்திற்கலந்து யாவத்தையும் புசித்தார். இதையறிந்து தேவேந்திரன் மேகங்களைவிடுத்து ஆயர்கள் அவகபரதரும் பசுக்க ளும் அதின்கன்றுகளும் அடியோடுமாய்ந்துபோகும்படி ஊழிகால மழையைப்போல எழுநாள் பெய்யக்கடவா யென்று கட்டளையிட அவ்வண்ணமே மேகங்கள் யானைத்துதிக்கையைப்போல சொரிவதி னல் ஆயர்மாதர்களும் கோபாலர்களும் கோவினங்களும் கன்றுக ளும் ஆலாகோலப் படுவதைக்கண்டு கண்ணன் இந்திரன் கொர்வத் தையடக்கவெண்ணி கோவர்த்தனகிரியைச் சுண்டுவிரலினல்தாங்கி க் குடையாகப்பிடித்து ஆவினங்களுடன் அனைவரையுங் காத்தார். இதைக்கண்ட இந்திரன் இவனைநாம் யாதவனென்று அற்பமாக எண்ணி மேகங்களைவிட்டு மழை எழுநாள் பொழியச்செய்தது நம து அறிவீனமேயென்றுநடுங்கி பூலோகத்திற்குவந்து ஐராவதத்தை விட்டிறங்கி கிருஷ்ணபகவான் திருவடிகளில் விழுந்து சரணகதிய டைந்து பலவிதங்களாகத் துதித்துப்போற்றக் கண்ணன் கடைக்க ண்ணினல் கடாக்ஷித்து விடைதரப்பெற்று வானுலகத்தை யடை ந்தார்.

பின்னர் ஒருநாள்நந்தகோபன் அதிகாலையிலெழுந்து ஏகாதசி விரதமனுட்டிக்கும் பொருட்டு யமுனநதியில் ஸ்நானஞ் செய்துக் கொண்டிருக்கிறபோது வருணன் தூதர்கள் நந்தகோபனைப் பிடித் துக்கொண்டு போய்விட்டார்கள் இந்த சவிஸ்தாரத்தைப் பின்செ ன்றவர்களால் யசோதையறிந்து துக்கப்படுவதைக் கண்ட கண்ண ன் அன்னையைத் தேத்தி பஞ்சாயுத்தரனக வருணலோகத்திற்குச் சென்று வருணனல் பூசிக்கப்பட்டு நந்தகோபனை யழைத்துவந்து வீட்டிற் சேர்த்தார்.

ஓர்நாள்கண்ணன் புள்ளாங்குழலை யூதிய இன்பத்தினல் ஆயர் மாதர்கள்யாவரும் தங்கள் தங்கள் கைவேலைகளைவிட்டுமயங்கி மாமி மாமன் நாயகன் இவர்களிடத்தும் பயமற்றுத் தங்களைமறந்து கண் ணனிடஞ்சேர்ந்து அசைவற்றிருந்தார்கள்.

அம்பிகாவனத்தில் வித்தியாதரனாகிய சுதரிசனன் அரவமாகி நந்தகோபனை விழுங்கிடக் கண்ணன் தன்காலினாலவனை உதைத்து நந்தகோபனைமீட்டான் பின்னும் சங்கசூடனன் அங்கெய்தி ஆயர் மாதர்களிலொருத்தியை எடுத்தேகிடக்கண்டபலராமர் அவனைவிடாது பின்தொடர்ந்து சூலாயுதத்தை யெடுத்துச் சுழற்றியதையறிந்த சங்கசூடன்பயந்து அம்மாதைவிட்டேகக் கண்ணன்கண்டு வேகமாயோடி ஓரறையறைந்தவனைக் கொன்றார்.

பின்னும் மிதிலாநகரத்தில்வசிக்கும் யசோதைக்கு மூத்தோனான கும்பனென்பவனுக்கு நம்பின்னை யென்னும் வனிதைபிறந்து வளர்ந்து பேதைப்பருவம்நீங்கிப் பெதும்பைப்பருவமடைந்திருக்கும் நாளில் கும்பனுடைய பசுவின்கூட்டத்தில் காலநேமியின் மைந்தர்கள் எழுபேர்கள் ரிஷபங்களுருவாய் நிற்கிறபோது கும்பன் இவ்வேழுரிஷபங்களையுங் கொல்லுபவனுக்கு என்மகளைத் தருவேனெனக்கேட்டக் கண்ணன்சென்று ஏழுரிஷபங்களையும் மடித்து நம்பின்னை நங்கையைமணர்ந்தார்.

அதற்குப்பின் அரிட்டாசுரன் கேசிலியோமனன் முதலானோரைக் கண்ணன்வதைத்துக் கஞ்சன் அனுமதியினால்வந்த அக்குரூரருடன் பலராமர் கண்ணன் நந்தகோபன் இம்மூவருஞ்சென்று மதுராபுரியைச் சேர்ந்தபோது தாருகனென்னும் வண்ணானைவதைத்து அவனிடமிருந்த உயர்ந்த ஆடைகளை யெடுத்து உடுத்திக்கொண்டு ராஜவீதியாகப் போகிறபோது கஞ்சனுக்கு மணம்பொருந்திய மலர்மாலைகளைத்தரும் சுதர்மன் அகம்புகுந்து அவன் தந்தமாலைகளைத்தரித்து அவனைக்கடாக்ஷித்துக் கஞ்சனுக்கு வாசமிகு சந்தனந்தரும் திரிவக்கிரியினிடத்துச் சந்தனம்பெற்று காப்பணிந்து அவளையும் பெதும்பைப்பருவ முடையவளாகக் கிருபைசெய்து ஆயுதசாலையிற்புகுந்து தனுசுகளனைத்தையும் ஒடித்தெறிந்து குவலையாபீடத்தைமடித்து சாணூரனைவதைத்துக் கஞ்சனுயிரைமாய்த்து உக்கிரசேனனுக்கு முடிசூட்டி குருதக்ஷிணையீந்து ஆயர்பாடிக்கு உத்தரரையனுப்பி மாதர்கள் மனத்துயரங்களைப் போக்கச் சொல்லிவிடுத்து சராசந்தனை பீமனால்மடித்து துவாரகையை நிர்மித்து விதர்ப்பராசன் புதல்விக்கு மணியைமணந்துப் பாண்டவர்களுக்குத் தூதுசென்று பதினெட்டுநாள் பாரதயுத்தம்நடத்தி பூபாரத்தைத் தீர்த்து பழயபடி படைவீடுசேர்ந்து இனிதுவீற்றிருந்தார்.

**கிருஷ்ணவதாரம்-முற்றிற்று.**

## பத்தாவது;

# கலிக்காவதாரம்.



ஸ்துதி.

கருமாலை கழியவந்த கடவுளாரைக்
கருப்பறியார் காணவொணுக் ககனத்தேவை
மருமாலைத் துளவணியு மாமார்பானை
மருவில்லார் கைப்பாண மாயினானை
ஒருமாலை யுறம்பேர்த்த வரிபைவானோர்
ஒருகணியு மடியானைப் படியளந்தத்
திருமாலைக் கலிக்காவ தாரன் றன்னைத்
திருப்பதத்தைத் திருக்கறவுற் றிருப்பமாதோ.

மானிடதிரேகமும் குதிரைமுகமும் ஒருகையில்வாளா யுதமு மற்றொருகையில் கேடையமும் இன்னு மிரண்டுகைகளில் சங்குசக்கரமும் தரித்து சர்வத்திலும் உள்ளும் புரம்புமாய் வசிக்கும் சாக்ஷாத் விஷ்ணுவாகிய பகவான் அவதரித்துக்காலமுடிவை எதிர் பார்த்துக்கொண்டு பாவிகளைசங்கரிக்கவும் அதருமங்களைப்போக்கவும் சித்தமாக விருக்கின்றார்.

விஷ்ணுவின்

**தசாவதாரம் முற்றிற்று.**

—*—

## கருடன் உற்பவம்.



விந்தையென்பாள் அருணன் கூறியபடி சாக்கிரதையாக மற்றோர் முட்டையைக் காத்து வருவாளாயினள். முன்னம் தேவரும் அசுரரும் அமுதங்கடைந்து உண்டு அதிகரித்ததை ஓர் பொற்கலசத்தில் வைத்து அனேக அஸ்திரங்களையும் தேவர்களையும் காவல் வைத்துப்போயினார்கள். அக்காவலோடும் அமுதக்கலசமிருந்தன அப்போது, பாற்கடலிற்றோன்றி இந்திரவாகனமாயுள்ள உச்சைச்சிரவமென்னும் வெள்ளைக்குதிரை கடலோரமாக ஒருநாள் வந்திருந்தது, இதனைகத்துரு, விந்தை என்னும் இருசகோதரிகளும் கண்டனர். இவருள் விந்தையென்பவள் கத்துருவையைநோக்கி தங்கையே இக்குதிரை மாசற்ற மிக்க வெண்மையோடு என்ன அழகாயிருக்கின்றதென்ன கத்துருவை வஞ்சகமாக வால்புறத்தே சிறிது கருமையுமிருக்கின்றதென்ன இருவரும் சரதமுற்று விந்தை தங்காய் பொய்பசுகின்றனை வால்புறம் கருமையிருக்கில் அடிமையாகின்றேன் காட்டென்ன, கத்துரு தமக்கையை நோக்கிநாளை வந்து பார்ப்போமெனக்கூறி தம் வீட்டையடைந்து தம்புத்திரர்களிடம் கூறி, வால்புறம் கருமையை யாரேனும் உண்டாக்குங்களென்ன, அந்நாகர்கள் பாற்கடலிற் றோன்றிய மகாபரிசுத்தமான உச்சைச்சிரவத்திற்கு அவ்வாருண்டாக்குவது கூடாதென மறுத்தனர். அதனால் கத்துருவுசினந்து நீங்கள் இனிஜனமேஜயன் சர்ப்பயாகத்திலிறக்கக்கடவீர்களௌனச் சபித்தனள். இதைக்கேட்ட ஒருவன் அன்னையின் இஷ்டப்படி கருப்புதோன்றப் பொருந்தினன் இதனை விந்தைக்குக்காட்டி அடிமையாக்கிக் கொண்டனள் மற்ற சரிதத்தை அமுதங் கொணர்ந்த சரிதத்தில் காணலாம்.

# ஆஞ்சனேயர் உற்பத்தி.



முன்னம் துஷ்ட ராக்கதர்கள்செய்யும் கஷ்ட அக்கிரமங்களி ஞல்புண்ணியம் நசித்துப் பாவமேலிட்டமையால் பூமிபாரத்தைச் சுமக்கமாட்டாமல் பூமிதேவியானவள் கண்ணீர் விட்டுக்கலங்கி வந் து சிவபெருமானைச்சரணமடைய சிவன் தேருதல் சொல்லி அனுப் பினவுடனே பிரமனிடம் சென்று அவரையழைத்துக் கொண்டு தேவர்களுடன் வைகுந்தமாநகரம் சென்று அங்கு ஆதிசேஷன் மீது சயனித்திருக்கும் பரந்தாமனைக்கண்டு வணங்கி இராவணுதி ராக்கதர்கள் தவசிகள் முதலான சாதுக்களை நலியச் செய்யும் அகி ருத்தியங்களினுல் புண்ணியங்குறைந்து பாவமேலிட்டதால் தரை மாது பூமிபாரத்தைச் சகிக்கமாட்டாமல் மிகவும் துக்கப்பட்டு வா டுகிறபடியால் பாவங்கள் நசித்துப் புண்ணியம் மேலிடும்படியாகத் தக்கயோசனை கிருபைசெய்யவேண்டும் ஜெகதீசாயென்று வேண்டி க்கொள்ளக் கருணுநிதியாகிய திருமால் அருள்சுரந்து ஓதேவர்க ளே அந்தராவணனுனவன் அகோரமான தவஞ்செய்து தேவர்களா லும் மிருகங்களாலும் சாகாதவரமும் ஆயுளும் பெற்றவன் குபேர ன் முதலானேரை ஜெயித்தவன் திக்குயானைகளுடன் போர்புரிந்த வன் திக்குவிஜயஞ்செய்தவன் இப்படிப்பட்ட பலபராக்கிரமத்தை யடைந்த அவ்வரக்கனை மாய்ப்பதற்கு ஒருபாயஞ் சொல்லுகிறேம் அந்தப்படி நீங்கள்செய்வீர்களாகில் அந்த ராவணுதிகளைவெகுலே சாய் மடித்துவிடலாம் அதெவ்வாறெனில், முன்னமவன் வரம்பெற் ற காலத்தில் வானரங்களையும் மனிதர்களையும் நீக்கிமற்றஜீவராசிக ளால்தனக்குமரணம்நேரிடாமலிருக்கும்படி வரம்பெற்றவனுதலால்

ஓநான்முகனே நின்னம்சங்கொண்டு ஜாம்புவந்தனுகவும் ஓ பசுபதி நினது அம்சத்தினுல் அனுமானுகவும் ஓதேவேந்திரனே உனதம் சத்தினுல் வாலியாகவும் ஓ தினகரனே நின்னம்சத்தினுல் சுக்ரீபனு கவும், அக்கினிதேவா நினதம்சத்தினுல் நீலனுகவும், உபேந்திரனே நினது அம்சத்தினுல் அங்கதனுகவும, மற்றவர்களெல்லாம்எழுபது வெள்ளம் சைனியங்களாகவும், காட்டில்வானரவடிவுடன் அவதரிக் கக்கடவீர்களென்று ஸ்ரீமுகுந்தன்கட்டளையிட அந்தப்படி தேவர் கள் தங்கள் தங்கள் அம்சங்களாகக்காட்டில் அவதரித்து விருத்தி யடைந்துவர அத்தநியில் வாயுதேவன் நமதிடம்வந்துபணிந்து நா ன் அரூபியாக விருப்பதால் என்னையாவரும் ஸ்பரிசத்தால் உணர் கிருர்களே தவிர ரூபில் பார்க்க எவர்களாலுமாகாததாலே தேவரீர் எனதுபணமும்பராக்கிரமமும் கீர்த்தியும் உலகில்பிரபலமாகும்படி யாகஓர் பாலனை அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று என்னைவெகு வாக வேண்டிக்கொள்ள அதற்கு நான் எனதம்சம் பெற்று உனக் கோர்பாலன் உதிக்கக்கடவனென்று வரந்தந்தேன் அவ்வரத்தைப் பெற்று வாயுதேவன்மிகுகளிப்படைந்து விடைபெற்றுச் சென்று அஞ்சனுதேவியைமருவிக்கலந்துபோயினபின்பு அஞ்சனுதேவி கரு த்தரித்துப் பூரணமாகி எனதம்சமாகிய பிள்ளையைப் பெற்ருள் அ ஞ்சனுதேவி யீன்றபடியால் ஆஞ்சநேயனென்றுபேர் உண்டாயிற்று இந்தப்படியாக அவதரித்த ஆஞ்சநேயன் பிறந்தவுடன் தன்தாயை நோக்கி ஓ அன்னையே யெனக்கு மெத்தபசி யதிகரித்திருப்பதால் யான் புசிக்கத்தக்கதுயாதெனக்கேட்க அதற்கவள் அனுமானைப் பார்த்து அடா குழந்தாய் குளிர்ந்தவனங்களிலும் சோலைகளிலும் சிவந்து பழுத்திருக்கும் மதுரமான கனிகளே உன்பசியைத் தீர்க்க த்தக்கபதார்த்தங்களென்று சொல்லித் தன் மகனது பசியைத் தீர் கவேண்டி மகனைத் தனியே விட்டுக்கனிகள் கொண்டுவர வனத்திற் குள்போயினுள் இவ்வாறு போயின அன்னையாகிய அஞ்சனுதேவி வருவதற்குள் ஆஞ்சனேயனுக்கு மிகவுங்கடுமையான பசியுண்டாகி யபடியால் அப்பசியின் வருத்தம் பொருக்கமாட்டாமல் வேதனைப் பட்டுக்கொண்டிருக்கிறசமயத்தில் உதயகாலமாகையதால் சூரியன் உதித்தான் அந்த சூரியவெப்பத்தை இவ்வனுமான் கண்டு தனக்கு அன்னைசொல்லிய கனிவகைகளிலே யிதுவுமொருகனியா மென்று நினைந்து அச்சூரியன்மேல் அதிகவேகமாய்ப்பாய்ந்தான் அப்போ தந்த வேகத்தைப் பார்த்த தேவர்களெல்லாம் பிரமித்துஇவன்குழ ந்தையாயிருக்கிற இப்பருவத்திலேயே பிதாவினுடைய பலத்தை

யும் வேகத்தையும் பெற்றதல்லாமல் கெருடவேகத்தையும் பெற்றச் சூரியன்மேலே யிப்படி பாய்ந்தானல்லவோ ஆனலிவன் சகல பலமும்பொருந்தி நாளுக்குநாள் பிரபலமாவானகில் நம்முடைய சத்துருக்களாகியராக்கதர்கள் அனைவரும்என்னதுன்பத்தையடைவார்களோவென்று ஆச்சரியமடைந்தார்கள் அக்கால் பிதாவாகிய வாயுபகவான் அக்கினிமயமா யெறிக்கும் சூரியகிரணங்கள் சீதள சந்தனம் போல குளிர்ந்திருக்கக் கடவதென்று வரஃகொடுத்தான் அல்லாமலும் சூரியபகவான் தன்மேற்பாய்ந்து கவ்விக்கொண்டிருக்கும் இவ்வனுமானை விளையாட்டுக் குழந்தை பென்றெண்ணிக்கோபஞ்செய்யாமலும் தனது கிரணங்களினலே தகிக்காமலும் தயவாக மகிழ்ச்சிக் கொண்டிருந்தான்.

இப்படிக்கிருக்கும் சமயத்தில் கிரணகாலம் நேர்ந்தபடியினலே சூரியனைப்பற்ற வந்த ராகுவானவன் கவ்விக்கொண் டிருக்கும் அனுமானுடைய பராக்கிரமத்தைக்கண்டு பயந்தோடி தேவேந்திரனிடத்திற்குசென்று ஓ ஐயாதேவராஜனே சூரியசந்திரமண்டலங்களைப்பற்ற எங்களுக்குமுன்னமேவரங்கொடுத்திருக்க இப்போது வேறொருவனுக்கு நியாயவிரோதமாய்க் கொடுக்கத்தக்கதாக நாங்கள் செய்தகுற்றமென்னமோ என்ன காரணத்தாலிப்படிக்கு அவமரியாதை செய்வித்தீர் பென்று முறையிட்டழுதான் அதுகேட்ட தேவேந்திரன் அப்பொழுதேமிகவுங்கோபத்துடன் ஐராவதத்தின் மேலேறிக்கொண்டு சூரியமண்டலத்திற்கு அதிகவேகமாக சென்று நின்று ராகுவை யழைத்து நீ இந்தச்சூரியனைப்பிடியென்று யேவினன் அவனந்தப்படியே சூரியனை யடுத்து வருவதைக்கண்ட இவ்வனுவான் சூரியவிம்பத்தைவிட்டு இராகுவின் மேற்பாய அந்த ராகுவானவன் பயந்துநடுங்கி யுளறிக்கொண்டோட்டமாயோடி தேவேந்திரன் காலடியில் விழுந்து புலம்பினன். அதுகண்ட தேவேந்திரன் மிகவும் உக்கிரமான கோபத்துடன் ஐராவதத்தை பிரசண்ட வாயுவேகமாக நடத்திக்கொண்டு அனுமான்மேற் சீறிவந்தான் அப்போதந்த ஐராவதத்தின் முகத்திலே சிகப்பாய் விளங்குஞ் சிந்தூரப்பொட்டு வருணத்தை இவ்வனுமான் கண்டு இதுவுமொரு கனியென்றெண்ணி அவ்வைராவதத்தின் மத்தகத்தின்மேற் பாய்ந்தான் அப்படி பாய்ந்தவனைக்கண்ட தேவேந்திரன் பலம்பொருந்திய தன்னுடைய வச்ராயுதத்தினலே ஓங்கியடித்தான் அந்தஅடிப்பட்டமா

த்திரத்தில் இளங்குழந்தையானதால் அநுமான் மூர்ச்சையடைந்து பூமியில் விழுந்தான்.

அந்தவேளையில் இவ்வநுமானுடைய பிதாவாகிய வாயுவுபகவானனவன் இந்திரன்மேல் முனிந்து இம்மூன்றுலகங்களையும் க்ஷணநேரத்தில் அழித்து வெட்டவெளியாகச் செய்கிறேனென்று சபதங்கூறிலோகத்திலேயெங்கும் வாயுவு பிரவேசிக்காமலடக்கிக்கொண்டு தன் புத்திரனைப்பார்த்து மிகவும் விசனமடைந்து யெடுத்துக்கொண்டுபோய் இமயகிரிசாரலில் ஒருபெருத்தகுகையினுள்பிரவேசித்து அங்குபுதல்வனை காத்துக்கொண்டிருந்தான் அப்போதுமூவுலகங்களிலும் வாயுவின் பிரவேசமில்லாததால் எறும்பு கடையானை எண்பத்துநான்குலக்ஷம் யோனிபேதங்களாயுள்ளசகலபிராணிகளும் வயிறுகள்விம்மி மரணவாதனைபொறுக்கமுடியாமல்துன்பப்பட்டன அத்தகியில்தேவர்களும் ரிஷிகளும்பிரமதேவரிடஞ் சென்று உலகத்திற்குண்டாயிருக்கும் ஆபத்தைத்தெரிவித்து வேண்டிக்கொள்ள அவரந்த தேவர்கள் ரிஷிகளுடனே வாயுவுபகவான் யிருக்கு மிடத்தைத் தேடிவந்தார். அப்போது வாயுபகவான் அந்த பிரமதேவரைக்கண்டு எழுந்துவந்து நமஸ்கரித்து வணங்கி நிற்க அக்கால் பிரமதேவன் அந்த வாயுபகவானுடைய விசனந்தீரும்படி தேறுதலைசொல்லி யுபசரித்து மூர்ச்சித்துக்கிடக்கும் அநுமானைத் தம்முடைய கையினாலே தடவிக்கொடுத்து மூர்சைதெளிவித்து எழுப்பித் தம்முடனே வந்த தேவர்களை நோக்கி நீங்களெல்லோரும் இந்த அனுமானுக்கு வரங்கள் கொடுப்பீர்களென்று அருளிச்செய்தனர்.

அநுமான் வரம்பெற்றது.

அந்தப்படியே சூரியபகவான் தன்னுடைய கிரண ஒளியிலே நூற்றிலொருபங்கு பிரகாசமுண்டாகக்கடவதென்றும், சகலவித்தைகளையும் சுலபமாகக்கிரகிக்கத்தக்க நுட்பமானயுக்தி புத்திகளும் உண்டாகக் கடவதென்றும், வரங்கொடுத்தார் வருணபகவான் கொடுத்தவரமாவது இவ்வநுமான் யுத்தகளத்திலே சத்துருக்களால்என்னுடைய பாசத்தாற்கட்டுபட்டாலும் மரணமடையா திருக்கக்கடவனென்றும் எமதருமாரசன் இவ்வநுமான்மீது என்னுடைய காலதண்டம் பட்டபோதிலும் மரணமடையாம லிருக்கக்கடவனென்றும், குபேரன் தன்னுடைய கதாயுதத்தினாலே இவ்வநுமான் சாகாதிருக்கக்கடவனென்றும்ருத்திர மூர்த்திதன்னுடைய சூலாயுதத்தினாலே அழிவில்லா திருக்கக்கடவனென்றும் விசுவகர்ம்மாவா

னவன் சகலதேவர்களின் அஸ்திர சஸ்திரங்களினலும், அபாயம டையாதிருக்கக் கடவனென்றும், வரங்கொடுத்தார்கள். பின்புபிரம தேவர்தம்முடைய பிரமதண்டத்தினலும் நாசமடையா திருக்கக்கட வனென்றும், வரங்கொடுத்து இவ்வனுமானுடைய பிதாவாகியவாயு வுபகவானைநோக்கி ஓசமீரணனே உன்னுடைய புத்திரன் இனியிந் தபட்டணத்தை யெறித்தழைத்து ராக்கதர்குலத்தை வேரறுத்து ஸ்ரீராமர் சந்தோஷத்தையடையும்படிக்கு உபசரித்து அவருடைய அனுக்கிரகத்தினலே பிரமபதத்தையடையக் கடவனென்றுஅருள் புரிந்தார்.

### அனுமான்சாபமேற்றது.

பின்பு அனுமான் மும்மூர்த்திகள்முதல் தேவர்களிடத்திலும் அழிவில்லாவரத்தைப்பெற்ற கெருவத்தினலே இந்த பதினன்கு லோகங்களிலும் தனக்குநிகரானவர்கள் ஒருவருமில்லையென்று அ கங்கரித்து நன்றுதீதுகளொன்றும் தெரியாமல் மதோன்மஸ்தனகி தவசிரேஷ்டர்களாகிய முனிவர்கள் வாசஞ்செய்துக் கொண்டிருக் கும் ஆச்சிரமங்களிலும் யாகசாலைகளிலும் புகுந்து அவர்களுக்கு சேகரித்து வைத்திருக்கும் ஓமதிரவியங்களாகிய பால், தயிர் தேன் நெய் முதலாகியதுகளைக் குடித்தும் கந்தமூலபலாதிகளைத் தின்று அவ்விடங்களை எச்சில்களாக்கியும் சந்தன புஷ்பங்களையெடுத்தெ றிந்தும் கமண்டலமுதலான பாத்திரங்களையுடைத்தும் யெடுத்தெ றிந்தும் இப்படிக்கு நானவிதமான பாலிய சேஷ்டைகளால் யாக எக்கிய ஓமகாரியங்களுக்கு இடையூறுசெய்துக்கொண்டிருந்தான், அதனல் எல்லோருமொருவாக்காக தன்னுடைய பலபராக்கிரமம் தனக்குதெரியாமற் போகக்கடவதென்று சபித்தார்கள் அப்படிக்க ந்தமகாரிஷிகளிட்டசாபத்தினலே விஷப்பல்லை பிடுங்கப்பட்டபாம் புபோல இவ்வனுமான்தன்னுடைய அகங்காரகெருவமும் கோப முமடக்கி சாந்தத்தையடைந்தவனகி அந்த தபோதனர்களுக்குப் பயந்து ஆஹா நாமென்ன காரியஞ்செய்தோம் நம்முடைய அரியா மை யிப்படியிருந்தது இந்திரன் முதலானேருடைய சாபமும் பெ ரிதல்ல திரிமூர்த்திகளின் சாபமும்பெரிதல்ல அந்தத்திரிமூர்த்திக ளுக்கும் சாபத்தைக் கொடுக்கவல்ல தபோதனர்களுடைய சாபத் தைக் கடந்தவர்க ளொருவருமில்லை இதையறிந்திருந்தும் நாமிந்த மகாரிஷிகளுக்கும் அபசாரஞ் செய்தவனனேம் என்றுலோசித்துத் தன்னைத்தானே வெறுத்துக்கொண்டு வெட்கத்தை யடைந்தவன னன்.

### அனுமான் சுக்கிரீவனுடன்றோழமைசெய்தது.

அதன்பின்பு வாலியென்றும் சுக்கிரீவனென்றும் பேர்பெற்ற இருவரும் தாரையின்பொருட்டு ஒருவருக்கொருவர் விரோதப்பட் டு சகலலோகங்களிலும் சென்று வெகுகாலமாக யுத்தம்பண்ணிக் கொண்டு வருகிறகாலத்தில் ஒருநாள் சுக்கிரீபன் வாலியினலேஅடி

பட்டுச் சகிக்காமலோடி மதங்கமாமுனிவருடைய ஆசிரமத்தைய டைந்து அவர்பாலடைக்கலம்புக அவரந்த சுக்கிரீவனுக்கு அபய ங்கொடுத்துரக்ஷிக்க அந்தவேளையில் சுக்கிரீவனை இவ்வனுமான் பி ராணசிநேகிதனாகத் தோழமைக்கொண்டு அந்தமதங்கமாமுனிவ ரையுங்கண்டுவணங்கி வித்தியார்த்தியாகி வேதவேதாங்கமுதலான சகலசாஸ்திரங்களையும் அவரால் ஓதுவிக்கவுணர்ந்துஅனுமதிபெற் றுச்சென்றார்.

அனுமார் சூரியபகவானிடம் நவவியாகரணமும்

வாசித்தது.

பின்பு அனுமான்சூரியபகவானிடஞ்சென்று வணங்கி எனக்கு நவவியாகரணங்களுக்கும் போதிக்கவேணுமென்று பிரார்த்திக்க அ தற்கந்த சூரியபகவான் அனுமானைநோக்கி அஞ்சனைசிங்கமே நான் யேறியிருக்கும் இரதமானது ஒரு சுவாசநேரத்துக்கு இருவத்தோ ராயிரத்தறுநூறு யோசனைதூரம் அதிவேகமாகச் சதா காலமுஞ் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால் ஓரிடத்திலிருந்துபாடஞ் சொல்வ தற்குச் சாவகாசமில்லை இப்படியாக ஓய்வில்லாதிருக்கும் யென்னி டத்திலே நீ வியாகரணங்கள் கற்றுகொள்ளுவதற்கு உனக்கு வல்ல மையுண்டாகில் ஓதுவிக்கிறேன் யென்றுசொல்ல அதற்கிவ்வனுமா ன் சூரியபகவானைப்பார்த்துதேவரீருடைய அக்கிரகவிசேஷத்தினா லே உம்மிடத்தில் அந்த வித்தையைக் கற்றுக்கொள்வதற்கு எனக் கு வல்லமை யுண்டாயிருக்குமென்று சொல்லியுடன்பட்டு குருவி னிடத்தில் எதிரேயிருந்து பாடங்கேட்பதுபோல சூரியபகவானுக் கெதிர்முகமாகவே அந்த ரதவேகத்துக்குப்பின்னிடாமல் ஆகாச மார்க்கத்தில்பாய்ந்தபடியாய் ஆறுதினத்திலே நவவியாகரணங்களை யும் பூரணமாய்க் கற்றுக்கொண்டான் மேலும் தயாளத்திலும் சாந் தத்திலும், சத்தியத்திலும், ஞானத்திலும், நற்குணத்திலும, பிர யத்தினஞ்செய்த காரியங்களை பாதுகாக்கும்மனோதிடத்திலும் இ வனுக்குச்சமானமான புருஷர்களொருவருமில்லை இவனாலே தரு மங்களெல்லாந்தழைத்து தேவர்களெல்லாரும்சவுக்கியத்தையடை ந்தார்கள் மேலும்பாவங்களனைத்தையும் பரிபாலிப்பவராகியராக்க தர்களெல்லாருந் துக்கத்தை யடைந்து அழிந்தார்கள் இன்னுமள வில்லாதமேன்மைபொருந்திய இவ்வனுமா னானவன் ஸ்ரீராமரு டைய திருவடிப் பணிவிடையை விரும்பி நீங்காதிருந்து சிரஞ்சீவி யாகி விருத்த பிராமண உருவத்துடன் ஸ்ரீமத் ராமாயணக்கதை பிரசங்கத்தைக் கேட்க விருப்பமுற்று எந்த யிடத்தில் நடக்கிற தோ அந்த யிடங்கள்தோறும் முன்னுதாய்வந்துசிரவணஞ்செய்து கொண்டிருந்து கதைநிருத்தப்பட்டு யாவரும்போயினபின்பு தான் போவார்.

---




திருச்சிற்றம்பலம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நிர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

—

திருச்சிற்றம்பலம்.

—*—

சிவகலாரகசியமென்னும்

# சிவமகாவைபவம்.

சிவஸ்துதி.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அகாமுத லெழுத்தென்ன வெல்லாமாகி
யளவையெலா மிகந்தெழுவா யின்றி யெங்கும்
நிகரிலருட் பெரும்போக மளித்துக் காக்கும்
நின்மலநிட் களவ்யோம நிரஞ்ச னத்தைப்
பகருமா மறைகளெலாம் வழக்கிட் டின்னும்
பரவவள ரானந்த வாழ்வை யன்ப
ரகவடிவா யெழுந்தனந்த வடிவாயோங்கி
யாளுகின்ற பரம்பொருளை யணுகி வாழ்வாம்.

## சிவப்பிரபாவம்.

உலகில் அனாதியாயுள்ள சிவ என்னும் மகாமந்திர ரூபமாகிய சைவமகா சமய பிரபாவத்தைக் குறித்து அளப்பரிய வேதாதிகலைகள் இன்னும் கோஷிக்கின்றனவென்ப வாதலால் எமதுசிற்றறிவிற் கெட்டிய சிலவற்றை சங்க்ஷேபமாகக் கூறத் தொடங்குகிறேன்.

உலகிலான்மகோடிகளின் விவேகவன்மைமென்மைக் கேற்றபடி அகச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், புறப்புறச்சமயமென அனேகசமயங்கள்தோன்றியிருக்கின்றன அச்சமயங்களுக்கெல்லாம் சிரேசாய், ஒருவராற் செய்யப்படாததாய் அச்சமயங்களுக்கு மாறிலாததாய்என்றும் ஒருபடித்தாய், திருவருட் சொரூபமாய்

வேதாதிகலைகளெல்லாங் கொழித்துக் கோஷ்டிக்கும் பெருநெறித் தாய், அத்துவிதமாய் விளங்குவது சைவசமயமேயாம்.

சிவப்பிரகாசம்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோலபேதப்
பிறப்பிலாதயிருள்வெளிபோற் பேதமுஞ்சொற்பொருள்போற்
பேதாபேதமு மின்றிப் பெருநூல்சொன்ன
அறத்தினல் விளைவதா யுடலுயிர்க்கண்ணருக்க
னறிவெளிபோற் பிறிவரு மத்துவிதமாகுஞ்
சிறப்பினிதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்கு தெரிக்கலுற்றும்

திருவிளையாடல்.

நல்குக வுயிர்கட்கெல்மாம நான்மறைச் சைவமோங்கிப்
புல்புக வுலகமெல்லாம் புரவலன் செங்கோல்வாழ்க.

தாயுமானவர்.

விண்ணவரிந்திரன் முதலோர் நாரதாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணைவல்லோ
ரெண்ணரிய சித்தர்மனு வாதிவேந்த
ரிருக்காதி மறைமுனிவ ரெல்லாமிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானேயுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சியாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத்தன்றே
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தாரென்றும்
செப்பரிய சமயநெறி யெல்லாந்தன்றன்
றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கையான
வப்பரிசா ளருமஃதே பிடித்தாலிப்பா
லடுத்தநூல் களும்விரித்தே யனுமானாதி
யொப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய்யென்ன
வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வாதார்க்கு
மிப்பரிசாஞ் சமயமுமா யல்லவாகி
யாதுசம யமும்வணங்கு மியல்பதாகி
இயல்பொன்றாந் திரியாம லியமமாதி
யெண்குணமுங்காட்டியன்பா லின்பமாகிப்

பயனருளப் பொருள்கள்பரி வாரமாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங்காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதிடாதி
மற்றங்க நால்வணங்க மௌனமோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங்கத்தி
லமர்ந்தது வைதிகசைவ மழகிதந்தோ.
அந்தோவீ ததிசயமிச் சமயம்போலின்
றறிஞரெலா நடுவறிய வணிமாவாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசாமோனம்
வைத்திருந்த மாதவர்க்கும் மற்றுமற்று
மிந்த்ராதி போகநலம் பெற்றபேர்க்கு
மிதுவன்றித் தாயகம்வே றில்லையில்லை
சந்தான கற்பகம்போ லருளைக்காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன்மார்க்கம்.

குமரகுருபர சுவாமிகள்.

அருள்வித்திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேதமென்னும் பாதபம் வளர்த்தனை
பாலபந்தன்னிற் படுபயன் பலவே-அவற்றுள்
இலைகொண்டு வந்தனர் பலரேயிலையொரீஇத்
தளிர் கொண்டு வந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர்கொண்டு வந்தனர் பலரே
அவ்வா றுருப்பு மிவ்வாறுபயப்ப
ஒரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆராவின்ப வருங்கனி பிழிந்து
சாரங்கொண்ட சைவசித்தாந்தம்.

அருணைக் கலம்பகம்

சைவந்தின் மேற்சமயம் வேறிலைபதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறை
என் றளவிலா வறிஞர்களிசைத்தனர்.

இத் தகைப்பெரும் பிரபாவமுடைய தெய்வத் திருநெறிச் சைவசமயத் திறைவர் யாரோவென்னில் பிறப்பிறப்பின் வசத்தரா யுள்ள மும்மூர்த்திகளைப்போலாது.

திருவாசகம்.

ஒருநாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ.

உந்தியார்.

அகளமா யாரு மறிவதப்பொருள்.

களிற்றுப்படியார்.

ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று

எனக் கூறிப்போந்தபடி நாமரூபகுணங்குறிகளொன்றுமில்லாது என்றும் நின்மலம், நிரஞ்சனம், நித்தியம், சதானந்தம், தற்பரம் முதலிய இலக்கணங்களை வாய்ந்து அகலமாய் (சிவம்) என்னும்பெயரினால் விளங்கப்படுவனவாம்.

முன்னர் எமதுதயாவிபவ சாக்ஷத் சிவபெருமான் ஸ்ரீநந்திதேவர் முதலினோருக் குபதேசித்த பக்த்சாராமுதத்தை, பின்னர் சவுனக நைமிசாரண்யாதி முனிவர்களுக்கு ஸ்ரீவியாசாதிமுனிவர்களாலனுக்கிரகித்தபடி கூறப்புகின் அதுவே ஓர் பெருநூலாமாதலின் சிறிது கூறுதும்.

சிவமென்னும்பதம், மகாமந்திர ரூபமாக ஆன்மாக்களஞ்ஞானாந்தகாரங்களை யொழித்து முத்தியைத் தருவதேயல்லாது, அதற்கு அர்த்தம் இன்னதென்று இன்னும் பலமறைகளே வழக்கிடுகின்றன அதனை முற்றுமுணர்ந்த முனிவர்களும் அனுபவ பூர்வகமாய் அறியப்படுவதல்லாது அறிந்தவண்ணஞ் சொல்லப்படுவதல்ல "அதுவாலதுவே செல்லும்" என்று அவனருளே கண்ணாகக்காண்பதல்லால் இப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவனென்றெழுதிக் காட்டொண்ணாதே, என்றும், சித்தமுஞ்செல்லாச் சேட்சியோன் காண்க, என்று, கூறிக் களித்தனரேயன்றி வேறோரிலக்கணங் கூறவில்லை: அன்றி; சௌபானபக்ஷமாகக் கூறிய சைவபேதங்களுள்ளுங் கூறாதுவிட்டனரே யென்னின், தெய்வமொன் றுண்டெனின் அதன் றிருவருட்பிரயாவமிப்படியென்று கூறலே வழக்கன்றி, அஃதோர் பொருளென்னின்.

எங்கேயிருப்பது
அதன்பேரென்ன
அதன்செயலென்ன

அதன்குணமென்ன
அதையின்றூரார்
அதிருந்தகாலமெப்போ
அதன்உறவினரெவர்.

முதலிய (குணங்குறியாதிய) வைகளைக் கூறநேரிடும், நிறம், குணம், பெயர், குலம், செயல், காலம் இடம் முதலிய இவற்றை யுடையதற்கு சுகதுக்க முதலியன வுளதாகலான் அது கடவுளுக் கிலக்கண மாகா.

சாஸ்திரங்களும், சர்வஞ்ஞத்துவம், சர்வேர்ச்சுரத்துவம், சர்வியந்திருத்துவம், சர்வாந்தர்யாமித்துவம், சர்வகற்பிதத்துவம், என்னுந் தெய்வத் திருவருட் குணங்களையே யன்றி வேறில்லாத லால் சிவமென்னும் மகா வாக்கியத்திற்கு பிரதியர்த்தம்வேறில்லை. ஆயினும், அங்கிங்கெனுது எங்கும்பிரகாசமாயானந்த பூர்த்தியாகி ஆன்ம கோடிகளுள்ளும் அபூதமா யிருந் தாண்டருள் புரியும் இறைவர்.

சூ த ச ங் கி தை.

மறைமுதறனக்கு நாமரூபங்கள் மருவுதலில்லையே யெனினும்
கறையறவிளங்கு மாயையினு கற்பிக்கப் பட்டனவாகு
முறைநவச்சிவன் மாதேவன் முற்பெயற்களுருத்திர னுமங்களாகு
மறைப்பரபிரம முதற்பெயர் பரத்துவளர் வாசகமாமால்.

தி ரு வு ந் தி யா ர்.

அகளமா யாரு மறிவறிதப்பொருள்
சகளமாம் வந்ததென் றுந்திபற
தாஞகத் தந்ததென் றுந்திபற.

சி த் தி யா ர்.

அரிவரியான் றனையடைய வாக்கையாக்கி
அங்கங்கேவுயிர்க்குயிரா யறிவுகொடுத்தருளால்செறிதலினுல்

கு ற ள்.

அகரமுதல வெழுத்தெல்லாமாதி
பகவன் முதற்றேயுலகு.

எனக்கூறியபடி உலகமுதற் பொருளாம், சிவமுதற்பிருதிவியீறதாய் விளங்கும் யாவுங் கருணையாலோங்கி நாமரூப வசத்தாய் அ

வற்றுள்ளும் அபூதமாய், அவனன்றியோ ரணுவுமசையா தென்பா ரெல்லாமியக்கி.

> உருமேனி தரித்துக்கொண்ட தென்றலு முருவிறந்த
> வருமேனி யதுவுங்கண்டோ மருவுரு வானபோது
> திருமேனி வுபயம்பெற்றேஞ் செப்பிய மூன்றுநந்தங்
> கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுநாமே.

திருவிளையாடல்.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்றகேள்வி, வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலா, யெல்லாமா யல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டிச், சொல்லாமற்சொன்னவரை நினையாம நினைந்துபவத் தொடக்கைவெல்வாம்.

என்றபடி ஆன்மாக்களுஜ்ஜீவனார்த்தம் மூர்த்தி; தலம், தீர்த்தமாயும், குருலிங்க சங்கமமாயும் அடியாருள்ளக்குறிப்பிற்கேட்க பல்வேறுவடிவங்களாயுந் திருவுருக் கொண்ட மூர்த்தபேதங்களும், லீலாவைபவங்களும், திருவருட் பிரபாவங்களும் அனந்தமாகும். அவற்றுள் சிலவற்றைமாத்திரமே எளிதிலுணருமாறுசங்கிரகமாகக் கூறுமாறுற்றனன் என்னை யெனின்.

பிறப்பு.

மற்றேனைய தேவர்களைப்போல நமது அருட்பெரும் பரம் பொருளுக்கு ஜனனமரண, சுகதுக்காதி சங்கற்பங்களென்று மெக்காலத்தினுமில்லை

> கன்னபுர மாலே கடவுளினும் நீயதிகம்
> உன்னிமோ நானதிக மொன்றுகேள் - முன்னம்
> உன்பிறப்போபத்து வுயர்சிவனுக் கொன்றுமிலை
> என்பிறப்போ வெண்ணத்தலையாது.

என்றும் பிறப்பொடு மிறப்பு மில்லான் எனவும் புலவர் பெருந்தகையாரளப்பரியா ரிசைத்துள்ளார்ஆயின், ஸ்ரீவல்லாளமகாராஜனுக்கும் கௌரி யென்பாளு (திருவிளையாடலில்) க்கும், பட்டினத்தடிகளுக்கும், இன்னனையாருக்கும் புத்திரராகத் தோன்றினரே யென்னின் வாயிலா னுதித்தா ரில்லையே சிலரறியாமையாற் கற்பிதமாகக் கூறினரேனும் வேதாதிகலைக ளங்கீகரிக்கத் தக்கதாகா ஆன

நாலேயே வேதம்பொதுவாகத்தியானரூபமாகவும், ஆகமம் அதனை விரித்து அறியார்கள் சகலரூபமாய் வழிபட்டுய்யுமாறு கிரியாரூபமாகவும், புராணங்கள் அம்மூர்த்தபேதங்களை யடியாரும் அவர்மாபினரும் சிரத்தாபக்தியினரா யடையுமாறு கதாரூபமாகவும் கூறப்பட்டிருக்கின்றன.

ஆனால்சாஸ்திரங்களுள்ளே அனேகதிரு வுருவங்களும், அங்கலக்ஷணங்களும், மணியுடைகளும், மனைமகவாதி சார்புகளும் இடம்தொழிலாதிகளும் கூறப்பட்டுள்ளதே. அவையாதோ வென்னின், மேற்கூறியபடி தம்மைவழிபடும் அன்பர்கள் கோரியவாறு எழுந்தருளி யாட்கொண்ட மூர்த்திபேதங்களாம். இது க்லாதீதமாக அடியார் குறிப்புநெறியே வெவ்வேறுவடிவு பூண்டமையால், செயலும், அருளும் பலவாகும். அவைக ளங்கன முண்டாயதெவ்வாறென்னின்.

லீலாபேதங்கள்.

உலகில் ஆன்மாக்கள் அனேகராயும், அஞ்ஞானிகளாயும், ஞானிகளாயும், பாவிகளாயும், புண்ணியராயும், இருவினைக்கிடான அநேகசரீரமுடையவர்களாயும் புவன போகங்களை யனுபவிப்பவராயும் கிம்ப்போன அனந்த சனன மரணவசத்தராயும், யோகிகளாயும், பலவேறுவகைப்பட்டவராயும் வதியும் ஆன்மாக்க ளுய்யுமாறு மானிடர்போலும், மன்னர் போலும், வானவர் போலும், மிருகமாயும், விருத்தராயும், பாலராயும், அடியார்போலும் அநந்த திருவுருவங்களைபூண்டு கடாக்ஷிக்கப் புறப்பட்டு இகபரார்த்தங்களை யடையும்படிக்கி உலகையும், உலகத்துள் ஆன்மாக்களின் சுகத்திற்கேதுவான பதார்த்தங்களையும், அவைகளைத் தெரிந் தனுபவிக்கத்தக்க விவேகத்தையும், அறிவிற் கெட்டாவிடத் தறிந்து நடக்குமாறுவேதாதி கலைகளையும், அக்கலைகளிற் சந்தேகந் தோன்றிய விடத்திற் றெளியுமாறு ஆசாரிய பீடங்களையும், இன்னும் உலகிற் காதாரணமான எவ்வகைப் பொருள்களையு மளித்து, ஆன்மாக்களுள்ளந்தோறும் அபூதமாயிருந்தும், ஆன்மாக்க ளுணராவிடத்து தாமே அவரவர்க் கதுவதுவாயு மிருந்த திருக்கோலங்களே மூர்த்தபேதங்களாம் அவற்றுள் சிலவற்றைக் கூறுவாம்.

திருவிரிஞ்சையில் ! ஓர் செட்டியாருக்கு வழிகாட்டி மார்க்கசகாயரென்றும், திரிசிரபுரியில், ஓர்பெண்ணுக்குத் தாய்போ லெழுந்

தருளி பிரசவநோயினைத்தீர்த்தமையால் தாயுமானவரென்றும்,வேளூரில் ஆன்மபிணியைத் தீர்த்தலால் வைத்தியநாதரென்றும், மதுரையில் யானைக்கருளியதால் ஐராவதேச்சுரரென்றும், நாவல்நீழலில் யானையாதிகளுக் கருளியதால் ஜம்புகேசுரரென்றும், பலமூர்த்தங்களைக் கொண்டதன்றி, மாமனாய்வந்து வழக்குரைத்தும், மாணிக்கம்விற்றும், விரகுசுமந்தும் மண்வெட்டியும்,வேடவடிவுகொண்டும், பாலின்றி வருந்திய பன்றிக்குட்டிகளுய்யுமாறு பால்கொடுத்தும், மருத்துவஞ்செய்தும், தண்ணீர்ப்பந்தல் வைத்தும், சோறளித்தும், குதிரையோட்டியும், பொன்கொடுத்தும், அரசாண்டும், இதுபோன்ற அளப்பரிய திருவிளையாடல்களைச்செய்தும் விளங்கினர் அவ்வாறுகொண்டதிருக்கோலங்களில் காணப்பட்ட சிவசின்னங்களனந்தமாகும் அவற்றுள்.

கங்கை.

ஒருக்கால் கயிலையி லுமையம்மையார் சிவபெருமான் விழிகளை ஓர் விளையாட்டாகப் பின்வந்து மூடினர் உடனே உலகங்களெல்லாம் இருள்மூடிக்கொண்டது. அதனால் தேவர்முனிவரெல்லாம் தங்கள் கருமங்களும், பகலிரவாதிபொழுதுகளும்தோன்றாமையால், பெருமானிடத்துற்று இறைஞ்ச, அக்கால்பரமன்தமது நுதல்விழியைத் திறந்து பழயபடி உலகை விளங்கச் செய்தனர். இதனையுணர்ந்த அம்மையார் அபசாரம் நேர்ந்ததே யெனப்பயந்து அச்சத்தோடு கையையெடுக்க அக்கால் தம்பத்து விரல்களினின்றும் நீர்த்துளிகள்மகாபிரளயம்போலும்பெருகிகடல்வழிகொள்ளநேர்ந்தன. இப்பெரும் வெள்ளப்பெருக்கிற் கஞ்சியபிரமாதி தேவர்களெல்லாம் இறையவன்மாட்டடைந்துதெரிவிக்க, பெருமான்அவ்வெள்ளத்தையழைத்துச் சடையிற் றரித்து உலகுக்கோர் கெடுதியும் நேராவண்ணம் ரக்ஷித்தனர். இது அம்மையாருடைய சிறந்த கையினின்றும் உண்டானமையால் கங்கையெனப்பெயரும், அதை யணிந்ததால் சிவபெருமானுக்குக் கங்காதரர் என்றோர்பெயரும் உண்டாயின. பின்னர் இறைவன்தரித்ததனை அரியயனிந்திராதிகள் தத்தம் பதிகளுக்கும் சிறிதுகொண்டு சென்றனர்.

திருமால் வாமனவதாரத்தில் மாவலிபால் மூவடிமண் வேண்டி உலகையளந்த பொழுது அண்டம் பிளந்தொழுகிய ஆகாயகங்கை

மாளவதேசவழியாய் சமுத்திரத் தடைந்தன. இந்நியதியறியா வை ணவர் சிவபிரா னணிந்தனரெனக் குழறிவழிகின்றனர். அவைமலங் கொழுக்க வாய்ப்பிதற்றும் பித்தென்க.

பூலோககங்கை.

அயோத்தியையாளும் சகரசக்ரவர்த்தி விடுத்த அசுவமேதப் புரவியை தம்வாழ் வழிதலை நோக்கிய இந்திரன் வஞ்சகத்தாற் பிடி த்து பாதலத்தில் தவம்புரியுங்கபிலமுனிவரிடங்கூட்டிப்போயினன் இதனை யறியாத சக்ரவர்த்தியின் மைந்த ரறுபதினாயிரவரும் எங்கு ந்தேடிக்காணாது பாதலத்தைத் தோண்டி முனிவர் பக்கலி லிருக்க க்கண்டுமுனிவர் வஞ்சமேயென முனிவரைத்தூஷிக்க முனிவர்விழி த்து 60,000-ம்பேரையும் சாம்பராகச் சபித்தனர், இதனை யறிந்த சகரன் தம் பௌத்திரனால் புரவியைக் கொணர்ந்து யாகத்தை முடித்தனன். அதன்பின் அவன் சந்ததியாரில்பகீரதன் என்பானொ ருவன் தோன்றி தம்முன்னோர்களாகிய சகரர்கள் சாம்பராயினமை யை யறிந்து 10,000-வருடம் பிரமனை நோக்கித் தவமியற்ற பிரம ன் பிரத்தியட்சமாகி ஏ! பகீரத நீ விரும்பிவாறுதற்கு சாட்சாத் சங்கரன் சடாமுடியினின்றும் கங்கை பரிசித்தாலன்றி யாகாது. அ ங்ஙனம்வருமேல் உலகழியும். அதனையடக்கற்கு இறைவனன்றி மற் றொராலாவதில்லை. ஆதலின் இறைவனை நோக்கித் தவம்புரிகவெனச் சென்றனன் இப்பால் பகீரதன் சிவபிரானைநோக்கித்தவமாற்றலும் பெருமான்கங்கையிலோர்துளிவிட்டனர். அக்கங்கைநதியுருவேற்று சகரர்கள் சாம்பரிற்படர்ந்து முத்தியிற் சேர்த்தன, அதனால் பகீரதி யென்றும் இக்கங்கைதங்கிய கடலைச் சாகரர் தோண்டியதாற் சாக ரமென்றுங் கூறியதென்க.

சந்திரன்.

தக்கன் அசுவனிமுதலிய 27-பெண்களைப்பெற்று சந்திரனுக் கு மணம்புணர்த்தி சந்திரனைநோக்கி நீ யிந்த 27-பேரிடத்திலும்பா ரபட்சமின்றி யிருப்பாயென்று கூறினன். சிந்நாளிக்கி சந்திரன் கார்த்திகை, ரோகணி யிவ்விருவரிடத்தில் மாத்திரம்பற்றுடையனா யிருந்தமையால், மற்றமாதர்கள் அதனை தந்தைபால் கூறத் தக்கன் பின்னும் சந்திரனை நோக்கி வற்புறுத்தினன். சந்திரன் மீண்டும்கே

ளாது பழயபடியே யிருந்தமையால், மற்ற 27-ஸ்ரீகளும் தந்தை யாகிய தக்கனிடத்து மீண்டுந் தெரிவிக்க, இதைக்கேட்ட தக்கன் சினந்து சந்திரன் நாளுக்கொருகலையாய்க்குறைந்து இறக்கக்கடவனெனச் சாபமிடலும், சந்திரனவ்வாறே கலைகளெல்லாங்குறைந்து ஒரு கலையோடுவருந்தி இந்திரனிடஞ்செல்ல, இந்திரன் பிரமனிடம் விடுக்க, பிரமன் அங்ஙனம் சிவன்மாட்டனுப்ப, சந்திரன்கயிலைக்கெய்தி கருணாநிதியாகிய பெருமானிடத்து விண்ணப்பிக்க பெருமான் யாவுங்கேட்டு ஏ? சந்த்ரா நீ நமது சடைமுடியிலிருக்கக்கடவை இருக்கின் தக்கன்சாபத்தால் நாளுக்கொருகலையாகவளர்ந்தும் முடிவில் ஒருகலைமாத்திர முன்னைவிட்டுநீங்காமலு மிருக்கக்கடவை யென்று வரமளித்து சடாமுடியினிடத்து தரித்தனினர். இதனால் சந்திரசேகரரெனப்பெற்றனர்.

### பிக்ஷாடனமூர்த்தம்.

முன்னோர் கற்பத்தில், தாருகாவனத்தில் வேத வேள்விகளாற் சிறந்த முனிவரர் அனேக ரிருந்தனர், அவர்கள் தம்மைத்தாமே வல்லவராய்க்களித்து, தாம்பரவும் வேதவேள்விகளே முத்திதருவதாய்க்கருதி இறைவன்பாற்சிறிதும் புத்தியில்லராய் அவமேபலபகல் கழித்து, தவநெறியொழித்து நவமாய்எண்ணில்லாத யாகாதிகளைச்செய்துவருங்கால், உயர்வொப்பில்லா வுமையொருபாகன் ஐயோ முனிவரர் வீணாள்கழித்து வாணாட் பெபராகின்றார் எங்கனமுய்வாரெனக் கருணையாலாளத் திருவுளங்கொண்டு திருமாலை நோக்கி மாலே முன்பாற்கடல் கடைந்தநாள் கொண்ட மோகினி யுருவைத் தாங்கிமுனிவராண்மையையழிக்கக்கடவையென்றிசைத்து தாமோர் நவவுருவைத்தாங்கிகையிற் பலியோடும் சூலமுமேந்தி இருடிபத்தினிகள்வசிக்கும்வீதியில்மெல்லநடந்து இனியவோசையோடும்படி பலியேற்பார்போல் ஏகரூபியாய்ச் செல்லுவா ராயினர். இவ்வினிய பண்ணோசையை அம்முனிமனையாற்கேட்டுவாயிலில்வந்து பெருமான் பிக்ஷாடனத்திருக்கோலத்தைத்தரிசித்து, அவரதுபேரழகையும் இன்னோசையையுமுணர்ந்து இச்சைகூர்ந்து வருந்துவாரும்,காமத்தாற்பிணிக்கப்பட்டெதிர் நோக்குவாரும், கலைநெகிழ்வாரும், வளைசோர்வாரும் உள்ளங்கசிந்துருகுவாரும், நாணழிவாரும், புணரப்பிரார்த்திப்பாரும் ஐயமிடுவாருமாயினர் இங்ஙனம்வருந்தும்நங்கை

யர்பால் இறைவன் மாயாஜால வித்தையென்ன 4-8000-ம் புதல்வர் தோன்றி இறைவனைப்பணிய இறைவன் நீவிர்எம்மைக்கோரித் தவம்புரியுங்கள் எனக்கூறிப் புறம்போயினர்.

திருமால் பெருமான் திருவாணையைப் பெரிதுவந்து முன்னே மோகினி உருவைத்தாங்கி முனிவரர் பாலெய்த, முனிவர்கள் மோகினியுருவைக்கண்டு கரைகாணு காமத்தாழ்ந்து, யாகாதிகருமங்களை விடுத்து தத்தம் பெண்டிரை அவாவிச் சென்று காணுழிக் கற்பழிந்தாராய்க் காணப்படுதலின் ஈதென்னையென் றுள்ளத்துணர்ந்து திருமாலே மோகினி யுருக்கொண்டு தவநிலைகுலைத்தாரென்றும் நம்பனேபிக்ஷாடனவுருக்கொண்டு மாதர் கற்பழித்தாரென்றுந் தேறி அந்தோ பிராயச் சித்தஞ் செய்தற்கு மேலாப் பழிப்பினவாயிற்றே வென்றுக்கிரமித்து சங்கரனை யழிக்கின்றோமெனச் சாதங்கூறி, ஓர் அபிசாரவேள்விசெய்தனர்.

## புலியாடை.

அதினின்று, பேரிடியும், ஊழித்தீயும், ஒன்றுசேர்ந்ததென்றுக்கருச்சனையும், அக்கினிக்கண்ணும், மகாவுக்கிரரூபமும், மலைபோற்பருத்தவுருவும்தாங்கிய ஓர் புலிதோன்றியது அதனைநோக்கி நீ விரைவில் உமாபதியைக் கொல்லுகவென விடுக்க, அவ்வாறே புலி பரமனைநோக்கி உலகமஞ்சும்படி செல்லுகையில், எல்லாம் வல்ல இறைவன் புலியினெதிரே சென்று அதனைக் கொன்று அதன் சருமத்தையுரித்து ஆடைபோலு மறையிலணிந்தனர்.

## மழு.

பின்னர் அவ்யாகத்தினின்று ஓர் மழு தோன்றியது அதனையும்முனிவர் சம்புவைச் சங்கரிக்கவெனவிடுப்ப அங்ஙனம் முனிவரானை கடவாதுஎமது திருவருட் பெருஞ் சோதியினெதிரிநெருங்கலும் பெருமான் வலக்கையிற் பற்றி நற்றவமுடையா யிங்ஙனே நமக்கோர்படையாகுகவெனத் தரித்தருளினர்.

## மான்.

அதன்பின் அவ் வோமாக்கினியினின்று ஈண்டுமோர் மான் தோன்றின. அதனையும் முனிவரர் சதாசிவ னஞ்சாத்திரத்தை யழிக்கக்கடவையென விடுப்ப அம்மான் சராசர மனைத்தும் நடுங்க

ஆக்ரமித்து ஆகாயவெல்லையி னுலகங்கள் வருந்துமா ரோலமிட்டு வருதலுங் கண்ணுதல்கண்டு ஆசிகூறித் தம் இடக்கரத்தேந்தினர்.

## அரவம்.

பின்னரோர்கால், காசிபர் மனவியரில் கத்துரு, விந்தையென் னுமிருவரும் தத்தம் அழகைச்சிலாகித்து அழகில்லாள் சிறைபடு வதாகச்சரதமிட்டு முனிவரை யடுத்துக்கேட்டலும் முனிவர் கத் துருசிறந்தாளென விந்தை சிறைபட்டு சிறையாற்ளுது விந்தைவரு ந்தி, சிறைவிடுக்கவெனக்கோரலும் கத்துரு வானுலகிலுள்ள அமு தளிப்பின்விடுப்பாமென ஆகுகவெனக்கூறி விந்தைதங்குமாரனுகிய கருடனுக்குணர்த்த கருடன் வானவர்காவலையழித்து அமுதங்கொ ணர்ந்து வருங்கால், திருமால்எதிர்சென்றுநீமிக்கவன்மையன்யாது வரம்வேண்டுமென, திருமால்சமயமிதுவே யெனக்களித்துக் கருட னே நீயென்றும் எனக்குவாகனமாகவும், சர்ப்பங்களுக்கமுதூட்டா திருக்கவும் வேண்டுமென, அப்படியேகருடன் சம்மதித்து பாம்பு கட் கமுதூட்டாவகைகூறித் தாயினிடம்கலசத்தை கொடுத்து சி றைவிடுத்து தனது மாற்ளுந்தாயாகியகத்துருவைப்பெற்ற அரவங் களைக்கொன்றுவதைத்தலோடு, சிவபூசையும்பெற்று திருமாலுக்கு வாகனமாயினன். இதையறிந்த பாம்புகள் நாமும் சிவனையடைந்து என்றுங்கருடனுலும சிக்காவகை யடைவாமென்றிரைஞ்சி சிவார்ச் சினை செய்தலும், சிவபெருமான் அரவாருச்சனைக் கிரங்கி அப்பா ம்பினங்களை ஆபரணமாக அணிந்தனர்.

## கங்கணம், அரைநாண், காலணி, கடிசூத்திரம்.

முன் தாருகாவனத்துரிஷிகள் புலி, மான், மழு இவைகளை ஏ வியபின்னர், அவ்வபிசாரஹோமத்தினின்று சிவன்மேனுள் மேவிய வையனைத்தும் பயனற்றதாயின வென்றுத்தேசித்து வேண்டும்சர்ப் பக்கூட்டங்களைச் சிருஷ்டித்தேவினுர்கள் அவ்வரவங்கள் மகாபிர ளயம்போலும் விஷச்சுவாலைகளை வீசி மிக்க ஆவேசத்தோடும் நெ ருங்கலும் சந்த்ரசேகரர் என்னே! கொடுந்தன்மையுற்றீரஞ்சற்க இ தோயாமணிந்துள்ள சர்ப்பவினத்தோடும் வாழ்வீராகவென ஆசி

கூறி அவ்வரவங்களை கையினிடத்து கங்கணமாகவும், காலினிடத்து வீரகடைபோலும் இடையில் அரைநாணுகவும், கடிசூத்திரமாகவுந் தரித்தனர்.

அன்றி சேடன்முதலினேர், ஓர்காலத்தபயமாக வடைந்ததாகவும் அவற்றையுமணிந்ததாகவும் பிறசரிதங்களும் மிக்குளவாயினும் என்றும் நிலையாய் அணிவகையிற்சிறப்புற்றவகைகளிவையே யெனக்கூறுப.

## பூதகணங்கள்.

அத்தாருகாவனமுனிவர்கள் என்னைசிவன்மிக்கஜாலமுடையான்போலும் நாமனுப்பியவனைத்தும் அவன்முன் பயனற்றவாகின்றன ஆகுகவெனக்கொழுந்தழலினில் பூதவெள்ளங்களைச் சிருட்டித்துகுமுகனைக்கொள்ளுகவென விடுப்ப, பூதகணங்கள் அஞ்சாராய், வெடிகுரலோசையோடும் படபடுத்து உக்கிரத்தோடெதிர்வரலும் சிவபிரான் அவர்களைக்கருணையோடுமழைத்து, நீங்கள் மிக்கநல்லவர்களே நமதிடம்வந்தமைக்கு ஒருறுதி வேண்டுமென்ரு இன்றுமுதல் நமதுசேனையாக இருக்கக்கடவீராக எனக்கூற, அங்ஙனேபூதகணங்கள் இறைவன் திருவாக்கையைக் கடவாதிருந்தனர்.

## வெண்டலை.

பின்னர் முனிவர் தாங்கள் கோரியபடியாகாமையின் மிக்கமந்திரவன்மையோடும் பீதிகொள்ளுந்தன்மைத்தாய் புன்னகையோடு கூடியதாய் ஓர்வெண்டலையை யுண்டுசெய்துவிடுப்ப, அதனைபெருமான் கரத்தாற்பற்றிச்சிரசிலணிந்தனரென்ப.

## துடி உடுக்கை.

அப்பால் முனிவர்கள் தம்முயற்சிகளனைத்தும் வீணுதலைக்கருதி அச்செயலனைத்திற்குங் காரணமாயுள்ள மந்திரங்களை விடுப்ப அவையாவும் ஒன்றுசேர்ந்து உடுக்கை போலும் வடிவுடையதாய் பெருமுழக்கத்துடனே கயிலாசபதியின்முன்னேசெல்ல பெருமான்கரத்தாற்பற்றி இனிய ஓசையைமுழக்குகவென ஆக்யாபித்தனர்

## முயலகன் அக்கினி.

மீண்டும் முனிவர்கள் எவ்வகையாலுஞ் சிவன் சாகாது அனைத்துந் தன்வயங் கொள்ளுகின்றனன் பேராற்றலுடையான் போலு

மெனச்சாதங்கூறி மிக்ககோபாவேசத்துடன் மறுபடியும் வேறோ ர்யாகமியற்ற அதினின்றும் ஓர்சூரனுதித்தனன் (அவன்பேர் முய லகன்) அம்முயலகனையும் அந்த யாகாக்கினியையும் நோக்கிமற்ற வைகள் போலாது எவ்விதத்துஞ் சாம்பசிவனைக் கொல்லக்கடவீ ர்களெனவிடுப்ப, அவ்வண்ணமுனிவர் கூற்றைக்கடவாது எதிர்வரு தலும் சிவபிரான் அக்கினியைக் கரத்திற்றாங்கியும் முயலகனைக் கீ ழேதள்ளிதமது வலதுபாதத்தான் மிதித்தருளினர் முயலகன் வே றுகதியின்றிமுதுகையசைத்தலும் சிவனார்பாதத்தாலழுத்திநடித்த னர். பின்னர்முனிவர்கள் அனேகஞ்சாபமிட அவைகள் அவரிடஞ் செல்லாமைகண்டு சிவபத்தராய் நற்றவம்புரிந்து சைவநெறி நின்று முத்தியடைந்தனர்.

## யானைத்தோல்.

கயாசுரனென்னு மரக்கனொருவன் பிரமன் மாட்டநந்தவரங் களையேற்று தானவரையும் வானவரையும் இம்சைசெய்து மண்ணு லகத்தவரையும் வருத்தி காசிப்பதியையடைந்து தன்ஆண்மையை க்காட்ட அதற்கு முன்னமே இவன்கொடுமைகளை வானவர்கள் கா சியினடைந்து சிவபெருமானிடத்து விண்ணப்பித்திருத்தலின் சி வபெருமான் இக்கயாசுரனெதிரில்வந்து வடவாக்கினியு மஞ்சத்த க்ககோபாவேசத்துடன் அக்கினிகளை விழியினிடமாகச்சிந்திகயா சுரனைப்பிடித்துக் கீழேதள்ளி அவன்சிரத்தைமிதித்துத் தம்திருந கங்களாற் பிளந்து அவன் தோலையுரித்துத்தரித்தருளினர் இதனை யறிந்து முன்வருந்தியமண்ணுலகத்தவரும், வானோரும் தானவரு ம் இன்றன்றோநமதிறைவனல் சுகமுற்றனமெனத் தொழுதிறைஞ் சினர்.

## கபாலம்.

இறைவன் அடியார் மாட்டுமானிடவுருக்கொண்டநந்த முறை தோன்றினர் அக்காலங்களில் அடியார்போலும் ;கையிற்றண்டமும் கபாலமுந் தாங்கினர் அன்றி ஓர்கால் தாருகாவனமுனிவ ரிருமாப் பையொழிக்குமாறு திகம்பரராய் பிக்ஷாடனத் திருவுருவைத்தா ங்கி யாசிப்பார்போலும் சென்றனர் யாசிப்பார் கரபாத்திர மேந்து வது முறைமைபற்றிப் பலியேற்பதற்குஓர் காலந்தாங்கினர் என்க.

### சுடலையாடி யென்பது.

திருமாலுக்குச் சிவாக்கினையின்படி விஷ்ணுகற்பம் ஒன்றுகழி யின் சர்வான்மாக்களுடன் சர்வலோகங்களும் மயானரூபமாகும் அக்கால் சிவபெருமானொருவரே நடம்புரிவர் இக்காரணத்தாலே யே இறைவனைச் சுடலையாடியென்பார்.

### தருமவிடை.

இத்தகைய தேயுப்பிரளயத்தில் சகலதருமங்கட்கும் அதிதே வதையாகிய தருமதேவதை தாமும் இறக்கவருந் தீங்கினைக் கருதி ஓர் ரிஷபவடிவையேற்று சங்கரன் பாலணைந்து ஐயனே பிரளயஞ் சம்பவித்தலின் இறத்தற்கஞ்சி யடைந்தனன் ஆதலின் அடியேம் இறவாவகையும் சுவாமிகளைச் சுமக்கும்பேறும் சுமத்தற்காம் வன் மையும் பாலித்தருளல் வேண்டுமென் றிரைஞ்ச எண்ணிறு ரெண் ணி யாங்கின்னருள்புரியு முன்னவன் ஏ-அறத்திருவே அஞ்சற்க வென்றபயமளித்து அதன் சிரமேற்றமது அபயாஸ்தத்தைச் சூட் டி எண்ணியாங்காகுக யாம் நின்னை நீங்கேம் நீயே எமக்குவாகன மாகுகவென்றிசைத்து அங்கீகரித்தனர் ஆதலால் சிவபெருமான் பரிபக்குவமுற்ற ஆன்மகோடிகட்கருளுநாள் தருமஸ்ரூபத்தோடு ம் காக்ஷித்தருவார்போலும் ரிஷபத்தோடு மெழுந்தருளுதலென்க.

### மால்விடை.

முன்னொர்கற்பத்தில் எமதிறைவன் தேவர்கள் வேண்டுகோ ளால் திரிபுரதகனஞ் செய்தற்குசூரியசந்திரர்களையே சக்ரமாகவும் மேருமலையைவில்லாகவுந் திருமாலை அம்பாகவுங்கொண்டு இரதத் திலாரோகணிக்கத் திருவுளங்கொண்டகாலத்து அச்சு முறிந்தன அக்கால் திருமாலுணர்ந்து எம்பெருமான்கிருபா விசேடத்தாலாற் றஅன்பினை யுடையராய் ஓர் வெண்மையாயரிஷபவுருவாகித்தாங்கி ஆ ஆ நாம்பெற்றபேறேபேறு நம்தவமேதவம் நம்மைப்போல்யார் இறைவனைத்தாங்கும் வண்மையினர் இனிநமக்குயாதுகுறை யென் றிவ்வாறிருமாப்புற்று மகிழ்ந்தனர் இதனைபெருமான் திருவுள்ளக் குறிப்பாலறிந்துஓர்லீலையாக நடித்தனர் அதற்காற்றாது திருமால்இ றைவனைச் சுமத்தற்கேலாது வருந்திவிழிகள்பிதுங்க செவிவாய்களி லிரத்தஞ்சிந்த கால்மடிய தலைநாண விழுந்து சோர்தலும் வெள்ளி விடையை நோக்கி மாலே யாதுவரம் வேண்டுமென திருமால் ஐய

னே அபாயம்காத்தருளுக. தேவரீருக்கு முன்னமேயே தருமவிடை யொன்றிருப்பினும் மால்விடை யெனயானுந் தேவரீரைத்தாங்கும் வன்மையையளித்து அருளுகவென இறப்ப, அடியாருள்ளக்கோயி லுடைய சந்தானகற்பகமனையாராகும்நமது பரமபதிபுன்னகையோ டுவந்து திருமால் விரும்பியவாறறிய வரத்தையளித்து அன்றுமுத ல் வெள்விடையாகித் தாங்கப்பெற்றனர்.

---

குதிரைவாகனம்.

முன் ஓர் சமயம்சைவசமையாசாரியர்நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகசுவாமிகள் மதுரைபாண்டியராஜனிடம் மந்திரியாக விருந்தகாலத்தில், பாண்டியன் அமைச்சரைநோக்கி ஐயா நம் அர சாங்கத்திற் கமைதியான குதிரைகளைக் கொள்ள வேண்டுமென்ன, அங்ஙனமே வருவிப்பா மென்றிசைத்து வேண்டும்திரவியங்களோடு கீழ்க்கடலை நோக்கிச்செல்ல சாக்ஷாத்சங்கரன் மாணிக்கவாசகரது தீவிரதாத்தை நோக்கித்திருப்பெருந்துறையிற் குருமூர்த்தமா யெ ழுந்தருளி உபதேசஞ்செய்தாண்டனர் அதன்பின், சுவாமிகள் மன் னன் திரவியமனைத்தும் அடியார்களுக்கும் சிவதரும காரியாதிகளு க்கும் ஆலயமுதலியவைகளுக்குஞ் செலவுசெய்து வீற்றிருந்துதம் பரிசனர்களால் மன்னனுக்கு ஆடித்திங்களன்று பரிகளோடும்வருவ மென்றுரைக்க விடுத்தனர் அவ்வாறேமன்னன் ஆடித்திங்களன்றும் வராமையான் மீண்டும் ஓலைவிடுக்க, அவ்வோலையைச் சுவாமிகள்சிவ பிரானிடத்து விண்ணப்பிக்க பெருமான் ஆவணி மூலத்தன்று புர விகள் வருமென்றோர் நிருபமனுப்புகவென நிசைக்க அவ்வண்ணமே மாணிக்கவாசகரோர் நிருபம்விடுத்திருக்குநாள் இறைவன் கனவி லெழுந்தருளி மாணிக்கவாசக முன்செல்லுகபின் புரவிகள் வருமெ ன, அவ்வாறேமணிவாசகப்பெருமான் பாண்டியனை யடைந்திருக்கு நாள், முன்னிசைத்ததிருவாக்கின்படியேவனத்திலுள்ள நரிகளையெ ல்லாம் புரவிகளாகச்செய்து ஓட்டிக்கொண்டு வந்தனர் எமது கண் ணுதல் சதுர்விதபுருஷார்த்தங்களையேகால்களாகவும்,வேதகாண்ட மிரண்டுமேசெவிகளாகவும், பரவுணர்ச்சியிரண்டுமேவிழிகளாகவும் விதியேமுகமாகவும், நிஷேதமே வாலாகவும், தந்திரங்களேபுறவணி யாகவும் மந்திரங்களே சதங்கை, ரவிமதிகளே இடமாகவும், பிரம தாரகமே கடிவாளமாகவுங் கொண்டு ஓர் புரவியின்மே லாரோகணி த்துவந்தனர்.

மற்ற சரிதங்களை திருவிளையாடல் ஆலாஸ்யமான்மியம் வாத ஆாடிகள் புராணமுதலியவற்ருற் காண்க.

க்ஷீராப்திமர்த்தனம்.

முன்னோர் கற்பத்தில் தேவர்களும், அசுரர்களும், தாயாதிக ளானமையால், நிராப்பகையை மேற்கொண்டு யுத்தஞ்செய்து அனேகர் மாண்டனர் அதனால்தேவர்கள் அமுதுண்டு நரைதிரைகளை யொழித்து நெடுநாளிருந்து யுத்தஞ்செய்து தாங்களேவெற்றிபெறக்கருதி தங்களுக்குள் ஓர்முடிவு செய்துக்கொண்டுபிரமனிடம்கூற, பிரமன் திருமாலிடங்கூற திருமால்நல்லது ஆகுகவெனக்களித்து திருப்பாற்கடலை யடைந்து மந்தரகிரியை மத்தாகவும், வாசுகியை நாணாகவும், சந்திரனை அடைதூணாகவுஞ் சேர்த்து, ஓர்புறம் வானவரையும், மற்றோர்புறம் தானவரையும் விடுத்து, இருதிறத்தாரிடத்துமுள்ள படைகளினால் ஓர்கால் யுத்தத்திற் கேதுவாமாதலால்அப் படைகளை ஒருங்கேவாங்கி ததீசிமுனிவரிடம் ஒப்புவித்து வாசுகித் தாம்பை யிர்க்கச்செய்ய, அவ்வாறே தானவர் வானவர் இருபுடைகளினு மாறிமாறி யிர்க்க, அம்மந்திரமலை அசைதலைக்கண்ட திருமால் ஆமைவடிவாகி அம்மலையின் அடியையும் முடியையும் தாங்கிநிற்க, தேவர்கள் நெடுநாள் கடைந்தமையின் அரவமாகிய அஷ்டநாகங்களிலொன்றான வாசுகியென்னும்பாம்புவருந்தி தம்மாலாற்றாது தனது ஆயிரம்வாயினின்றும் விஷஞ்சிந்தியது.

விஷபானம்.

அவ்விஷம் உலகனைத்தும் இருள்மூடிக்கொள்ளும்படி பரவ தேவர் முதலினோர் பயந்தோடினர் இக்கதியைத் திருமாலறிந்து அதிவிரைவாக வானவர்க்குத் தைரியங்கூறி அவ்வாலகால விஷத்தை எதிர்சென்று மறித்தனர் மறித்தலும் அவ்விஷம் திருமால் திருமேனியைக் கருநிறமாக்கி விறிச்சென்றன அக்கால் திருமால் முதலிய தேவரனைவரும் வேறோராற்றுமாதரணையின்றி சாக்ஷாத் கைலாசபதியினிடமடைந்து விண்ணப்பம்செய்து நிற்றலும், சர்வதயாபரன் திருமாலைநோக்கி அஞ்சற்கவென்றபயமளித்து, அருகேநின்றசுந்தரரால் ஆலகாலவிஷத்தை வருவித்து தமதங்கையிற்றாங்கி யுண்டனர் உண்டகாலத்து உமையம்மையார் ஐயனே கண்டத் தளவிலே யேநிறுத்துக வெனக்கோறலும் அங்ஙனமே இறைவன்கண்டத்திற் றங்கக்கொண்டு நீலகண்டரெனப் பெயர்பெற்றனர்.

அதன்பின் தேவர்கள் வேண்டுகோளால் சுகம்ம பாற்கடல்க டைந்து அமுதுண் டுய்வீர்களென வரம்பாலித்தனுப்ப, திருமா லாதியதேவர்கள் பாற்கடலடைந்து முன்னேபோல் திருமால் கூர்ம வடிவாகி மந்தரகிரியைத்தாங்க தேவருஞ்சுரரும் வாசுகியையிர்த்து க்கடைய,

---

## க்ஷீராப்தியில்.

'மூதேவி, தன்மந்திரி, அரம்பா ஸ்திரீகள், சுரை, உச்சைச்சிரவம், கஷத்துவம், கற்பகவிருக்ஷங்கள், காமதேனு, சிந்தாமணி, சந்திரன், இலட் சுமி, சரஸ்பதி, இரதி இவைகளுற்பவம்.

1. மூதேவி தோன்றி வருணருக்கு மனைவியாயினள்.

2. தன்மந்திரி தோன்றி உலகமுழுவதுக்கும் மருத்துவனு யினர் பதினெண்சித்தர்களி லொருவருமாயினர்.

3. அறுபதுகோடி அரம்பா ஸ்திரீகள்தோன்றி இந்திரன் பதியையடைந்து இந்திரபோகத்தைச்சுகித்தனர்.

4. சுரைதோன்ற அதனை தேவர்களுண்டு சுரர் எனப்பெற் றனர்; அவுணரதனை வெறுத்தமையால் அவர்க ளுண்ணப் பெருது அசுரரென்றிசைக்கநேர்ந்தனர்.

5. உச்சைச்சிரவமென்னும் புரவிதோன்றி இந்திரனுக்கு வா கனமாயின, இதனை க்ஷீரவாசியென்பர்.

6. கௌத்துவமென்னும் துளசிமணி தோன்றி திருமாலுக்கு ஆபரணமாக மார்பிடமமர்ந்தன.

7. அரிசந்தனம், கற்பகம், மந்தாரம், சந்தான்ம், பாரிசாதம் என்னும் பஞ்சதருக்களும்தோன்றி அமராபதியையடைந்தன.

8. ஐராவதம் என்னும்வெண்ணிறமுடையஓர்யானைதோன்றி இந்திரனுக்குவாகனமாகவும், திக்கானைகளிலொன்ருகவுமாயின.

9. காமதேனு என்னும் ஓர் தெய்வப்பசுதோன்றி இந்திரனி டத்து மவனேவலால் வசிட்டாதிமுனிவரிடத்துமாயின.

10. சிந்தாமணி என்னும் எடுக்க வெடுக்க எக்காலத்துங்கு றைவுபடாத ஓர் இரத்தின கடாரந்தோன்றி சசிமணுளனுக் குலப் பாயின.

11. சங்காரகாரமாகவும் பதுமாகாரமாகவுமுள்ள சங்கநிதி பதுமநிதி இவைகள்தோன்றி குபேரசெல்வமாயின.

12. சந்திரன் தோன்றி ஆகாயவீதியி லொளிசெய்தலையும், கிரகாதிகளிலொன்றாதலையும் பெற்றனன்.

13. சரஸ்பதிதோன்றி பிரமனுக்கு மனைவியாக அவன் நாவினும், மலராசனத்தினு மமர்ந்ததன்றி, சர்வகலைகளுக்கும் வித்தியா காரணியாயினள்.

14. இந்திராணிதோன்றி இந்திரனுக்கு மனைவியானதன்றி, என்றுங் கன்னிப்பருவத்தையும்; எத்தனை இந்திரர்கள் தோன்றி மறையினும் தாமெக்காலத்தும் மாறாததன்மையி னுயினதோடும், கிழ்த்திசைக் கதிதேவதையாயுமாயினள்.

15. இலக்குமிதோன்றி திருமாலுக்கு மனைவியாய் திருமால் மார்பினிடந்தங்கினதன்றி, அஷ்டைஸ்வர்ய போககாரணியுமாயினள்.

16. பின்னர் இவ்வாறளப்பரிய வானாட்டுச் செல்வங்களெல்லாந்தோன்றின அதன்பின்னர்.

—:*:—

## கிரஹண காரணம்.

முடிவில் அமுதந்தோன்றின இவ்வமுதத்தைத் தானவரும், வானவரும் எமக்கெமக்கென்று வாதிட்டு அனேகர் காலமாயினர் இதைத்திருமால்கண்டு ஓர் மாயைபோலும் மோகினி வடிவங் கொண்டு தேவருக்குமாத்திரம் அவ்வமுதத்தைப் பகுந்தளித்து வருங்கால் அசுரர் இருவர் அவ்வானவர்கூட்டத்துள் மாறுவடிவா யிருந்தமுதருந்தினர். இதனைசூரிய சந்திரரால் திருமாலறிந்து அவ்விருவர்தலையையும் அறுத்தெறிந்தனர் பின்னர் அத்தானவ ரிருவரும் அமுதுண்டவிசேடத்தாலிறவாமல் சிவார்ச்சனைசெய்து இராகுகேதுவென்னுங்கிரகங்களாய்த் தம்மை வெளியிட்ட செங்கதிர் வெண்கதிர்களைத் திராத்துயர்செய்து வருகின்றனர், இவையே கிரஹண காலமாம். சுரர் அமுதருந்தித்திர்க்காயுளெய்தி அசுரரைஹதஞ்செய்து பொன்னுலகுசேர்ந்து வாழ்ந்திருந்தனர், இதுநிற்க.

### மீன்கண்ணணிந்தது.

சோமுகாசுரனெனு மோரசுரன் சாட்சாத் பரமபதியை நோக்கித் தவத்தா லனேகவரத்தைப்பெற்று தேவர்களஞ்சும்படி ஆண்மையுற்றுத்திரிவான் தன்தோளின் தினவை ஆற்றுமாறுமேருமலையையெடுத்து விளையாடுவான் இத்தகையபராக்கிரமத்தோடு அஞ்சானுய் பிரமபதியைநோக்கி வருஞ்சமயத்து பிரமன்வெருவியோடலும், எயேஇவன்வன்மை இவ்வளவுதானேவென் றுதாசினம்பேசி அவன்மாட்டுள்ள நான்குவேதங்களையும் களவாடிக்கொண்டு கடலுக்குட்புகுந்து களித்துலாவியிருந்தனன். இதனையறிந்த பிரமன் பிதாவாகிய திருமாலிடஞ்சென்று சிருட்டிக்குக்காரணமாகிய ஆரணத்தைச்சோமுகன்சூறைகொண்டானென் செய்வேமென்றரற்ற திருமால் சோமுகனிருப்பையறிந்து திமிங்கிலமுதலிய மச்சங்களையும் விழுங்கும் வன்மையோடும்ஓர்பெரியமச்சவுருவைபெற்றுசோமுகனைவதைத்து ஆரணத்தைக் கைக்கொண்டு பிரமன்பாலளித்தனர் அங்ஙனம் மச்சாவதாரன் ஆழிநீரைக்கலக்கி சத்தசாகரமுமொன்ருகும்படியுழக்கித்திரிதலை வானேர்கண்டு மண்ணுலகழியும்போலும் விண்ணுடொருங்கேயொழியும்போலுமென்றையுற் றிறைவனுக்கிசைப்ப இறைவன் ஓர் வலைஞனைப்போல ஓர்பெருவலைகொண்டு திருமாலாகிய மச்சத்தைப்பிடித்துச் செதுக்கிக்கண்ணைப்பிடுங்கலும் திருமால் பூர்வவுணர்ச்சியால்பழயவடிவைபெற்று அருச்சித்தகன்றனர் அக்கால் தேவர்கள் ஐயனே இன்னேர்கால் திருமால் இருமாப் புருவண்ணம் அம்மச்சவிழியையுந்தரித்தருளவேண்டுமென் றிறைஞ்ச அங்ஙனமே சிவபெருமான் அவ்விழிகளை கைவிரல் மோதிரத்தமைத்தருளினர்.

### வராகக்கோடணிந்தது.

இரணியாக்கதனென்னுமசுரன் தவத்தால் பிரமன்மாட் டனேகம் வரத்தைப்பெற்று நிகரற்றோனுய் வாழுநாளில் ஒருநாள் உலகத்தைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு சமுத்திரத்தில் மறைந்தனன் இக்கூற்றுக்கஞ்சிய அமரர்வேண்டுகோளால் திருமால்வராகவடிவமுற்று கடலைக்கலக்கி இரணியாக்கதனென்னு மசுரனைக்கண்டு அவனைக்கிழித்துக்கொன்றுவிட்டு பூமியைக்கொம்பிநுனியால் தூக்கிவந்து சேடனது முடியில்வைத்தனர் அதன்பின் திருமால்மமதையால் வராகரூபத்தோடும்அகிலமெல்லாம்நடுங்கும்படி யுலாவி மேகங்களும்

கொண்ட பக்தியினால் அம்மனுக்குக் கிருபையுண்டாகி வீரனுக்குக்கைகால்கள் வளர்ந்துவரும்படிசெய்தாள், அவ்வாறேகைகால்கள் வளர்ந்தவுடன் நடந்து குளித்து வெண்ணீறணிந்துஅம்மனுக்கெதிரில்வந்துநின்று தன் கழுத்தைவெட்டிக்கொண்டு அம்மன் சன்னதிமுன் முதல்பூசைகொண்டு மதுரைவீரசாமி யென்றபேருடன் வீற்றிருக்கின்றார்.

## மாரியம்மன்.

மாரியம்மன் என்பது உலகிற் பலவாறுயிருக்கின்றது இதுவரையிலும் சத்திகள் சரிதத்தைக்கூற ஒருசாஸ்திரமும் காணேம் பூஜாலிகள் இஷ்டமெல்லாம் சத்திகளாயிருக்கின்றனஎன்னெனில், உலகில் அனேக வீடுகளில் மாரியம்மனுக்கு கற்பூர ஆராதனை புட்பம், மஞ்சள் இவைகள் கூடாதென்றும், வேப்பிலை முதலியவைகளே வேண்டுமென்றுங் கூறுகின்றனர், மாரியம்மன்|ஆலயங்களிலோ எல்லாம் வழங்குகின்றன. பூஜாலிகள் ஒருவர் ஓர் தலையைமாத்திரம்வைத்து இதுதான்மாரியம்மனென்றும்,ஒருவன்பத்துபதினைந்து நாளைக்கு பூசைவைத்து தினந்தினம் வேறு வேறு அவதாரங்களைச்செய்து இதுதான் மாரியம்மன்என்றும், ஒருவன் அக்கினிஜுவாலிப்பதுபோலதலையிற்செய்துஇதுதான்மாரியென்றும், ஒருவன் குழவிபோல்வைத்து இது தான் மாரியென்றும், ஒருவன் விபூதிகாப்புமாத்திரமிட்டும் ஒருவன்குங்குமகாப்புமாத்திரமிட்டும், ஒருவன் அம்மனுக்கு முழுரூபங்காட்டியும், ஒருவன் நாலுகையைக்காட்டியும், ஒருவன் இரண்டு கையைக்காட்டியும் அக்கைகளில் வெவ்வேறு ஆயுதங்களைக்காட்டியும்பலவிதமாய் அவர்களுக்கே ஸ்திரமாகாது இது,தான்மாரியம்மனென்றுகூறிவருகின்றனர். எதைநம்புவது,

அதர்வணவேதத்துள் கர்மாதிகளின்பொருட்டுசிலதேவதைகளைக் கூறியிருக்கின்றன. அன்றி, சிவனைமதியாது பிரமன்செய்தசிருட்டிகள் விர்த்தியடையாது துஷ்டதேவதாசொரூபமடைந்ததென்றும் ஓர் நூல் வழக்கு. அல்லாமல் சில சித்தர் முனிவர்களின் சாபத்தால் சிலதேவ இராக்ஷசகணங்கள் துஷ்டதேவதைவடிவாயினவென்றும் சில பிரமாணங்களுள்ளது. பார்வதியாரதுவியர்வையினின்று அனேக காளி கூளிமுதலிய கணங்களுண்டா

னவென்றும் சில நூலில்வழங்குகின்றனர். ஆனதால்மாரியம்மன‌து சரிதத்தை இவ்வகையென்று கூறுதற்குக் கூடாததா யிருக்கின்றன.

மாரியென்பது அகத்தியர் வைசூரி நூலிற்சொல்லும் பெயர்களையெல்லாம் பெயராகவே வழங்குகின்றனர், இவ்வாறு வைசூரிகளை மகமாரியென்று வழங்குவது சமயபுரம், ஊத்துக்காடு, கடம்பாடி, கன்னபுரம், பெரியபாளைய முதலிய க்ஷேத்திரங்களிலுள்ள தெய்வங்களையே சிலமநுக்கள் பிரார்த்தனைசெய்பவர், அக்கினிசட்டி, வேப்பஞ்சிலை, தலைவிளக்கு, அடிதண்டம், செடல், பாவடம் அரிகண்டம், அங்கப்பிரதக்ஷணம், கோழி ஆடு பலி, மாவிளக்கு, பொங்கல் முதலியவைகளைச் செய்கின்றனர். புத்திரவரம்பிரார்த்தனைக்கு பரசுராமன்சிலையைக்கொண்டுபோகின்றனர்.

ரேணுகையின் மகன்பரசுராமனானதால, ரேணுகையேமாரியென்பதாகின்றது. அப்படிகொண்டால் ரேணுகைக்குத் தலைமாத்திரமே உருவமாயிருக்க, சமயபுரமுதலான யிடங்களிலேமுழு உருவமாயிருப்பதாலும், ரேணுகை பிராமண ரிஷபத்தினியானதால், கோழிபன்றியாடுகளை பலிகொடுப்பதாலும், ரேணுகையை பரசுராமனே வெட்டியதால் அவ்வாறவளுக்கு கெடுதியைச்செய்யும் பிள்ளையைப் பிரார்த்தனையாய்ச் செலுத்துவ தடாததாலும் அன்றி ரேணுகையைப் பரசுராமன் வெட்டியபின்னும் எழுப்பி, ஜமதக்கினியோடு யமுனாநதிக்கரையில்வசித்திருந்ததாகசரிதமிருப்பதாலும் சந்தேகிக்கின்றது.

இம்மாரியம்மன் தோத்திரத்தில் ஆதிசிவன் தேவியென்றும் நாரணனார் தங்கையென்றும், ஆயிரங்கண்ணுடையாள் என்றும், பராசத்தியென்றும், பேச்சியென்றும் துதிக்கின்றனர். ஆயினும், கலியுகத்திற்கு சத்தியே அரசியென்று கூறியபடியேகல்வி, ஆகாயம், பூமி, நீர், தீபம், உரல், உலக்கை, முறம், படி இவையெல்லாம் பெண்மயமாக வழங்குகின்றனர், அன்றி, கிராமதேவதைகளும், நோய்களும், பெண்மயமாக கூறுகின்றனர். "சிவமெனும் பொருளு மாதிசத்தியொடுசேரி னத்தொழிலும் வல்லவாம், அவள் பிரிந்திடி லியங்குகிற்குமரிதரிதெனுமறையிறைஞ்சிடுமென்றபடி" சிவன் முதலியவர்களையும் அதிட்டித்து விளங்குவது சத்தியென்று கொள்ளப்படுகின்றன, ஆதலின், சத்தியின்திருவிளையா

ட்டே தமதம்சமாகவும், தமதேவலாலும், தனதுநிட்டிப்பாலும் விளங்கும் தேவதைகளேயல்லாமல் வேறல்ல. இதன்விரிவை சத்தியினுற்பவத்திற் காண்க.

---

## எல்லம்மன்.

எல்லம்மனென்பது (எல்லைக்கு அரசி) கிராமதேவதையேயாம் இது (கோயிலில்லாவூரில் குடியிருக்கவேண்டாம்) என்றபடி சிலர்கூடிய ஒருகிராமத்தில், கிராமத்தார் தங்களை ரக்ஷிக்கும் பொருட்டுதங்கள் எல்லைக்கு ஒருதேவதையை ஏற்பாடுசெய்துக் கொள்ளுவது இயல்பு ஆனதாலேயே எல்லாம் மனெனப்பெயர் பெற்றிருக்கிறது. இது அவரவர்களுக்குநேர்ந்த குலதேவதையையாகிலும், தாங்கள்முன்னிருந்தவூரின் தேவதையாகிலும், தாங்களிருக்குமிடத்தில் யாராலேனும் பூசிக்கப்பட்டிருந்த தேவதையையாகிலும். அல்லது உத்தேசப்படி பாாவதி, காளி, மாரி, நாரணி,முதலிய தேவதையாகிலும் நியமித்துக்கொள்ளுவது வழக்கமாயிருக்கின்றது. அத்தேவதை நடுத்தெருவிலிருக்குமானல்தெருவீதியம்மனென்றும் சந்திலிருக்குமானல் சந்தியம்மனென்றும், சோலையிலிருக்குமானல் சோலையம்மனென்றும், தென்னை, பனை முதலிய கருக்குகளிருக்குமானல் கருக்கமர்ந்தாளென்றும், வேப்பநீழலிலிருக்குமானல் வேம்படியாளென்றும், ஆலநீழலிலிருக்குமானல் ஆலடியாளென்றும், இதுபோலெவ்விடத்தி லிருக்கின்றதோ அவ்விடத்தின்பேராலேயேவழங்குகின்றது. அன்றிஸ்தாபித்தவர்கள்பெயராலும், இன்னும்பலவகைக்காரணங்களாலும்வழங்குகின்றன. இவர்கள்பிற்காலத்தில் ஒவ்வோர் மகத்துவம் பற்றியும் அனந்தபெயர்களாயிருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் சரித்திரங்கள் விசிதமாயில்லாததால் இம்மட்டில் விடப்பட்டது. தெரிந்தபுண்ணியவான்கள் எழுதியனுப்பினல் மறுபதிப்பில் சேர்த்துவிடலாம்.

---

## பூவாடைக்காரி

பூவாடையென்பது ஒவ்வொருகுலத்திலும் விவாகமாய் மங்கலியத்துடனிருந்து மரணமானமாதர்களைக் குலதெய்வமாகா

கோடிப்பது ஒவ்வொரு குலத்திலும் குடியிலும் இயல்பாக நடந்தேறிவருகிறது இத்தெய்வத்திற்கு வேறுநாமரூபாதிகளில்லை ஆனாலும்பட்டாடை, புஷ்பம், மஞ்சள் முதலியவற்றை ஓர்பெட்டியில்வைத்து பூசிக்கும்விதியால் பூவாடையம்மன் எனப்பெயர் பெற்றது.

## கன்னியம்மன்

மேற்சொன்னபடியே ஒவ்வொருகுடியிலும் விவாகமின்றி' கன்னிப்பருவத்தில் மரணமான பெண்களை தங்கள்தங்கள் சுபகாரியங்களில் சுத்தபூசையாகக்கோடிப்பது இயல்பாக வழங்குகின்றன, அப்பெண்கள் கன்னிப்பருவத்தில் மரணமானதைப்பற்றிகன்னியம்மனெனவும்,கன்னிமார்களெனவும்சொல்லப்படுகின்றது.

## குலமாரி

இதுவும் ஒவ்வோர்குடியிலும் அமங்கலியாய் மரணமானமாதர்களை கற்பூரதீபாதிகளின்றி வெள்ளைச்சீலையும் தின்பண்டங்களுடனும் அவைதிக பூசையாகக் கோடிக்கின்றனர்.

## சஞ்சல தேவதைகள்

இதன்றி அனேகர் தங்கள்குடிகோத்திரசூத்திரம் யாதொன்றுமில்லாது நீரிலிறந்தவளை பாதாளபொன்னியம்மனென்றும் அக்கினியிலிறந்தவளை அக்கினியம்மனென்றும், ஒருவளைப்புதைத்தவிடத்தில் புத்துமுடிக்கொண்டால் புத்தம்மனென்றும், அப்புத்தில் நாகமிருக்கப்பார்க்கில் அதைநாகம்மனென்றும், எந்தசாலையிலேனும் இறந்துகிடப்பவளை சாலம்மனென்றும், மலையிற்சென்றிறந்தவளை மாயாயியென்றும், பனைமரத்தடியில இறந்துகிடப்பவளை பனையம்மனென்றும், இவ்வாறு அனேகவிதமாய்ப் புகழ்ந்து ஊரெல்லாங்கூடிப் பூசிப்பதுமுண்டு.

அன்றி வெண்மையானநிறத்தோடிருந்து இறந்தவளைவெள்ளையம்மனென்றும், நொண்டியாயிருந்திறந்தவளை நொண்டியம்மனென்றும், கூறி கோடிப்பதும் இயல்பாகநடந்தேறி வருகிறது.

இதுவைதிக சமயங்களும் மகம்மதியராதிகளும் அநுஷ்டிக்கின்ற தில்லை. மற்று இழிகுலத்தாரும் விவேகசூன்யருமேகொண்டாடு வது இயல்பா யிருக்கிறது. இதுமுற்றும் மடமையினும் மடமையே.

இத்தெய்வங்களை முன்னம்பிணமென்று சஞ்சலாதிகாரியங் களைச்செய்துவிட்டு அப்பால் தெய்வமென்று அக்குடும்பத்தார் கொண்டாடுதலும், அதன்பின்சார்ந்தவரும் அப்பால்அவ்வீதியா ரும் அப்பால் அக்கிராமத்தாரும் அதற்கப்பால் உலகத்தார்யாவ ரும் வெருண்டு மருண்டு தெய்வமென்றேபயந்து துதிக்கின்றனர் யாதாமோர் விவேகிதடுக்கினும், ஊருடன் ஒத்துவாழென்றுதிரு ம்பவுங் கும்புகூடி நம்பியே மாய்கின்றனர்.

## பெரியாண்டவன்

# அங்காளம்மன் அங்காயி

இது வாமிமதத்தின் ஓர்பிரிவாம் என்றால், ஓர்காலத்தில் சி வபெருமான் பிரமன் தலை ஐந்திலொன்றைக்கிள்ளியபோது, பிர மபாவம் சிவனைசூழ்ந்துகொண்டு அம்மயக்கத்தால் சஞ்சரித்து சுடலையிலிருக்கையில், பார்வதிசென்று தமதுநாயகன்கையிலிரு க்கும் பிரமகபாலத்தை பயிரு, உண்டைமுதலியவைகளைக்கொட் டி கிழிறங்கச்செய்து அப்பிரமன்தலையை தன்காற்பெருவிரலிற் மிதித்துக்கொண்டு நாயகனது பிரமஹத்தியை நீக்கினள் என்று கூறுகின்றனர். பிரமகபாலத்தைமிதித்துள்ள காரணத்தால் அங் காளம்மன் என்றும், தென்னாட்டில் அங்காயி என்றும், பெயர் பெற்றனள்.

இப்பார்வதியார் மகா உக்ரரூபத்தோடு காளிரூபமுற்றுசெ ன்றமையால் மதுமாமிசங்களோடும் பூசிப்பதாகத்தெரிகிறது. சில ர் வேறுசிலகதையுங்கூறுகின்றனர். அக்கால் பரமசிவத்தை எல் லாதேவமுனிவர்களாலும் பெரியாண்டவனெனப் புகழ்ந்துகூறப் பட்டனராம். மேலும், சுடலையில்நின்று நடித்தபடியால் கூத்தா ண்டவனென்றும், பெரியாண்டவனென்றும் கூறப்படுகிறது.

## தருமராஜா

பாரதவீரருள் பாண்டுமகாராஜன் புத்திரர்களாகியபாண்டவர்களில் சேஷ்டராகியிருந்தவர் தருமராஜா இவர் இயமதருமராஜனமசம் இவர் பாரதயுத்தவீரர்களில் இவர் ஒருவர்தான் நேராக வைகுந்தஞ்சென்றனர் இவர்தருமநெறிமாறாததருமசொரூபமாயிருந்ததால் உலகத்தோர் இவரைப் பூசிக்கத் தொடங்கினர்.

## தீபாஞ்சை அல்லது துரௌபதை

இப்பால்துரௌபதி பாஞ்சாலமன்னன்புத்திரியாக உதித்து மேற்படி தருமர்முதலிய பாண்டவரையும் மணம்புரிந்தவளாயினும் பஞ்சகன்னிகைகளில் ஒருவளாய் கற்புநெறிமாறாததெய்வசொரூபமுற்றவள் இவள் பாஞ்சாலமன்னன்மகளாதலின்பாஞ்சாலியென்றுங் கூறுகின்றனர். இந்த துரௌபதியம்மனுக்குவருஷோற்சவங்களில் அக்கினிப்பிரவேசஞ் செய்வதனால் தீபாஞ்சையென்றும், தென்னாடுகளில வழங்குகின்றன.

## குளுமாயி அல்லது ஓலைப்பிடாரி

சோழநாட்டில், திரிசிரகிரிக்கடுத்த உறையூரில், குட்டிக்குளுமாயி, பள்ளக்குளுமாயி, சட்டிக்குளுமாயி யென மூன்றுதெய்வங்களிருக்கின்றன. பெயரால்வேறுபட்டாலும்தெய்வம்ஒன்றுதானென்கிறார்கள் என்னையெனில், பிரதி மாசிமாதங்களிலும்நடக்கும் உற்சவங்களில் சுமார் இலட்சம்கருப்புஆட்டுக்குட்டிகளைகாவுக்கொடுக்கின்றனர், இதில் குட்டிகளைகடித்துஉதிரபெலிகொள்ளுதலால் குட்டிக்குளுமாயியென்றும், இரத்தங்களைச்சட்டியிற்பிடித்துகுடித்தலால் சட்டிக்குளுமாயியென்றும் பூமியிற் பள்ளம்வெட்டி அப்பள்ளத்தில் இரத்தங்களை நிரைத்து உண்ணலால் பள்ளக்குளுமாயியென்றும் கூறுவதாம். என்றாலும்இவ்விரத்தங்களை உண்ணுகிறது கருப்பண்ணசுவாமியேயாம். உற்சவகாலங்களில்இரதத்தில் இவ்வமமனை வேறுஉருவமின்றிஓலையினால்பிடாரிரூபமாகச்செய்து வருவதால் ஓலைப்பிடாரியென்றும்கூறுகின்றனர். இவ்வம்மன் சரித்திரம் நன்றாய்தெரியவில்லை இப்புறங்களில்

| | |
|---|---|
| செல்லாச்சி | வீரராவுத்தன் |
| பேச்சியாயி | கருப்பன் |
| பூமாயி | சங்கிலிகருப்பன் |
| வீராயி | மாமுண்டிலக்கையர், |
| சடையாயி | பனையடியான் |
| மலையாயி | மலையாளி |
| பொம்மக்காள் | ஒண்டிமுனி |
| வெள்ளாயி | பதினெட்டாம்படிகருப்பு |
| இளங்காளி | பாவாடைராயன் |
| கருக்காயி | செல்லாண்டி. |
| ஒண்டிவீரன் | போத்ராஜா |
| சங்கிலிவீரன் | ராஜாளி |

முதலிய தேவதைகள் வழங்குகின்றன, அவைகளின்சரித்திரம் நன்றாய் தெரியவில்லை தெரிந்தவர் தெரிவிப்பாராயின் மிக்க நன்றியறிதலோடும் அதனை மறுபதிப்பிலாயினும் அச்சிட்டுபகரிப்பேன்.

## காத்தாயி.

சிவசுப்பிரமணியக்கடவுள் அக்கினிபகவானால்சரவணப்பொய்கையை யடைந்த காலத்து மால்கொடுத்தகார்த்திகையென்னுமிரிஷிபத்தினியையே காத்தாயியென்னும்அவள்பாலுண்டுசீவித்தமையாலேயே முருகனுக்கு கார்த்திகேயனென்று பெயராயதெனக்கூறுகின்றனர்.

## துர்க்காயி.

காசியில், துர்க்காசூரனென்னும் ஓரசுரனை பார்வதியார்உருத்ராம்சமாக வெதிர்த்துச் சம்மரித்தமையால்துர்க்காயியெனப்பெயராயிற்றென்று காசிகண்டங் கூறுகின்றது.

## கூத்தாண்டவர்.

திருமால் சிவபெருமானையருச்சித்து சக்ராதானம்பெற்றுலவு ங்காலையில், விநாயகர்திருமாலை யழைத்து அதென்னகாட்டென்று வாங்கிவிழுங்க, அக்கால் திருமால் கெஞ்சிக்கேட்டும் தராமையால் கூத்தாடிவருந்திநிற்க விநாயகர்சக்கரத்தைக்கொடுக்கப்பெற்று சென்றதாக காஞ்சிபுராணங் கூறுகின்றது, கூத்தாடிய காரணத்தினாலேயேதிருமாலுக்குங் கூத்தாண்டவரெனப்பெயராயிற்றெனக் கூறுகின்றனர், இவ்வாறுதிருமாலின் திருநடனத்தைகோணக்கி தாசிரிகளென சிலர் ஆடுகின்றனர்.

## கங்கையம்மன்

கங்கையம்மையென்பது சிவனுடைய ஓர் பத்தினியேயாம் சிவனதுமுடியிலிருக்கும் கோலமாய்க்காட்டியதால் கங்கைபூவுலகில்வந்து உலகிலுள்ளவெப்புநோய் முதலியவற்றையொழித்துகுளிர்வித்து எல்லாவளங்களையும் உண்டுபண்ணும் நிமித்தியம்உலகில் உஷ்ணகாலமாகிய சித்திரை வைகாசிபலமாதங்களில் பலவேஷமிட்டுவணங்குவதோடு அங்கங்குஆலயமுங்கட்டிபூசிக்கின்றனர்.

## வட்டப்பநாச்சியம்மன்

இந்த அம்மன் சரிதத்தை பஞ்சகாவியங்களி லொன்றான சிலப்பதிகாரத்துள்ளும், கோவிலன்கதையினும் கூறுகின்றது இத்தம்மன் தொண்டைநாட்டில் திருவொற்றியூரில் தியாகர்சன்னிதானத்தின்மூலஸ்தானத்தினருகில்திருக்கோயில்கொண்டுவீற்றிருக்கின்றனள்இத்தம்மனுக்கு எருமாடு ஆடுகள் கோழிகள் இவை வருடத்தில் ஏராளமாய்பெலியிட்டுவருகின்றனர். காளி அம்சமாகக்கூறுகின்றனர், வருடத்தில் 15-நாளுற்சவம் மகா உக்கிரமாய்நடக்கின்றன.

(சரித்திரம்) மதுரை வடபத்ரகாளிகோயிலை ஏதோ ஓர்காரணமாகப்பாண்டியர்சாத்தியிருக்கையில் ஓர் வாணியன் எண்ணெவிலையாகவேண்டி விளக்கேற்ற பாண்டியரறிந்து அவ்வணிகனை வெட்டி மாய்த்தனர். பின்னர்வணிகன்மனைவி அம்மனைக்குறையி

றக்க, அம்மன்பாண்டியரைக்குலமறுத்து வருவேனெனச் சபதங் கூறி, அவ்வணிகனை கோவிலனாக வர்னமாலையென்பவள் வயிற்றி லும், அவன்மனைவியை மாதகியென திருக்கடையூர் தாசிவீட்டி லுமுதிக்கச்செய்து தான்பாண்டியன் புத்திரியாக உதித்து, சாத காரால் பெட்டியில்வைத்துவைகையில்விட, செட்டிகளிடம் அகப் பட்டு வயதுவக்தவுடன் கோவிலனைமணபுரிந்திருக்கையில் கோ விலன் மாதகியாகிய தாசியினிடம்சிக்கி தன்சுயார்ச்சிதபிதிரார்ச் சிதங்களையொழித்து வருந்துங்கால், கர்னகைபுருஷனையழைத்து வந்துதன்னோடுகூடவே பிறந்த காற்சிலம்பைக்கொடுத்து தாசிக டனையடைத்து வாவென்றனுப்பினானும்போய் ஓரிடத்திலிருக் கையில் முன்னர்தன்னைப்பெற்றபாண்டியன் மனைவிதன்காற்சில ம்பைசுத்தஞ்செய்துகொடுக்கும்படிதட்டானிடங்கொடுக்க அத னைகருடன் எடுத்துப்போனதால் கோவிலன்விற்கவந்தசிலம்பை தங்கள்சிலம்பென்று வருத்திக்கோவிலனைக் கொன்றனர். இதனை க்கர்னகையறிந்து தனது சுயரூபத்தையெடுத்து மதுரையைக் கொளுத்திகொள்ளைகொண்டு பழிவாங்கியதோடு அண்டாதபெ ருமுக்ரமாகவருகிறபோதுதிருவொற்றியூரில்தியாகராலயத்திற்பு குந்துசுவாமிகட்டளையால் ஓர் கிணற்றில் நீரருந்துவதற்கு இற ங்க உடனே சாக்ஷாத் பரமசிவனால் ஓர் பாறைகொண்டு கிணற் றை மூடினர். அதனால் வட்டப்பாறைச்சியார் எனப் பெயர்பெற்று சிறிதுசாந்தமாக எழுந்தருளியிருக்கிறனள் அவ்வாறு. கொள்ளை கொண்டதைபிரதிசித்திரைமாதத்திலும் மதுரையையெரித்ததிரு விழாவெனநடத்திவருகின்றனர்.

## பச்சையம்மன்.

இந்தம்மன்சரிதத்தை கஞ்சகிரிபுராணம், கேதாரபுராணம், திருச்செங்கோட்டுபுராணம், காஞ்சிபுராணம், அருணாசலபுராணம் முதலிய நூற்களில் முறையே கூறப்பட்டிருக்கின்றன.

பார்வதியார் சிவனோடு அர்த்தபாகம் பெறவேண்டி தவஞ் செய்ய அனேக தலங்களையடைந்து பூசித்து தன் கோறிக்கை யைநிறைவேற்றவந்த கோலமே பச்சையம்மனென்று கூறுகின்ற னர் இந்த அம்மன் ஆலயத்தில்,

| | |
|---|---|
| கருமுனி<br>செம்முனி<br>வாழ்முனி | முதலிய சப்தமுனிகளும், |

| | |
|---|---|
| ஒண்டிவீரன் | |
| பூங்குரத்தி | திருமால் |
| வேங்கையம்மன் | பிரமன் |
| காத்தாயி | சுப்ரமண்யர் |
| கருவேங்கை | விநாயகர் |
| மலைவேங்கை | வள்ளியம்மை |
| பூவேங்கை | தெய்வானை |
| மூடியாலழகி | திருமகள் |
| முடிமேல்முடியழகி | கலைமகள் |
| ஆரியசுவாமி | கௌதமர் |
| மன்னுதலிங்கம் | சிவபெருமான் |

முதலியதேவதைகளும் பரிவாரதேவதைகளாகஎழுந்தருளியிருக்கின்றனர். இந்தம்மன் எந்தஸ்தலத்தில்எழுந்தருளினளோ அந்தந்த யிடங்களிலும் அந்தந்த ரிஷிகளின்ஆசிர்மமிருக்கின்றன இத்தேவாலயங்களில் சுத்தபூசையும்சத்கிருத்தியங்களுமே நடக்கின்றதானுலும் வாழ்முனிவருக்கும் ஒண்டிவீரனுக்கு மாத்திரம் ஆடுகோழி முதலிய பலிகொடுக்கின்றனர். இவ்வாலயங்களில்பெருப்பாலும்சிலம்புமுதலியவாத்தியங்களேயன்றி உடுக்கைமுதலியவைகள் கிடையாது.

---

## பொம்மியம்மை.

இதனை பொம்மக்காளென மலையாள பிராந்தியங்களிலும், சேலம், கோயம்புத்தூர முதலியவிடங்களிலும்கொண்டாடுகிறார்கள். இது ஓர் ஜாலதேவதையாகக்கூறுவதோடு சிலவிடங்களில் கிராமதேவதை யாகவும், குலதேவதை யாகவும் கொண்டாடுகின்றனர்.

## பஞ்சகன்னிகைகள்

பஞ்சகன்னியர்களாவன—அகலிகை, துரோபதை, சீதை, தாரை,மண்டோதரி, என்பனவாம். இவர்களோடு அருந்ததி, வாசுகி இவர்களைக்கூட்டிசத்தகன்னிகைக ளென்றுங்கூறுகின்றனர் இவர்கள் சரிதத்தைபதிவிரதா சரித்திரமென்னும் புத்தகத்தில் விசிட்டமாகக் கூறுகின்றது. இதன்விலை அணு 0 12 0

## சிரஞ்சீவிகள்.

சிரஞ்சீவிகளாவன—அசுவத்தாமர், அனுமார் ஆதிநாதர், அநாதிநாதர், கிருபாசாரி, பரசுராமர், விபீஷணர் இவர்களோடு மார்க்கண்டேயரையும் கூறுகின்றனர்.

---

## உபேந்திரருற்பவம்.

திருமால் வாமனவதாரங் கொண்டகாலத்தில் உலகமெலாந் துதித்துக்கொண்டாடத்தக்கதாக இந்திரனுக்குத்தம்பியாயினர் அதனால் திருமாலம்சமாகியவாமனருக்கு உபேந்திரரெனப்பட்டது என்று வாமனபுராணங்கூறுகிறது.

---

## மாப்பிள்ளை வீரன்

மாப்பிள்ளைவீரன் யென்பது 541-சயிட்டில் கூறிய சஞ்சல தேவதைகளின் மார்க்கமேயெழுந்தருளிய ஓர்தெய்வமாம். அதாவது, ஓர் ஸ்திரீயும் புருஷனும் விவாகம் செய்துக்கொண்டு மாப்பிள்ளைக்கோலமாக வழிப்பிரயாணம் செல்லுகையில்அகஸ்மாத் தாய்காணாததாசவும், மடிந்ததாவும் கூறுகின்றனர். இந்ததெய்வ மிருக்கும் இடத்தில்பிரார்த்தனைச் செலுத்துவோரில் உண்மைவிசுவாசமுள்ளஅனேகர்முடியில் வீராவேசமாகயெழுந்தருளி அவரவர் கோரிக்கைக்கியன்றமறுமொழிசொல்லுகின்றதாம். வருடந்தோறும் திருவாரூர் நாகைப்பட்டணம்முதலாகதென்தேசவாசிகள்யாவரும் பெருந்திரளாய்ச் செல்லுவதன்றியில் ஆடு, கோழி முதலிய உயிர்வதையும் பொங்கல் மாவிளக்கு தின்பண்டமாதிபூஜைகளும் விசேஷமாய் நடத்துகின்றனர்.

## பத்தினியம்மன்

பத்தினியம்மன் யென்பது மேற்கூறியவாறே சஞ்சலதேவதைகளில்ஒன்றுஆபினும்இந்தஅம்மன்விவாகம்செய்தபின்மடிந்ததாககத்தெரியவரினும் புருஷசஞ்சாரமின்மையால் பத்தினியம்மனெனப்பெயர்பெற்றது. இந்தஅம்மன்நாகப்பட்டணத்திற்குப்புறம்பே உரல் உலக்கை முதலிய சத்தம் கேட்காதபடிஊரின்புறம்மேபெருவெளியில்மாத்தடியிலெழுந்தருளியிருக்கின்றன. கடம்பாடி பெரியபாளையம் முதலிய விடங்களில் செலுத்தும் பிரார்த்தனைப்போலவே பாசுராமன்சிலை முதலிய சர்வவுருக்களும் எல்லாவித பூசைகளும் நடத்துகின்றனர்.

## ஆண்டாள் உற்பத்தி

பார்வண்ண மடமங்கையென்கிறபூமிப்பிராட்டிவேயர்குலத்திலு மொருக்கால்வளர்ந்தருள த்திருவுள்ளம்பற்றி, ஸ்ரீவில்லிபுத்தூரில் வேதக்கோனன பெரியாழ்வார்ஒருநாள்தமதுதிருநந்தவத்தில் திருத்துழாய்க்கு கொட்டெடுத்து கொத்திக்கொண்டுவர அங்கொருதிருத்துழாய்வேர் மண்ணின்கீழாக கலியாப்தம் தொண்ணுற்றெட்டில் நிகழ்ந்த நளவருஷத்தில்கர்க்கடக சூர்யப்ரவேசகாலமாகிய ஆடிமாசம் ஆறுந்தேதி சுக்லபட்சம் சதுர்தசிசெவ்வாய்க்கிழமை கூடிய பூரநக்ஷத்திரமாகிய சுபதினத்தில் ஸ்ரீபூமிப்பிராட்டியின் அம்சையாய் சுவர்னகவசத்தினுள் அற்புதமானதிருவுருக்கொண்டு ப்ரகாசிக்க, அவர்கண்டுவிஸ்மிதராய், இந்தஸ்திரீரத்னத்தை அதிப்ரீதியுடன் தனக்குபுத்ரியாகவெடுத்துக்கொண்டு "சுரும்பார் குழற்கோதை" என்றுதிருநாமஞ்சாற்றிதிருமகள் போலே ஒளிபெறவளர்த்தார், இங்ஙனமிருக்கையில்பெரியாழ்வார் வடபெருங்கோயி லுடையானுக்காகதிருமாலைகட்டிப்போகிறவிதத்தை அதிக நுட்பமாகக்கற்று, சிலநாளைக்குமேல் தாமுமவரைத்தொடர்ந்து திருநந்தவனத்துக்குப் பூக்கொய்து புட்டிலிற்சேர்த்துக்கொண்டுவந்து செண்டுமாலை, குழல்மாலை, முடிமாலை கிளிமாலைதொங்கல்பமாலை,உலாமாலை, வெற்றிமாலைமுதலியநானாவிதமாலைகளை தந்தை மகிழ்வடையும்படிகட்டிக்கொடுத்துவந்து நாளுக்குநாள் பெருமாள் பக்கல் ப்ரேமை அதிகரிக்கப்பெற்று

ஆழ்வாரில்லாத அவசரங்களிலே கட்டிவைத்திருக்கும் மாலைகளை யெடுத்துசூடிக்கொண்டு இந்தவடபெருங் கோயிலுடையானுக்கு நேரொவ்வாதிருக்கிறேனோ,ஒத்திருக்கிறேனோ என்னுஞ்சொல்லி ளைத்து, அவைதமை முன்னிருந்தபடியே வைத்துவிடுவாள் இப் படிதினமும் நடந்தேறிவருவதைப் பெரியாழ்வா ரறியாதவராகி புஷ்பங்களை யெடுத்துக்கொண்டுபோய் பெருமாளுக்குச் சமர்ப்பி த்துக்கொண்டிருக்க, அந்தபுஷ்பங்கள் பெருமாள்திருமேனியில் சார்த்தினவளவிலே என்றுமில்லாத நறுமணத்தை வீசத்தலைப்ப ட்டன, அதைகவனித்த அர்ச்சகரும், திருமுற்றத்தாரும், ஆழ் வாருடைய கைங்கர்யத்தின் அன்புதான் இப்படி மனங்கமழ்கிற தென்று அவர்திருவடிகளிலேமிகவும் பக்தியுக்தராயிருந்தார்கள்.

இப்படியிருக்கையில் வடபெருங்கோயிலுடையான் தனது நிர்ஹேதுக்கடாக்ஷத்தாலே இவ்விரஹஸியத்தை வெளிகாணச் செய்துநாச்சியாருடைய அவதாரவிசேஷமிருப்பதை யாவருமறி ந்துஜ்ஜீவிக்கத்திருவுளம்பற்றி, ஒருநாள் நாச்சியார் அவனுக்காக வைத்திருந்த மாலைகளைச்சூடிக்கொண்டு கண்ணாடியில் அழகுபா ர்த்துக்கொண்டிருக்கையில் நினைவைக்கிஞ்சிற்றுமாற்றுவிட,அவ் வளவிலேதகப்பனரான பெரியாழ்வார்பார்த்து வியப்படைந்து, குழந்தாய்! நீசெய்தது அடிமைக்கவத்தம் விளைவதே என்றுகடிந் து, விரைவில்திருநந்தவனம் புக்குபூக்கொய்துவந்து கட்டிக்கொ ண்டுபோய்சந்நிதியில்ஸமர்ப்பிக்க, அர்ச்சகர்வழக்கப்படியேஎடுத் துசார்த்தப்போகையில். வடபத்ரசாயி முகந்திருப்பங்கொண்டு சேவைசாதித்தான் மாலைகளும் பூர்வம்போலே மனங்கமழாததை கண்டு அர்ச்சகர்விஸ்மிதராய்விட, அன்றிரவில் வடபத்திரசா யி ஆழ்வாருடையசொர்பனத்திலெழுந்தருளி நீர்நமக்குசிறிதும்மா ணமில்லாமலர்களைவகுத்திரெனவினவ, ஆழ்வாரும்எந்தையே!வழ க்கப்படிவகுத்துவைத்திருந்த நறுமணத்திருமாலைகளை, தேவரடி மைச்சிறுபெண் வழங்காவகைகண்டனள். அதனைபொருந்தருள வேண்டுமென்றுதிருவடிகளைப்பிடித்துக்கொண்டு ப்ரார்த்திக்க,வ டபத்ரசாயிஆழ்வாரைநோக்கி அவளைநமக்கு "சூடிக்கொடுக்கவந் தசுடர்க்கொடியென்றறியீரோ? இனி அவள் தீண்டி முடித்துக்கொ டுக்கும் மாலையேயாம்விருப்புற்ற தென்றறிந்துகொள்ளுமென்ற ருளிமறைந்து,சன்னதிமுதலிகளுக்கு மிப்படியேஸ்வப்னமருளிப் போயினன். ஆழ்வார்நித்திரைகலைந்துவிஸ்மிதராய்வீற்றிருக்கை

யில், சன்னிதிகாப்பாரோடிவந்துதங்கள்ஸ்வப்னமிருந்தபடியைவி ண்ணப்பஞ்செய்ய, இலரும் தாம்கண்டதை யவர்களுக்கறிவித்து இதனை யாராயக்கடவோமென்று அன்றெடுத்துவந்து கட்டியபு ஷ்பங்களைநாச்சியார்திருமுன்புவைத்து இவைகளைச்சூடிக்கொடுக் கவேண்டுமென, அவ்வண்ணமே நாச்சியாருஞ் செய்ய, அவைக ளைக்கொண்டுபோய் சுவாமிக்குச்சமர்ப்பிக்க, அவைதம்மைஅர்ச் சகரெடுத்து சாத்தப்போகையில் வடபத்ரசாயி, முன்னாள்திருப் பிக்கொண்ட தன்னுடைய திருமுகத்தை செவ்வேதிருத்தி திரு க்கண்களை யலர்த்தி முறுவல்செய்து மகிழ்வெய்திசேவைதந்தரு ளினன். அப்போது அர்ச்சகரும் கோயில்பரிகாரத்தாரும் அதியா ச்சரியமடைந்து நாச்சியார் திருவடிகளில் தண்டன் சமர்பபித்து கிருதார்த்தராயினர்கள்; ஆழ்வாரும்வெகுகளிப்படைந்துதம்மு டையதிருமகளாரை அருட்கண்களால்நோக்கிஆநந்தபாஷ்பம்பெ ருக திருவாய்திறந்து, என்னை ஆண்டாளிவளே!! என்மருளி வி சேஷ பிரதிபத்தி செய்துப் போந்தார்.

அதன்பின்நாச்சியார் ஈட்டுபெண்களோடு கலந்துமணலால் சிறுவீடுகட்டி விளையாடுகையில் அழகியமணவாளன் பால்யனாய் வந்துதிருவடியாலதைச் சிதைத்தோட ஸ்ரீதராவெங்கள்சிற்றில் வந்து சிதையேலே என்று பாசுரமிட்டு அந்த அவசரம் நீங்கின வாறே அவனுடைய கல்யாணகுணாதிசயங்களை வாயினாற்பாடி. ம னத்தினாற்சிந்தித்து வடபெருங்கோயிலுடையானோடேதழுவி ப ரிமாறவேணுமென்றுசொல்ல, அர்ச்சாவதார சமாதியாகையால் நினைத்தபடிக்கவன் முகங்காட்டாமையாலே மிகவும்நொந்து அவ னோடு பரிமாறப்பெற்றாருண்டோ வில்லையோவென் றாராய்ந்து தன்னோடாடும் பெண்களை இடைப்பெண்களாகவும் தான் அவர் களிலொருத்தியாகவும், வடபெருங்கோயிலை நந்தகோபன்திருமா ளிகையாகவும், உள்ளுறங்குகிறவனை கிருஷ்ணனாகவும் அநுசந்தி த்து,திருவாய்ப்பாடியில் தன்னுடையதிருவுள்ளங்குடிபோய்பாவ னாபிரகர்ஷத்தாலே அநுகாரம்முற்ற இடைப்பேச்சும், இடை ந டையும்,இடைமுடியு முடையளாய்,நிகில உபநிஷத்ஸாரதரமான திருப்பாவைமுப்பதும் பாடியருளி நோன்புநூற்றும்நாச்சியார்தி

ருமொழி யென்னும்பிரபந்தத்தையருளிச்செய்தும் (திருத்துழா
யானது பரிமளத்தோடே கூடமுளைக்குமாபோலே ஆஜந்யபால்ய
யௌவனாவஸ்தைகள்தோறும் பரமபக்தி, பரமஞ்ஞான பரமபக்தி
களையுடையவளாய்க்கொண்டு) அவன் விஷயமான காமபஜனாதி
களைப்பண்ணி வாழுங்காலத்திலேபெரியாழ்வார் இந்நாச்சியாரு
டைய விவாஹயோக்ய பருவத்தைக்கண்டு! வியாகுலாந்தக்கரண
ராக அவர் கருத்தையறிந்தநாச்சியார் "மானிடவர்க்கென்று பே
ச்சுப்படில் வாழ்கில்லேன்" மாலிருஞ்சோலையெம்மாயவற்ல்
லால் வேறொருவனை விரும்பேனென்ன! ஆழ்வார். நூற்றெட்டுதி
ருப்பதியி லெம்பெருமான்களில்யாருக்கு வாழ்க்கைப்படுகிறீரெ
ன்ன அவருடையகுணாதிசயங்களைகுறிப்பிடுவென்ன, ஆழ்வாரும்
வடபெருங்கோயிலுடையான்வைபவமயமாகஎம்பெருமான் களி
ன்வைபவங்களையெல்லாம் அருளிச்செய்ய நாச்சியார்கேட்டு ஆன
ந்தபாஷ்பந்துளிக்கதென்னரங்கத்தின் னமுதருடைய குழலழகு'
வாயழகு கண்ணழகுகளை மனதில்நாட்டி வ்யாகுலயாய்ஹித்து அ
ழகியமணவாளனையே காமித்திருக்க அவனும்நாச்சியாருடையஸ்
வப்நத்தில்வந்து பாணிக்ரஹணம்பண்ணிப்போக அந்தஸ்வப்நவை
பவத்தாலுண்டான களிப்பு உள்ளடங்காமல் சிந்தையைத்தூண்
ட, "நாளைவதுவைமணமென்று நாளிட்டுபாளை கமுகுபரிசுடை
ப்பந்தற்கீழ் கோளரிமாமனன் கோவிந்தனென்பானோர் காளைபு
குதக் கனாக்கண்டேன்,, என்று பாசுரமிட்டுக்கொண்டு ஒளியரங்
கத்து ளோங்குமொளியுளரான அணியரங்கத்தம்மானுக்கே தீர்ந்
த காதலையுடையளாக, அவ்வளவில் ஆழ்வார்நோக்கி, கோதைக்
குத்தக்கநாயகன் கோயிற்பிள்ளைதானென்றுகருதி, இதுகைகூடு
ம்படியெங்கனேயென்று சிந்தைகலங்கிக் கண்வளர்ந்தருள, திருவ
ரங்கச்செல்வனார் அவர் ஸ்வப்நத்திலெழுந்தருளி, ஆழ்வீர் உம்
முடைய புத்ரியாகிய கோதையை நம்முடையதிருவரங்கந்திருமு
ற்றத்தேறக் கொண்டுவாரீர், நாமே தகுதியாக பாணிக்ரஹணம்
பண்ணிக்கொள்ளுகின்றோமென் றருளிச்செய்துபோக, ஆழ்வா
ரும் நிர்ப்பரராயிருந்து விட்டார்.

அவ்வளவிலே திருவரங்கச்செல்வனர் திருமுற்றத்தடியார்களைக் கடாக்ஷித்து நம்முடையசத்ரசாமராதாலவ்ருந்தாதிசகலபரிஜனங்களுடனே ஸ்ரீவில்லிபுத்தூரேறச்சென்றுவிஷ்ணுபத்தருடைய திருமகளாரான சூடிக்கொடுத்தாளை அழைத்துக்கொண்டுவாருமென்று அருளிச்செய்தவாறே அவர்கள்சென்றுஆழ்வாரைக்கண்டடிபணிந்து நம்பெருமாள் திருவாக்கை விண்ணப்பஞ்செய்ய ஆழ்வாரும் ஆச்சர்யப்பட்டு வடபெருங்கோயிலுடையான்றிருவடிகளில் விண்ணப்பஞ்செய்து விடைகொண்டு ஆண்டாளை மணிப்பல்லக்கிலெழுந்தருளுவித்துக்கொண்டு, ஸ்ரீவல்லபதேவபாண்டியனும் செல்வநம்பியும் மற்றுமுள்ளவர்களும்கூடிசேவித்துக்கொண்டுவர அகிலவாத்ய கோஷத்துடனே அனைவருங்காணும்படிநிகளாபுரமென்கிற உறையூரிலேவந்துதங்க, அப்போது அழகியமணவாளன் சத்ரசாமராதி யலங்காரத்தோடு தீர்த்த ப்ரசாதங்களனுப்பிவைக்க, அவைகளை ஆழ்வாரும் திருமகளாரும் அதிப்ரீதியுடன்அங்கிகரித்து மற்றதை மற்றவர்களுக்கு ப்ரசாதித்து அங்கிருந்துபுறப்பட்டு திருவரங்கன் திருப்பதியுள் எழுந்தருளினவாறே, சூடிக்கொடுத்தாள் வந்தாள். ஆண்டாள் வந்தாள். திருப்பாவை பாடியசெல்விவந்தாள் என்று பலசின்னங்கள் பரிமாரவெழுந்தருள்வித்துக்கொண்டு அழகியமணவாளன்றிருமண்டபத்துள்சென்றுநின்றுதிருப்பல்லக்கின்பட்டுத்திரையைவாங்க, அப்போதே நாச்சியார் அகிலருங்காணும்படி உதறியுடுத்த பட்டுச்சேலையும் பருத்தசெங்கழுநீர்மாலையும் திருநுதற் கஸ்தூரி நாமமும்கயல்போல்மிளிர்ந்து காதளவோடியகடைக்கண்விழியும்ப்ரகாசிக்கசிலம்பார்க்கசிராங்வளையொலிப்ப 'அன்னமென்னடைகொண்டு அணியரங்கத்தம்மான் திருமுன் பேசென்று கண்களாரக்கண்டுகளித்துசேசவநம்பியைக் கால்பிடிப்பாளென்னும் பேர்பெற்றுஉள்ளேபுகுந்து நாகபர்யங்கத்தை மிதித்தேறி திருவரங்கச்செல்வனைசேர்ந்து அவன்றிருவடிகளிலே யந்தர்ப்பவித்தருளினர்.

## மகாலட்சுமி உற்பத்தி.

சகலலோக மாதாவாகிய சாக்ஷாத் திருமகள்முன்னொர்ஒர்காலத்தில், பிருகுமகாமுனிவர் பாரியையாகிய கியாதியினிடத்தில்

தாதா விதாதா என்கிற இரண்டுகுமாரர்களையும் ஸ்ரீமந்நாராயண னுக்கு பிரியபத்தினியான ஸ்ரீதேவியென்றுசொல்லப்பட்டமகளை யும் பெற்றார்.

பின்னர்தேவரும் அசுரருங்கூடி பாற்கடலையடைந்துஅமுத ங்கடைந்த காலத்தில் அப்பாற்கடலினின்று அதியற்புதமும்அபூ ர்வமுமான திவ்வியகாந்தி விசேஷத்தினலேதிக்குகளெல்லாம்பிர காசிக்கும்படியாய் மலர்ந்தசெந்தாமரைப்பொகுட்டை ஆசனமா கக்கொண்டு தாமரைப்புட்பங்களையேதிருக்கைகளிலும் தரித்துக் கொண்டு செகன்மாதாவான பெரியபிராட்டியார் திருவவதரிக்கக் கண்டு மகாரிஷிகளெல்லாம்பரமசந்தோஷ முக்தர்களாய் ஸ்ரீசூக் தங்களைக்கொண்டு வெகுவிதமாகத் தோத்திரஞ்செய்தார்கள்.

அப்போது பிராட்டியின்சன்னிதியிலேவிசுவாவசுமுதலான கந்திருவர்கள் கீதங்களைப்பாடினார்கள் கிருதாசிமுதலான அப்சர ஸ்திரிகள் நிர்த்தனஞ் செய்தார்கள். கங்கைமுதலானமகாநதிகள் தங்கள் தீர்த்தங்களைக்கொண்டு அந்தப்பிராட்டியின் திருமஞ்ச னத்திற்காக ஸ்ரீரூபந்தரித்துச் சேவித்துநின்றன. திக்கஜங்கள்நவ ரத்தினகசிதமான சுவர்ண கலசங்களிலே அந்தநதிதீர்த்தங்களை யெடுத்துசர்வலோக மயேஸ்வரியான அந்தப் பிராட்டிக்கு திரும ஞ்சனம்செய்வித்தன அந்தச்சிராதிஒரு புருஷரூபத்தைத்தரித்து நித்ய விகசிதமான திவ்யமாலிகையைத்தாயாருக்குச்சமர்ப்பித்து உடனேவிசுவகர்மாவானவன் திவ்யரத்தினமயமான திருவாபர ணங்களைத்தாயார் திருமேனியிலே சாத்தினன். இவ்விதமாப்அவ ரவர்செய்தகயிங்கரியங்களைத் திருவுள்ளம்பற்றித் திருமஞ்சனங் கண்டருளித்திருவாபரணம் திருமாலை முதலானவைகளைச் சாத் திக்கொண்டுஅந்தப்பிராட்டியானவள் பிரமருத்திரபுரந்தராதிதே வர்கள் பார்த்துக்கொண்டேயிருக்க, அந்தத் தேவசங்கத்தின்நடு வே எழுந்தருளியிருந்த பெருமாளுடைய திருமார்பிலே எழுந் தருளியிருந்தார்.

ஸ்ரீதேவி பிருகுமகாரிஷிக்குக்கியாதியென்கிறஸ்திரியினிடத் தில் அவதரித்தாளென்றுசொன்னோம். பின் திருப்பாற்கடலிலே யுமவதரித்தாள் இதுமாத்திரமன்று. லோகநாதன் எப்போதெப் போது லோகங்களி ல்வதரிப்பானோ அப்போதெல்லாம் ஸ்ரீதேவி

யும்அவனேடுகூடவே அவதாரஞ்செய்தருளுவள் நாராயணன் அதிதிக்குக்குமாரனுக அவதரித்தபோது இவள்பதுமையென்கிற திருநாமம்முடையவளாயும், அவன்பரசுராமனுக அவதரித்தபோது இவள்தரணியாகவும், அவன் சக்கிரவர்த்தித் திருமகனுனபோது இவள்சீதாபிராட்டியாயும், கண்ணனுக அவதரித்தபோது இவள் ருக்குமணியாகவும் இப்படியே எம்பெருமானை விட்டுப்பிரியாமல் கூடவே அவதரித்துவந்தனள்.

தேவதைகளி னுற்பவத்தைக் கிரமமாகச் சொல்லுமளவில் பிரளயசிருஷ்டி, கற்பாந்தசிருஷ்டி, காரணுர்த்தசிருஷ்டி, பிரமசிருஷ்டி எனச் சிருஷ்டி, பேதங்கள் பலவாயிருப்பதாலும், யுகங்கள்பலவாயிருப்பதாலும், அனேக மதங்களாய் ஒவ்வொருமதமும் தத்தமது சித்தாந்தத்தையே பூர்வபக்ஷஞ்செய்வதாலும், தேசங்கள் பல பகுப்பாதலாலும், தேசம், காலம், மதம்முதலியவற்றிற்கேற்க சாஸ்திரங்கள் பலவகைப்பட்டுள்ளதாலும் இன்னதுஇத்தன்மையினவென முடிவுபடுத்திக்கூறக் கூடாததாயிருக்கின்றன. அன்றி, சாஸ்திரங்களோ சத்தியினு லாண்டனவென்றும், பிரமனுல்படைக்கப்பட்டதென்றும், விஷ்ணுவினுல் படைக்கப்பட்டதென்றும், சிவபெருமானுல்படைக்கப்பட்டதென்றும், பிரமனினைவினுலுண்டாயதென்றும், சர்வமும் இயற்கையேஎன்றும், முனிவராலுண்டானதென்றும், உமாயையினுலுண்டானதென்றும் பேதிக்கின்றன. ஆயினும், ஒருவகையாய்யாவருங்கொள்ளக்கிடக்கும்போதுநெறியினளவான சில தேவதைகளுற்பவத்தை மாத்திரமே ஒருவகையாற் கூறினம்.

தேவோற்பத்திகள்

முற்றிற்று.

# மதபேத விளக்கம்.

மதமாவது விவேகிகளால் தங்கள்தங்கள் அறிவின்தன்மைக்கேற்க ஓர் தெய்வத்தையும், ஆசார கிருத்தியங்களையும், நடையுடையாதிகளையும் ஏற்பாடுசெய்து அவ்வழியே தத்தமதுசார்பினரையும் நடக்க வற்புறுத்தி, ஓர் நூலியற்றி யெழுதும் ஓர்முடிபேயாம் அஃது உலகில் அளவிறந்ததாய் காணப்படுகின்றன. அவைகளில் சில மதங்கள் பூர்வீகமாயும், சில மதங்கள் இடையிற்றோன்றியதாயும், சிலமதங்கள் தற்காலத்துண்டானதாயுமிருக்கின்றன அவற்றுள் சிலமதங்கள் விக்ரகாராதனையோடு கூடியதாயும், சிலமதங்கள் ஆராதனை முதலியவைக ளில்லாததாயும்,; சில மதங்கள்தெய்வமே யில்லையென்றும், சிலமதங்கள் தாங்களேதெய்வமென்றும் கூறுகின்றன, இதில் அனேக மதங்கள் தங்கள்தெய்வமுண்டென்றும்கூறினும், அதன் இலக்ஷணகிருத்தியங்களின்னதென்றுகூறுமலே மனம் போனபடியே சாஸ்திரங்களின்றி அனுட்டித்துவருகின்றன.—அவற்றுள்,

| | | |
|---|---|---|
| சிலமதம் | காற்றே | தெய்வமென்றும் |
| ,, | சந்திரனே | ,, |
| ,, | அக்கினியே | ,, |
| ,, | தீபமே | ,, |
| ,, | சூரியனே | ,, |
| ,, | பஞ்சபூதமே | ,, |
| ,, | ஆகாயமே | ,, |
| ,, | பூமிமே | ,, |
| ,, | மரங்களே | ,, |
| ,, | பாம்புகளே | ,, |
| ,, | பக்ஷிகளே | ,, |
| ,, | சத்தியே | ,, |
| ,, | தந்தையுந்தாயுமே | ,, |
| ,, | பஞ்சகர்தமே | ,, |

,, சுவாசமே ,,
,, நவக்கிரகங்களே ,,
,, அறிவே ,,
,, அரூபமே ,,
,, ஆசாரியனே ,,
,, நக்ஷத்திரங்களே ,,

இதுமுதல் அனந்தவிதமாகக் கூறி மகிழுகின்றன. வேறு அனேகவிதங்கள் சமயசின்னங்கள் சாஸ்திரம்; ஆசாரியர்; நியமம் முதலியவைகளின்றி ஆடு மாடு பன்றி கோழிமுதலியவைகளைக் கொல்லுதலும் குடித்துவெறித்து ஆடுதலுமேமுடிவாகக்கொண்டு காளி; கூளி; அண்ணமார்; வீரன்; இருளன்; ஜாலக்காள்; கருப்பன்; காளன்; நீலன்; மலைபாளிமுதலிய தேவதைகளைப் பூசித்தும், சிலமதங்கள் பிறரை வஞ்சித்தல்; கொல்லல்; திருடல்; வெல்லல் ஆட்டல்; அடித்தல்முதலிய பிரயோசனங்களையே முடிபாகக் கொண்டு; கொள்ளி குறளி; தூமா; காட்டேரி; குட்டிசாத்தான்; மலக்குட்டி முதலியவைகளையே தேவதையாகக்கொண்டும் சில மதங்கள் யாசித்தல் முதலியவைகளையே பயனாகக்கொண்டு பல வேடமிட்டும்; சிலர் மதம் இன்னதென்று தெரியாமலே உண்டுறங்கி யொழிந்தும்; வியர்த்தமாகின்றன.

இங்ஙனந்தோன்றிய * மதங்களுள் ஒவ்வோர்மதங்களும்ஆசாரியநாமரூப கிரியாபேதங்களால் அனந்தவகைப்பட் டிருக்கின்றன. அவற்றுள் கிறிஸ்துமதமென்ப தொன்றுமாத்திரம் சுமார் 250-பேதமாயிருக்கின்றன. என்றால் மற்ற மதங்களின் பேதபாவங்களை அளவிடக்கூடுமோ கூடாது. ஆயினும் ஏகதேசமாக எமக்குத்தெரிந்த அளவில் வழங்கும் மதங்களில் நினைவுக் கெட்டியவற்றுள்.

---

* இம்மதங்களி னளவைகளை நமது ஆங்கிலேய அரசாங்க குடிமதிப்புச் சபையாரது ரிப்போர்ட்டுகளிலும் மானுயூல்களிலும் மதவிருக்ஷநூலிலும் தத்துவ நிஜானுபோகம் முதலியவைகளிலும் பார்க்கக்காணலாம்.

## மதங்கள்

1 சைவம்
2 வைணவம்
3 சாத்தேயம்
4 காணாபத்தியம்
5 கௌமாரம்
6 புத்தம்
7 சௌராந்திகம்
8 யோகாசாரம்
9 மாத்மீகம்
10 வைபாடிகம்
11 ஆருகதம்
12 தார்க்கிகம்
13 மீமாம்சகம்
14 மாயாவாதம்
15 சாங்கியம்
16 யோகம்
17 பஞ்சராத்தியம்
18 பாசுபதம்
19 மாவிரதம்
20 காளாமுகம்
21 வாமம்
22 பைரவம்
23 பாடணவர்தம்
24 சாங்கிராந்தவாதம்
25 அவிகாரவாதம்
26 பரிணாமவாதம்
27 சுத்தசைவம்
28 பேதவாதசைவம்
29 ஆதிசைவம்
30 நிரீச்சுரவாதம்
31 ஸ்மார்த்தம்
32 வீரசைவம்
33 அத்வைதம்
34 விசிட்டாத்வைதம்
35 ஆஸ்திகம்
36 நாஸ்திகம்
37 பிரமசமாஜம்
38 ஸ்ரீவைணம்
39 இராமாநுஜம்
40 மாத்துவாசாரம்
41 பாஷ்கரம்
42 இராமாநந்தம்
43 வல்லபசாரம்
44 சைனியம்
45 சமணம்
46 பௌத்தம்
47 சார்வாகமம்
48 சாந்திரம்
49 கிரகாதிகம்
50 பஞ்சபூதாத்மம்
51 இந்திரியாத்மம்
52 அந்தக்கரணாத்துமம்
53 பிராணாத்துமம்
54 சூனியவாதம்
55 சிவசம்வாதம்
56 அச்சுமாறுவாதம்
57 வேதசமாஜம்
58 சிக்கியம்
59 தியாசபிகல்
60 மகம்மாதியம்

61 கிறிஸ்து
62 சீனம்
63 எகிப்து
64 யுதேயம்
65 கிரீக்கு
66 ரோமன்
67 புரோடெஸ்டாண்டு
68 லூத்தர்
69 பாப்டிஸ்டு
70 வெஸ்லின்
71 ஒயிட்பீல்டிஸ்ட்
72 கால்வனிஸ்ட்
73 பிரிசிபிடேரியன்
74 அண்டினோமியனர்
75 யூனிடேர்யன்
76 சொஸ்னியர்
77 அரியான்
78 சாபிலயன்
79 லண்டன்மிஷன்
80 ஸ்காட்சுமிஷன்
81 எபிஸகோபில்
82 குவாகர்
83 பிரிமேசன்
84 சுவேதன்பர்கியர்
85 பார்சிகம்
86 கிரேக்
87 ரோமகர்
88 ஸ்காந்திநேவியர்
89 மெக்சிகோ
90 தார்தார்பா
91 ஜப்பன்
92 சீயம்
93 பெருவியன்
94 கனடா
95 பைகோ
96 பிலிபியன்
97 மலாகா
98 அமேத்ராபோர்னியர்
99 ஜாவா
100 மலாயா
101 லாட்லா
102 காங்கோ
103 அரக்கான்
104 உருத்திரம்
105 பாடாண்டம்
106 மிசிசி
107 பிலோரடைன்
108 காரபி
109 கினியா
110 பெனின்
111 கபிரேயன்
112 தாங்தோன்றி
113 லீலாபிரம்மவாதி
114 பிரதிவிம்பவாதி
115 வைதிகவேதாந்தம்
116 சுத்தவேதாந்தம்
117 நீரீசுரசாங்கியம்
118 வைசேஷியம்
119 வையாயிகம்
120 சிவாத்துவிதம்
121 பாஸகரியம்
122 சத்தப்பிரமவாதி
123 பாட்டம்
124 கிரீடாப்பிரமவாதி

| | | | |
|---|---|---|---|
| 125 | பிராகாரம் | 138 | சந்திரவாதம் |
| 126 | ஆரங்கம் | 139 | சூரியவாதம் |
| 127 | பௌராணிகம் | 140 | அக்கினிவாதம் |
| 128 | உபக்கிரமவாதி | 141 | ஊழ்வாதி |
| 129 | வெசமவாதம் | 142 | காலவாதி |
| 130 | அயிக்கவாதம் | 143 | மந்திரவாதி |
| 131 | பாசுபதிமதம் | 144 | அவிழ்தவாதி |
| 132 | சங்கிராந்தி | 145 | யந்திரவாதி |
| 133 | பிரவாஹேஸ்வராதி | 146 | அத்துவாசங்பவாதி |
| 134 | சம்மேளிதம் | 147 | தர்க்கவாதி |
| 135 | அனேககூவாதம் | 148 | தானசங்கற்பவாதி |
| 136 | கவுளயாமளைவாதம் | 149 | விரதசங்கற்பாவதி |
| 137 | ஆசிவகம் | 150 | கோளவாதி |

முதலிய அனேக மதங்களிருக்கின்றன. அம்மதங்களுக்கு தேசத்தாலும் ஆசாரத்தாலும் இடத்தாலும் ஆசாரியராலும் சாதியாலும் இவ்வித பெயர்களமைக்கப்பட்டதாகதெரிகிறது. இதில் யாதொருகாரணமுமின்றி வைராக்கியத்தாலு முண்டானதாகவும் யாதொரு ஏற்பாடுமில்லாமலே தோன்றியதாகவுங் கூடசில மதங்களிருக்கின்றன.

அம்மதங்கள் அனேகந்தோன்றியழிந்தும் அனேகம்நூதனமாகத்தோன்றியும், அநேகம் அநாதியாகவுமிருக்கின்றன. இவைகள் உலகம் அனேககாலமாயிருப்பதாலும், இவ்வுலகம் அளவில்லாத இடமகன்றபெரிய நிலமாயிருப்பதாலும், இந்நிலங்களில்வசிப்பவர்கள் எண்ணற்றவர்களா யிருப்பதாலும், அவர்கள் விவேகம் பலமாதிரியானதோற்றமாயிருப்பதாலும் இடத்திற்குங்காலத்திற்கும் ஏற்ற உண்டி உடை நடைகளைக்கொள்ளவேண்டியதாயிருப்பதாலும் பிறந்தவர்கள் யாவருக்கும்யார் நம்மைப்படைத்தவர்கள் அவர்களல்லவோ தெய்வமென்னுமுணர்ச்சியிருப்பதாலும், அவரவர்களிஷ்டப்படி ஒவ்வொரு முடிபாய்மதங்கள்அனேகமாயின வல்லாமல் வேறல்ல அவற்றுள்ஈமது இந்துதேசத்தில் தற்காலங்காணப்படும் மதங்களில் எமக்குத் தெரிந்தமட்டும் சில சாஸ்திரஆதாரங்கொண்டு கூறுகின்றோம்.

# இந்துசமயம்

### * இந்துதேசம்.

இந்து சமயங் என்பது இந்தியாதேசத்தில் வழங்குஞ்சமயங் களேயாம்.

இந்தியாதேசமானது ஆசியாகண்டத்தின் தென் திசையில் வடபாகமாயுள்ள ஓர் பகுதி இது தெற்கு வடக்கில் 19,000-மையில் நீளமும், கிழக்கு மேற்கில் 1800-மையில்' அகலமும், அதாவது, 15-லட்சம் மையில் சுற்றளவும் உள்ளது,

### காலம்.

இக்கண்டத்தின் காலவரை யரையைக் கூறுமிடத்து இந்நாட்டுசாஸ்திரங்களாலும், பிற்கால ஆங்கிலேய அரசாக்ஷியில் குடிமதிப்புச் சபையாரால் பிரசுத்தஞ்செய்துள்ள ரிப்போர்டுகளாலும் காலகணிதங் கூறக்கூடியதாயில்லை,

### இந்துக்கள்.

ஆயினும் இராஜாங்க கலங்களாலும், சில அடவிகளைச்சேதித்துக் குடியேற்றும் காரணமாகவும், இடையில் அநேகவேறு தேசத்தவர்கள் குடியேறியதாகத் தெரிகிறது, வேறு சிலர் இத்தேசத்தில் குடியேறியகாலத்தை என்றாலுங் குறிக்கவில்லை யெனக்கூறியும், சிலர் கிறிஸ்து பிறந்த 300-வருடத்திற்குமுன்புமத்தியமாகாணத்தின் கடற்கரையில் இடையர்களாயிருந்தசித்தியமங்கோலியர் முதலியவர்கள் முன்னர் துரேனியராய், அப்பால்ஆரியராகி பார்சிகதேசத்தின்மேல் விழுந்து இந்து தேசத்திற்குவந்துசிந்துநதி தீரத்தில் குடியேறினர். அச்சிந்துநதிக்குஇந்துநதிஎன்

---

* இந்துதேசமென்பது இந்துநதி காரணமாக வழங்குகின்றது. இதை முன்னொருக்கால் பரதனுண்டமையால் பரதகண்டமென்றும், பரதவருஷமென்றும்,ஆரியர்கள் வசித்தமையால்ஆரியவர்த்தமென்றும், இத்தேசத்தின் காவல்விருக்ஷ காரணமாகசம்புத்தீபமென்றும் கூறுகின்றனர் ஆரியர்—மேலோர்.

ஞோர் பேருமிருந்ததால் அந்நதி தீரத்தி லிருந்தவர்களுக்கும் இந்துக்களென்றோர் பெயருண்டாயினவென்று கூறுகின்றனர்.

வேறு சிலர் கிறிஸ்துபிறந்த 1500-வருடத்திற்குமுன்மத்தியிலிருக்கும் திராவிடர் முதலியவர்களோடு ஆரியர் இந்துதேசத்திற்பரவினுர்களென்று கூறுகின்றனர்.

## இந்துக்களின் பாஷை.

அவர்கள் குடியேறியபோது நாளாவட்டத்தில் இந்து,பெங்காளி, மகாராட்டி, குஜராத்தி, பஞ்சாபி, காஷ்மீறி, சிந்தி,ஒரியா, தமிழ், மலையாளி, கன்னடி, காண்டு, தெலுகு,கொலோரியன்முதலான பாஷைகளை வழங்கி வந்ததாகவுங் கூறுகின்றனர். ஆனல், தற்கால் அநேக பாஷைகள் வழங்குகின்றன.

## இந்துக்களின் சாஸ்திரங்கள்.

இப்பாஷைகளுக்கெல்லாம் முதற்பாஷையாகவும் யாவரும் புகழத்தக்கதாயுமுள்ளது. தமிழ் சமஸ்கிருதம் என்பதேயாம். இச்சமுஸ்கிருத பாஷையில் இந்துக்களின் முக்கிய சாஸ்திரங்களாகிய வேதம், ஆகமம், உபநிஷத்து, புராணம், இதிகாசம், சாஸ்திரம் முதலியவைகள் பொருந்தியிருக்கின்றன. இவைகளின் விபரங்களை (பிரபஞ்ச உற்பத்திமுதற்காண்டத்துள்ளும், சிவசொரூபத்துள்ளும் காண்க.)

## தெய்வங்கள்.

இச்சாஸ்திரங்களில் இந்துக்களுக்கு பரதெய்வமா யுள்ளது. பிரமம், மகேச்சுரன், சதாசிவன், சிவன், உருத்திரன், விநாயகன் கந்தன், பார்வதி, நந்தி, திருமால், பிரமன், இலக்குமி, சரஸ்வதி முதலிய தேவதைகளும், ஸ்ரீஞானசம்பந்தர்முதலிய அடியார்களும், அவர் வழிவந்தவர்களும், அவர்களடியார் பொருட்டுகொண்ட திருமேனிகளின் பிரபாவமும் கூறப்படுகின்றன.

## ஜாதி.

அவற்றை அனுட்டிப்பவர்கள் பிரகாசசந்ததியாரான மறையோர், மன்னர், வணிகர் வேளாளர்முதலிய எண்ணற்ற மரபினருள்ளார்.

## ஆசாரியபீடங்கள்.

இவர்களுக்கு ஆசாரிய பீடங்கள் காசி, காஞ்சி மதுரை, கும்பகோணம், திருவாவடுதுறை, தருமபுரம், பொம்மையபாளையம் அந்தியூர், திருக்குமுளம், திருப்பனந்தாள், திருநெல்வேலி, ஸ்ரீசிங்கேரி, கும்பகோணம் சென்னை முதலிய அனேகயிடங்களிலிருக்கின்றன.

## மதங்கள்.

இவர்கள் தங்கள் ஆசாரியர் மூலமாக மேற்படி சாஸ்திரநெறியே நின்று மேற்கூறிய தெய்வங்களையே கதைப்பிடித்தவர்களேயாலும் அவருள் பலகொள்கையையும் பலசித்தாந்தத்தையும் கொண்டவர்களாய்அனேகசமயிகளாயிருக்கின்றனர். அவற்றுள்-

முதலாவது.

# சைவசமயம்.

சைவம் என்பது சுத்தம் என்னினும், 0சிவபெருமானைவழிபடுவோர்களேயாம். இவர்கள் விபூதி ருத்ராக்ஷ காவியாதிகளையணிந்து வேதாகமநெறியே வழிபட்டிருப்பவர்கள்.

இவருட்சமயங்கள்.

| | |
|---|---|
| ஆகமநெறியாக சொல்லும் சமயங்கள். | 7 |
| இதிலவேறு சாங்கியத்தேடு அஷ்டவாதம் | 8 |
| ,, பேதமாகவுள்ள சமையம் | 16 |
| அன்றி புறச் சமையம் | 3 |
| ,, பாட்டன் முதலிய சமையம் | 38 |
| அன்றி பாஷாண்டமதம் | 90 |

---

0 இச்சிவபெருமானைப் பற்றியவைகளையும், சிவவிலக்கணங்களையும் இந்நூலில் சிவமகாவைபவத்துட்காண்க.

அவற்றுள்.—சைவம் சிவாத்விதம், சம்மேளனம்,பாசுபதம் மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம். இவைகளே அஷ்ட சைவமாம்.—சைவபேதமாயுள்ள துஹூற்றசைவம், அனாதிசைவம் ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தர சைவம், குணசைவம், நிற்குணசைவம், அத்துவாசைவம், யோக சைவம், ஞானசைவம், அவாந்தரசைவம்,கிரியாசைவம், சுத்தசை வம், நாலுபாதசைவம் பேதசைவம் என்னும்பதினாறுமாம், இவை யன்றி, அஷ்டவாதமாவது சிவசமவாதி, அயிக்கவாதி, சங்கிராந் தவாதி, பிறவாஹேஸ்வரவாதி, கபாலிகவாதி, அவிகாரவாதி, பே தாபேதவாதி, அனேகேஸ்வரவாதி என்பனவாம்.

வேதாங்கிகாரமானவைதிகத்திற்பேதமானதுநியாயம், வை சேஷிகம், மீமாங்கிசம், சாங்கியம், வைணவம், பாட்டம், பிரபாக ரம், வியாகரணம் இவ்வெட்டுடன் அன்றி, மாயாவாதம்,பாஸ்கரி யம், சத்தப்பிர்மவாதி புராணிகன் என்பனவுமாம்.

1. மேற்சொன்ன சப்த சைவங்களுள் சைவத்தின் பகுதி யே சப்தவிதமாயிருக்கின்றன. அவை அனாதிசைவம், ஆதிசை வம், மகாசைவம், அனுசைவம், அவாக்திரசைவைம், பிறவாசை வம் அந்தரசைவம், என்று எழுவிதமாயிருப்பன. இவற்றுள்,—

1. சிவனே அனாதிசைவன்

2. சிவபெருமான் முகம் ஐந்தில் தீக்ஷதரான கோப்தசுகா திரிஷிகளே ஆதிசைவர்களே.

3. மேற்படி ரிஷிகளின் கோத்திரரும்: தீக்ஷதருமான சிவ தத்துவங்களை அனுஷ்டிப்பவர்களே மகாசைவர்கள்.

4. சிவ சமஸ்காரங்களை அனுஷ்டிப்பவர்களான க்ஷத்திரிய ர்களே அனுசைவர்.

5. சைவதிக்ஷா சம்பன்னரான சூத்திரர்களே அவாந்திர சைவர்களாம்.

6 சைவதீக்ஷா சம்பன்னரான அம்பரீஷ்டலோ வாதிகளே பிறவாசைவர்.

7 திக்ஷாவிதரானவர்களே அந்தர சைவரென்று ஆகமஞ் சொல்லுகின்றன.

2-வது, இச்சைவம், வாமம், தக்ஷணம் மிசிரம் சித்தாந்தம் என்று நான்குவகைப்படும். அவையாவன:—

1. சத்தியே பரமென்பது வாமம்.

2. வயிரவ பரமானதே தக்ஷணம்.

3. சத்தமாதுற்பவமானதே மிசிரம்.

4. பரமசிவமானதே சித்தாந்தம் என்பர்.

3-வது, இச்சைவங்களில் வீரசையம் சுத்தசைவம் மிசிர சைவம் சாமான்யசைவம் என நான்குவகையாம். அவற்றுள்:—

1. விபூதிதாரண மந்திரசுத்தாத்தமனாய் 0 இலிங்கங்களைக் கண்டவுடனே நமஸ்கார பிரதக்ஷண பூஜைகளைச்செய்து பத்திசிரவணாதிகளை மேற்கொண்டு சிவபுண்ணிய விரதசீலனா யிருப்பவன் சாமான்னியசைவன்.

2. *பஞ்சமூர்த்திகளையும் ஆவரணதேவதைகளாய்வைத்து ஆகமப்படி அருச்சித்து அந்நெறியே ஒழுகுபவன்மிசிரசைவன்.

3. ஆதிசைவமரபில் மகாவேதாதி ஆகமசித்தாந்தியாயிருப்பவனே சுத்தசைவன் இவனை வேறுசிலபேதமாகவும் கூறுவர்.

4. வீரசைவமதத்தி னிலக்கணங்களை நேர்ந்தவிடத்தில் இந்நூலிற்காண்க.

---

0 இலிங்கங்கள் என்று பொதுவாகச்சொன்னதனால் சுயம்புலிங்கம் தேவலிங்கம் தானலிங்கம் ரிஷிலிங்கம் மானசலிங்கம்முதலியவைகளெனக்கொள்க.

* பஞ்சமூர்த்திகளாவன:—சிவன், உமை, குகன், கணபதி, விஷ்ணு என்பனவாம். சிலர் சூரியனையுஞ்சேர்த்து ஆறுமூர்த்திகளாகக் கொள்ளுவதும் வழக்கே.

ஆகமசம்பந்தமான

# சப்தசைவப்பகுதியில்

## சிவாத்துவிதிமதம்.

சிவபெருமான் நித்த சுத்த முத்தனுய் இரண்டாவ தின்றி அறிவே வடிவாயிருப்பன் அலைகடலினுரை திவலையுகித்தொடுங்குமாபோல பேதமாய் ஆன்மாக்கள்தோறும் நின்றும் தன்னைமறைத்து உபாதிகளில் சுகதுக்கம் போனின்று தானே வேறின்றி எல்லாமாயிருப்பன்,—முத்திநிலை சாம்பவி தீட்சைபெற்று அனுபவ நிஷ்டையால் லயமாய் பெறுவன் என்று கூறும்.

## சம்மேளிதசைவமதம்.

திரிபதார்த்தமும் நிச்சயமேபாசம் அனுதியாம் பசுவைப்பந்திக்கும், பதி-அனுதிமுத்தன், பாசம்-அனுதி, பரன்-வயிர்த்துவசரீரன், பசு - அனேகமாய் தனுவாதிபோகன், பாசம்-பசுந்தம் என்றும், சிவத்யானஞானபூசையால் பந்தங்களைநீங்கி சிவனேடைக்கியமாதலே முத்தி என்றுங்கூறும்.

## உ தா ர ண ம்.

பாசமாம் பந்தம் பசுபெத்தன் முத்தனும்
மீசனனுதி யிவர்ஞான—பூசையா
லம்மோக மாறி யவரொன்றல் வீடென்றான்
சம்மேளித சைவன் றான்.

## பாசுபதிமதம்.

பாசுபதிபதமாவது:—திரிபதார்த்தமேநித்தியமென்று கொண்டு திக்ஷைபெற்று ஆசாரியன்மூலமாய் உபதேசம் பெற்று சிவபூசையால் நீரோடு நீர் கூடினுற்போல கலந்திருப்பதே முத்தியென்று கூறும்.

## மகாவிரதிமதம்

சிவனெருவனுண்டு ஆத்மாக்க ளனுதியில் மலத்திரையங்களோடு கூடி வசிப்பர் இம் 0 மும்மலங்களும் அனுதியாயுண்டு

---

0 மும்மலமாவன - ஆணவம், கன்மம், மாயை.

பதிபசு பாசங்கள் நித்தியமே, பதி-தனது ஞானசத்தியால்ஆன்மாக்களைப் பெத்தாவஸ்தைபடச்செய்வதுபசுவானதுமும்மலத்திலும் பந்திக்கப்பட்டு ஜெனனவேதுவடைகின்றன.பாசமானது,பசுவுக்குபந்தமாய் ஞானசத்தியால்பலங்கெட்டுபக்குவமாகின்றன.

பந்தநிலை—அனாதியில் மும்மலத்தில் பந்தப்பட்ட ஆத்மாக்கள் மாயையிடம் தனுகரணாதிகளை யுண்டுபண்ணி பலபக்குவமாக சனனமரணங்களை யுண்டாக்கி துக்கங்களை யனுபவிக்கப் பண்ணுவது.

முத்திநிலை—ஆத்மா ஓர் பக்குவத்தால் தீக்ஷைவிதியால் மலத்தினின்றுநீங்கி ஆகமப்பிரமாணாதிகளால் பூசித்துகடைசியில்கர்த்தத்துவ சங்காரத்தைவிட்டு நித்தியவியாபக சைதன்னியனான ஆத்மா சிவனது ஞானசத்தியை யுடையவராய் சிவலோகத்தில் ஞானமாத்திரத்துடனே யிருப்பர். என்பது, இது ஓர் உருத்திரரால் ஏற்படுத்தப்பட்டது.

## காளா முதன் மதம்

காளாமுதன் மதமாவது மேற்படிமகாவிதியைப்போலவே சொரூப உபக்கிரம பெத்த முத்தியெல்லாஞ் சரியென்றறிக.ஆனால் மகாவிரதிக்கும் இவனுக்கும் பேதமென்னவென்றால், தந்திர பேதங் கிஞ்சித்துண்டு. அவையாதெனில், ஆத்மா நித்திய வியாபக சைதன்ய னென்பதே.

### உதாரணம்

அத்தியக்கஞ்சடைமுதலா மடையாளங்கொண்டன்பாற்
பத்தியொடுவழிபட்டுப் பருநியமங்கொலையாமன்
மெத்தரியலவ்வுமேல் வினையாலுடலம்விடும்பொழுது
சித்தாதொருஞ்சிவலோக மடைவர்சிவார்ச்சனையாலே.

என்பது த. நி. போ. சாரம்

## வாமமதம்

இது சத்திமதம் இதை சாத்தேயமதமென்றுங் கூறுவர் இம்மதத்தர் சத்தியே பரமென்றும், சத்தியினாலேயே சகல சரா

சாங்களும் உண்டாய் பஞ்சகிருத்தியப் படுகிறதென்றும், அம்மை யையன்றி வேறொருவருமிக்கவரில்லையென்றும், பிரமாதிதேவர் களும் அம்மையினது சிருட்டியே யென்றும் கூறும்.

முத்திநிலையாவது,—இச்சத்தி வாலை, புவனை, திரிபுரை என் று மூன்றாய் மூன்று சக்கரங்களைக் கொண்டுள்ளதென்றும், அச்ச க்கரங்களை பொன்முதலிய லோகங்களில் பூ, மேருமுதலிய விஸ் தாரமாக வார்ப்பித்து மந்திராதிகளால் பூசித்து பிரசன்னத்துவ மாக்கிக்கொண்டு வழிபாடுடையவர்களா யிருப்பதுவே மோட்ச மென்று கூறும்.

அனேகேசுரவாதி அனேக தேவராலானதென்றும், வாமி சத்தியினாலேயே உண்டானதென்றும் கூறும் பேதமே யென்றி, வேறெவ்வகையினாலும் பேதமற்றவர்களா யிருக்கின்றார்கள்.

## வயிரவமதம்

வயிரவமதமென்பது,—வயிரவனேயேபரமென்றுகூறும் ஆதி வயிரவன் அஷ்டமூர்த்தமாய் அஷ்டகலையாய் அகிலமும் பெத்த முத்தியும் சிவராசிகளுமாமென்றும், யோகமும் மூர்த்தமு மென் றும் இரண்டால் நிர்வாணவான முத்தியுண்டாமென்றும் கூறும்

## சிவசமவாதிமதம்

சிவசமவாதி மதமாவது,—பதி, பசு, பாசம் மூன்றும் நித்தி யமே என்று கூறும் பதியாவதுநாமரூப கிரியாரகிதமாய், நித்திய மாய், அநாதியாய், சித்தாய், சத்தாய், நின்மலமாய், சுத்த மாயிருப்பது. பசுவாவது, தன்னையும் தலைவனையுமறியாது அநா திமலசம்பந்தமாய் அனேகரூபமாய் நித்தியமாயிருப்பது. பாசமா வது, அனாதி நித்தியமாய், அனந்த வியாபகசத்தியை யுடைத்தா யிருப்பது எனக்கூறும்.

## அயிக்கவாதிமதம்

அயிக்கவாதி மதமாவது,—சிவமாதி மதம்போல திரிபதா ர்த்த நிச்சயங்கூறி, ஆத்மா அநாதிசுத்தமென்றும், ஆணவங்கே

வலாவத்தையிலில்லை மாயையுங் கன்மமுமேயுள்ளது. விசேட தீக்ஷைபெற்று சிவார்ச்சனையால் அத்துவாசுத்திபண்ணி நிர்வாண தீக்ஷையால் கன்மநிக்ரகஞ்செய்து கன்மம் நீங்க இரண்டறக் கலப்பதுவே என்றுங் கூறுவது இது ஓர் உருத்திரரால் உண்டாக்கியது.

## சங்கிராந்தி வாதிமதம்.

சங்கிராந்தி வாதிமதமாவது 0 ஜெக. ஜீவ, பரம்என்னும்மூன்றில், பதி-அமலமாய், பரிசுத்தமாய், நித்தியமாய் அகண்டமாயிருப்பது. பசு-அனாதி சுத்தநித்தியமா யிருப்பது. பாசம்-சடமாயிருப்பது. இவற்றுள் தடத்தலட்சணமாவது—பதி-ஒன்றையுஞ் சுட்டாமல் தீபம்போலவிளங்கும். பசு-அனேகமாய் சூரிய சந்நிதானத்தில் காந்தம் இரும்பை வலிக்குந் தன்மையைப்போல மாயாமலத்தால் உடம்பைப்பொருந்திநிற்கும், பாசம்-தனுகரண புவனபோகங்களாய் விரிந்திருக்கும் எனக்கூறுவது.

## பிரவாஹேஸ்வர வாதிமதம்

ஈஸ்வரன், ஆன்மாக்கள், மாயை கன்மம் இவைகள் அனாதியிலேயேயுண்டு. ஈஸ்வரன் ஒருவனதிகாரத்துக்கு முத்தாத்மாவாகவந்து இரக்ஷிக்கும் ஆத்மாக்களுக்கு அனாதிமலமில்லை, மாயை பந்தப்பட்டு தத்துவசேட்டையால் தனு கரண புவன போகங்களாய் விரிந்திருக்கும் பசுமாயா கன்மத்தால் பிறவியையடையும் தீக்ஷாவிதியால் மாயை கன்மமிரண்டையும் நீங்கி சுத்தனாய் அடைவர் என்று கூறும்.

## காபாலி மதம்.

காபாலிகமதமாவது சிவசமயத்துள் மகாவிரதம்,களாமுகம் போல கிரமமுத்தியாதிகளெல்லாம் ஒன்றேயாயிருக்கின்றது. ஆனாலும் சிலபாகம்பேதமுண்டாம். என்னினும், எல்லாவகையாலும் ஏகதேசமாகப்பொருத்தமுண்டாம். இதுவுமோர் உருத்திரரால் இயற்றியது.

---

0 ஜெகம்-மாயை, சிவர்-பசு, பாசம்-பதி,என்பனவாம் இதனையே திரிபதார்த்தமென்பது.

### அவவிகார வாதிமதம்.

சொரூப இலக்கணம்.—அவிகார நித்யேச்சுர னொருவனு ண்டு ஆத்மாக்கள் அஞ்ஞானமாய் ஆணவமல விருளிலழுந்தி அ னேகராய்இருப்பர், ஆணவமலம் இருளாம். பதி,பசு, பாசம் இம் மூன்றும் அநாதி நித்தியமென்று கூறும்.

தடத்தலக்ஷணம்.—பதி நீரும் தண்மையும்போ லயிக்கியப் படுத்தும். பசு-இறைவனது ஞானத்தால் சர்வத்தையு மறியும். பாசம்-மறைந்து சிவரூபத்தைக்கொள்ளும்.

இவர்கள் வேஷம் கரகபால பிக்ஷாடனமாம். கர்த்துருத்து வமே சங்காரமானதால், அதுநீங்கினெப்திமாத்திரமானதேமோ ட்சமாம். இதுவுமோர் உருத்திரரால் கற்பிக்கப்பட்டதாம்.

### சைவபோதாபேத வாதிமதம்.

சைவபோதபேத வாதிமதமாவது.—சைவாகமத் துட்பட் டகிருத்திய லட்சண சித்தாந்தமேயானாலும் சத்தியின்பேதத்தா லே சிவனும்-சத்தன்,-யுத்தி-யுத்தன், பிரவத்தனென்னும்மூன்று ம் எனக்கூறி, சித்தாந்த இலக்கணங்களையே பிரமாணமாகக் கூறும்.

### அனேகேசுரவாதி மதம்.

அனேக கடவுளருண்டென்றும், அனேகரால் பஞ்சகிருத்தி யம் நடக்கிறதென்றும், ஆன்மாஜெனனமடையாமல் எப்போது ஞ் சுகத்திற்றானே யிருக்குமென்றுங் கூறும்.

---

## சோடசைவ பேதம்

---

### ஊர்த்தசைவம்.

சிவனொருவனுண்டு, அவன் தத்வாதீதன், இவனை யடைவ தெவ்வாறெனின், விபூதி, ருத்திராக்கம், சடை, பூநூல் தரித்து சிவலிங்கபூஜைசெய்து பக்தியாய் பஞ்சாட்சரஞ் செபித்து துறவு அல்லது கிரகத்திலிருப்பதா மென்பர்.

உதாரணம்.

சொன்னவிரெட்டாஞ்சைவத் தந்திரத்தொழிற்பாடோதி
லுன்னியவூர்த்தசைவர்க் கோதுபல்சடைருத்ராக்கந்
துன்னியவிபூதிபூசை தோன்றுநூலுடனேயீசன்
பின்னமில்தத்வாதீத னெனப்பெயர்பேசலாமே

## அனாதி சைவம்.

இது திரிபதார்த்தமாய் அனாதிநித்த வியர்த்தமாய்விளங்கும் சிவனைகுணவிகற்பமின்றி யுற்று விபூதிருத்ராக்க பஞ்சாக்கர குரு லிங்கவேடமே பொருளாகக்கொண்டு பூசையால்பாசங்களி னீங்கி பதியோடொன்றி ஆத்மாசிவனைக் கும்பிட்டிருத்தல் பரமாயமுத்தியென்று கூறும்.

உதாரணம்.

பதிபசுபாசமூன்றும் பார்த்திடிலனாதிநித்தம்
விதிபெறுவியாத்தமென்ன விளங்குமுக்குணத்தாலொக்கும்
முதியவேடங்களோடே முடுகுயர்பாசம்நீங்கிப்
புதியுடன்கூடிக்கும்பிட் டிருத்தலேபரமாமுத்தி.

## ஆதி சைவம்.

இவ்வாதிசைவமதம் பசுவின்பொருட்டு எல்லாவற்றிற்குஞ் வசினேயாய் பஞ்சகிருத்தியங்களைத் துலக்கி நிட்களத்தோடுசகளமாகவிருக்கும். இந்தபதியோடு போகங்கூடவேண்டில் மோட்ச சாதனங்களுக்கேற்ற வேடங்களும் நடக்கையும்பூண்டு எல்லாஞ் வசிபோகமா யனுபவித்து சிவவேடத்தின்மேல் விசுவாசமாய்நடந்து பதியோடுகூடி யவனிருந்தாற்போல் அவன்போகமாய் ஆத்மாவிருப்பானென்றுகூறும்.

உதாரணம்.

ஆதிக்குஞ்சிவனேயாகி யவன்றன்னாற்கருமமைந்து
மீதுற்றகாதலாலே விளங்கிநிட்களத்தினோடு
கோதற்றசகளமாகும் பதியதுபோகங்கூடி
லாதத்தால்முத்திவேடம் பூணலாலம்மையாவே.

## மகாசைவம்.

இது மூர்த்தி அமூர்த்திகளானபேருக்கெல்லாம்மேலானது சிவமென வேதாகமங்கள்கூறும். அச்சிவனைசன்மார்க்கத்துடனே சம்சாரம்நீங்கி சடையாதி சிவவேடந்தாங்கி பூசித்துசகுணமாகத் தியானித்து குருலிங்கமே பொருளெனக்கொண்டு அருள்கூடிமுத்திபெறும் எனக்கூறும்.

## பேதசைவம்.

இது சிவன் அருபன், ரூபாரூபன், ரூபன் என மூவிதமாயிருப்பன் இச்சிவனை சன்மார்க்கத்துடனேகூடி சிவவேடம்பூண்டு குருலிங்க சங்கமத்தை வழிபட்டுசிவனது மூன்றுவடிவிலும்தியானித்து வணங்குவதே மோக்ஷமெனக்கூறும்.

உதாரணம்.

பேதசைவந்தரனீச னுருவருரூபாரூப
மாதலால்வேடம்பூண்டிட் டடைவியலுருவந்தன்னை
நீதியால்வணங்கமுத்தி யெனகடல்

என்பதனையறிக.

## அபேதசைவம்

இதுபேதசைவனைப்போல யெல்லாங்கொண்டு வேறுபாடின்றியிருக்கும் ஆனாலும் சன்மார்க்கநிலையால் சிவனையறிகிறதே முத்தியென்றுகூறும்.

## அந்தரசைவம்.

இவ்வந்தரசைவம் சிவவேடந்தாங்கி சிவவியல்பை யடைவதே முத்தியென்றறிவது வேறொருவித அந்தரசைவருமுண்டு, வந்தவிடத்திற்காண்க.

## குணசைவம்.

குணசைவமென்பது.—ஆகம விதியையே பிரமாணமாகக்கொண்டுள்ளதாயினும், சிவபெருமானது அஷ்டமங்களகுணங்களையும் தமது எண்குணங்களாலும் வழிபட்டு சிவவேடம்பூண்டு திரிவதே முத்தியெனக்கூறும்.

## நிற்குணசைவம்.

நிற்குணசைவமென்பது;—சைவபேதம் பதினறிலும் பொருந்தாது வேதாகமபுராணுதிகளை ஏகதேசமாகக்கொண்டுள்ளதேனும், இறைவன்குணுதி நாமரூபரகிதனுனதால், அப்பரம்பொருளைபேதாபேதமற்று குணமில்லாமலே கூடுவதும் முத்தியாம்என க்கூறும்.

## அத்துவாசைவம்.

இதுசுத்தாநந்த நிட்களனுயிருக்கிறசிவபரம்பொருளை,காமரூப கிரியா வசத்ததல்லாததால், அதனைசத்தினி வந்தவுடன்சிஷன் குருவையடைந்து தீக்ஷதனுகி சைவத்துக்குள்ளவேடத்தைத் தாங்கி குருலிங்கமே பொருளெனக்கொண்டு அத்துவாசோதனை செய்து அவற்றின் முடிவை தியானித்து சகசமாதிநிஷ்டைகூடி வழிப்படுவதே முத்தியென்று கூறும்.

## யோகசைவம்.

இதுகுணரகிதமான பரமபதியை ஆசாரியராலறிந்து யோகநெறியைக் கடைப்பிடித்துநிஷ்டைகூறி சாதித்துஅஷ்டமாசித்திகளையறிந் தனுபவிக்கிறதே முத்தியென்று கூறும்.

## ஞானசைவம்.

சிவனை குருமுகமாய்த்தெளிந்து, சிவவேடம்பூண்டு சிவபரபேதமறிந்து ஆத்மாபரத்தோடுகூடிசுத்தாத்மாவாய் பரத்தோடு கூடுவதே முத்தியென்று கூறும்.

## அணுச்சைவம்.

சிவபெருமானை யுள்ளும் புறம்புமா யறிந்து திகம்பரவேடங்கள்பூண்டு சன்மார்க்க லட்சணத்துடனேகூடி குருலிங்கவேடமே பொருளாய். சிவன் பஞ்சகிருத்தியங்களையும் தரிசித்துஆநந்தமே விட்டு அதில் மனேலயமாவதே முத்தியென்றுகூறும். வேறு அணுச்சைவருமுண்டு வந்தவிடத்திற்காண்க.

## கிரியாசைவம்.

ஆசாரியனுலேசதாசிவமூர்த்தியை யறிந்து, பின்னர் சமய, விசேஷ, கிருவாண, கிரியா, தீட்சைகளைப்பெற்று அந்துவாசோ

தனைசெய்தாஆவாகனநிபேதங்களையறிந்துபஞ்சசித்தியுஞ்செய்து கொண்டுவிதிப்படி நித்திமுத்தி பொருந்த கன்மங்களைசாதித்து சிவார்ச்சனை செய்து சோடசோபசார, அஷ்ட விதார்ச்சனையுஞ் செய்வதுவே மோட்சமெனக்கூறும்.

### நாலுபாதசைவம்.

இது சரிதை, கிரியை, யோகம், ஞானம் நான்கையும் ஒவ் வொன்ருய்ச்சாதித்து சனகாதிகளடைந்தபடியேஒருமொழியால் சமாதி நிஷ்டைகூடி பிரமத்தில் ஐக்கியமாவதே முத்தியென்று கூறும்.

### சுத்தசைவம்.

திரிபதார்த்தமும் நிச்சயமென்றறிந்து இதிற்சச்சிதாநந்தப் பிரமநிச்சயமுண்டாய் சமயங்களெல்லாம்பாசசாலமாக்கிவேதாந் த சித்தாந்தநிர்வாய்பந்தங்களிறந்து நான்குமுத்திரையுங்கடந்து மகா மவுனமே பொருளாக லயமாய்நிஷ்டைசாய்த்துபிரமத்தோ டு ஏகனுவது மோட்சமென்று கூறும்.

ஆக இந்தவூர்த்துவமுதல் சுத்தசைவமீருகிய பதினுறுசை வமும் பேதசைவ மென்பர்.

## வீ ர சை வ ம்.

அனுதிமூலத்துக் கப்பாலாய், மகாமூலத்திற்கு மூலமாய், இ ரண்டாவது பொருளில்லாததாய்;மூலசுவாமியொருவனேஎன்று ம்கூறி, குருலிங்கபத்தியுடையவனுப் வெவ்வே றிலக்கணங்களைக் கூறிக்கொண்டுசைவத்திற்கன்னியமின்றியிருக்கும். இதுபின்னர் பஞ்சமடக் கர்த்தாக்களான அல்லமாப்பிரபுமுதலியவர்களாலும் வசுவேசர் முதலியவர்களாலும். விசிட்டமாயுள்ளது. இதன் விரி வை வீரசைவவிளக்க வினுவிடைமுதலியவற்றிற்காண்க.

### கவுளயாமளமதம்.

வாமியைப்போல சகலமும் சத்தியாலேயே யுண்டாய் நடக் கின்றதென்றும், கொலையாதி பாதங்களையெல்லாம் உச்சாடனுதி

கன்மங்களாலகற்றி, சத்தியைப்பூசித்து தூாதிஷ்டியாதிகள்கைவ ல்யமானல் இதுவேமோட்சமென்றும் கூறும். இதுகள்வருவதெ ப்படியென்னில், சத்திகளில் 6 - கோடிமாயாசத்தி, சத்தமாதர், சத்ததுர்க்கி, சத்தகன்னி முதலியபல பேதமுண்டு. ஒருவர்நினைக் கும் சிந்தனைக்கேற்ற சத்திகளும் மந்திர யந்திர கிரியைகளும்வெ வ்வேறுண்டு. இதனைக்கொண்டுசெபவோம்மதற்பணுதிகளாலும் தர்மாதிகளாலும், தேவபிரசன்னமாய்,காரியகைவல்யமாமென்று ம், ஆனந்த பிராப்தியேமோக்ஷமென்றும், இதுவேஆத்மாவென் றும் சொல்லப்படும்.

வேதாங்கீகாரமான மதங்கள் அனந்தமிருக்கிறது. அவைக ளோ வேறுவேறு வகையாக முத்திபேதங்களைக்கூறுமேயல்லது சமயத்தாலொன்று பட்டவைகளே. அவைகளாயன.

| | |
|---|---|
| கிரீடாப்பிரமவாதி | நையாயிகம் |
| லீலாப்பிரமவாதி | பாஸ்கரியம் |
| பிரதிவிம்பவாதி | சத்தப்பிரமவாதி |
| மாயாவாதி | வையாகரணி |
| வைதிகவேதாந்தம் | பாட்டல் |
| சுத்தவேதாந்தம் | பிரபாகரம் |
| அச்சுமாறுதவாதி | ஆறந்தம் |
| சாங்கியம் | புராணிகம் |
| நிரீஸ்வரவாதி | பஞ்சராத்திரியம் |
| பூருவமீமாங்கிசை | சுத்தசைவம் |
| வைசேஷியம் | |

முதலிய மதங்களிருக்கின்றன. ஆயினும் அவைகள் சைவ வைணவ, சமணமதங்களுக் கன்னியமல்லாமையால், இங்குவிரித் தெழுதுவது அனுவசியமென விட்டனம்.

இதன் சித்தாந்த பூர்வத்தைக்காண உத்தேசிப்போர் தத், துவ ரத்னுகரத்திற்காண்க.

தார்க்கீகன் வித்தியா கற்பனை, தோஷம், பிரவிருத்தி, சன னம் துக்கமென்பவைகளைத் தனித்தனி நீக்கிச்செல்ல, முடிவினி ன்ற துக்கமொழியுமென்று, இதுவேமுத்தியென்றுங் கூறுவன். மீமாஞ்சகன் வேதம் அநாதியென்றும், ஈசனைவேண்டாது கன்ம

மேபலனைக்கொடுக்குமென்றுங்கூறுவன். மாயாவாதிசுத்தமாகிய பரப்பிரமம் மயோபாதியினாலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாகநிற்குமென்றும், சீவான்மாவும்விவேகஞான மடைந்து மாயாவத்தைகடந்துபரமான்மாவோடுகடாகாசமும்மகாகாசமும்போல்அபேதமாய்விடுமென்றுங்கூறுவன். சாங்கியன் புமானாகிய சுத்தபுருடன் அறியாமை யுதித்தபோதுபிரபஞ்சமெல்லாந் தானேவிரிந்துநிற்பனென்றும், விவேகஞானமெய்தியபோது அவையனைத்தும் பிரகிருதிக்கேயன்றித் தனக்கில்லையென்றுங்கூறுவன். யோகி, நின்மல சத்துவபரிணாமரூபமாகியசித்தவிருத்திகளை உன்முகமாகத்திருப்பி, அவைகளை அவற்றின் முதற்காரணத்தினாலே ஒடுக்குதலே முத்தியென்றுங்கூறுவன், பாஞ்சராத்திரி, நாராயணர்தம்மை வழிப்பட்டவர்களுடைய பாசபந்தத்தையொழித்து அவர்களை விரசாந்தியிலே மூழ்குவித்துச்சுத்தர்களாக்கி, வைகுண்டத்திலேதமதுசாரூபத்தைக்கொடுத்தருளுவரென்றுங்கூறுவன்.

---

## உலோகாயிதன் மதம்

இதுகேடின்றி நித்யமாயுள்ளது நான்குபூதம். இந்நான்கு பூதமும்சேர்ந்தவிடத்தில் நால்வகையோனி எழுவகைத்தோற்றமுந்தோன்றும் நான்குபூதமும் காணப்படுவதாய் என்றுமுள்ளதாலும், பரிச-ரூப-ரச-கந்தம்-இந்நான்கும் நித்தியமே மேற்படி நான்குபூதகலப்பால் பொறி, புலன், குணம்: புத்தி முதற் பதினாறு காரணமானபோது அண்டாதிகளெல்லா முண்டா மென்று கூறும்.

அன்றி மரணமே நிச்சயமோக்ஷம் பூதம் நான்குமே சொரூபம். இதனிடமாகப்போதம் பிறக்கிறதே தடத்தம் களபகஸ்தூரி ஸ்திரீ சையோகாதிகளை விட்டதேபந்தம். இதனோடு கூடி வாழ்வதேமுத்தி என்பது முடிவானசித்தாந்தமாம், இச்சாத்திரத்தை பிரகஸ்பதிபகவான் ஒருக்கால்கூறி உலோகாயிதமதத்தையுண்டாக்கினர்.

---

## யோகாசாரன்மதம்.

போதமான கரணேந்திரியாதிகள் பொருளாய்த்தோன்றும் இது தோன்றலால், வாதனு தோஷத்தில் கூடி வலுவில்லாமல் பொருளாயெழுந்து கனவுபோலசகளமாகும். பின்புபோதம் உள்ளறிவாயிருக்கும் என்று கூறும், எனவே மருந்தெண்ணெயில்மருந்துமறைந்து சூக்குமமாகிப்பலிப்பதுபோலபோதம்உள்ளிருந்துதொன்றுதொட்டு பலிக்கும்என்றபடி இவர்கள்தெய்வம்யோனியிற்பிறவாது தாய்வயிற்றைப் பீறிவந்தாரென்று கூறுவர். அத்தெய்வம் புத்தஸ்வாமியேயாம்.

## மாயத்தகன்மதம்.

தேகம் அவயவங்களோடுகூடி ஓராகாரமான பதார்த்தமும் சீவராசிகள் தேகமுமாம் இவ்வவயவங்க ளழிந்துபோனால்அத்தேகத்திலழியாப்பொருளொன்றில்லை, ஆதலாலதில்சூட்சுமமாயிருக்கிற பொருளைக்கண்டதில்லை. அதனால் அதில் அறிவிக்குமென்பதொன்றில்லை. தேகமேபொருள் சுவாமிசுகதுக்கங்களைப்பரிசிக்கமாட்டார். சுத்தஞானவொழுக்கமென்பதே முத்தியாம்என்பர் இவனுக்கு முற்கூறிய புத்தஸ்வாமியே தெய்வமென்க.

## வைபாஷிகன்மதம்.

ஸ்ரீபுருஷ சைதன்னியத்திலின்பஞ் செனித்ததுபோல விசாரித்தவிடத்திலே சகஞான பொருளாதிகள் தோன்றும்.வேறாகக் கூருவதெல்லாம் பொய் எனக்கூறும். இவர்கள் புத்தமூராமிசுவத்தி,பஞ்சகந்தங்கெடுவதேமுத்தி ஞானமெல்லாமொழிதலே பதவி, ஆத்மா அணு என்றுங்கூறும். இதனைச்செய்தவர் சுகதரிஷி.

## நிகண்டாவதிமதம்.

அருகக்கடவுள் அஷ்டகுணாதிசயராய்சர்வஞானதேஜோமயராய்பொன்னெயில் வட்டத்தில் எல்லாலோகத்திலிருப்பவர்யோகசித்தியால் முத்தியருளுவரெவக்கூறும்.

## ஆசீவகன்மதம்.

நிகண்டவாதியைப்போலவே சிறிதுவித்தியாசமாக அருளை யே பரமென்று கூறுவர்.

## பஞ்சபூதவாதிமதம்.

இப்பஞ்சபூதவாதிமதமானது ஐந்துவகையாயிருக்கும்அவற்றுள்

1. பிருதிவிபூதவாதி-மண்ணைத்தவிர வேறொன்றுமில்லை. மண்ணே சகலலோகவடிவும் சகல ஜீவரூபமுமாயிருந்து சகல போகமுமளிப்பதால் மண்ணேதெய்வமென்று கூறுவன்.

2. அப்புபூதவாதி-சகலமும் ஜலமின்றி யாகாமையாலும், சகலரும்ஜலத்தையே எக்காரியத்திற்கும் எதிர் நோக்கலாலும் ஜலமின்றி வேறெக்காரியமும் நடவாதாகையாலும் ஜலமேதெய் வமென்று கூறுவன்.

3. அக்கினிபூதவாதி - அக்கினியேசர்வகிருத்தியங்களையும் நடத்துகையால் அக்கினியைவிட்டு யாதொன்றும் நடவாதாகை யாலக்கினியே தெய்வமென்று கூறுவன்.

4. வாய்வுபூதவாதி-காற்றின்றி எக்காரியங்களும் நடவா தாகையால் அக்கினியே தெய்வமென்று கூறுவன்.

5. ஆகாயபூதவாதி - ஆகாயமில்லாவிடல்வேறொன்றுமிரா தாகையால் ஆகாயமே பரமென்று கூறுவன்.

## பஞ்சகோசவாதிமதம்.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், ஆனந்தமயம், விஞ் ஞானமயம் என்னும்ஐந்துமே பொருள்என்றும், ஆனந்தமயமே முத்திரூபமென்றுங் கூறும்.

## நவக்கிரகவாதிமதம்.

நவக்கிரகமே * தெய்வ மென்றும், அதனிலக்கணப்படியே உலகமும், உயிர்களும் முத்தியாதியவும்சம்பவிக்கப்பெறுவரென் றும் ஆனதால் நவக்கிரகங்களே கடவுளரென்றும் கூறும்.

---

* நவக்கிரகமாவன:—இரவி, மதி, சேய், புதன், குரு, வெ ள்ளி, சனி, ராகு, கேது என்பன. இவ்வாதிகள் தூமாதி கிரகங்க ளையும் உபதேவதைகளாக்கொண்டு கூறுகின்றனர்.

## சூரியவாதி.

சூரியபகவானில்லாவிடில் எக்காரியங்களும்நடவாதாதலால் சூரியனே தெய்வமென்று கூறும்.

## சந்திரவாதி.

சந்திரனேபரமென்று சூரியவாதியைப்போல விவரிக்கும்.

## ஊழ்வாதிமதம்.

கன்மமேபிரமமயம் அன்னியம் வேறொன்று மில்லையென்று கூறும்.

## காலவாதிமதம்.

காலம்ஒன்று மாத்திரம்அழியாமல் மற்றெல்லாம் மாறுபடு கையால் காலமே பரமென்று கூறும் முழுமடமையே.

## மந்திரவாதிமதம்.

எல்லாதேவர்களும்மந்திரவழியேநின்றுகட்டுப்பட்டவ ராத லாலும். மந்திரத்தைவிட்டு எக்காரியங்களும் நடவாததாலும்மந் திரமே தெய்வமெனக்கூறும்.

## யந்திரவாதிமதம்.

மந்திரம் தேவர்கள் முதலியயாவும்யந்திரங்களால்நிலைபெறு வராதலால் அவைகளுக்கெல்லாம்பரமாயிருப்பதுயந்திரமாதலின் யந்திரமே தெய்வமெனக்கூறும்.

## அவிழ்தவாதிமதம்.

மருந்துகளே சகலவுடலுயிர்களையும்ரக்ஷிக்கையால்மருந்தே தெய்வமென்று கூறும்.

## கவனிப்பு.

இவ்விதமாகவே இன்னும் உலகிலுள்ள மதங்களெல்லாம் கோஷிக்கின்றன வாதலால் வீணனகாரியமா யாவருக்கும்பிர யோசனமற்றதா யிருத்தலி னிம்மட்டிலேயே விடுத்தாம்,

-ய-

## சாத்தேயம்.

சாத்தேயமதஸ்தர் சத்தியே பிரம்மமென்றும் அச்சத்தியினிடத்திலிருந்து பிரம்மா, விஷ்ணு,உருத்திரன்,மயேச்சுரன்சதாசிவனென்கிற பஞ்சகர்த்தாக்களும், பஞ்சசத்திகளும் உண்டானார்களென்றும் இவர்களாலே சகத்காரியம்உண்டாயிற்றென்றும், சத்திக்குமேலே வேறொரு ஈஸ்வரனில்லையென்றுங்கூறுவர் இந்த மதம் கபிலருடைய கோட்பாட்டையனுசரித்துண்டானதாகத் தோன்றுகிறது. இம்மதத்தர்களிற்சிலர் மதுமாம்சத்தையும்வழங்குகிறார்கள். இக்காலத்தில் இவர்கள் அபரூபமாக விருக்கிறார்கள்.

## காணபத்தியம்.

காணபதமதஸ்தர்கள் கணபதியே பிரம்மமென்றும்,அவருக்குமேல் ஒருஈஸ்வரனில்லையென்றும்,அவராலேயேசகலமுங்காரியப்படுகின்றன வென்றுங்கூறுவர். இந்தமதத்தர்களும்அபரூபம்.

## சைனமதம்.

ஆர்கதம் அல்லது அருகனை வணங்கும் சமயத்துக்கு சைன சமயமென்றுபெயர். இது சத்றோக்குறைய புத்தசமயத்தைப் போலவேயிருக்கிறது. ஆனல், சுத்தநாஸ்திக மதமல்ல, இதில் சுவேதாம்புரிகள், திகம்பரிகளென இருவகுப்பார்களிருக்கிறார்கள் இவ்விருவகுப்பாரும், விக்கிரகங்களுக்கு உடைதரிப்பித்தல் முதலிய சிலவிஷயங்களில் வித்தியாசப்பட்டாலும் சைனவேதாகம அங்கங்களை யொரேவிதமாகநம்பி யனுசரிக்கிறார்கள்

## சார்வாகமதம்

இந்தமதத்தை ஸ்தாபித்தவ ரின்னாரென்று விவரமாகத்தெரியவில்லை. ஆனல், மகாபாரதத்தைச் சார்ந்த சாந்தி 1410-வது சுலோக பருவத்தில்ஒருகதையில்சார்வாகன்என்னும் இராட்சதன் பிராமணபரதேசி வேஷம்பூண்டு யுதிஸ்டிரமகாராஜன் ஜெயசீலராக அஸ்தினபுரத்துக்குப் போகச்சே சமயவிஷயமானபரிகாசவார்த்தைகளையும் தூஷணைகளையுஞ் செய்ததாகவும், ஆனலவன் இராக்ஷதனென்றுகண்டுபிடித்து, கொல்லுவித்ததாகவும் சொல்லியிருப்பதால்,அந்தராக்ஷசனே இந்தச்சார்வாகமதாதிபதியாயிருக்கவேண்டுமென்று எண்ணவேண்டியிருக்கிறது. இந்தச்சார்வாக

மதத்தைபற்றி மாத்துவாசாரியாரா லியற்றப்பட்டசர்வதரிசனச ங்கரகமென்னும் கிரந்தத்தில் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கி றது. அந்தச்சார்வாகமதத்தை உலகாயுத மென்றும், பிரகஸ்பதி கோட்பாடென்றுஞ் சொல்வதுண்டு.

## இந்திரியாத்தும வாதிகள்மதம்.

இந்திரியாத்தும வாதிகள் மெய், வாய், கண், மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்களுக்குமேல் ஈஸ்வரனெருவ னில்லை யென்றும் ஆத்துமாவொன்றில்லையென்றுங் கூறுவர்.

## அந்தக்கரணாத்துமவாதிகள்மதம்.

அந்தக்கரணாத்தும வாதிகள் மனம், புத்தி, சித்தம், ஆங்கா ரம்என்கிற அந்தக்கரணங்களுக்குமேல் ஈஸ்வரனெருவ னில்லை யென்றும், ஆத்துமாவொன்றில்லையென்றுங் கூறுவர்.

## பிராணாத்தும வாதிமதம்.

பிராணாத்துமவாதிகள் பிராணவாயுக்குமேல் ஈஸ்வரனெருவ னில்லையென்றும், ஆத்மாவொன்றில்லையென்றுங் கூறுவர்.

## சூனியவாதிகள் மதம்.

சூனியவாதிகள் ஈஸ்வரனெருவனிருந்தால் காணப்படமாட் டானா, காணப்படாமையால் ஈஸ்வரனில்லையென்பர்.

## கௌமார மதம்.

இந்த கௌமாரமதஸ்தர் சுப்பிரமணியரே பிரம்மமென்றும் அவர்க்குமேல் ஒருஈஸ்வரனில்லையென்றும், அவராலேயே சகல சகத்காரியமும் உண்டாகின்றனவென்றுங் கூறுவர்.

## பிரமசமாஜம்

பரப்பிர்ம்மத்தையே உபாசனையின் மூலமாக அறிந்து ஆன ந்தப்படும்பக்திமார்க்கத்துக்குப்பிரம்மசமயம் அல்லது, பிரம்மசமா ஜமென்று சொல்லப்படும் இந்தமதத்தைஸ்தாபித்தவரின்பெயர் இராஜா இராமமோஹன் ராயபஹதூரென்பவர்

## ஆரியசமாஜம்.

ஆரியருடைய வேதங்களையே பிரமாணங்களாகக்கொண்டுப
ரம்பொருளை வணங்கும் மதஸ்தர்களுக்கு ஆரிய ஸமாஜத்தாரெ
ன்றுபெயர். இந்த ஸமாஜத்தின் காரணகர்த்தர்ஸ்வாமிதயாநந்த
சரஸ்வதி யென்பவரே.

## தியாசபிமதம்.

1880-௵ கரநல் ஆல்கட் என்ற ஒருஅமேரிகாகண்டத்தா
ரும், மாடம் பிளாவட்ஸ்கி என்னும் உருஷியா தேசத்துமாதும்
இந்தியா பம்பாயிக்குவந்து இத்தேசத்து பூர்வயோக, மந்திரதந்
திர முதலானதுகள் உண்மையெனச்சாதித்துஅநேகமகிமைகளை
ச்செய்துவந்து, இப்போது சென்னையம்பதியில்வசித்துவருகிறார்
கள். இவர்கள் 1875-௵ அமரிக்காகண்டத்தைச்சார்ந்தநியூயா
ர்க்கப் பட்டணத்தில ஸ்தாபிக்கப்பட்ட தியாஸபிசங்கத்தைச்சா
ர்ந்தவர்கள். இந்த மதாதிபதிகள் இருவரும் புத்தசமயத்தாராக
விருந்தும்அநேகபிராமணர் முதலானவர்கள் இவர்களுடையகோ
ட்பாட்டை யனுசரிக்க. இந்துதேசத்தின் பலவிடங்களில் சபைக
ளை ஸ்தாபித்துக்கொண்டு வருகிறார்கள். இவர்கள்கிருஸ்துமதஸ்
தர்களுக்கு ஜன்மவிரோதிகள் ஜனசுக சகோதரவாஞ்சையைவிரு
த்தியாக்க விரும்புகிறார்களே யொழிய, ஸ்வாமி பக்தியில் அவ்வ
ளவு பற்றுள்ளவர்களா யிருப்பதாகத் தோற்றவில்லை. இதைமந்
திரதந்திர மதமென்று சொல்லாம் இவர்களுடைய மாதாந்தரச
ஞ்சிகைக்கு தியாசபிஸ்டுயென்றுபெயர்.

## விஷ்ணுமதம்.

விஷ்ணுவை வணங்கும் மதத்திற்கு வைணவமென்று சொல்லப்படும் இந்த வைணவத்தில்,யாதவம்.மாயாதவம், இரணிய கற்பம், இராமாநுஜீயம், பாஸ்கரம், தத்துவவாதம் என்னுமாறு உட்சமயங்களும், பாஞ்சராத்திரம், வைகாநசம் என்னுமிரண்டு ஆகமங்களுமுண்டு. இதுகளைப்பற்றி விவரமாகப் பின்னால்சொல்லுவோம். இம்மதஸ்தர்கள் வணங்குந் தெய்வமாகிய.

விஷ்ணு—எங்கு நிறைந்தவரென்றும், இரக்ஷகரென்றும் யாவையும்படைத்து, காத்துவருபவரென்றும், வேதசுருதிகளில் காணும் நாராயணனென்றும், நரஹரியென்றும், இராமர், இரங்கர், கிருஷ்ணர் என்றுஞ் சொல்லும் புருஷனாக வழங்குவார்கள் இவர் சுருதிகளிற்செப்பிய நாரம்-ஜலத்திற்கு பிரதிநிதியாகையால், நீலவருணமும், சங்கு, சக்கரம், கதை, கட்கங்களைக் கொண்டநான்கு கைகளையும், மஞ்சள் வத்திரதரிப்பையும், கருடவாகனத்தையும், வைகுண்டம் இருப்பிடத்தையும் உடையவராக புராணங்களில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இவருடைய மனைவிக்கு இலட்சுமி, இராதாருக்குமணி, சத்தியபாமா, சீதைஎன்னும் பலபெயர்களால் வழங்கப்படும்.

இவ்வைணவமதத்துள் சில உட்பிரிவுகளிருக்கின்றது அவைகளாவன,—

| | |
|---|---|
| இராமானுஜமதம். | மாத்துவாசாரிமதம். |
| பாஷ்கரமதம். | இராமாநந்தமதம். |
| வல்லபாசாரிமதம். | சைதனியர்மதம். |

முதலியனவாம். இவைகளுள்ளும்சிலபேதமிருப்பதாகத்தெரிகின்றன. அவைகளை வைணவ பிரபாவத்துட்காண்க.

### பௌத்தமதம்.

இம்மதம் கௌதமசங்கிய முனிவரால் ஸ்தாபிக்கப்பட்டது இவர் காசிப்பட்டணத்தையடைந்தகாலத்துபௌத்தர் அல்லது புத்தரென்றும் பெயரைப்பூண்டார். இவர் 20-வயதையடைந்த

போது அதாவது விவாகமான 10-ம் ஆண்டில் ரகுலனென்னும் புத்திரனை ஈண்டு யாவரும் வியக்கும்படி திடீரென்று மனைவிமக்களைத்துறந்து சமய விசாரணை யொன்றிலேயே சித்தத்தைச் செலுத்திவந்தார்.

ஓரிரவு வியாதியஸ்தன், வையே திகன். அழிபிணம், துறவி இந்நான்குருபங்களையுங்கொண்டு ஒருதேவதூதன் தம்சொர்ப்பனத்தில் நான்குமுறை பிரசன்னமானதே இளமையும்,சௌக்கியமும் கனவேயன்றி வேறல்லவென்றும், அவை மூப்பையும்பிணியைத்தந்து கடைசியில் மரணாவஸ்தையும் தேக அழிவையும்தருமென்று நிரூபித்து இக்காரணத்தினாலேயே தாம்துறவடைந்ததாகவும்புகன்றனர்.

இந்திரிய நிக்கிரகம், பரோபகாரம் இவ்விரண்டையும் சாதகம்செய்பவர்களே பேரின்பத்தை யடையக்கூடு மென்றும், ஜாதி பேதமில்லையென்றும், சகலரும்ஒருவருக்கொருவர்சமமுற்றவர்களென்றும், எல்லோரும் முந்தியைபடையக்கூடுமென்றும், மிருகபலியினால் பாவநிவாரணஞ்செய்ய முடியாதென்றும், ஜன்மாந்திரமுண்டென்றும்,திரிகரணங்களால்செய்யக்கூடியபாபத்தொழிலைவிலக்கின்பிறவியினின்றும்மிலக்கக்கூடுமென்றும் இதுகளைச் செய்யசாத்தியப்பட்டவன் நிர்வாணதசையை யடைவானென்றும்போதித்துவந்தார்.

இக்கோட்பாடுகளை அநுசரிப்பதுசாத்தியமாயிருந்தபடியால் இந்தியாவில் அநேகர் இம்மதத்தை தழுவினதுடன் சீனா, பர்மா முதலிய தேசங்களிலும் சிம்மளம், ஜப்பான் முதலிய தீவுகளிலும், இக்காலத்தும் நற்றிசையையடைந்து அபிவிர்த்தியாய்க் கொண்டே வருகிறது.

# சீனதேசத்துமதங்கள்.

உலகசிருஷ்டியைப்பற்றி சீனர்களின்கருத்து.

ஆதியில் சடப்பொருள் மாத்திரம் ஏகபிண்டமா யிருந்தது. பிறகு இரு பிரிவினையடைந்து, ஆண் பெண்ணுகிய சூக்குமதேகம் மேலும், ஸ்தூலதேகங் கீழுமாக மாதா பிதாக்களாகி சகலத்தையும் உண்டாக்கினதாகவும், சகலமும், ஆணும்பெண்ணு மென்றுஞ் சொல்லுகிருர்கள்.

சீனர்களுக்குள் பிரபலமாய் வழங்கும் மதங்கள் மூன்று. அவற்றுள், பெரும்பான்மை தழுவப்பட்டதும், புராதனமுமானது கான்பியூகஸ்மதம், இப்பெயர்கொண்ட மதாதிபதியால் சுமார் 5460 - வருஷத்துக்கு முன் ஸ்தாபிக்கப்பட்டது. இவருடைய கொள்கையாவது ஒரே கடவுள் உண்டென்றும், அவரை யடைதலே மனுஷர் பெற்றபேறென்றும், வானம் பூமி மனிதர்கள்கூடி ஒரு திரியேகத்துவமென்றும், இம்முப்பொருளில் திவ்ய ஸ்தானுதிபதியாகிய மானிடரே மேன்மைப்பட்டவர்க ளாகையால்; பெரியோர்களையும் பிரத்தியட்சக் கடவுளர்களாகிய தாய் தந்தையர்களையும்வணங்கவேண்டுமென்றும, அப்பெரியோர்களிறந்தால் அவர்கட்காக மூன்றுவருடகாலம் துக்கங்கொண்டாடி பிறகுமாத்ரு, பிதிரு, மகாலயமொன்றைச் சமைத்து அதில்மக்களும் மற்றுமுள்ள சந்ததியாரும். அப்பெரியோர்களை வழுத்தல்செய்யவேண்டுமென்றும், சிறுவயதுள்ள ஸ்திரீகளை அடிமைகொண்டும், வயதில் முதிர்ந்த ஸ்திரீகளை மரியாதையோடு வணங்கவேண்டியதென்றும், சகலரையும் சகோதரவாஞ்சையோடு நடத்தவேண்டியதென்றும், சந்ததியிருந்தால்ஜன்ம விமோசனமாகு மென்றும் முதலிய தருமங்களைவிடாது அநுசரித்தல்வேண்டுமென் றும்போ எல்லோரும்வாய்மை மெய்மைஞானம் ஆசாரம்ஜீவபரோபகாரம் தித்து வந்தமையேயாம்.

மேற்கூறிய கான்பியூகஸ் காலத்திலிருந்த தத்துவசாஸ்திரியாகிய லவாட்சி என்பவரால் ஏற்படுத்தப்பட்ட டாயிசமதம்.

ஆகாயம், பூமி மனிதர்களாகிய இம்மூன்றும் காரியப்படுவதற்கு காரணமாகிய ஓர்மூலப்பொருள் உண்டென்றும் அது அநு

நித்தியமென்றும், மும்முறைமனிதஅவதாரமெடுத்ததென்றும் அப்படியுண்டாகிய ஜென்மத்தை யோக நிஷ்டைகளால் அழிக்க வேண்டிய ஒன்பது மசஸ்தரின் கருத்து முன் கூறியுற்ற பௌத்தமதமும் வழங்கி வருகிறது.

## சௌராஷ்டிரமதம்.

பூர்வ ஆரியவமிசத்தின் ஓர் பிரிவார்குடியிருக்குஞ்சீர்பெற்ற பாரசிகதேசத்தில் ஜொராஷ்டர் என்பவரால் ஏற்படுத்தியதுபாரசிகம். அல்லது, சௌராஷ்டிர மதமென்று வழங்கும். இவர்கள் வேதநூற்களின்பெயர், ஜந்தபேதம், பண்டிசுகியுமாம் இவைகள் வானுதி நட்சத்திர ஸ்தோஸ்திரமாகவும், அத்வைத பரம்பரையை அநுசரித்ததாகவேயிருக்கும்.

இம்மதத்தின் கோட்பாடாவது, முதற்கடவுள்ஒன்றுண்டென்றும், அவரிந்த உலகத்தையும், அஞ்ஞானம், பொய், கொலை, களவு, காமம் முதலியன தீக்குணங்களை விளைவிக்கும். உபதேவனைப் படைத்ததாயும், இத்தேவனாலுண்டாகும் தீக்கருமங்களைவிலக்கி சுத்தமாக்க மற்றுமோர் தேவனைப்படைத்ததாகவும்இவர்களிருவருக்கும், அதாவது ஞானமும், அஞ்ஞானமும் நெடுநாள் சண்டைசெய்து முடிவில் ஞானதேவன் ஜெயமடைந்ததாகவும் ஆகவே உலகத்தார் அந்தகாரமாகிய அஞ்ஞானத்தை நிவர்த்தித்து, பரிசுத்த மனதோடுங்கூடி சத்விஷயங்களைச்செய்து சுவாதீனராகும்பட்சத்தில் மோட்சமுண்டென்பதேயாம்.



# துலுக்கர்மதம்.

துலுக்கர் மதமானது சிலபேதங்களையும், பல வகுப்புகளையு
முடையதாயிருப்பதோடு சில விகற்பங்களுமுண்டு இவர்கள் தெ
ய்வம் அல்லாவென்னும் பெயரோடு நாமரூபகிரியாதிகுணரகிதனு
வேறின்றி ஏகனுயிருப்பது அந்த அல்லாவானவர் தன்னிடத்தில்
ஒருவொளியையுண்டாக்கி அதில் அல்லாவானவர் புகுந்து பாதி
யொளியில் மகுமதரையுண்டாக்கி, மற்றபாதியொளியிலெண்ணி
றந்த உயிர்களையுண்டாக்கி, பின்புநாயகன்பாதியொளியி॰மகும
தருயிரையுண்டாக்கி, யந்தவுயிரை நாயன்பார்த்தவுடனே பதாதி
கேசபரியந்தம் வெயர்வுவர அந்தவெயர்வையில் முதர்பாகத்
தை அம்பியா அவுலியாக்களுயிரைவகுத்து அதிற்சிலவெயர்வை
யில்மசாகுளோக் குயிர்வகுத்து பின்பு இவற்றில்தானே ஊமி
னோர்கள் வானுளோர்களுயிர்வகுத்து மீந்தவெயர்வையில் பாவி
களுயிர்வகுத்துஇதில்மீந்த வெயர்வையில்காபிசின்னுகள்சய்த்தா
னுயிர்படைத்து இதில்மீந்தவெயர்வையில்மிருகபக்ஷி ஊர்வனசல
தாவுயிர்களைப்படைத்து இதில்மீந்த வெயர்வையில்தாபராதியுயி
ர்களைப்படைத்து இதில்மீந்தவெயர்வையில் ஒரு துளியைக் கொ
ண்டு அரிசுங் குருசும் மறையெழுதப்பட்ட கலமான மகுபூதுஞ்
சொர்க்க நரகமும் படைத்துஇவற்றிலொரு துளிவெயர்வையிருந்
ததுஅதிலொரு மாணிக்கமுண்டாக்கி யதைநாயன் எதிராசப்பா
ர்த்தபோது அந்த மாணிக்கம் அக்கினியாயும், சலமாயும் பிரிவுப

ட்டுநின்று மீண்டும் ஒன்றாய்க்கூடி வெந்துகொதித்ததில்எழுந்தபு கையினால் விண்ணுலகை மேழுதட்டுமுரியடுக்குபோல்படைத்து இது ஒன்றுக்கொன்று 500றூ நடப்பு அசலநீளமாகும் பின்பு அந்தமணி யொளியாகிற கனல் பரந்தமேகத்தாற் சந்திரசூரியநக்ஷத்திரங்களைப்படைத்து பின்பு தேவலோகமேழும்உரியடுக்குபோற்படைத்து மேற்சொல்லிய நீரைக்கலக்க நாயனருளாலே வாயுவையுண்டாக்க அந்தவாயுவால் அலைகளடித்துமோத அதில் நுரைகளுண்டாய் அந்த நுரைகளாலே கண்டமான பூமியுண்டாகி கீழ் மேலேழடுக்காகநிற்க, இந்தவடுக்குகள் நீர்மேலிருக்கையால்அலையிலடுக்கு கொலையாமலிருக்க அஷ்டகுலபர்வதம்நடுவும் மேருகிரி சுற்றுஞ் சக்காவாளகிரி முதலிய கிரிகளுஞ் சத்த சமுத்திரத்தில் அனேககிரிகளும் படைத்து அந்த சமுத்திரத்தைபூமிக்கு ஒரு ஆடைபோலாக்கி இந்தபூமியில் சீவராசிகள் புசித்தற்கு தண்டுலபிண்டி பேதங்களும் கந்தமூல பலாதிகளுமுண்டாக்கி சூரியனால் நாழிகைநாள் வாரம்மாதம் வருஷம் முதலியகாலபேதங்களுமுண்டாக்கிப்பின்னும்பஞ்சலோகங்களும்நவரத்தினாதி திரவியங்களும் இன்னுமனேக பதார்த்தங்களையுங்கர்த்தர் படைத்தாரென்றறிக.

இதல்லாமல் பின்னுமொருவிதம் நாயன் தன்னொளியினால் ஞாயிற்றுக்கிழமை தாபராதி தனுக்களையும் அவற்றிற்கு கந்தமூல பலாதிகளாகிய வுணவுகளையு முண்டாக்கி, திங்களில்சூரியன், சந்திரன், உடுக்கள், இராசிகள், மலைகள், கற்கள்முதலியவற்றையுண்டாக்கி, செவ்வாயில்மந்திர தந்திர வெந்திரங்கள் ஷட்கருமங்கள் பம்புபில்லி சூனியம்புதையல் கன்னந் திருட்டு அவுஷதங்கள் சூதம் பரிக்ஷை முதலியவற்றை யுண்டாக்கி, புதனில் சூரியகிரணஞ் சந்திரகிரணம் நவரத்தினாதிதிரவியங்களை யுண்டாக்கி, வியாழத்தில் தாபரசங்கமாதியவுயிர்களையுண்டாக்கி, வெள்ளியில் இசிலாமார்க்கமாகியதுலுக்குமதமுண்டாக்கி தன்னைவணங்க ஆத்மாக்களையுண்டாக்கி, சனியில் தேவலோகமும் கீழ்மேற்பதினாலுலோகமும்படைத்து இவற்றைச்சுமக்கவொருமலக்கையுண்டாக்கிஇவனைச்சுமக்க ஒருமாணிக்கமலையைப்படைத்து, இதைச்சுமக்கஎருதைப்படைத்து, இதைச்சுமக்கஒருமீனைப்படைத்து இதைச்சுமக்கச் சமுத்திரத்தைப்படைத்து, இதைச்சுமக்க குங்குமமணலாலாகிய வொருவட்டைப்படைத்து இதைச்சுமக்க ஒரு இரும்புமலையைப் படைத்து, இதைச்சுமக்க ஒரு மலக்கைப்படைத்துஇவனைச்சும

க்க வாயுவைப்படைத்தனர். இவைகளெல்லாம் யுகமுடிவுமட்டும் நிற்குமென்றறிக.

இப்பால் நாயனை மதியாமல் லிபிலீசு முதலானதேவர்களைக் கினிதேக மாகையால் நாங்களே கர்த்தரென்று செருக்குற்றிருந்தபடியால் அவர்களைச் செயிக்கும்படியாய் மண்ணையெடுக்கப் போகஅப்போது பூமியானது ஆணையிட, அதற்கு இரண்டு மனுக்கள்திரும்பிவந்து கூடிய மூன்றுமனுக்களும் இசிராகில்லையனுப்ப அவரையும் பூமி மூன்றாணையிட, அதற்கவர் மறுஆணையிட்டு மண்ணையெடுத்துவந்து ஆதமாய்ச் செய்யென்ன அந்தமண்ணி மேமனுக்கள் நால்வரும் புனல்தீவாயுவைவிட்டு உடலைச்செய்து தலைசெய்யக்கூடாமற் கர்த்தன் தலைசெய்ய அப்போது ஆதமனுண்டாய் ஆதமனது ஒருபாரிசத்தில் சுழலையுண்டாய்அதைநாயன் சொல்லாலே ஜெபிர்தீல்போய் நகத்தால்கிற, அதில்சவுந்தரமான ஒருபெண் அவ்வாவென்னும் பெயருடன் பிறந்தாள், அவளை ஆதம்என்பவன்கண்டுகைபிடிக்க, அப்போதுநாயன்சொற்படிவானவரான மனுக்கள் விவாகஞ்செய்துகொடுக்க, நாயன் ஆத்மாக்கள்சொற்கத்திலே கோதும்பையல்லாமல் மற்றதெல்லாம் புசிக்கச்சொல்லஅதைக்கேட்டிருந்த லிபிலீசு அவ்வாவுக்கு பிள்ளை கொடுத்தும்கோதும்பை தின்னச்சொல்லியும் அவர்கள் விரதத்தைக்கெடுக்க, அதைக்கண்ட நாயன் கோபித்துசொற்கத்தி லிருந்தவர்களைமண்ணில் தள்ளிவிட்டு அநேகம்பாடுபடுத்தினர்.

அதன் பின்பு ஆதமன் தபஞ்செய்ய அதை நாயகன் கண்டு மகிழ்ந்து மக்காவில் வைத்தார். பின்பிருவரும் கூடிவாழ்கையில் ஆணும் பெண்ணும் பெற்றார்கள். அந்தப் பெண்ணை அந்த ஆணுக்கே கொடுத்து மண்ணில் வாசஞ் செய்யச்சொல்லஅவ்விருவருங்கூடிமனுக்களைப் பெருகச்செய்தார்கள். ஆதியில்கர்த்தன் மனுக்களைப் படைக்கும்போது நான்குவகுப்பாய்ப்பிரித்து முதலாவது அம்பியாக்கள், இரண்டாவது அவுலியாக்கள் மூன்றாவது முமீனோர்கள், நான்காவது காபர்கள்இப்படியாக சீவர்களைப்படைத்த பிறகு இந்தவுயிர்கள் பயப்பட, அதைக்கண்ட நாயன் ஒரு ஒளியை யிறக்கினன். அதைக்கண்டு எல்லாவுயிரும் மசூதுசெய்தார்கள். நான்காவதானகாபர்கள்ஓதாமல்நின்றார்களாகையால் ஓதினதெல்லா மொருபகுதிஓதாதெல்லா மொருபகுதியாகநின்று

இரண்டுவிதமானார்கள். இதல்லாமல் அந்த ஒளியை முந்தவும்பிந்தவுங் கண்டபேரெல்லாம் மூமீனாய் பிறப்பார்கள். முந்தக்கண்டு பிந்தக்காணாதவர்கள் இசிலாமாய் பின் காபராய்ப் பிறப்பார்கள் முந்தக்காணாமல் பிந்தக்கண்டவர்கள் காபராய்ப்பிறந்து இசிலாமாவர்கள் ஒன்றுங்காணாதவர் காபராய்ப்பிறப்பார்கள் இப்படியாகப்படைத்து என்னை வணங்கவேண்டுமென்றார். பின்பு குதிசிலென்னுங் தலத்தில் வைத்து துனியாவிலே நாலுரகுதியாகக் கர்த்தன் உண்டாக்கினார். இந்த துனியாவில் புற்பூண்டு விருஷாதிகள் பயிராய் பூமி மேடுபள்ளந் தெரியாமல் மூடிக்கொள்ள அதையழிக்கும்பொருட்டு மிருகாதிகளைப் படைத்தார். பின்பு அம்மிருகங்கள் தாபரசங்கமாகிய விருஷாதிகளையெல்லா மழித்துமிருகக் காடாயின. இதுகளை யெல்லாங் கொல்லும் பொருட்டு சின்செயித்தானாகிற பூதப்பசாசசேனையை யுண்டாக்க, அதுகள் அம்மிருகங்களைக்கொன்று பூமியெல்லாந் திருத்தி சமனாக்கி பின்புசின்செயித்தானே இராச்சியமாண்டு கர்த்தனை வணங்காமல் கெர்வித்திருக்க இவர்களைக்கொல்லும்படியாய் மிருகங்களிலொன்றாகிய குதிரைகளைவிட அதுகள் சின்செயித்தான் சேனைகளை யெல்லாங் கொல்லும்போது மலக்கி லொருபெரியோனை வரவிட, அவன் பரிக்கூட்டங்களை யெல்லாங் கொன்று வானலோகத்திற்போய் சுகமேயிருந்தான்பின்பு சொர்க்கமேலும் நரகங்கீழுமாய் நன்மை செய்தவர்க்கு சொர்க்கமும் தீமை செய்தவர்க்கு நரகமுமீகையால் இந்த துனியாவாகிறபூமி நரகத்தாரிருந்து தீமையைச் செய்யவும் சொர்க்கத்தாரிருந்து நன்மையைச் செய்யவும் இவர்கள் சுகதுக்கமனுபவிக்கவும் இடங்கொடுத்திருக்கும் பொதுவிலமாகையால் துனியாவென்று சொல்லப்படுவதென்றறிக.

ஆதியிலுண்டான விபரம் கர்த்தாவால் வந்தது உலகம் கலனால் வந்தது அணிபலகை இப்பலகையால் வந்தது இசிராயிலுக்கு இவனால் வந்தது ஜெயபிராயிலுக்கு இவனால் வந்தவர் மகுமதருக்கு போதிப்பவர் மகுமதர் முதல் இசிராயில்கடையாம் பின்பு இசிராயிலுக்கு அலிபீலதுமா னெழுதிய மகுபூவதன்னும்பலகை இப்பலகைக்கு மக்கா நகராளும்இராசாவே நாயன் சொற்படியெழுதினது இனிபடைப்புகளுக்கு இரண்டுங்கொடுச்சவும் படைப்பின் றொழில் செய்யவும்செபிர்கிலுக்குத்தரம் அல்லாவுடைய வரிசின்கிழ் தாதடந்த மீக்காயுலுக்குத்தரம்மேகங்களை யொருதலத்

நிலே கூட்டி மழைபெய்விக்க இசிராயிலுக்குத்தரம் படைப்புக ளுயிரையெல்லாம் வாங்க ஜெபிர்கீலுக்குத்தரம் இவருயிர் வாங் குகிறவர் இசிராயில் இவருயிர் வைக்கிறவர் 500வருஷத்திற்குப் பிறகு உயிர் வாங்கிறவர் மீக்காயில் இப்படி யிவர்களுக்குத்தொ ழிலென்றறிக.

இப்படிச் சிருஷ்டியாயின் சிவனுகிற லிபிலீசு நூஷியம் பூமி யை மேடு பள்ளந்திருத்தி பசாசாகிய சின்செய்த்தானோடு சிரு ஷ்டித்தானெனறும், இந்த ஈஸ்வரனுக்கு பிரம்மாவிஷ்ணு முத லான தேவர்களெல்லாம்பிள்ளைகளென்றும், அவருக்கு ஆயுள் 40-லக்ஷவருஷமென்றும், இந்நாளெல்லாந்தானே கர்த்தனென் றுஇராச்சியமாண்டுகர்த்தனுக்குமாறுபட்டுஆத்மாக்களைகற்பனை யாக கொடுத்தானென்றும், பின்பு ஈஸ்வரிக்குநரைவந்தடக்கஅவ ளை வேண்டாமென்று தள்ளிவிட, அதைக்கண்டவள் வியசனமு ற்று காட்டிற்சென்றுபுலம்பிக்கொண்டிருக்கையில் அங்கொருரி ஷியானவர் இவள்படும் விசனத்தைப்பார்த்து இளமை வரும்படி ச் செய்தனர் இவ்விளமையை பெற்றுக்கொண்டு ஈஸவரனிடத் தில் வர, அவர் இவளிளமையைப்பார்த்து சந்தோஷத்துடனே தன்னோடிருக்கும்படி கூடிவாழ்ந்தாரென்றும், இந்த ஈஸ்வரி ஈ ஸ்வரனது இடது விலா பாகத்திலொரு கழலையுண்டாய் அது வெடித்து இடது பாகத்திலிருக்க வுண்டானுளென்றும், இவ்வீ ஸ்வரன் ஈஸ்வரியோடு சூதாடி தோல்வியடைந்து காட்டிற்சென் று தபஞ்செய்கையில் தேவரிஷிகளெல்லாம்முறையிட, அவர்க ளைப்பார்த்துகோபங்கொண்டு நீங்களேனிங்குவந்தீர்கள் நாம் வ ருகிறதில்லையென்று சொல்ல அதைக்கேட்ட ரிஷிகளெல்லாங்கூ டி தேவரீரங்கத்தில் ஓரடையாளந்தாருமென்றுகேட்க, அவரப் படியே தன்தேகத்தில் ஒருதுண்டுசதையையறுத்துக் கொடுக்க அச்சதையைரிஷிகள்வாங்கிப்போய் ஓராலயங்கட்டி யதனுள்வை த்து பூசித்த காலத்தில் அத்தசெப்புழுத்து துர்கந்தம் வீசினதெ ன்றும், பின்பு கக்களால் இலிங்கஞ்செய்து பூசித்தாரென்றும் இ வ்வீஸ்வரன் வயோதிகத்தினுலிறந்தானென்றும், இஃதல்லாமல் சிவனது முத்திரைகளாகிய விபூதிருத்திராக்ஷா மறுத்தல், குரு வைப் பிரமமல்லவென்று மறுத்தல், சிவலிங்கமறுத்தல், சிவவே டமறுத்தல் அத்துவாமறுத்தல், சிவனைமறுத்தல், நிஜமோக்ஷம

றுத்தல், சட்சமய மறுத்தல், உயிர் பலபிறவி யெடுக்குமென்பது மறுத்தல், கொல்லொண்ணுமைமறுத்தல், தேவர் மனிதர் கேள்விக்கு வருவார்கள் மற்ற மிருகபட்சி யூர்வன பலஜெந்து தாவரங்களெல்லாம்கேள்விக்கு வாராமல் மண்ணேடுமண்ணுய்ப் போகையால் இவைகளைக்கொன்று தின்பதால்தோஷமில்லையென்று இவைகளைக் கொல்லலாமென்று இவ்வாறு அனேகவிதமான சங்கதமான சங்கை சமாதானங்களைச் சொல்லிச் சிவனைப் பூசை செய்தவர்கள் எல்லா நரகத்தையும் அடைவார்களென்றறிக.

இதன்றியில் இருக்கு, எசுர், சாமம், அதர்வணமென்னும் நான்கு வேதங்களும் வேதமல்ல, கர்த்தனல்கூறியவேதமேமுதல் வேதம் தவிரேத்து மூசாநபி பைகம்பரோதினது இரண்டாம்வேதம் இஞ்சில் இதை யீசாநபி யோதினது மூன்றும் வேதம் ஜபூர், காதர் பூதுநபி யோதினது நாலாம்வேதம் விசேஷமான மகுமதரோதினர். இந்நால்வேதமும் இந்நால்வர்களால் தம்பிரான் உண்டாக்கினது. இனித்தம்பிரானல் உலகத்தில்நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஒரு சத்தம் பிறந்தது. அச்சத்தம் பரம்பரையாக நால்வரிடத்தில் வந்து ஜெபிர்க்கீல் மகுமதருக்குச் சொல்ல அப்படியே காரியங்களை நடத்துவாரென்றறிக. கோவில்கள்தேர்திருவிழா, திதி, மதி, விரதங்கள், ஸ்தானபானங்கள் விக்கிரகபூசைகள் முதலெல்லாவற்றையும் மறுத்துவிடுதலென்றறிக

அல்லாவானவர் சிவர்களைப் படைத்தபின் இவர்களுக்குதேகங்களைக் கொடுத்து பந்தப்படுத்தவேண்டிஎரும்புகடையில் தமதுவர்மவொளியினல் ஒருமாணிக்கமுண்டாக்க அதனை அல்லாவானவர் எதிரிட்டுப் பார்த்தவுடனே அந்தமாணிக்கம் இரண்டுபிரிவாகி அதில் ஒன்று அக்கினியும், ஒன்று நீருமான பின்பு வாயுவையு முண்டாக்கி அனலும் நீருங்கூடிக் கொதித்தது நுரையெழும்ப, அது தானே மண்ணுய் இந்த நாலுபூதமும் கூடினபோது ஒரு தனுவாகி இஃது "நாயதுசுரோணிதத்திற் றரித்திடுமென்னுநீரும், பாய்ந்திடுஞ்சுக்கிலத்திடும்பவனமுந்தி" இப்படியாகப்பிறந்து நால்வகைசிவராசிகளும்கத்தன் கொடுத்த தேகங்களிற்புகுந்து புண்ணியபாவங்களைச் செய்தாலும் வணங்காத, சிபிலிசை வணங்கினுலுங் கர்த்தனைவணங்கலாலுஞ் சுகதுக்கங்

ளாகியசொர்க்க நரகங்களில் விழுந்து மறுபிறப்புண்டாகிவருந் துவது உயிர்களின் பந்தமென்றறிக.

இதைப்பார்க்கிலும் காபர்கள்மிருந்தபந்தப்பட்டவர்களாம் குரூதி-சர்வசங்காரமானபோது நடுவேநாளாவட்டத்தில் மரித்த சீவன்களை மகுமதர் வந்துகேள்விகேட்டு, அச்சிவராசிகள் பூர்வ ம்எந்ததனுவோடு எந்தவிடத்தில் மரித்ததோ அந்த விடத்திற் சென்று அத்தனுவோடெழுப்பிஅவர்களைக் கேள்விகேட்டுலிபி லீசையும் கல்லுகளையும் பஞ்சலோகங்களையும் கர்த்தனாகப்பாவி த்து பூசைசெய்தவுயிர்களுக்கெல்லாம் நரகமும்கர்த்தனதுசொ ரூபமறிந்து நிமாசு நோன்புகளால் வணங்கி அல்லாவாகிய கர்த் தன் ஒருவனே யல்லாமல் வேறுதெய்வமில்லை என்றவுயிர்களை சொர்க்கத்திலேவைப்பார்.

இனி மிருகபட்சி ஊர்வன ஜலசெந்து தாபரமாய்மடிந்தஉ யிர்களையெல்லாம்எழுப்பிக் கேள்விகேட்டு மண்ணோடுமண்ணாக் குவார். இப்படிபந்தப்பட்டசிவனில்மலக்குகளாகிறது மல்கல்ம வுத்துகளாகிறது கர்த்தன்தூதர்கள்இவரிற் பிரதானர்இசிராயீல் முதல் நால்வர். இனி அக்கினியேதேகமாய் வேறுகர்த்தன் இல் லையென்று தாங்களே கர்த்தனென்ற பேரையும் யுத்தஞ்செய்து கொன்றபேரையும்அம்பியாக்களாகிறபேரையும் (௩௱௰௩)பேரில் பிரதானர் நூறுபேகம்பர், அவுலியாக்களாகிற பேர், சாரகத்து வழியிலாவது கர்த்தனேவலாகவானத்திலிருக்கிறபேர் முசிலீன் கள்முமீன்களாகிற பெரியவர்கள்மகுமதர்முதல் (௱௨௦௪௲) பேர் ஜெபிரீல்அணுகுமுதுச்சலாமி (௩௱௧௩) இதல்லாமல்(௲௲௧௲) கேபருமுண்டுஅசாவாக்கள் பெரியவர்கள் முமீன்கள்தபோதனர் இனி அபூபக்கர், உமர், உதுமான், அலியார், மாலி, அசன், உசன், முருசலானவர், அசாவர்கள்(௪௰௨௲)உலுல், சுமை, அசும் யீல்மகமதை வழிப்பட்டதோழா மஷாகைகள்துறந்தபேர் வணா ங்கிறபேருக்கெல்லாம் முமீனோர்களென்றுபேர் இவர்கள் முத லானபேரெல்லாம் கர்த்தனை வணங்கிசொற்கம்பெறுவர் வணங் காதபேரெல்லாம் நரகம் பெறுவார்களென்றறிக.

முத்திநிலையானது,சின்செயித்தான்முதலியபசாத்துபவங்க ளைமுந்திகேட்குமிடத்தில் இரிஷபகேள்வியென்றும், பாதாளகே ள்வியென்றும், குரூதுகிற வகைகளும், அதில் சகலசீவர் மடிகிற

தும், இதில் மீந்துநின்றபேர் ஒருவரொருவரைக் கொல்வதும், எல்லாரையும்கொன்றவன்மரிக்கும்போது அதிகவருத்தம்அடைந்து உயிர்விட்டானென்றும், அப்போது கர்த்தனொருவனே நின்று அனேககாலஞ்சென்றபின் மறுபடைப்புண்டாக முதல் நால்வரையுண்டாக்கி யவர்களாலே மறுபடியுஞ் சூருதுவித்து உலகத்தை யுண்டாக்கினரென்றும், கர்த்தாவை யறிந்து பின்னொரு தெய்வத்தைப் பணியாமல் நோன்பு விரதங்கள் நிமாசு முதலிய கிரமத்திலிருப்பவனை மோக்ஷமாகிற சொர்க்கத்தில் வைப்பான்.

இதற்கு புருக்கான் வேதஞ்சொன்னபடி நோன்புவிரதம் நிமாசு முதலியவற்றுற்றொழுவேண்டும். தொழுதலாவது, பரிதி தோன்று முன்னெழுந்து மாயாகுணமெல்லாம் விட்டுத்தொழுதலாம். தபமாவது, பணியும்போது 16-விதமாம். அதாவது முழுங்கால் 2, பாதம் 2, கை 2, நெற்றி மூக்கு 2, இவ்வெட்டவயவங்களையும் பூமியில் பொருந்த தெண்டனிடுவது கிமீலாவை நோக்கினின்றது க, மறுக்கு 2, தொன்னியா 3, சுசீது 4, இருப்பு 5, கலெநெரிசுகிது 6, சலாம் 8, இப்படி 16 விதமாய்த் தொழுமிபாழுகிறதே தபம், கர்த்தனை தொழும்போது புறப்பது எட்டுண்டு இதில் முதலாவது, தொழுகைக்கு நேரமறிகிறது, 2-வது தூயத்தண்ணீர் தேடி ஒலுச்செய்வது, 3-வது தூயபிடவை தேடுவது 4-வது தூயதலந்தேடுவது. 5-வதுபறுதானபிடதையுடுப்பது, 6-வது கிமீலாவுக்கு நேரேநிற்பது. 7-வது நீயத்துக்கொள்வது 8-வது முந்தின தகுபீர்கட்டுவது இனிபுறப்பறுது எழுண்டு. இதில் முதலானது நிலேயில்நிற்க, 2-வது இஸ்திராத்தோத 3-வது றுக்குவிலேநிற்க. 4-வது சுகிதுசெய்ய. 5 வதுபின்னிப்பிருக்க 6-வது அடைவுடனே கொண்டுவர, 7-வது வலதுபுறமிடதுபுறஞ்சலாங்கொடுக்க திர்ப்திப்பட ஆ உளப்பருது-7.

உள்ளும்புறம்புமான விரண்டு பறுது 15 இனி முழுக்கில் பறுது-3, முதலாவது வாய் கொப்பளிக்க, 2-வது நாசிக்குத் தண்ணிரேத்த, 3-வது உடம்பெங்கும் நினைக்க ஆ 3. இனி ஒதுவிலே பறுது-4, இதில் முதலாவது முகந்தாடியுள்படக்கழுவுவ 2-வது முகங்கைகழுவுவது, 3-வதுதலைநாலிலொன் றுமழுக்குசெய்கிறது, 4-வது கணைக்கால்பரட்டையுள்பட கழுவுவது ஆ 4. இனியறுப்புப் பறுது-5, முதலாவது முசுலிமன்னறிந்து, 2-வது பிசமில்லாசொல்லியறுக்க, 3-வதுதொடர்பிடியாயறுக்க 4-வது

முடிசுத்தலையில் நிற்கக்கூட்டிப் பிடிக்க, 5-வது நாலுநாம்பு தெறிக்க ஆ -5, இனி நலப்பறுது 12-நாளொன்று தொழுகை 5-கூறினபறுது-பதினேழுரை ஈமான் இசிலா 11-தாய்மனதில்பறுது-2. ஆ 57. இதனை யறிவார்கள் அல்லாவுடைய நீதாரும்மகுமதருடைய சற்பாத்துஞ் சொற்கத்துக் குடையவராவர்.

இனி அல்லா சம்பத்துண்டாக தொழுகையில் சுன்னத்து 312-உண்டு அதில் நிலையில் 8-சுன்னத்துண்டு, இதில் முதலாவது, தகுபீர் அவ்வலிவிரண்டுகையுமெடுக்க, 2 வதுதொப்புளின் கீழ்கைகட்ட, 3-வது இடதுகைகீழும் வலதுகைமேலுங்கட்ட, 4 வது, சசிதிடுந்தலத்தைப்பார்க்க, 5-வதுதானுவோத, 6-வது அவுதுவோத, 7-வது பிசுமிலோத, 8-வது ஆமீனேச, ஆக 8 இனிறுக்குவிலே சுன்னத்து 8. முதலாவது தமக்கு பீர்சொல்ல 2-வது இரண்டுகையாலு மிரண்டு முழங்காலைப்பிடிக்க, 3-வது தலையுமுதுகுஞ்சமனாய் நிற்க, 4-வது சுவாசவானிற் பிறப்பில் வலியுமோத, 5-வது புறங்காலைப் பார்க்க, 6-வது கண்ணைவிழித்துப்பார்க்க, 7-வது சமனல்லாகுசொல்ல.

சுசீதில்சுன்னத்து 8. இதில்முதலாவது தமக்குபீர்சொல்ல. 2-வது எட்டுப்புர் தரையிற்பட சுசிதிட, 3-வது மூக்கு தாரையைப்பார்க்க 4-வது சுவனிற் பிலாலவென்று மூக்கால் சொல்ல 5-வது கண்ணை விழித்துப்பார்க்க, 6-வது ஈரக்கையிரண்டுந்தோளிற்குச் சமனாய்வைக்க, 7-வது உறுப்புகளைக் கிபிலாவுக்குநேரே திருப்பிக்கொள்ள, 8-வது சிறுவிருப்பிருக்க, ஆ 8, இனியிருப்பில் சுன்னத்து 8-இவற்றில்முதலாவது, தகுபீர்சொல்ல 2-வது இடதுகால்மடித்து வலதுகால் குந்திருப்பிருக்க, 3-வது கைவிரல் கால்விரல் கிபிலாவுக்குநேரே வைக்க, 4-வது இரண்டு கையு மிரண்டு துடையிலேவைக்க, 5-வது மடியைப்பார்க்க, 6-வது சலவாத்தோத, 7-வது சலாஞ்சொல்லும்போது வலதுதோளைப்பார்க்க, 8-வதுஇடதுதோளைப்பார்க்க, ஆ 8. இந்நான்கு நிலையிலும் ருக்குவிலும் சுசிதிலும் சிறுவிருப்பிலும் கூடின சுன்னத்து-32, இனி தொழுகைவிபரம் முதலாவது அபூதாமில் லாகிமின் ஷெயித்தாள் சின்பிசுமில்லாகிற்றகு மானிற்றகிம்.

இனி யிரண்டாம்தொழுகையடைவு ஓதச்செய்தபின்பு இன்னுகன் சென்னுது ஓதிநடக்க நீயத்துச் செய்துதகுபீர்கட்டினபி

ன்பு ழுக்குவிலேபோக பின்பு துவாஓத பின்புகியாவிலேதத்வை யோதபின்பு சசிசிதிகேசுவையோத பின்னிருப்பிலே யிருந்து ஆாதகயாத்தும் மஷாகதுக் கவிமாவுஞ் சலவாத்துமோதிசலங் கொடுக்கவும் 3-வதுநோன்பாகிறது றமஞ்சாபிறையிலே வந் தால் 30-வது நோன்பு பிடிக்கிறது அதுக்கறிகிறமஞ்சகன் மாத ப்பிறையில் விடிந்துபிடிக்க நியத்துக்கொண்டபின்பு பொழுது புகுதநோன்புதீருகிறது. விசுமில் ஓதி தீர்க்கவும் 3-வது நோன் பாகிறது றமஞ்சாபிறையிலே வந்தால்:30 நோன்பு பிடிக்கிறது அதுகறிதுகிறதுறமஞ்சான் மாதப்பிறையில் விடிந்து பிடிக்கநிய த்தொண்டபின்புபொழுது புகுதநோன்பு தீர்க்கிறது. விசுமில் ஓதி தீர்க்கவும் 4-வது செக்காத் விதியாகிறது இருபதுபொன் னுக்கு மேல்நின்ருப்பத்துக்கு வபுவெ'த்து மஞ்சான்மாதத்தில் நாலுபங்காக்கி குருக்களும் பள்ளிக்குந்தருபேசிக்கும் தன்கிளே யில் இளேத்தபேருக்குங்கொடுக்கவும் 5-வது மகத்துக்குப்போய் அச்சுச்செய்யவும் 6-வது ஆமீனது மில்லாகி ஓதுகிறது இவ்வா று கர்த்தனே விதிவழுவாமல் ஓதிவந்த ஆத்மாக்களேக் கர்த்தன் முடிவில்கேள்விகேட்டு மோட்சந்தருவார் மற்றவர்களுக்கு நரகந் தருவர் இந்த துலுக்கமதத்தில் சொல்லிய கிரமங்கள் அனேக முண்டு இதை சங்க்ஷேபமாக சொன்னதென்றறிக.

# கிறிஸ்துமதம்.



இம்மதஸ்தர்கள் சுமார் 6000-வருடத்திற்கு முன்புபிரபஞ்சம்தோன்றியிருக்க வேண்டுமென்று கணிப்பதுடன் கடவுளால் ஆதியில் வானமும், பூமியும்படைக்கப்பட்டதென்று பின்பு வெளிச்சம், இருட்டு, ஜலம், சூரியசந்திரர்களையும், தாவரசங்கமப் பொருள்களையும், கடையில் தம்சாயலாக ஆதாம் ஏவாள்என்கிற ஆதிபுருடனையும் ஸ்திரீயையும் முறையேபடைத்து தம்கிரியையெல்லாம்முடித்து ஏழாம்நாளாகிய சனிக்கிழமையதினத்தை ஓய்வுநாளாக்கி அதைப் பரிசுத்தப்படுத்தி தம்மை வணங்கவேண்டுமென்று கட்டளையிட்டதாகவும் கூறுகிறார்கள்.

இதன்றிமண்ணினாலே உருவாக்கி ஜீவசுவாசத்தை நாசியிலேஊதி ஜீவாத்துமாக்களாகிய ஆதாம்ஏவாள் தங்கியிருக்கும்படி அமைத்த ஏதேன்சிங்காரவனத்தில் தம்மால் தடுக்கப்பட்ட நன்மை தீமையறியும் மரத்தின்பழத்தை ஒரு துஷ்டசர்ப்பத்தின் தூண்டுதலினால் உருசிபார்த்ததினால் அவர்கள் பாபிகளாகவே அவர்கள் பிள்ளைகளாகிய உலகத்தாரும் அந்த பாபமன்னிப்புக்கு கடவுளை அத்தினத்தில் வணங்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.

இவ்வாறு உலகத்தாருக்கு உண்டாகிய. பாவத்தை துடைத்து அவர்களை இரட்சிக்கும்பொருட்டு பெத்தலகேமென்னும் தேயத்தில் தச்சவேலைசெய்து ஏழை ஜீவனஞ்செய்துவந்த யோசேப்

புக்கு நியமிக்கப்பட்டிருந்த மரியாளென்னும் கன்னியின் வயற்றில் தீர்க்கதெரிசிகள் வாக்கின்படி இயேசு ஜனித்தார் இவருக்கு 0“ இம்மானுவேல்” ஆதாம் மெசய்யா என்கிறநாமங்களுமுண்டு இவர் தாம்பிறந்த எட்டாம்நாள் சுன்னத்தையடைந்து ✻இயேசுவென்று நாமம் சூடப்பட்டு; 40-நாள் தேவாலயப்பிரதிஷ்டையாக்கப்பட்ட தாயும் மோசேயின் ஆதியாகமத்தினுல் தெரியவருகிறது உலகத்தில் ஆங்காங்கு தோன்றிய அவதாரபுருடர்களைப் போல் இவர் அனேக அற்புதங்களைச்செய்தும் எண்ணிறந்த வியாதியஸ்தர்களை சுகப்படுத்தியும் வந்ததுடன் தம் 12-வது வயதிலேயே தேவாலயப் போதகர்களோடு மதவிஷயமாய் தர்க்கங்களைச் செய்துவந்தார். இன்னும் தம் 30-வது வருடத்தில் உலகப் பிரசித்தமாய் உலகத்தின் அநித்திய வாழ்கையைப்பற்றியும் புருஷார்த்தத்தைப்பற்றியும் பிரசங்கஞ் செய்துவந்தார் இவர் தாம்பிறருக்குப் போதித்தபடி பரிபூரணமாய் பரமபிதாவினிடத்தில்பக்திசெய்துவந்தமையால் இவரிடத்தில் 12-சற்சீடர்கள் அடைந்தார்கள் 1-பேதுரு, 2-அந்திரேயா, 3-யாககோப், 4-யோவான், 5-பிலிப்பு, 6-பர்த்தலேமியு, 7-தோமா, 8-மத்தேட்டி, 9-யாக்கோபு, 10-தடேயு, 11-சிமோன், 12-பகுதா.

இவருடைய முக்கியவிதியாவது பராபரவஸ்துவாகிய கடவுளை பூரண இதயத்தோடும் பூரணபத்தியோடும் பூரணமனதோடும் விசுவாசித்தும் நமது அபலாரை நம்மைப்போலும் நேசிக்க வேண்டுமென்பதே யாகையால் அக்காலத்திலிருந்த யூதர்களில் புத்தியீனர்கள் சிலரால் பலவித இடுக்கண்களடைந்து முடிவில் “யூதாஸ்காரியோத்” என்னுஞ் சிடனெருவனுல் காட்டிக்கொடுக்கப்பட்டு சிலுவையிலறையப்பட்டு கொல்லப்பட்டார்இத்தகையதுன்பத்திற்கு ஆளாக்கப்பட்டு பிராணனைவிடுங்காலத்தும் ஜீவகாருண்ணியம் நிறைந்த ஓ பரமபிதாவே தாங்களின்னது செய்கிறமென்பதறியாத இவர்களை மன்னியும் என்தேவனே! என்தேவனே! நீர் என்னைக் கைவிட்ட தேதெனவும் முறையிட்டார்.

---

0 தேவன் நம்மோடிருக்கிருர் என்று அருத்தம்.

✻ இரட்சிப்பவர் அபிஷேகம் பண்ணப்பட்டவரென்றுபொருளாம்.

பிறகு தாமிறந்த 3-நாள் உயிர்த்தெழுந்து தமது சிடர்களுக்கு புத்திமதிகளைப்போதித்து உலகமெங்குஞ் ⁕ சுவிசேடத்தை உபதேசஞ்செய்துபரவச்செய்யுமென்று ஆக்யாபித்துபரலோகஞ் சென்றார்.

இவர் தாமுள்ள 33-வருடமும் பிரமசாரியாகவேயிருந்துகாலங்கழித்தார். இவர் காலத்தில், மகம்மதியரைப்போல சுன்னத்துசெய்கிறவழக்கம்மிகப் பிரபலமாயிருந்தது. கிறிஸ்து அதை மறுத்து ()ஞானஸ்நானத்தை பிரசித்தப்படுத்தினர்.

இயேசுநாதர், பரமண்டலஞ் சேருமுன் அப்போஸ்தலர்களாகிய பக்தஜன சபையாருக்கு இரவில்ஞான உணவைஊட்டிவந்தார் தாம் பரமண்டலத்தை யடையும்போது தம்முடையமாமிசத்தை அப்பமாகவும், இரத்தத்தை இரசமாகவும் கொள்ளக்கடவீர்களென்று தத்துவார்த்தமாய் உபதேசித்ததை அநுசரித்தே தேவாலயங்களுக்கு அப்பத்தையும் இரசத்தையும்காணிக்கையாகக்கொடுத்து குருமார்களாய் தோத்திரம்செய்யப்பட்டபிறகுபரிசுத்தபக்திமான்களுக்கும்வியாதியஸ்தர்களுக்கும்கொடுப்பார்கள்

---

⁕ சுவிசெஷம்—என்பது பைபில்என்னும்கிறிஸ்துவர்வேத புத்தகமாம்.

() ஞானஸ்நானமாவது - நீரால் பரமபான ஸ்நானமும் பரிசுத்த ஆவியினல் உண்டான ஸ்நானமும் செய்வதாம் இயேசுநாதர் பரமண்டலப்பிராப்தி யடைந்தபின்பும் அவர்மதத்தை அநுசரிப்பவர்களால் இவ்வழக்க மின்னும் கொண்டாடப்பட்டு வருகிறது, ஆனல் இக்கிரியை பூர்வகாலத்தில் நடந்து வந்ததற்கும், இப்போது நடந்து வந்ததற்கும் சிறிது பேதப்படுகிறது. பூர்வத்தில்ஞானஸ்நானம் பெருபவனை பரிசுத்தமான ஆற்று அல்லதுஊற்றுநீரால் பரிசுத்தப்படுத்தி அசுத்த ஆடையைப்போக்கி சுத்தஆடையை உடுப்பித்து தேவாலயப் பிரதிஷ்டைசெய்து ஞானபோதகரால், ஞானஸ்நானக் கிறிஸ்துமார்க்கத்தைப் போதித்து அக்கூட்டத்தில் ஒருவராக வளர்ப்போமென்று அக்காலத்தில் கூடும் சபையின்முன்னிலையில் வாக்குத்தத்தஞ்செய்து கொடுக்கப்படும். இக்காலத்திலேயோ சிரசின்மேல் மாத்திரம் நீரைத் தெளித்து மற்றகிரியை நடத்தும்வழக்கம்பிரபலமாயிருக்கிறது.

இம்மதத்தை ஐரோப்பா அமேரிக்கா கண்டங்களில்அநுசரிக்கும் பெரும்பான்மையோர்களுக்கும், ஆசியா - ஆப்பிரிகாமுதலான கண்டங்களில் தொழும் சிறுபான்மையோர்களுக்கும்இன்னும் அங்குமிங்கும் சிறுபாண்மைவெளகீக தாரதம்யமிருப்பதால்சற்றேரக்குறைய 250-க்கு மேற்பட்ட உட்சமயங்களுண்டு அவைகளில் பிரதானமானவை அடியில்வருமாறு காண்க.

| | |
|---|---|
| கிரேக்குசபை | யூனிடேரியன்சபை |
| உரோமன்சபை | சொகீனியயூனிடேரியன்சபை |
| புரோடெஸ்டாண்டுசபை | லண்டன்மிஷன்சபை |
| லூத்தரின்சபை | ஸ்கோத்துமிஷன்சபை |
| பாப்டிஸ்டுசபை | இபிஸ்கோபல்சபை |
| வெசலின்சபை | குவாக்காசபை |
| ஒயிட்பீடிஸ்டுசபை | பிரிமேசனரிசபை |
| ஆண்டிநோவியர்சபை | சுவீடன்பர்க்கியசபை |
| பிரிசிபிடேரியன்ஸ்சபை | முதலியனவாம். |

## ரோமர் மதம்.

மேற்படி கிரேக்தேசத்தைச்சார்ந்த இத்தாலியா தேசத்தில் ரோமாபுரி என்றோர்பட்டணமுண்டு. இதிலுள்ளவர்கள். ஆரிய பகுப்பினராக யோசிக்கப்படுகின்றனர். இவர்கள் வசிக்கும் தேச காரணமாக இவர்களை ரோமமதத்தவரெனக் கூறப்படுகின்றனர் இவர்கள் ரோமன் பாஷையைப்பேசுகின்றனர். இவர்கள் அன்னியதேச நடைநொடியாதிகளை அநுஷ்டிக்கின்றனரேயன்றிதங்கள் சுயார்ச்சிதமாக யாதுங்காணோம்.

## ரோமர்மதத்தின்தெய்வங்கள்.

1-ஜானஸ் என்னும் தெய்வம்சிருஷ்டிகர்த்தாவென்றும், அவரேபெரிய கடவுளென்றும், அவராலேயே உலகமும் வருஷமும்உண்டானதென்றும்

2-ஜூன் என்னும் ஓர் கன்னிகாதேவதையால் மாங்கல்லிய கருமங்கள் காக்கப்படுவதென்றும்,

3-மைனீர்வா என்னும் கடவுள் இந்ததேவதையால் கல்வி, அறிவு பொருமை விளைவிக்கும் கடவுளென்றும் மூவகையாய்க் கூறப்படுகின்றனர்.

### ரோமர் பொது தெய்வங்கள்.

மேற்கூறிய மூன்று தெய்வங்களன்றியில் கிரேக்கு மதத்தைச்சார்ந்த அனேக சில்லரை தெய்வங்களையும் சூரியனையும், சந்திரனையும், புசல்காற்றையும், ஊற்யையும், ஜலத்தையும், பாம்பையும் மேகத்தையும், பஞ்சபூதியங்களையும் வணங்குகிறவர்களா யிருக்கின்றனர். அன்றியும், வருஷம்365-நாளும் பலவிதத்திருவிழா உச்சவங்கள் செய்வதில் மிகவும்பிரீதியுள்ளவர்களாய் இருக்கின்றனர்.

இந்த ரோமர்கள் அனேக வாலிபஸ்திரீகளை கன்னிகாமடங்களிற்சேர்த்து ஆயுள்பரியந்தம் தேவர்களுக்கு வணங்கவும், தொண்டுசெய்யவும் விடுவார்கள் அவர்களில் யாராவது விபசரித்தால் அவர்களை உயிரோடு புதைத்து விடுவார்களாம்.

இந்த ரோமதேசத்திய தத்துவஞானிகள் மாத்திரம் இவர் வழியில் புகாமல் (ஜெனிகா) என்னும் ஒரே கடவுளுண்டென்று எந்நாளும் ஸ்தாபிதப்படுத்தி வாதிப்பர்.

### கிரேக் மதம்.

கிரேக்குமதம்,—ஐரோப்பா கண்டத்தின் தென்பாகத்தில் கிரேக்என்று ஓர் யெரிய பட்டணமிருக்கின்றது. அவ்வூரிலுண்டான மதத்திற்கு இடவாகு பெயராக கிரேக்மதம் எனக்கூறநேர்ந்தன.

### கிரேக் பாஷை.

இவர்களுக்கு இங்கிலீஷ் அக்ஷரரூபமாக 11,633 பதங்களையுடைய ஓர் பாஷை யிருக்கிறது.

### வகுப்பு.

இதில் 2000 பதங்கள் சமஸ்கிருதமாக யிருத்தலினால் இவர்கள் ஆரிய வகுப்பினோர் பகுதியாரென உத்தேசிக்கின்றனம்.

### சாஸ்திரங்கள்.

இவர்களுக்கு சமயாசாரியரும், மதசித்தாந்தசாஸ்திரங்களும் இல்லாமையினால், இவர்கள் மதமுடிபும் ஆசாரவிலக்ஷணங்களும் இன்னதெனக்கூற ஏதுவில்லாதிருக்கிறது.

### கிரேக்கர் தெய்வங்கள்.

இவர்களுள் கவிவாணர்கள் ஒரு கருத்தாகவும்' தத்துவஞா னிகளொ கருத்தாகவும், சாதாரணகுடிகள் ஒரு கருத்தாகவும் தெய்வங்களைக்கொண்டிருக்கின்றனர்.

### கிரேக் சாதாரண குடிகள்.

| | |
|---|---|
| பூதேவி | இருகட்கடவுள் |
| அன்புக்கடவுள் | நாட்கடவுள் |
| மோக்ஷலோகக்கடவுள் | |

இவர்கள் உண்டாய் சகலத்தையும் உண்டாக்கினதாக கூறு கின்றனர் அன்றி இவர்கள் அந்தேவதைகளை இந்துக்களைப்போ ல அழகிய விக்கிரகரூபமாக ஸ்தாபித்து புஷ்பாதி அலங்காரமும் சிலசமயம் ஆடுமாடுகளைக்கொன்றதின் இரத்தத்தை வாரிப்பூசி யும் அதிக உரத்த சத்தமாகப் பிரார்த்திக்கின்றனர்.

### கிரேக் கவிவானர்களது கருத்து.

அழகிய ஸ்ரீபுருஷ கந்தமூல கிருமிமுதலியவைகளை தேவர்க ளாகப்பாவித்து பாடுவார்கள் மேற்படி தேவன், சமுத்ரதேவன், சூரியன், சந்திரன் முதலியவர்களாக ஸ்படிகமுதலிய விக்ரகரூப மாகவைத்து துதிப்பர். இவர்கள் அழகு அறிவு சத்தியமிவைக ளுள்ள மனிதர்களை எல்லாம் தேவர்களென்றும் இவர்கள் பூமியி லேயே ஜனித்தவர்களென்றும் இகபரபோகமே உண்மையான சுகமென்றும் கூறுகின்றனர்.

### கிரேக் தத்துவஞானிகள் கருத்து.

அம்மதத்துள்ள தத்துவஞானிகள் தெய்வம் ஒருவரே 'யெ ன்றும், அக்கினியே கடவுளென்றும், காற்றே கடவுளென்றும், ஜலமே கடவுளென்றும், பரிசுத்தஎண்ணமே கடவுள் என்றும், பலவிதமான கருத்தைக்கொண் டிருக்கின்றனர். ஆயினும் இம் மதத்தவர்கள் ஆலயத்திற்குப்போகும்போது இந்துக்களைப்போ லவே ஸ்நானமுதலிய சுத்தியோடு ஆராதனை முதலியவைகளைச் செய்துவருகின்றனர்.

எகிப்துதேசமதம்.

ஆபிரிக்காவின் வடகிழக்கில் தொன்றுதொட்டு நாகரீகத்தி லும், சாஸ்திரவிசாரணையிலும், பிரதாபமடைந்த பூலோகவன மென்று பலதேசத்தாராலும் புகழும் எகிப்து என்றோர்தேசமு ண்டுஇத்தேசத்தில் 3-வித மதங்கள் அனுசரிக்கப்பட்டு வருகின றன.

அவற்றுள் 1-வகுப்பார் ஓர் ஆதிகடவுள் உண்டென்றும் அ க்கடவுளே சராசர பிரபஞ்சமென்றும், மறு செனம முண்டெ ன்றும், ஆத்மா வழிவற்றதென்றும் இந்தியாவிலுள்ள அத்வைத மதஸ்தர்களின் கொள்கையை யுடையவர்களாயிருந்ததும் ஆன் மாவும் தேகமும் ஒன்றறன்றே சாதிக்கிறார்கள்.

2-வது வகுப்பார் மூன்று வகையான திரிகர்த்தர்களுண் டென்றும் சரிதை கிரியா யோகமுதலானவைகளினால் ஜன்மநிவ ர்த்தியுண்டாகுமென்றும் ஸ்தாபிக்கிறார்கள்.

3-வது வகுப்பார் புராண சம்பந்தங்களுக்கிணங்க எண்ணி றந்த சடங்குகளையும் பூசைகளையும் பிராயச்சித்தங்களையும்செய் வதினால் மோட்சமுண்டென்றும் சொல்லுவதுடன் புதுக்கோயி ற்களை ஏற்படுத்தி பலபிராணிகளை பாவநிவர்த்திக்காகபலிவுகொ டுத்தும் வருகிறார்கள். செத்தபிணங்களை ஓசரிஸ் தேவன் சந்நதி யில் 70-நாள் வைத்திருந்து கடைசியில் அங்குள்ள திராசில் ஒவ் வொருவரின் புண்ணிய பாவங்களை நிறுத்து பார்த்த பின்னர் அடைக்கலம் செய்கிறார்கள்.

## ஸ்காந்திநேவியர் மதம்.

அல்லது டியுல்னிக்மதம்.

ஐரோப்பா கண்டத்தைச்சார்ந்த சிலசுற்றுப்புறங்களில் கு டியேறிவாசஞ்செய்திருந்தவர்களுக்குஸாந்திநேவியர் அல்லதுடியு டனிக்மதமென்றுபெயர். இவர்களை இன்னஜாதியாரென்றுதிட்ட மாய்சொல்லக்கூட வில்லையாகிலும்பூர்வம் ஆரியவம்சத்தினின்று பிரிந்த ஈரோப்பியருடன்கலந்து ஐரோப்பாகண்டத்தின் மத்திய பாகத்தில் ஆடுமாடுகளைமேய்த்து கடைசியாகஜர்மானியராகவும் டச்சுக்காரராகவும்பிராஞ்சுக்காரராகவும் ஆங்கிலோசாக்ஷனர்க

ளாகவும் பின்னும் பலவாறாக ஐரோப்பாகண்டத்தின் பலவிடங்களில் பரவினதன்றி கொலம்பஸ் என்பவர் அமேரிக்காகண்டத்தை கண்டுபிடித்ததற்கு 500 வருஷத்திற்கு முன்னமே இந்தஸ்காந்திநேவியர் அமேரிக்காவைக் கண்டவர்களா யிருக்கின்றாரெனசிலசாஸ்திரம் சொல்லுகிறது.

இந்த ஜாதியார் ஜர்மனி முதலிய பாஷைகளிலிருந்து உற்பத்தியான (நார்ஸ்) என்னும் பாஷையைப் பெற்றவர்களாயிருக்கிறார்கள்.

## உலகசிருஷ்டி.

ஆதியில் (அபிஸ்) என்கிற பிண்டமானது உத்தர தக்ஷண உலகமாக யிருந்ததாகவும்இதின்பேரில் (வெனம்) என்னும்மழை பெய்கையில் தக்ஷணத்திலிருந்து மோதிய காற்றினால் அந்தபிண்டம் கரைந்துபோனதாகவும் அப்படி கரைந்தபிண்டத்திலிருந்து (இமிர்) என்னும் இராக்ஷதன் பிறந்து அவன்மாய்கையினால் ஒரு கொடியஜாதியாரும் (மண்டான்) என்னும் பசுவும் பிறந்ததாகவும் அந்த பசுவினிடமாய் போர் ஓடின விலாயென்னும் தேவர்கள் உற்பவித்து இமிர் என்னும் இராக்ஷதனைக்கொல்லவும் அந்த ராக்ஷதன் உடலோவானமும் பூமியுமானதாகவுஞ் சொல்லுகிறார்கள்.

# தேவர்கள்.

இவருக்கு 15-வித பெரிய தெய்வங்களும் அனேகசில்லரை தெய்வங்களும் உண்டு ஓடின்என்னும் முதல்தேவனை ஆல்பாதர் உலகபிதாவென்றும் சிருஷ்டிகர்த்தாவென்றும் இவர் ஆஸ்கா வென்னும் விருக்ஷத்தடியில் உட்கார்ந் திருப்பவரென்றும் பூமியேயிவருக்கு மனைவியென்றும் இவருக்கு (தார்) என்னும் ஒரு குமாரனுண்டென்றும் அந்த தேவனுக்கு (பிலஸ்கிர்னிர்) என்னுமிடத்தில் 540-கோயில்கள் உண்டென்றும் ஒவ்வொரு கோயிலும் ஒவ்வோரவதாரமாக இருப்பாரென்றும் இரண்டு ஆட்டுக்கிடாக்களால் இருக்கப்பட்ட இரதமுடையவரென்றும் அவர் அபூர்வமான வெகு சக்தியுடையவரென்றும் சொல்லுகிறார்கள். இவர்களினுட்பிரிவிலுள்ள அனேக சில்லரை தெய்வங்களின்வேறுபாட்டால் மதவாதங்களும் ஆசாரகிருத்தியங்களும் மாறபட்டுழலுவதாகச் சொல்லப்படுகிறது.

மெக்சிகோ தேசத்தார் மதம்.

மெக்சிகோ என்னும்தேசம் அமேரிகாகண்டத்திலிருக்கிறது அத்தேசவாசிகள் முறட்டுத்தனமுள்ள ஓர்வித காட்டுமனிதர்களாயிருக்கின்றனர் இவர்களில் சிலர் சூரியபகவானையே பராபர வஸ்துவாக நம்பி வணங்கிவந்தார்களாம். இவர்கள் மலைமீதில் வாசம்செய்ததாகவும் இவர்களில் சிலர்மிருகரூபமாக இருந்ததாகவும் தெரியவருகின்றது அக்காலத்தில் விட்ஜலி புட்வுலி என்னும் வேதபுருஷன் அம்மலைமீதில்வந்து பட்சிரூபமாக உட்கார்ந்ததாகவும் அதன்பிறகுதான் மெக்சிகோஎன்னும் பட்டணங்கட்டப்பட்டதாகவும் சொல்லுகிறார்கள் மெக்சிகோ என்னும் அப்பட்டணத்தின் பெயரையே வகித்த ஓர்கிரமமான மனிதன் ஏற்பட்டு அவனால் ஆலயம் முதலியவை கட்டப்பட்டு மனிதர் என்கிற நாகரீகத்தை யாவருக்கும் தெரியப்படுத்திச் சீர்திருத்தம்செய்ததாகத் தெரிகிறது.

## மெக்சிகோ தேவர்கள்.

டியாகு என்னும் ஒருபெரிய தேவன் இருப்பதாகவும் அதற்கு உலகமே சிம்மாசனமாகையால் கோளவடிவாய் ஆசனம்செய்து இருபுஜத்திலும் சிரகுகளுள்ளபாவனையாய் உருவு செய்து அதன்கைகளில் பலவித ஆயுதங்களும் அனேகவித பாம்புகளும் பிடித்திருப்பதாக பிரதமைசெய்து வணங்குகின்றார்கள் அன்றியும் மேர்க்குரி என்னும் தெய்வத்தை தனதானியலட்சுமியாக வழங்கி வணங்கிவருகின்றார் அப்பால் பூமியே தேவனாக நம்பி வருஷாவருஷம் அனேக நரபலிகளும் கொடுக்கின்றனர் இவர் ஆலயங்களில் மனிதர் மண்டையோடுகளைக்கட்டி ஏராளமாய்த் தொங்கவிட்டும் பலவிதபாம்புகளை அன்புபாராட்டி வளர்த்துக்கொண்டும் தெய்வங்களுக்கெல்லாம் பூஜாலிகளைக்கொண்டே மிகவும் பயபக்தியுடன பூசைகளும் சிலசமயம் பத்துநாள் உபவாச விரதமுடன் அலங்கரித்து ஆடிப்பாடி விளையாடும் பண்டிகையும்செய்கிறார்கள்.

## கினியாதேசத்து மதம்.

இவர்கள் படிப்பும் நாகரீகமும் எவ்வித சாஸ்திரங்களும் குருக்களுமில்லாதவர்கள் இறந்தவர்களை ஸ்ரீகளே கொண்டுபோய் புதைக்கின்றனர் இராஜா சிம்மாசன மேறுவதையே சிறந்த

உற்சவமாகக் கொண்டவர்கள் செவ்வாய்க்கிழமையேதொழுகை நாளாக மதித்துத்தொழுது கோழிமுதலானதையும் விசேஷ நரபலியுமிடுவோர்கள் பெட்சிஸ்தேவர்கள் தங்களைப்போல கருநிறமாய் தீங்கையே குணமாக உடையவர்களாயிருப்பதாகக் கூறுகின்றனர் இடிவிழுந்த இடங்களில் விக்ரகரூபங்களை வைத்து வணங்குகின்றனர் தங்கள் துஷ்டதேவதைகள் கருநாயைப்போலவந்து தீங்குகளைச் செய்யுமாம்.

## பெனின் அட்ராதேசமதம்.

இவர்கள் யுத்தத்திலிருப்பதே மோக்ஷமென்கின்றனர். அதனால் இறப்பவர் கைகளை பின்பக்கங்கட்டி நிறுத்திவில்லையும்அம்பையும்கொண் டலங்கரித்து சமாதிசெய்கின்றனர் பிரபுக்களும் இராஜாக்களும் இறந்தால் அவர்களுக்கு வைகுந்தம் போகத்துணையாய் நாலைந்து ஆள்களையும் கூடப்போட்டு புதைக்கின்றனர். இவருள் மாதரும் பிள்ளைகளும் கடவுளை வணங்குவது கிடையாது துஷ்டதேவதைகளுக்கு நரபலியும் மிருகபலியுங் கொடுத்து பாவமன்னிப்பு முதலிய பிரார்த்தனைகளைச்செய் துவருகின்றனர் ஓர் பெரிய கடவுளிருப்பதாகவும் அவர் நல்லவரென்றும்ஆனதால் அவருக்கு வழிபாடுகள் வேண்டாமென்றும் கூறுகின்றனர்.

### கான்கோமதங்கள்.

இவர்கள் இராஜனே தேவனென்று வணங்குவதோடு சாம்பார், பாங்கோ என்னு மிருவிக்ரகங்களையும் வணங்குகின்றனர் அவர்கட்கு கெங்காகாம்பரு என்னும் தேவதைகுறிகளைச்சொல்லும் ஔவையாரென்றுநம்பி பூசிக்கின்றனர். இவ்வூரில்மீராம்பர் வென்னும் பயங்கரமந்திர விக்ரகமொன்றிருக்கிறது. இதை ஐயசிலர் கள்வணங்குகின்றனர். சிலர் பாம்பு, புலி, ஆடு, மாடுகளைவணங்குகின்றனர். இவர்கள்குருக்கள்வியாதியாளரைக்கண்டு வரும்போது அவர்கள் சுகதுக்காக ஓர் சிறு விக்ரகத்தைக் கொடுக்கின்றனர்.

## அங்கோலியர்மதம்.

இவர்கள் மேற்படியாரைப்போலவே அனுஷ்டிப்பவராயினும், ஓர் கடவுள் உண்டென்ற நம்பிக்கையும், அனந்த சில்லரைதே

வவணக்கமும் தீர்க்கதரிசிகளிடத்தும் குருமார்களிடத்தும் விசுவாசமுடையவர்கள் 12-அடிநீளமான விக்ரகத்தைச்செய்துவைத்து வணங்குகின்றனர்.

### அரக்கான்தேசமதம்.

இவர்கள் பற்பலதேவர்களை நம்பி பூசிப்பவராயினும் அவர்களின் முக்கியதேவனை விநோத விக்ரகரூபமாகச்செய்து வாகனங்களிலேற்றி பவனிவருபவர் அக்கால் அனேகர் பக்கச்செடில்முதலியவைகளைக் குத்திக்கொண்டு இரத்தத்தைக் சிதரவைப்பர் இத்தேவனை பொரோமலையில் வைக்கப்பட்டிருக்கிறதுமழைபனி முதலியதுகளால் தங்கள் தேவர்களுக்கு நோய்வருமென்றுகோயில்கட்டி யிருக்கின்றனர் இவர்கள் குருக்கள் சர்வாங்கக்ஷவரமும் மஞ்சள் வஸ்திரமும் தரித்துக்கொண்டு சன்னியாசிகளாயிருக்கின்றனர், இவர்கள் 4-மனைவிக்கு அதிகமாகவும் அரசர்கள் 12-மனைவிக் கதிகமாகவும் மணம்புரிகின்றனர் இவர்கள்மறுபிறப்பையும் ஓர் கடவுளுண்டென்பதையும் நம்புகின்றனர். இறந்தவராத்மாவை எமன் கொண்டுபோகாதபடி விசேஷகொட்டு முழக்கங்களைச்செய்து வருகின்றனர்.

### காபிரிகள் மதம்.

ஆபிரிகா தென்பாகத்துள்ள காபிரிகளுள் சிலர்முகம்மதுசமயத்தையும் சிலர் மூடபக்தியையும் சிலர்கடவுளொருவருண்டென அனேக விக்ரகாரூபமாக உபாசித்தும் சிலர் சூரியர் சந்திரர் நட்சத்திரம் இவைகளைநம்பி வணங்கியும் அண்ணாந்துவானத்தை நோக்கிக் கண்ணைமூடித்துதித்தும் வருவதோடு ஓர்வித மேபக்கென்னும் பூச்சி விசேஷசுகத்தைக்கொடுப்பதென்றுத்தேசித்து அந்த பாதுகாத்தும் வருகின்றனர். அன்றிதங்கள்தெய்வங்களுக்கு ஆடுமாடுகளை பலியிடுவார்கள் இவர்களுக்கு சீலத்திலும், விவேகத்திலுமுதிர்ந்த ஆசாரியர்களுமுண்டு விபசாரிகளை உடனே கொலைசெய்வர். விதவைகள் புனர் விவாகஞ் செய்துகொள்ளப்போகும்போதெல்லாம தங்கள் முன் விரல்களை வெட்டிக்கொள்ளுவார்கள்.

தார்த்தாரிமதம்,

ஆசியா வடபாகத்துள்ளவர்களை தார்த்தாரியரென்று கூறுவது இவர்கள் மார்ஸ் என்னும் ஓர் தெய்வத்தை விக்ரகாராதனையோடு குதிரைகளை பலியிட்டு வணங்கி வருகிறார்கள். சிலபகுப்பார் குதிரை சவுக்கைதெய்வமாகக்கொண்டுள்ளார். இவர்கள்கிடிகே என்னும் சிருஷ்டிகர்த்தாவும் சந்நியாசி குருவும் அவருக்கு 20000 சிடர்கள் லாசாவிலிருப்பதாகவும், மானிபர்என்னும்ஓர்கிராமத்தே வருண்டென்றும், குடுசுடாஎன்னும்புனருற்பவத்தைக் கொடுக்குந்தேவருண்டென்றும்சிலர் பூமியையேதேவனென்றும்கூறி அர்த்தராத்திரியில் பூமியிற் புகுவரென்றும் கூறுகின்றனர், இவருள்வேறு பிரிவார் இறந்துபோனவர்களையேதெய்வமென்றும், சிலர்சஹமான் என்னுஞ் சிருஷ்டிகர்த்தாவுண்டென்றும், சிலர்சூரியசந்திரரும் பெரிய மனுஷருமே தெய்வ மென்றுங்கூறி பலியிடு மிருகங்களை தலைகீழாய் தூக்கி மரங்களில்கட்டி வணங்குகின்றனர், சிலர் ஆகிடியசு என்னுஞ் சிருஷ்டிதேவர் ஆத்தங்கரையிலுண்டென்றுகூறிவணங்குகின்றார். இத்தார்த்தாரியர்தாயோடுபுணவர் ஆனாலும் 40-வயதின்மேல்மணம்புரியார்கள். விபசாரிகளை சந்தேகத்தால்கரடிமயிரை தொடச்சொல்வர். இறந்தவரைபுதையாமல் மரத்திற் றொங்கக்கட்டிகாய்ந்து நெடுநாளானபின் ஆபரணம்பூட்டி புதைப்பர் அறியாமையே.

## ஜப்பான்மதம்.

இம்மதம் ஏகதேசத்தில் இந்து மதம்போலிருப்பினும், சிநிசிச, செடோரியஸ், பாக்குச்சு,ஜம்மாபோசு முதலிய பகுப்புகளுண்டு. இவர்களுக்குசுமார் 2127 தங்கவர்ன ஆலயங்களுண்டு, அவ்வாலய வாயற்படிதோறும் பூதகலையைப் போன்ற விக்ரகங்களுண்டு. முன்னர் படங்களையும், பின்னர் விக்ரகங்களையும் பூசிப்பவராயிருக்கின்றனர் இவர்கட்கு 6000-வருடமாகக 7- தலையோடு குதிரைமேலிருந்தாளும் இமிடாசு என்னும் பரதேவருண்டாம். இவர்கள் பிராணபலியுந்தருவார்கள். இவர்களுக்கு.

| | | |
|---|---|---|
| வர்த்தகவிருத்தி | தேவத் | ஜெபிசு |
| தனதானிய | ,, | டகாகு |
| நல்லலாப | ,, | டாசிடோகா |

| | | |
|---|---|---|
| சந்தோஷ | ,, | போட்டி |
| குலத்தை | ,, | சிவான் |
| வேட்டை | ,, | சவா |
| பிசையோட்டும் | ,, | பிட்சிமான் |

இவருள் இறந்தவர்களை சுட்டு சாம்பலைப் புதைப்பார்கள் விபசாரிகளை கொலைசெய்வார்கள்.

## சீயமதம்.

இவர்கள்தேவன் சோமன்கூடம். அவர்புட்பத்திலுற்பவித்து விருக்ஷத்தின்கீழ் ஜபஞ்செய்திருப்பர் ஆட்டுக்குட்டிகளை பலியிடுவார் இவர்கள் சர்வாங்கக்ஷவரஞ் செய்துக்கொண்டுசந்நியாசியாக விருப்பார்கள் இவர்களிலிறந்தவரை ஜப்பான் மதத்தரைப் போற் செய்கின்றனர் கொள்ளிவைத்தலைசிறந்ததாகமதிக்கிறுர்.

## பெருவியன் மதம்.

இவர்கள் ஆடுமாடுகளையும் சிலசமயம்நரபலியுமிடுகின்றனர். சிறிதுபாவஞ்செய்தவர்கள் தங்கள்மூக்கு உதடு விரல்இவைகளை அறுத்து இரத்தத்தை வடியவைக்கின்றனர். சூரிய சந்திரரைவணங்குகிறுர்கள் இவர்கள் சிருஷ்டிகர்த்தா பச்சகாமிக்குஎன்னுந் தேவர் இவர் மின்னல் இடிகளை தூதராகக்கொண்டு துஷ்டரை சிக்ஷிக்கின்றனராம் இவர்களுக்கு மறுபிறவியுண்டென்னு நம்பிக்கையும் தங்கைதமக்கைகளை மணம்புரிவதும் உண்டு. இந்துக்களைப்போல் சூரியசந்திர சுக்கிராதிகளை வணங்குகிறுர்கள் இவர்களின் சிரஞ்சீவியான தெய்வத்தின்பேர் ஹனகாஎன்றுகூறுகிறுர்.

## நியூசவுத்துலாந்துகனடா மதங்கள்.

இவர்கள் மாதாபிதா குரு சூரியர்களை வணங்குவோர். அந்நால்வருமொரே தேவரெனவும் அவர் அம்பினுல் பூமியைப் பிளந்து அதினின்று ஆண்பெண்களை யுண்டாக்கி பின்னுல் உலகை உண்டாக்கினதாகவுங் கூறுகின்றனர் ஆட்டுகுட்டிகளும் இராஜர்களுமிறந்தபின் தேவர்களாவர்களென்றும் கூறுகின்றனர் ஸ்திரீகள் சூரியனைமாத்திரம் வணங்குவர். பலஸ்திரீகளை மணம்புரிவர் இறந்தவரைபுதைத்து அனேகநாளானபின் எலும்பையெடுத்து பூசிப்பார். இவர்கள் நதியை கடக்கவேண்டில் நதிபூஜைசெய்தே போவார்கள்.

## பைகோமதம்.

இவர்கட்குள்ளது 5 தேவர்களாம் இதில் 4 - வது தேவன் 2200வருஷத்துக்கு முன் இறந்தனராம் உலகம் முடிவில் தகனமாகுமாம் நன்மைக்கெல்லாம் கடவுளும் தீமைக்கெல்லாம் பிசாசும் கர்த்தாவாம் இவர்கள் கோயில்களிலொன்றில் 120,000-விக்ரகங்களுண்டாம் தலைகுனிந்து வணங்குவர் சிலர் வருடத்தில் 3-மாதம் பிசாசோடுவசிப்பார்களாம். சேமவாரமே தொழுகைநாளாம் இவர்கள் குமாரர்கள் ஓரேவேளை புசிப்பராம் உண்ணுங்கால் முதற்கவளத்தை நாய்க்கிடுவராம் துக்கத்தைகாட்ட க்ஷவரஞ் செய்துக்கொள்வராம் வேறுசிலமதத்தார் பண்டகைகளையும்கொண்டாடுவாராம்.

## பிலப்பியன் மதம்.

இவர்கள் சூரியசந்திராதிகளை வணங்குவர் அனேகசில்லரை தேவர்களையுமுடையவர்கள் சிலர் அப்பாவென்னுந் தேவனை விக்ரகரூபமாகவைத்து வணங்குகிறார்கள்.

## மலாக்கா மதம்.

இவர்கள் பெரும்பாலும் மகம்மதியமதத்தை அனுசரித்தவர்கள் சிலர் வாயுவே பரமெனக்கூறி வணங்குகின்றனர் இவர்கட்கு அனேகமங்கிடதேவதைகளும் துஷ்டதேவதைகளு முண்டென்று கூறி விக்ரகரூபமாக வைத்தும் வணங்குகின்றார்கள்.

## போர்னியோ சுமித்திராதீவுகளின் மதம்.

இத்தீவுகளிலுள்ளோரில் சிலர் துலுக்குமதத்தையும் சிலர் பிலப்பிய மதத்தையும் அநுஷ்டிக்கின்றார்கள் பக்ஷிசகுனம்பார்க்கின்றனர் கலியாணஞ் செய்துகொள்ளவேண்டில் பகைவர் தலைகளைவெட்டி சீராககொடுக்கவேண்டுமோம் இறந்தபின் தேகமும் ஆத்மாவும் நிர்வாணத்தைப்பெறுமாம்.

## ஜாவாதேசமதம்.

இவர்கள் ஆதியில் சந்திரசூரியரை வணங்கிவந்தார்கள் தற்கால் படேவியா முதலிய கிறிஸ்துமதஸ்தரா யிருக்கின்றனர் ஆயினும் சிசுபேரியன்கள் பிசாசுகளையும் சந்திரனையும்வைத்துவணங்குகின்றனர்.

